# ன். ஏ. புல்கானின், என். எஸ். குருஷேவ்

## இந்தியா, பர்மா, ஆப்கனிஸ்தானம் ஆகிய நாடுகளுக்கு விஜயம் செய்த காலத்தில் நிகழ்த்திய சொற்பொழிவுகள்



என். ஏ. புல்கானின், என். எஸ். குருஷேவ்

# இந்தியா, பர்மா, ஆப்கனிஸ்தான் ஆகிய நாடுகளுக்கு விஜயம் செய்த காலத்தில் நிகழ்த்திய சொற்பொழிவுகள்

நவம்பர்–டிசம்பர், 1955.



இந்தியாவிலுள்ள டாஸ் பிரதிநிதி
புது டெல்லி.

# அறிமுகம்

1955 நவம்பர்—டிசம்பரில் சோவியத் யூனியன் மந்திரி சபையின் தலைவரான என். ஏ. புல்கானினும், சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத்தினுடைய தலைமைக் குழு உறுப்பினரான என். எஸ். குருஷேவும் இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானுக்கு விஜயம் செய்தார்கள். இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தான் முதலிய தேச சர்க்கார்களின் அழைப்பிற்கிணங்கி செய்யப்பட்ட நேசபாவமான விஜயமாகு மிது ; இது ஒரு மாதத்திற்குமேல் நீடித்தது.

உஸ்பெக் குடியரசின் சுப்ரீம் சோவியத்தினுடைய தலைமைக் குழுவின் தலைவரான ஷராப் ரஷீதோவும், சோவியத் யூனியன் கலாச்சார மந்திரியான என். ஏ. மிகைலோவும், ராணுவ ஜெனரல் ஐ.எ. செரோவும், சோவியத் யூனியனின் முதலாவது உதவி அயல் நாட்டு மந்திரியான ஏ. ஏ. குரோம்யகோவும், சோவியத் யூனியனின் உதவி விவசாய மந்திரியான டி. ஆர். ரசூலோவும், சோவியத் யூனியனின் வெளிநாட்டு வர்த்தக உதவி மந்திரியான பி. என். குமுகினும், உஸ்பெக் குடியரசின் உதவி கலாச்சார மந்திரியான எஜட். ரஹீம்பாபாயேவாவும், என். ஏ. புல்கானின், என். எஸ். குருஷேவுடன் வந்திருந்தார்கள்.

இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானத்தில் என். ஏ. புல்கானினும், என். எஸ். குருஷேவும் தங்கியிருந்த காலத்தில் செய்த சொற்பொழிவுகள், பிரகடனங்கள் அனைத்தையும் இந்தப் புத்தகம் பூர்ணமாக வெளியிடுகிறது. விஜயம் செய்த ராஜதந்திரிகளால் விடுக்கப்பட்ட கூட்டறிக்கைகள், பிரகடனங்கள், இன்னுமிதர தஸ்தாவேஜுகளும்கூட இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளன.

பிப்ரவரி 1956. ஆசிரியர்.

# உள்ளடக்கம்

## இந்தியாவில் சுற்றுப் பிரயாணம்
## 1955, நவம்பர் 18 முதல் டிசம்பர் 1 வரையும், டிசம்பர் 7 முதல் டிசம்பர் 14 வரையும்

## பர்மாவில் சுற்றுப்பிரயாணம்

## 1955 டிசம்பர் 1 முதல் 7-ம் தேதிவரை

## ஆப்கானிஸ்தானத்தில் சுற்றுப்பிரயாணம்
## 1955 டிசம்பர் 15 முதல் 19-ம் தேதிவரை

## மாஸ்கோ வந்து சேர்ந்ததும் நிகழ்த்திய சொற்பொழிவுகள்

# இந்தியாவில் சுற்றுப்பிரயாணம்

1955, நவம்பர் 18 முதல் டிசம்பர் 1 வரை
1955, டிசம்பர் 7 முதல் 14 வரை.



டில்லி: இந்திய ஜனாதிபதி அளித்த ஒரு வரவேற்பு உபசாரத்தின்போது
என். எஸ். குருஷேவ், எஸ். ராதாகிருஷ்ணன், என். ஏ. புல்கானின், ராஜேந்திர பிரசாத், ஜவஹர்லால் நேரு.

## பாலம் விமான நிலயத்தில் 1955 நவம்பர் 18-ல் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

உயர் சிறப்புடைய பிரதம மந்திரி அவர்களே !

அன்பார்ந்த நண்பர்களே !

பிரதம மந்திரி நேருவின் அழைப்பின்பேரில் இந்தியக் குடியரசின் தலைநகருக்கு வந்து, மாண்புமிக்க இந்திய மக்களுக்கு நேரடியாக எங்கள் மனமார்ந்த வாழ்த்துக்களையும் நல்லாசிகளையும் கூறுவதற்கு எங்களுக்குக் கிடைத்துள்ள வாய்ப்பு குறித்து நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம்.

திறமையும் பிரயாசையும் மிகுந்த இந்திய மக்களிடத்தில், சுயச் சிறப்புடைய, ஒரு மகோன்னத கலாச்சாரத்தின் சிருஷ்டிகர்த்தாக்களான இந்திய மக்களிடத்தில், சோவியத் மக்கள் கொண்டுள்ள மிக ஆழ்ந்த மரியாதையையும் நேசவுணர்வையும் எங்கள் இதயங்களிலே தாங்கிக் கொண்டு இன்பமயமான உணர்ச்சி மேலிடும் நிலயிலே, உங்களுடைய பண்டைப்பெரும் இந்திய நாட்டில் நாங்கள் அடியெடுத்து வைக்கிறோம்.

சமாதான வேட்கையுடைய இந்திய மக்கள் தமது தாய்நாட்டின் சுதந்திரத்தை மீண்டும் ஸ்தாபிக்கும் பொருட்டு நடத்திய வீரம் செறிந்த போராட்டத்திற்கு சோவியத் மக்கள் தமது உள்ளன்பையும், மனமார்ந்த அனுதாபத்தையும் எப்பொழுதுமே அளித்து வந்துள்ளனர். சுதந்திர இந்தியக் குடியரசு ஸ்தாபிக்கப்பட்டதானது, சோவியத் மக்களுக்கு பெரும் மகிழ்ச்சியையும் திருப்தியையும் அளித்தது.

சர்வதேச அரங்கிலும், உலக பந்தோபஸ்தையும் சமாதானத்தையும் பலப்படுத்துவதிலும், மேன்மேலும் முக்கிய பாத்திரம் வகித்துவரும் இந்திய மக்களின் ஆக்கல் வன்மையில் எங்கள் மக்கள் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டுள்ளனர். சமாதானத்தை நிலைபெறச் செய்வதற்கும், தமது நாட்டின் பொருளாதாரத்தை முன்னேற்றமடையச் செய்வதற்கும் இந்திய சர்க்கார் எடுத்துவரும் முயற்சிகளை சோவியத் சர்க்கார் நன்குணர்ந்து அவற்றைப் பாராட்டுகிறது.

சோவியத் மக்களுக்கும் இந்திய மக்களுக்கும் பொதுவான நோக்கங்கள் பல உள்ளன. சமாதானத்தைப் பராமரிப்பதற்கும் பலப்படுத்துவதற்

கும் சோவியத் யூனியனும் இந்தியாவும் பெருமுயற்சி செய்து கொண்டிருக்கின்றன. மேலும் தகராறிலுள்ள சர்வதேசப் பிரச்னைகளை சமாதானபூர்வமான வழியில், பேச்சுவார்த்தைகள் மூலம் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்பதற்காகவும் நம்மிரு நாடுகளும் பாடுபடுகின்றன. இத்துறையில் இதற்குள்ளாகவே கணிசமான நற்பயன்கள் ஏற்பட்டுள்ளன.

நமக்கிடையில் நேசவுறவுகளை விரிவுபடுத்திக் கொள்ளும் நோக்கத்துடன் இந்தியாவும் சோவியத் யூனியனும் பரஸ்பரம் எடுத்துவரும் முயற்சிகள், சர்வதேச கெடுபிடி நிலைமையைத் தணிக்கும் பணிக்கு ஒரு முக்கிய சேவையாகும்.

இந்திய மக்கள்பற்றி நேரடியான பரிச்சயம் பெறுவதற்காக, அவர்களின் பழக்க வழக்கங்களையும், பாரம்பரியங்களையும் புரிந்து கொள்ளுவதற்காக, அவர்கள் தமது நாட்டின் பொருளாதாரத்தையும், சுதேசித் தொழிலையும் வளர்த்து முன்னேறுவதற்கு எடுத்துவரும் முயற்சிகளின் பலன்களை அறிந்து கொள்ளுவதற்காக, நாங்கள் எங்களது இந்திய விஜயத்தை பயன்படுத்த விரும்புகிறோம்.

இந்திய மக்களை நாங்கள் சந்திப்பதினாலும், இந்திய ராஜதந்திரிகளுடன் தொடர்புகளை விரிவுபடுத்திக் கொள்ளுவதினாலும், நம்மிரு நாடுகளுக்கிடையிலுள்ள பரஸ்பர சவுஜன்யமும் நட்பும் மேலும் வளர்ந்தோங்க வேண்டுமென்ற இலட்சியத்திற்கு நற்பயன்கள் உண்டாகும் என்று நாங்கள் நம்புகிறோம்.

உள்ளம் நிறைந்த உண்மை அன்பு வரவேற்பிற்கு எங்களுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்திய—சோவியத் மக்களின் நட்புறவு நீடூழி வாழ்க! (கரகோஷம்)

## டில்லி நகரசபை வரவேற்பில் 1955 நவம்பர் 19-ல், புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

மேன்மை தங்கிய பிரதம மந்திரி அவர்களே !

டில்லி நகரசபைத் தலைவர் அவர்களே !

இந்தியாவின் கீர்த்திமிக்க தலைநகராம் டில்லிமாநகரின் பிரஜைகளான எங்கள் அருமை நண்பர்களே !

எல்லாவற்றிற்கும் முன்பு, என் சார்பிலும் தோழர் குருஷேவ் சார்பிலும் எங்களுடன் இங்கு வந்துள்ள எங்கள் நண்பர்களின் சார்பிலும், இந்திய சர்க்காருக்கும் உயர் சிறப்புடைய இந்தியப் பிரதமர் ஜவஹர்லால் நேருவுக்கும், நாங்கள் உங்களுடைய மாபெரும் நாட்டிற்கு

விஜயம் செய்து, திறமையும் பிரயாசையும் மிகுந்த இந்திய மக்களை மேலும் நன்குணர்ந்து கொள்வதற்கு எங்களுக்கு வாய்ப்பளித்த அவர்களுடைய அன்பார்ந்த அழைப்பிற்காக, எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். (கரகோஷம்.)

எங்களுக்கு நீங்கள் அளித்துள்ள மனமார்ந்த வரவேற்பிற்காக உங்கள் ஒவ்வொருவருக்கும் நன்றி கூறுகிறேன்.! (கரகோஷம்). உள்ளன்புமிகுந்த இந்த வரவேற்பு எங்கள் உள்ளங்களைப் பெரிதும் நெகிழச் செய்கிறது. இதை நாங்கள் மாண்புமிக்க இந்திய மக்கள் சோவியத் மக்களிடம் கொண்டுள்ள உண்மை நட்பிற்கு அத்தாட்சியாகக் கருதுகிறோம். (கரகோஷம்.)

இந்திய மக்களிடத்தில் தன்னலமற்ற மனப்பூர்வமான நேசவுணர்வு கொண்டுள்ள சோவியத் நாட்டின் சகல மக்களின் உளங்கனிந்த வாழ்த்துக்களையும் நல்லாசிகளையும் உங்களுக்கும், உங்கள் மூலம் இந்தியாவின் 40 கோடி மக்களுக்கும் தெரிவித்துக் கொள்கிறேன். (கரகோஷம்.)

நமது நாடுகளுக்கிடையிலுள்ள நட்புறவு வெகு காலத்திற்கு முன்பே தோன்றியதாகும். இந்நட்புறவு என்றுமே சச்சரவுகளினலோ, பகைமையினலோ களங்கப்படுத்தப்பட்டதில்லை. குறிப்பாக எங்கள் நாட்டிலே மகத்தான அக்டோபர் சோஷலிஸ்ட் புரட்சி நிகழ்ந்த பிறகு, நம்மிரு தேச மக்களுக்கிடையில் இருந்துவந்துள்ள நேசவுணர்வு வளர்ந்து பெருகலாயிற்று. (கரகோஷம்.)

உங்கள் நாட்டின் தேச சுயேச்சையை மீண்டும் ஸ்தாபிப்பதற்காக தன்னலங் கருதாத தியாக உணர்ச்சியுடன் நீங்கள் நடத்திய போராட்டத்தை யுகயுகாந்திரமான ஒடுக்குமுறையிலிருந்து விடுவிக்கப்பட்ட சோவியத் மக்கள் தங்களுடைய ஆழ்ந்த அனுதாபத்துடன் கவனித்து வந்துள்ளனர். இப்போராட்டத்தில் உங்களுக்குக் கிடைத்த வெற்றியைக் கண்டு நாங்கள் பெருமகிழ்ச்சி அடைந்தோம். ஏனெனில் ஒரு நாட்டை மற்றொரு நாடு அடக்கி ஒடுக்குவதை நாங்கள் எப்பொழுதும் எதிர்த்து வந்துள்ளோம். (கரகோஷம்.)

அரசுகளின் சமத்துவத்தையும், எல்லா நாட்டு மக்களும் சுதந்திர அரசாக வாழ்வதற்குரிய சுய நிர்ணய உரிமையையும் அங்கீகரிப்பதே சோவியத் வெளிநாட்டுக் கொள்கையின் பிரதான கோட்பாடுகளில் ஒன்ருகும் என்று எங்கள் மாபெரும் தலைவரும் ஆசானுமான விலாடிமிர் இலிச் லெனின் பிரகடனப்படுத்தினர். (கரகோஷம்.)

இந்தியா பூரண அரசுரிமையுடைய சுயேச்சை அரசாக ஆனபிறகு, நமது நாடுகளுக்கிடையிலுள்ள நட்பு அபிவிருத்தியடைவதற்கு மேலும் சாதகமான புதிய சூழ்நிலைமைகள் சிருஷ்டிக்கப்பட்டன.

இரு நாடுகளும் ஒவ்வொன்றின் பிரதேசக் கட்டுக் கோப்பிற்கும் அரசுரிமைக்கும் பரஸ்பரம் மரியாதையளித்தல், அனுக்கிரமிப்பு, ஒருவர் மற்றொருவரின் நாட்டின் உள்நாட்டு விவகாரங்களில் அரசியல், பொருளாதாரம், சித்தாந்தம் ஆகிய எந்தக் காரணத்தை முன்னிட்டும் தலையிடாதிருத்தல், சமத்துவமும் பரஸ்பர அனுகூலமும், சமாதானமாக ஒத்துவாழ்தல் முதலிய நிலையான, நம்பகமான கோட்பாடுகளின் அடிப் படையில், இன்று சோவியத் யூனியனும் இந்தியக் குடியரசும் தமது உறவுகளைக் கட்டியமைத்து வருகின்றன.

நீங்கள் பஞ்சசீலம் என்றழைக்கும் ஐம்பெரும் கோட்பாடுகளை முதலில் இந்தியாவும் சீன மக்கள் குடியரசும் பிரகடனப்படுத்தின. இவை இப்பொழுது சமாதானம் விரும்பும் சகல நாடுகளிலும் அங்கீகரிக்கப் பட்டுள்ளதுடன், பற்பல அரசுகளால் பயனுள்ள முறையில் நடை முறையில் அமுலாக்கப்பட்டுள்ளன. (கரகோஷம்.)

சமாதானத்தைப் பலப்படுத்துவதற்கும், சர்வதேச கெடுபிடி நிலை யைத் தணிப்பதற்கும் இந்திய சர்க்கார் பெரும்பணி ஆற்றியுள்ளது, இன்றும் ஆற்றிவருகிறது. (கரகோஷம்) அன்னியப் படையெடுப்பாளர் களை எதிர்த்து ஆயுதமேந்தி தங்கள் தாய்த்திரு நாட்டைப் பாதுகாக்க வேண்டிய நிர்ப்பந்தம் சோவியத் மக்களுக்கும் பன்முறை ஏற்பட்டிருக் கிறது. எனவே பல்வேறு மக்களுக்கும் யுத்தத்தினால் விளையும் சொல் லொணாத கொடுமைகளை அவர்கள் மிகவும் நன்றாக அறிவார்கள். இத னால்தான் சமாதானத்தைப் பாதுகாப்பதற்கும் பலப்படுத்துவதற்கும் இந் திய சர்க்காரும் இந்திய மக்களும் எடுத்துவரும் முயற்சிகளை அவர்கள் வாயார வாழ்த்தி வரவேற்கின்றனர். (கரகோஷம்.)

சர்வதேச அரங்கில், உலக சமாதானத்திற்கான மாபெரும் உன்னதப் போராட்டத்தில், இந்தியாவும் சோவியத் யூனியனும் நண்பர் களாக கைகோர்த்து நிற்கின்றன.

ஐ. நா. ஸ்தாபனத்தில் சீன மக்கள் குடியரசின் நியாயமான உரிமையை நிலைநாட்டும் மிக முக்கியமான பிரச்னையில் இந்தியாவும் சோவியத் யூனியனும் தோளோடு தோள் இணைந்து நின்று நிலை பிறழாமல் உறுதியான கொள்கையைக் கடைப்பிடித்து வருவது குறித்து நாங்கள் பெருமகிழ்ச்சியடைகிறோம். (கரகோஷம்.)

இந்திய சர்க்காரும் இந்திய மக்களும் தமது தேசப் பொருளா தாரத்தை, அபிவிருத்தி செய்வதற்கு எடுத்துவரும் முயற்சியில், குறிப் பாக தனது சொந்தத் தொழில்களை வளர்ப்பதற்காக எடுத்துவரும் முயற் சியில், சோவியத் மக்கள் ஆழ்ந்த அனுதாபம் கொண்டிருக்கின்றனர். (கரகோஷம்.) சுயேச்சையான வளர்ச்சிப் பாதையில் அடியெடுத்து வைத்துள்ள ஒரு அரசு உண்மையிலேயே தனக்கு சுயேச்சையான வாழ்வை நிலைநாட்டிக்கொள்வதற்கு, இத்தகைய கொள்கை ஒன்றே வழி என்பது நாங்கள் எங்கள் சொந்த அனுபவத்திலிருந்து கண்டறிந்த

உண்மை. நீங்கள் சமாளிக்க வேண்டியுள்ள கஷ்டங்கள் கொஞ்சமல்ல என்பது தெளிவு. ஆனால் பிரயாசை மிகுந்த, திறமை வாய்ந்த இந்திய மக்கள் தமது லட்சியத்தை சாதிக்கும் வல்லமையுடையவர்கள் என்று நாங்கள் உறுதியாக நம்புகிறோம். (கரகோஷம்.) எங்களைப் பொறுத்த மட்டில், இயந்திரத் தொழில் நிலையங்கள், மின்சார நிலையங்கள், நீர்-மின்சாரத் திட்டங்கள் முதலியவற்றை நிர்மாணிப்பதிலும் சமாதானப் பூர்வமான கைங்கரியங்களுக்காக அணுசக்தியைப் பயன்படுத்துவதிலும் எங்கள் அனுபவத்தைப் பகிர்ந்துகொள்ளத் தயாராக இருக்கிறோம்.

உண்மையான சமத்துவத்தின் அடிப்படையிலும், பரஸ்பர நன்மையின் அடிப்படையிலும் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்கும் இடையில், வர்த்தகத்தையும், பொருளாதார ஒத்துழைப்பையும் வளர்ப்பதற்கு அவசியமான நிலைமைகள் யாவும் இன்று சிருஷ்டிக்கப்பட்டு விட்டன.

நமது நாடுகளுக்கிடையிலுள்ள உறவுகள் மென்மேலும் விரிவடைந்து சகல துறைகளிலும் வியாபகமாக வளர்ந்த வண்ணமுள்ளன. பொருளாதாரத் துறை மட்டுமின்றி கலாச்சார, விஞ்ஞானத் துறைகளிலும் இவ்வுறவுகள் விரிவடைந்துள்ளன. இது விசேஷத் திருப்தி அளிக்கக்கூடியதாகும். ஏனெனில் கலாச்சார பரிவர்த்தனைகளாலும், ஒரு நாட்டின் கலாச்சாரப் பாரம்பர்யங்களை மற்றொரு நாட்டினர் அறிந்து கொள்ளுவதினாலும் தேசங்கள் தமக்கிடையில் மேலும் மேலும் நெருங்கிய உறவுகொள்வதற்கும், அறிவாற்றலில் மேலும் செழுமையடைவதற்கும் சந்தர்ப்பம் ஏற்படுகிறது. கலாச்சார, கலைத்துறையில் விரிவான பலதரப்பட்ட பரிவர்த்தனைகளும் ஏற்படவேண்டுமென்று நாங்கள் பாடுபடுகிறோம்.

இந்தியா, சோவியத் யூனியன் இவ்விரு நாடுகளின் அரசியல், சமூக அமைப்புகள் வெவ்வேறானவை. ஆனால் நமது மக்களிடையில் பொதுவாகவுள்ளவை ஏராளமாகும். இந்த ஒருமைப்பாடு நமது நட்பை வளர்ந்தோங்கச் செய்கிறது; மேலும் உறுதிப்படுத்துகிறது. இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் மட்டுமின்றி உலகம் பூராவிற்குமே மென்மேலும் கூடுதலான பயனளிக்கவல்லதாக்குகிறது. (கரகோஷம்.)

சோவியத் மக்களுக்கும் இந்திய மக்களுக்கும் பொதுவான அம்சம் என்னவென்றால், அவர்கள் இருவருமே சமாதானத்தை நேசிப்பவர்கள்; சுறுசுறுப்பாகப் பாடுபடும் பண்புடையவர்கள்; மேலும் நிறவெறிப் போக்கும், காலனி ஆதிக்க மனப்பான்மையும் இவ்விரு மக்களுக்கும் புறம்பானவை. சமாதானத்தைப் பாதுகாப்பதற்கும் பலப்படுத்துவதற்கும், சகல நாடுகளுடனும் நட்பையும் ஒத்துழைப்பையும் ஏற்படுத்து

வதற்கும், தேச அரசுரிமைக்காகவும், சர்வதேச பந்தோபஸ்துக்காகவும் நம்மிரு நாடுகளும் தீவிரமாகப் பாடுபடுகின்றன. (கரகோஷம்).

இந்திய – சோவியத் மக்களின் நட்புறவும் ஒத்துழைப்பும் நீடூழி வாழ்க! (பலத்த கரகோஷம்).

ஜெய்ஹிந்த்!

## ஆக்ராவில் 1955 நவம்பர் 20-ல், என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

எனது நண்பர் நிகோலாய் அலக்சாண்டிரோவிச் புல்கானின் சார்பாகவும், எங்களுடன் வந்துள்ள இதர நண்பர்கள் சார்பாகவும் எனது சார்பாகவும் உங்கள் அனைவருக்கும் வாழ்த்துக் கூறுகிறேன்; எங்களுடைய நேசவுணர்ச்சிகளையும் நல்லாசிகளையும் தெரிவித்துக் கொள்கிறேன். (கரகோஷம்)

இப்பொழுது எங்கள் உள்ளங்களை ஆட்கொண்டுள்ள உணர்ச்சிகளை எடுத்துரைக்க வார்த்தைகள் போதா. நாங்கள், உங்கள் நாட்டிற்கு வந்தபின், இந்த ஒருசில நாட்களில், நாங்கள் சென்ற இடங்களிலெல்லாம் இந்திய மக்கள் வெளிப்படுத்திய நட்பையும் நேசத்தையும் நாங்கள் பெரிதும் பாராட்டுகிறோம்.

இதேபோல் எங்கள் நாட்டு மக்களும் இந்திய மக்களிடத்து மிகவும் உண்மையான நேசவுணர்ச்சிகளைக் கொண்டுள்ளனர் என்று நான் உறுதி கூற முடியும். (பலத்த கரகோஷம்)

உங்கள் நாடு தேச விடுதலைபெற்று, சுயேச்சையாக ராஜபரிபாலனம் நடத்திவரும் அருமையான வசந்த காலத்திலே நீங்கள் வாழ்ந்து வருகிறீர்கள். ஆனால் உங்களுடைய தேசியத் தொழில்களை, குறிப்பாக இயந்திரம் கட்டும் தொழில்களை, நீங்கள் நிர்மாணித்தாலன்றி, சுதந்திரத்தையும் சுயேச்சையையும் நிலையாக உறுதிபெறச் செய்ய முடியாது என்று நான் எச்சரிக்க விரும்புகிறேன். (கரகோஷம்.)

நான் உங்களுக்கு ஆலோசனை கூற விரும்பவில்லை. இவை யாவற்றையும் நீங்களே நன்கு புரிந்து கொண்டிருக்கிறீர்கள் என்றே நான் எண்ணுகிறேன்.

மனித உழைப்பின் அதியற்புதப் படைப்பாக விளங்கும், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கலையழகு மிகுந்த சமாதியை நாங்கள் இப்பொழுது தான் பார்வையிட்டோம். இந்தக் கட்டிடத்தை நான் பார்வையிட்ட போது இருவிதமான உணர்ச்சிகள் எனக்கு ஏற்பட்டன; பல நூற்றாண்

டுகளுக்கு முன்பு வாழ்ந்து வந்த மக்களின் மாண்பை, அவர்களது கலையும், கலாச்சரமும், திறமையும் அக்காலத்திலேயே தழைத்தோங்கியிருந்த மகத்துவத்தை எண்ணி எனதுள்ளம் பூரிப்படைந்தது. இந்த நினைவுச் சின்னம் உங்கள் மக்களின் பெருமிதத்திற்குரிய அற்புதப் படைப்பு என்பதில் ஐயமில்லை.

ஆனால் எனது உள்ளத்தில் வேறொரு எண்ணமும்கூட ஏற்பட்டது. அரசர்களும் சக்ரவர்த்திகளும் மனித உழைப்பை எவ்வளவு அலட்சியமாகக் கருதினர், எவ்வளவு வீணான முறைகளில் விரையப்படுத்தினர் என்ற எண்ணமும் எனது உள்ளத்தில் தானாக எழுந்தது. அடிமை உழைப்பின் மூலம் இத்தகைய நினைவுச் சின்னங்களை எழுப்பி, இச்சக்கரவர்த்திகளும் அரசர்களும் மக்களுடைய சக்தியையும் வருவாயையும் கரைத்தனர். இவை யாவற்றையும் அவர்கள் தமது சுய பெருமைக்காகவே செய்தனர். இதற்காக அக்காலத்திலே பல லட்சக்கணக்கான மக்கள் பட்டினியும் பசியுமாய் மாண்டனர் என்பது மறுக்கமுடியாதது. ஆம், ஒரு புறத்திலே செல்வமும் சுபீட்சமும், மறுபுறத்திலே வறுமையும் துயரும் இருந்ததை இங்கே நாம் பார்க்கிறோம்.

நான் இந்த நினைவுச் சின்னத்தைக் கண்ணுற்றபோது எனது உள்ளத்தில் எழுந்த உணர்ச்சிகளை உங்களிடம் எடுத்துரைக்க விரும்பினேன். ஆனால் நான் உணர்ச்சி வயப்பட்டு வழிதவறிப் பேசியிருந்தால், என்னை மன்னித்துவிடுங்கள்.

உங்களுடைய விருந்தோம்பும் உயரிய பண்பிற்கும், நீங்கள் எங்களுக்கு வழங்கிய அற்புத அன்பளிப்புகளுக்காகவும் மீண்டும் ஒரு முறை நன்றி கூறுகிறேன். பிரத்யேகமாக கவர்னர் அவர்களுக்கும், எங்களுடன் வந்து உதவிபுரிந்த அவரது மனைவியார் அவர்களுக்கும் மற்றும் இந்நகர பிரமுகர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். வரவேற்புக் கமிட்டியின் உறுப்பினர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நீங்கள் அனைவரும் வெற்றியும் இன்பமும் பெற்று பெருவாழ்வு வாழவேண்டும் என்று நாங்கள் வாழ்த்துகிறோம். (பலத்த கரகோஷம்).

## பிரதம மந்திரி நேரு நவம்பர் 20-ந் தேதியன்று அளித்த விருந்துபசாரத்தின்போது என். ஏ. புல்கானின் நிகழ்த்திய சொற்பொழிவு

உயர் சிறப்புடைய பிரதம மந்திரி அவர்களே!

தாய்மார்களே! கனவான்களே!

இந்தியக் குடியரசின் பிரதம மந்திரி கனம் ஜவாஹர்லால் நேரு பேசுகையில், சோவியத் யூனியனிடத்தும் சோவியத் மக்களிடத்தும்

உளம்கனிந்த அன்பைத் தெரிவித்தார்; சினேகபூர்வமான நல்வாழ்த்துக்களைக் கூறினர். அதற்காக முதன் முதலில் அவருக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

எங்கள் நாட்டிற்கும் இந்தியாவிற்கும் இடையில் வெகு காலமாக நேசவுறவுகள் இருந்து வந்துள்ளன. இக்கால கட்டம் பூராவும் நமது மக்கள் ஒருவரை ஒருவர் பெரிதும் கவுரவித்து வந்துள்ளனர். சோவியத் மக்களும் இந்திய மக்களும் பிரகாசமான எதிர் காலத்திற்கான போராட்டத்திலே ஒருவருக்கு ஒருவர் தார்மீக உதவி அளித்து வந்திருக்கின்றனர். தற்பொழுது மனித வர்க்கத்தின் சுபீட்சத்திற்கும் சமாதானத்துக்குமான போராட்டத்தில் இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையில் பரஸ்பர நலவுரிமைகள் பல உள்ளன. எனவே நம்மிரு மக்களின் நட்புறவும் ஒத்துழைப்பும் இன்று மேலும் பலப்பட்டுள்ளது.

நமது உறவுகள், பிரபலமடைந்துள்ள ஐம்பெரும் கோட்பாடுகளின் அடிப்படையில் அமைந்துள்ளன. இவ்வாண்டு ஜுன் மாதம் நாங்களும் சகல சோவியத் மக்களும் ஜவாஹர்லால் நேருவை குதூகலத்துடன் எங்கள் நாட்டில் வரவேற்றபோது, அவரும் நானும் விடுத்த அறிக்கையில் இக்கோட்பாடுகள் பிரகடனப்படுத்தப்பட்டன.

சோவியத் யூனியன் இந்தியாவுடனும், ஐம்பெரும் கோட்பாடுகளைப் பிரகடனப்படுத்தியுள்ள அல்லது ஏற்றுக்கொள்ள விரும்பும் இதர சமாதானம் விரும்பும் நாடுகளுடனும் தான் கொண்டுள்ள உறவுகளில் இக்கோட்பாடுகளை நெறி பிறழாமல் பின்பற்றும்.

இந்தியாவும் சோவியத் யூனியனும் சமாதானத்தை நேசிக்கும் நாடுகள். நமது அரசியல், சமூக அமைப்பு முறைகள் வெவ்வேறானவை; நமது மக்களின் சுபீட்சத்தையும் இன்ப வாழ்வையும் அடைவதற்கு நாம் வெவ்வேறான பாதைகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டுள்ளோம். ஆனால் "சமாதானம்" என்ற வார்த்தை நமது இரு மக்களுக்கும் புனிதமானதாகும்; இதில் எவ்வித வித்தியாசமுமில்லை. சமாதானத்தின் பால் உள்ள இந்த உறுதி நம்மை மேலும் நெருங்கப் பிணைக்கிறது; ஒன்றுபடுத்துகிறது; சிக்கலான சர்வதேசப் பிரச்னைகளை சமாதான முறையில் தீர்ப்பதற்காக நாம் தோளோடு தோள் நின்று போராடுவதற்கு ஆக்கம் அளிக்கிறது.

"கெடுபிடி யுத்தம்" எனப்படும் நிலை ஒழிந்துவிடும் என்ற நம்பிக்கையை உலகத்துக்கு அளித்த, நான்கு வல்லரசு சர்க்கார் அதிபர்களின் ஜெனிவா மகாநாட்டிற்குப் பிறகு, உலகம் பூராவுமுள்ள மக்களின் கவலை தணிந்தது.

சகல நாடுகளின் சர்க்கார்களும் "ஜெனிவா மனப்பான்மை"யின் படி இதர அரசுகளிடம் உறவுகள் வைத்துக் கொள்ள வேண்டும் என்று இன்று உலக மக்கள் கோருகின்றனர்.

நான்கு வல்லரசு சர்க்கார் அதிபர்களின் ஜெனிவா மகாநாட்டின் முடிவுகளை சோவியத் சர்க்கார் ஆழ்ந்த திருப்தியுடன் வரவேற்றதுடன், சர்வதேச கெடுபிடி நிலையை மேலும் தணிப்பதற்கும் தேசங்களுக்கிடையில் நம்பிக்கையைப் பலப்படுத்துவதற்கும் பல புதிய ஸ்தூலமான நடவடிக்கைகளை எடுத்துள்ளது என்பது அனைவரும் அறிந்ததே. எங்கள் பாதையில் எவ்வித இடர்கள் வந்தாலும் இதே கொள்கையை மேற்கொண்டும் கடைப்பிடிக்கவே சோவியத் சர்க்கார் விரும்புகிறது.

சர்க்கார் அதிபர்களின் மகாநாட்டிற்குப் பிறகு, வெளி விவகார இலாகா மந்திரிகள் சந்தித்தனர். நான்கு வல்லரசு சர்க்கார் அதிபர்களின் தாக்கீதில் கண்டிருந்த பிரச்னைகளுக்கு அவர்கள் தீர்வு காண்பதற்கு வேண்டிய வழி வகைகளைக் காணவேண்டியிருந்தது. ஏகோபித்த முடிவுகளுக்கு வர நாங்கள் எங்களால் ஆன அனைத்தும் செய்தோம்.

மனம்விட்டு அபிப்பிராயங்களைப் பரிமாறிக்கொள்வதைவிட அதிகமாக எதையும், வெளிவிவகார மந்திரிகளின் மகாநாடு சாதிக்காதது, எங்களுக்குப் பெரும் வருத்தத்தை அளித்தது.

ஆயினும் சோவியத் சர்க்கார் நம்பிக்கையைக் கைவிடவில்லை; தம்மை எதிர்நோக்கும் பிரச்னைகளை நான்கு வல்லரசுகளும் எப்படியாவது நல்லமுறையில் தீர்த்துக்கொள்வார்கள் என்று அது உறுதியாக நம்புகிறது.

கெடுபிடி யுத்தத்தை நாங்கள் எப்பொழுதுமே எதிர்த்து வந்துள்ளோம். அது மீண்டும் ஆரம்பிக்கப்படுவதை நாங்கள் விரும்பவில்லை. இனி நாங்கள் அணுசக்தி, ஜலவாயு ஆயுதங்களைத் தடை செய்வதற்கும், வழக்கத்திலுள்ள இதர யுத்த தளவாடங்களைக் குறைப்பதற்கும், ஐரோப்பாவில் கூட்டு பந்தோபஸ்து அமைப்பை நிறுவுவதற்கும், அரசுகளுக்கிடையில் தொடர்புகளை விரிவுபடுத்துவதற்கும் போராடுவோம்.

ஜெர்மென் பிரச்னையைப் பொறுத்தமட்டில், எங்கள் நிலை மாறாமல் ஒன்றாகவே இருந்து வந்துள்ளது; இன்னமும் இருந்து வருகிறது. இப்பிரச்னைக்குத் தீர்வுகாண காலமும் பொறுமையும் அவசியம்.

ஜெர்மன் மக்களே இப்பிரச்னையைத் தீர்த்துக்கொள்வார்கள் என்றும், எல்லாவற்றிற்கும் முதலாக, அவர்களிடம் நம்பிக்கை வைப்பதே சரியானது என்றும் இது விஷயத்தில் அவர்களுக்கு உதவி செய்வதே நமது பணி என்றும் நாங்கள் கருதுகிறோம்.

ஆசியாவில் மிகப்பெரிய சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ஆசியாவிலேயே மிகப்பெரிய நாடுகள் சீன மக்கள் குடியரசும், இந்தியாவும், சோவியத் யூனியனுமாகும். இந்த மூன்று நாடுகளுக்கிடையிலுமுள்ள உறவுகள், சமாதானமாக ஒத்து

வாழ்தல், நட்புறவு, ஒத்துழைப்பு ஆகிய கோட்பாடுக்ளின் உறுதியான அஸ்திவாரத்தின்மீது அமைந்திருக்கும் என்பதானது, உலக சமாதானப் பணிக்கு மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

இந்தியக் குடியரசின் சர்வதேச முக்கியத்துவம் ஆண்டுதோறும் அதிகரித்த வண்ணமிருக்கிறது. ஆசியாவின் பிரச்னைகளையும் இதர பிரச்னைகளையும் விவாதித்துத் தீர்வு காண்பதில், அது மேன்மேலும் அதிகரித்த வண்ணமிருக்கும் பாத்திரத்தை வகித்து வருகிறது.

இந்தியாவின் அந்தஸ்து உயர்ந்த வண்ணமிருப்பதற்குக் காரணம், அது, உலகிலுள்ள மிகப்பெரிய நாடுகளில் ஒன்று என்பது மட்டுமல்ல; சமாதானத்தின் ரட்சகனாக அது விடாப்பிடியாகவும் உறுதியாகவும் நிற்பதுவும் இதற்குக் காரணமாகும். இதை யாரும் பார்க்க முடிகிறது.

இங்கு ஆசிய, ஆப்ரிக்க நாடுகளின் பாண்டுங் மகாநாட்டின் மகத்தான முக்கியத்துவத்தைப்பற்றி நாங்கள் குறிப்பிடாமல் இருக்க முடியாது. இம்மகாநாடு, ஆசிய-ஆப்ரிக்க மக்களின் எதிர்காலம் சம்பந்தப்பட்ட பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதை சுலபமாக்கிய "பாண்டுங் மனப்பான்மை" தோன்றுவதற்கு உதவி புரிந்தது.

இந்தியா முழுமூச்சுடன் பங்கெடுத்துக் கொண்டதன் விளைவாக, சிக்கலான ஆசியப் பிரச்னைகள் சில ஏற்கனவே தீர்க்கப்பட்டு விட்டன. இதே முழுமூச்சுடன் ஆசியாவிலும், உலகம் பூராவிலும் சமாதானத்தைப் பாதுகாப்பதற்கு இந்தியாவும், எங்கள் நண்பர் நேருவின் தலைமையிலுள்ள இந்திய சர்க்காரும் வருங்காலத்திலும் பாடுபடுவார்கள் என்று நாங்கள் திடமாக நம்புகிறோம்.

நாங்கள் இந்தியாவிற்கு விஜயம் செய்துள்ளதின் விளைவாக, நம்மிரு நாடுகளுக்கிடையிலுள்ள நட்புறவும், ஒத்துழைப்பும் மேலும் பலப்படும் என்று நாங்கள் உறுதியாக நம்புகிறோம்.

நவ இந்தியாவை நிர்மாணிக்கும் பணியில், இந்திய மக்களுக்கும், அவர்களுடைய தலைவரான, சமாதானத்துக்காகப் போராடும் துணிச்சல் மிக்க வீரர் ஜவஹர்லால் நேருவுக்கும் மென்மேலும் வெற்றிகள் கிடைக்க வேண்டும் என்று சோவியத் சர்க்கார் நல்லாசி கூறுகிறது.

இந்தியக் குடியரசின் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேருவைப் பாராட்டி, அவர் உடல்நலம் குன்றாது இருக்கவேண்டும் என்று ஆசி கூறி, உலக சமாதானத்திற்காகவும், நம்மிரு நாடுகளுக்கிடையில் நட்புறவை வளர்ப்பதற்காகவும் அவர் ஆற்றிவரும் புனிதப்பணி வெற்றி மேல் வெற்றி கொள்ளட்டும் என்று வாழ்த்தி, நாம் அனைவரும் பானம் அருந்துவோமாக !

# 1955 நவம்பர் 21-ல், டில்லி ராஜ்ய சாரணர் அணிவகுப்பில் என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

எனது நண்பர் நிகோலாய் அலெக்சாண்டிரோவிச் புல்கானின் சார்பிலும், உங்களுடைய உன்னத நாட்டில் எங்களுடன் சுற்றுப் பிரயாணம் செய்துவரும் இதர நண்பர்கள் சார்பிலும், எனது சார்பாகவும் உங்கள் அனைவருக்கும் வாழ்த்துக் கூறுகிறேன். (கரகோஷம்)

உங்களுடைய அதியற்புத நாட்டிற்கு வருமாறு எங்களுக்கு அழைப்பு விடுத்த பிரதமர் நேரு அவர்களுக்கு விசேஷமாக நாங்கள் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளோம்.

இந்த சாரணர் முகாமில் உங்கள் வாழ்க்கை எவ்வாறு உள்ளது என்பதை நாங்கள் ஓரளவு கண்ணுற்றோம். எங்கள் நாட்டின் சிறுவர் சிறுமிகள், முன்னணி இளைஞர்கள் எனப்படும் ஸ்தாபனத்தில் திரண்டுள்ளனர். அவர்கள் நடத்தும் முகாம் வாழ்க்கையை பல வழிகளில் நினைவூட்டுவதாக உள்ளது உங்களுடைய முகாம் வாழ்க்கை. இந்த சாரணர் முகாம் வாழ்க்கையை நீங்கள் பெரிதும் விரும்புவதாக எங்களிடம் கூறப்பட்டது. எங்கள் நாட்டிலும் கூட சிறுவர் சிறுமிகள் வேனிற் காலத்தை முகாம்களில் கழிக்கின்றனர். இதில் அவர்கள் பெரும் மகிழ்ச்சி அடைகின்றனர்.

இந்த முகாமில் நீங்கள் ஓய்வு பெறுவதுடன், வேலை செய்யும் பழக்கத்தையும் பெற்று வருகிறீர்கள் என்பது குறித்து நாங்கள் சந்தோஷப்படுகிறோம். இது போற்றத் தக்கது. உழைப்பு தான் மனிதனின் பண்பை உயர்த்தி, அவனுக்கு சிறப்பை அளிக்கிறது. மனிதன் வாழ்வதற்குத் தேவையான யாவற்றையும் உற்பத்தி செய்வதும் உழைப்பேயாகும். பயன்தரும் உழைப்பில் ஈடுபடாத எந்த மனிதனும், மனித அறிவாற்றலின் சிருஷ்டிகள் எதிலும் பங்குபெற முடியாது.

மற்றொரு விஷயத்தைப் பற்றியும் நான் கூற விரும்புகிறேன். சாரணச் சிறுவர்களின் தலைவர் பேசும்போது, நாங்கள் உங்களைப் பார்க்க வந்ததற்காக நன்றி தெரிவித்தார். (கரகோஷம்). ஆனால் நாங்கள் இங்கு வந்தது வெறும் மரியாதைக்காக அல்ல. நாங்கள் இங்கு வந்ததின் மூலம் அத்தியாவசியமானதோர் தேவையைப் பூர்த்தி செய்து கொண்டுள்ளோம் என்று தான் நான் கூற விரும்புகிறேன்; நமது நாடுகளுக்கு இடையிலுள்ள நேச உறவுகளை நாம் பலப்படுத்தி வலிமையுறச் செய்ய வேண்டும்.

உங்களுடைய மகத்தான நாட்டின் சுயேச்சையைப் பெற்றுத் தந்துள்ள உங்கள் பெற்றோர்கள் பெரிதும் போற்றப்பட வேண்டியவர்

கள். அவர்களுடைய சிறப்பியல்புகளை மக்கள் பாராட்டுவது முற்றிலும் நியாயமானது. நேரு அவர்களின் தலைமையிலுள்ள உங்கள் சர்க்கார் ஒரு சுயேச்சையான கொள்கையை நிறைவேற்றி வருகிறது ; சோவியத் யூனியனுடன் மிகச்சிறந்த நேச உறவுகளை ஏற்படுத்தியுள்ளது. (கரகோஷம்). உலக சமாதானத்தைப் பேணி வளர்க்கும் உன்னத இலட்சியத்திற்கான பொதுப் போராட்டமே, இந்த உறவுகளுக்கு பிரதான அடித்தளமாக விளங்குகிறது.

நமது நட்புறவு மிகவும் உறுதியான அடித்தளத்தின்மீது இவ்வாறு நிறுவப்பட்டதாகும். (பலத்த கரகோஷம்). இந்த நட்புறவு வெற்றிகரமாக மென்மேலும் வளர்ந்தோங்கும் என்பது திண்ணம்.

உங்கள் வெற்றிகள் யாவற்றையும் குறித்து நாங்கள் பெருமகிழ்ச்சி அடைகிறோம். சிறப்பாக, உங்களுடைய முதலாவது ஐந்தாண்டு திட்டம் வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்டுள்ளது குறித்து நாங்கள் மனம் மகிழ்கிறோம். இப்பொழுது நீங்கள் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வகுத்து வருகிறீர்கள்; இது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த பணியாகும். இதன் அம்சங்கள் இரண்டு—ஒன்று, விவசாயத்தின் முன்னேற்றம் ; இரண்டாவது இயந்திரத் தொழில்களைப் பலப்படுத்தி வளர்ந்தோங்கச் செய்வது.

விவசாயத்தில் முன்னேற்றம் இல்லாமல் இயந்திரத் தொழில் வளர்ச்சிக்கான திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்ற முடியாது. பாக்டரிகளையும் ஆலைகளையும் நிறுவவேண்டுமானால், உணவும் உடையும் மனிதனின் வாழ்க்கைக்குத் தேவையான மற்றெல்லாப் பண்டங்களும் இருக்கவேண்டியது அவசியமாகும். பிரம்மாண்டமான ஜனத்தொகையைக் கொண்டது இந்திய நாடு. அதன் உணவுப் பண்டத் தேவைகளும், இதர தலையாய தேவைகளும் ஆண்டுதோறும் அதிகரித்துக் கொண்டே போகும் என்பதும் நிச்சயம்.

ஆனால் அதேசமயத்தில் இயந்திரத்தொழில் வளர்ச்சி இல்லாமல் விவசாயத்தை முன்னேற்றும் பணியை நிறைவேற்றுவது சாத்தியமல்ல. இயந்திரங்களைக் கட்டும் தொழில்தான் இயந்திரத்தொழில் வளர்ச்சிக்கும் சரி, விவசாய வளர்ச்சிக்கும் சரி, ஜீவநாடியாகும். யானைகள் வேலை செய்வதைக் கண்ணுறுவது மிகவும் நேர்த்தியாகத்தான் இருக்கிறது. இத்தகைய காட்சிகளை நான் சினிமாப் படங்களில் பார்த்திருக்கிறேன். ஆனால் அவற்றைவிட டிராக்டரும், மோட்டார் வண்டியும், ரயில் இஞ்சினும் அதிக பலமுடையவை ; தவிரவும் அவை மனிதனின் கட்டளைகளை அப்படியே நிறைவேற்றுவதில் யானைகளைவிடச் சிறந்தவை. நாங்கள் எங்கள் சொந்த அனுபவத்தின் மூலம் தெரிந்து கொண்டுள்ள உண்மை இது. எங்கள் நாட்டில் யானைகள் கிடையாது. எனவே எருதுகளையும், குதிரைகளையும் கொண்டு நாங்கள் வேலை செய்து வந்தோம். இம்மிருகங்களுக்கும் பதிலாக இயந்திர சாதனங்களை

உபயோகிக்க ஆரம்பித்த பிறகு, எல்லாக் காரியங்களும் முன்பைவிடத் திறம்பட நிறைவேற்றப்படலாயின.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நீங்கள் உங்களுடைய இயந்திரத் தொழில்களை வளர்ப்பதற்குத் திட்டம் போட்டிருக்கிறீர்கள். மிகவும் முக்கியமான விஷயம் இது—இயந்திரத் தொழில்களை வளர்ப்பது எல்லா வழிகளிலும் மிகவும் முக்கியமான கடமையாகும் என்பதை சோவியத் மக்களாகிய நாங்கள் எங்கள் சொந்த அனுபவத்தில் கண்டுள்ளோம். வென்ற சுதந்திரத்தை பேணிப் பாதுகாத்தாக வேண்டும் என்பதை நினைவில் கொள்வது மிகவும் முக்கியமானதாகும். நாட்டின் பூரண சுயேச்சைக்கான நிலைமைகளை உருவாக்க வேண்டுமானால், அதற்கு உறுதியான அடித்தளத்தை அமைக்கவேண்டியது அவசியம். போதிய இயந்திரத் தொழில்களை வளர்த்து, அவற்றை நம்பி வாழ்வதே, இத்தகைய உறுதியான அடித்தளமாக இருக்கமுடியும்.

இவ்வாறு இயந்திரத் தொழில்களை வளர்க்கும்போது நாம் பிரதானமாக நமது சொந்தப் பலத்தையே நம்பிச் செயலில் இறங்கவேண்டும். இது மிகவும் அவசியம். ஏனெனில் மற்ற நாடுகளுக்கு உதவி அளித்துவரும் சில பணக்கார நாடுகள் இவ்வாறு அவற்றினிடமிருந்து உதவி பெற்று வரும் நாடுகளை அடிமைப்படுத்த விரும்புகின்றன.

ஆன்மீகப் பண்பாட்டிலும் உணர்விலும் நீங்கள் செல்வந்தர்களாக விளங்குகிறீர்கள் ; மற்றெல்லா மூலதனங்களையும்விட இதுவே தலை சிறந்தது. உங்களுடைய மக்களின் இந்தக் கம்பீரமான உயர்ந்த பண்பாட்டிற்குப் பக்கபலமாக உங்களுடைய தேசப் பொருளாதாரமும், உங்களுடைய சொந்த இயந்திரத் தொழில்களும் வளர்க்கப்படுமேயானால், நீங்கள் மேலும் அதிக வளமும் வன்மையும் பெற்றுவிளங்கும் செல்வந்தர்களாக விளங்குவீர்கள்.

இன்னும் ஒருசில வார்த்தைகளுடன் முடித்துக்கொள்கிறேன். எங்கள் சர்க்காரும் உங்கள் சர்க்காரும் மிகவும் மனம் ஒத்த நண்பர்களாக இருந்து வருகின்றன. (கரகோஷம்). உங்களுடையஅற்புதத் தலைவர் நேரு அவர்களின் அரிய சேவைகளே இதற்குப் பெருமளவுக்குக் காரணமாகும் என்று நாங்கள் கருதுகிறோம். (கரகோஷம்).

"அழிக்க முடியாத இந்திய-சோவியத் நட்புறவு என்றென்றும் தழைத்தோங்குக" என்பது போன்ற பல அருமையான கோஷங்கள் உங்கள் நகரின் வீதிகள் தோறும் தொங்க விடப்பட்டுள்ள பதாகைகளிலே பொறிக்கப்பட்டிருப்பதை நாங்கள் இங்கு வந்த நாளிலிருந்து கண்டு மகிழ்ந்து வருகிறோம். ஆம், என்றென்றும் தழைத்தோங்கும் அழிக்க முடியாத நட்புறவையே நாங்களும் நாடுகிறோம். (பலத்த கரகோஷம்). ஆனால் இந்த நட்புறவை ஏற்படுத்தியுள்ள நாங்கள் வயது

மிகுந்த முதியோரின் தலைமுறையைச் சேர்ந்தவர்கள். வாலிபர்களே! எதிர்காலம் உங்கள் கையில் தான் உள்ளது. இன்று நிலவிவரும் நட்புறவை நீங்கள் தான் தொடர்ந்து வளர்ந்தோங்கச் செய்ய வேண்டும், நீங்கள் தான் வலிமையுறச் செய்ய வேண்டும். வாழையடி வாழையாக ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலைமுறைக்கு இந்த நட்புறவைத் தாங்கிச் செல்ல வேண்டிய பொறுப்பும் உங்களுடையதே. (பலத்த கரகோஷம்)

நீங்கள் மிகவும் அழகாகக் குறிப்பிடும் என்றென்றும் அழிக்கமுடியாத நட்புறவுக்கு இது ஆரம்பமாக இருக்கும்.

உங்களுடைய ஆர்வ அபிலாஷைகளும் ஆசைக் கனவுகளும் நனவாகட்டும் என்று நாங்கள் வாழ்த்துகிறோம். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றுவதிலே வெற்றி காண்பீர்களாக, என்று வயது வந்தவர்களுக்கு வாழ்த்துக் கூறுகிறோம். நீங்கள் நன்கு படித்துப் பயன்தரும் உன்னத உழைப்பை மேற்கொள்வதற்குத் தக்க பயிற்சி பெற்று, உங்கள் நாட்டிற்கு நேர்மையான முறையில் சேவை புரிய வேண்டும், உங்கள் நாட்டை பலப்படுத்த வேண்டும், பாதுகாக்க வேண்டும் என்று நாங்கள் மனப்பூர்வமாக ஆசி கூறுகிறோம்.

உங்களுடைய வெற்றிகள் பெருகுவதாகுக! (பலத்த, நீடித்த கரகோஷம்).

## இந்தியப் பார்லிமெண்டில் 1955 நவம்பர் 21-ல் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

சிறப்புடைய தலைவர் அவர்களே!

சிறப்புடைய பார்லிமெண்ட் அங்கத்தினர்களே!

இந்த உயர் மன்றத்தில் பேசுவதற்கு எனக்கு வாய்ப்பளித்ததற்காக முதலில் எனது ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதை நான் எனக்கு அளிக்கப்பட்ட மிகப்பெரிய கௌரவமாகக் கருதுகிறேன்.

நகரசபை வரவேற்பு உபசாரத்தின்போது உங்கள் மகோன்னதத் தலைநகர் டில்லி மாநகரின் மக்களை சந்திப்பதற்கும், எங்களுக்கு ஒவ்வொரு இடத்திலும் கிடைத்த உள்ளன்புமிகுந்த குதூகல வரவேற்பிற்காக அவர்களுக்கும் உங்கள் சர்க்காருக்கும் எமது நன்றியைத் தெரிவித்துக் கொள்வதற்கும் எனக்கு வாய்ப்புக் கிடைத்தது மாண்புமிக்க இந்திய மக்களுக்கு சோவியத் மக்கள் சார்பில் எங்களுடை நேசபூர்வமான வாழ்த்துக்களையும் நல்லாசிகளையும் தெரிவித்துக் கொண்டோம்.

ராம்லீலா மைதானத்தில் இலட்சக்கணக்கான நண்பர்கள் எங்களுக்கு அளித்த வரவேற்பு எங்கள் உள்ளத்தை நெகிழச் செய்தது என்பதை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். அப்போது ஆழ்ந்த அன்புடன் பிரம் மாண்டமான முறையில் வெளிப்படுத்தப்பட்ட ஏகோபித்த, மனப்பூர்வ மான உணர்ச்சிகள், இந்திய மக்கள் சோவியத் மக்களுடைய தன்னல மற்ற உண்மை நண்பர்கள் என்பதை எங்கள் மனத்தில் தெட்டத் தெளிவாகப் பதியவைத்து விட்டன. சோவியத் மக்களைப் பொறுத்த வரையில், இந்த நட்புறவை வளர்த்து விரிவடையச் செய்ய அவர்கள் தங்களால் இயன்றது அனைத்தையும் செய்வார்கள்.

நமது இரு மக்களின் நட்பு நீண்ட நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே ஆரம்பமாகியது அனேகமாக ஐந்து நூற்றுண்டுகளுக்கு முன்பு, ஐரோப்பியக் கப்பல்கள் முதன் முதல் உங்கள் நாட்டை வந்தடையு முன்பே, அபனுசி நிகிதின் என்ற ஒரு ரஷ்ய ஆராய்ச்சி யாத்திரிகர் இந்தியாவிற்கு விஜயம் செய்து பல ஆண்டுகள் இங்கேயே தங்கியிருந் தார். உங்களுடைய அற்புத நாட்டை மனமார நேசித்த அவர் இந்நாடு பற்றி ஒரு புத்தகம் எழுதினுர். அக்காலத்தில் இத்தகைய ஒரு புத்தகம் எழுதப்பட்டதானது சிறந்ததோர் சாதனை என்றே கூறவேண்டும். இந்நூல் இந்தியாபற்றி ரஷ்யர்களுக்குக் கிடைத்த முதலாவது ''தரிசனம்'' எனலாம்.

நமது நாடுகளுக்கிடையேயுள்ள தொடர்புகள் படிப்படியாகப் பலப் பட்டு வளர்ச்சியடைந்தன. ரஷ்யாவில் இந்தியாவைப்பற்றிய புத்தகங் கள் வெளியிடப்பட்டன. ரஷ்ய மக்கள் உங்கள் நாட்டைப்பற்றிய தகவல் களையும், கருத்துக்களையும் உங்களுடைய உன்னத இலக்கியங்களி லிருந்து தெரிந்து கொண்டனர். இந்திய எழுத்தாளர்களுடைய நூல் களும், மாபெரும் இந்தியக் கவிஞரும் நாடகாசிரியருமான காளிதாசனின் இலக்கியப் படைப்புகளும் ரஷ்யாவில் 18-ம் நூற்றுண்டு முதற்கொண்டே மொழிபெயர்த்து வெளியிடப்பட்டன. இதற்குப் பிற்பட்ட காலத்தில் இந்திய இதிகாசக் கதைகளின் மொழிபெயர்ப்புகளை ரஷ்ய மக்கள் வெகு வாகப் படித்து வந்தார்கள்.

ரஷ்யாவில் மகத்தான அக்டோபர் சோஷலிஸ்ட் புரட்சி வெற்றி யடைந்தபின், நம்மிரு மக்களுக்குமிடையே தொடர்புகளும், பரஸ்பர நல்லுணர்வும் பெருமளவுக்குப் பலமடைந்துவிட்டன. சகல நாடுகளின் சமத்துவத்தையும், சுய நிர்ணய உரிமையையும் அங்கீகரிக்கும் கோட் பாடுகளைப் பிரகடனப்படுத்தியது எங்கள் அக்டோபர் புரட்சி. இக் கோட்பாடுகளுக்கு, அன்று காலனி அடிமை நாடாயிருந்த இந்தியா உள்பட பல்வேறு நாடுகளின் பேராதரவு கிடைத்தது. 1918 நவம்பரில் சோவியத் யூனியனுக்கு வந்த முதல் இந்திய தூதுகோஷ்டி, அக்காலத் தில் எங்கள் நாட்டில் நடந்த சம்பவங்கள் குறித்து இந்திய மக்கள் எவ்வளவு ஆழ்ந்த அக்கறை கொண்டிருந்தனர் என்பதற்கு ஒரு எடுத்

துக்காட்டாக விளங்கியது. இத்தூதுகோஷ்டியை லெனினே வரவேற்றுப் பேட்டியளித்தார்.

தமது தாய்த்திரு நாடு மீண்டும் சுயேச்சைபெற வேண்டுமென உங்கள் மக்கள் காலனி ஒடுக்குமுறையை எதிர்த்து நடத்திய தன்னலமற்ற வீரப் போராட்டத்திற்கு சோவியத் மக்கள் உள்ளம் நிறைந்த அனுதாபத்தைக் காட்டினார்கள்.

இந்தப் போராட்டத்தில், இந்திய தேசீய இயக்கத்தின் மாபெரும் தலைவர் மகாத்மா காந்தியின் தலைமையும், அவரது கருத்துக்களும் முக்கிய பாத்திரம் வகித்தன என்பதை எல்லோரும் அறிவர்.

இந்தியாவைப்பற்றி, அதன் சரித்திரம், கலாச்சாரம்பற்றி, இந்திய மக்களின் வாழ்க்கையையும் இந்தியாவில் நிகழ்ந்துவரும் மாற்றங்களையும் பற்றி, தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆர்வம் பிரமாதமான அளவுக்கு சோவியத் யூனியனில் காணப்படுவதை யாரும் பார்க்க முடியும். கலாச்சாரம், கலை, விஞ்ஞானம், விளையாட்டுப் பந்தயங்கள் முதலிய துறைகளில் நம்மிருநாடுகளுக்குமிடையே இடையருது வளர்ந்த வண்ணமிருக்கும் தொடர்புகளே இதற்கு சான்று. எங்கள் நாட்டில் காண்பிக்கப்பட்ட இந்தியசினிமாப் படங்களும், கண்காட்சிகளும் பெரிதும் பாராட்டன.

சோவியத் மக்கள் இந்திய இலக்கியங்களில் பேரார்வம் காட்டி வருகின்றனர். எங்கள் நாட்டில் பன்முறை பிரிசுரிக்கப்பட்டுள்ள ரவீந்திரநாத் தாகூரின் அற்புத இலக்கியங்கள் யாவும் ஒன்று திரட்டப்பட்டு இப்பொழுது முழுமையான தனித் தொகுப்பாகப் பிரிசுரிக்கப்படுகின்றன. மாபெரும் இந்தியக் கவிஞர் துளசிதாசின் நூல்களை சோவியத் யூனியன் விஞ்ஞானப் பேரவை பிரசுரித்துள்ளது. தலைசிறந்த எழுத்தாளர் பிரேம்சத்தின் நூல்களும், இதர பல எழுத்தாளர்களின் நூல்களும், மொழி பெயர்த்துப் பிரசுரிக்கப்பட்டுள்ளன. ஜவாஹர்லாம் நேரு எழுதிய "இந்தியாவைக் கண்டறிந்தேன்" என்ற புத்தகமும் ரஷ்ய மொழியில் வெளியிடப்பட்டுள்ளது. இப்புத்தகத்திலிருந்து சோவியத் வாசகர்கள் இந்தியாவைப்பற்றி ருசிகரமான பல புதிய உண்மைகளைத் தெரிந்து கொண்டுள்ளனர்.

நம்மிரு நாடுகளுக்கிடையில் வளர்ந்துவரும் கலாச்சார பரிவர்த்தனையிலிருந்து, உங்களுடைய தொன்மை மிகுந்த வரலாற்றின் செழிப்பனைத்தையும், உலகக் கலாச்சாரப் பொக்கிஷத்திற்கு உங்கள் நாடு அளித்துள்ள பங்கையும் சோவியத் மக்கள் நன்கு பார்க்கமுடிவதுடன், இந்தியாவின் மக்களுடைய கலாச்சார, விஞ்ஞான சிறப்பியல்புகள் பற்றியும் அவர்கள் ஓரளவு தெரிந்துகொள்ள முடிகிறது.

இதன் முக்கியத்துவம் குறித்து, இது எவ்வாறு ஆன்மீக செழிப்பிற்கு வகை செய்கிறது என்பது குறித்து, அதிகம் சொல்லத் தேவையில்லை.

பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு எங்கள் நாட்டிற்கு விஜயம் செய்தபோது, சோவியத் மக்கள் அவரை ஆர்வமுடன் வரவேற்றனர். அவரது இந்த விஜயம் நம்மிரு நாடுகளின் நேசவுறவுகளை பலப்படுத்தவும் வளர்க்கவும் மிகப் பெரிய அளவுக்கு உதவி புரிந்தது. நேருவின் சோவியத் விஜயம் எங்கள் மக்களைப் பொறுத்த மட்டில் மறக்கமுடியாத ஒரு மாபெரும் நிகழ்ச்சியாகும். அவரது விஜயத்தின் விளைவாக நம்மிரு நாடுகளும் ஒன்றினிடமிருந்து மற்றொன்று கற்றறிந்து கொள்ளுவதற்கு ஏராளமான விஷயங்கள் உண்டு என்பதும், நமது ஒத்துழைப்பின் மூலம் பரஸ்பர நன்மை அடையமுடியும் என்பதும் முன்னைவிட மேலும் தெட்டத் தெளிவாகியது.

இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்குமிடையில் தற்பொழுது இருந்து வரும் ஒத்துழைப்பு பல துறைகளிலும் பயனளிக்கும் தன்மை வாய்ந்தது இந்த ஒத்துழைப்பு கலாச்சாரத் துறையில் மட்டுமின்றி பொருளாதாரத் துறையிலும் சமாதானத்திற்கு உத்திரவாதம் செய்வ தற்கும், சர்வதேச கெடுபிடி நிலையைத் தணிப்பதற்கும் நடத்தப்படும் போராட்டத்தின் பிரச்னைகளிலும் நிலவி வருகிறது. இங்கே சமாதானப் போராட்டத்தின் பிரச்னைகள் குறித்து நான் மேலும் விபரமாகப் பேச விரும்புகிறேன்.

நாம் வாழ்ந்துவரும் இக்காலத்தை, மாபெரும் மாற்றங்களுக்கும் விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுக்கும் பெயர்பெற்ற சகாப்தம் என்று கூறு வார்கள். இச்சகாப்தத்தின் மாபெரும் மாற்றங்களும் விஞ்ஞானக் கண்டு பிடிப்புகளும் மனித குலத்திற்கு, முன்பின் கண்டறியாத அபரிமிதமான கலாச்சார, பொருளாதார வாய்ப்புகளை ஏற்படுத்துவதற்கு வழி வகுக்கின் றன. இதை நாம் மனதில் கொள்வது நமது கடமை. அதே சமயத்தில் சரித்திரத்தின் முன்னேற்ற இயக்கத்தைத் தடுத்துப் பின்னுக்குத் தள்ளு வதற்கும், மனித அறிவாற்றலின் சாதனைகளை மக்களுக்குத் தீங்கிழைக் கும் முறையில் பயன்படுத்துவதற்கும் கலாச்சார பௌதீக பொக்கிஷங் களையும் கோடிக் கணக்கான மக்களையும் அழித்தொழிக்க விஞ்ஞான, தொழில் நுணுக்க முன்னேற்றங்களைப் பயன்படுத்துவதற்கும் பிற் போக்கு சக்திகள் செய்துவரும் முயற்சிகளை யாரும் உதாசீனம் செய்து விட முடியாது. இந்த உண்மை ஒவ்வொரு நாட்டின் சர்க்காருக்கும் பார்லிமெண்டிற்கும், மக்களுக்கும் உலகின் எதிர்காலம் குறித்து ஒரு விசேஷப் பொறுப்பை ஏற்படுத்துகிறது. இந்தப் பொறுப்பை சோவியத் மக்களும் சர்க்காரும் பூரணமாக உணர்ந்து, சமாதானத்தைப் பாதுகாக்க வும் முன்னேற்றம் காண்பதற்காகவும் தம்மால் ஆன அனைத்தும் செய்து வருகின்றனர்.

இது விஷயத்தில் நம்மிரு மக்களின், சர்க்கார்களின் பாதைகள் ஒன் றுக்கொன்று முரணாக இல்லாதது குறித்து சோவியத் மக்கள் மிகுந்த திருப்தி அடைகின்றனர்.

சமாதானத்தைப் பலப்படுத்தும் பணியில் இந்தியா ஆற்றியுள்ள பங்கை சோவியத் யூனியன் பெரிதும் போற்றுகிறது. இந்தியாவும், சீன மக்கள் குடியரசும், சோவியத் யூனியனும் மேற்கொண்ட கூட்டு முயற்சி களின் விளைவாக, கொரியாவில் போர் நிறுத்த ஒப்பந்தத்தை ஏற்படுத்து வதற்கும், இந்தோ-சீனுவில் யுத்தத் தீயை அணைப்பதற்கும் முடிந்தது. ஐ. நா. ஸ்தாபனத்தில் சீன மக்கள் குடியரசிற்குரிய நியாயமான ஸ்தா னத்தை அதற்கு அளிக்க வேண்டும் என்ற கோரிக்கையை இந்தியா தீவிரமாக வலியுறுத்தி வருகிறது. சீன மக்கள் குடியரசின் தேச நல வுரிமைகளையும், நியாயமான உரிமைகளையும் மனத்திற் கொண்டு, தைவான் பிரச்னைக்கு சமாதான பூர்வமான வழிகளில் தீர்வு காண் பதற்கு இந்தியா பாடுபட்டு வருகிறது.

ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் முதல் மகாநாட்டைக் கூட்டுவதற்கு முன்முயற்சி எடுத்துக்கொண்ட நாடுகளில் ஒன்று இந்திய நாடு. அம் மகாநாட்டில் அது ஆற்றிய பங்கு தலைசிறந்ததாகும்.

உலக சமாதானத்தைப் பலப்படுத்தும் பணிக்கும், ஆசியா, ஆப் பிரிக்கா ஆகிய இவ்விரு கண்டங்களிலுள்ள சமாதானப்பற்றுள்ள மக்க ளின் உரிமைகளுக்கும் தேசிய நலன்களுக்கும் உத்திரவாதமளிக்கும் பணிக்கும் இம்மகாநாடு ஆற்றிய பங்கின் முக்கியத்துவத்தை மிகைப்படுத் திக் கூறமுடியாது.

அணுசக்தி ஆயுதங்களையும் நீர்வாயு ஆயுதங்களையும் தடை செய்ய வேண்டும் என்ற பிரச்னையிலும், ஆயுத உற்பத்திப் போட்டியினுல் தற் பொழுது விரயமாகும் ஏராளமான செல்வாதாரங்களை சமாதான பூர்வ மான நிர்மாணப் பணிக்கு உபயோகிக்கும் நிமித்தம் ஆயுதங்களைக் குறைத்துக் கொள்ளும் பிரச்னையிலும் இந்திய சர்க்காரின் நிலையை சோவியத் யூனியன் நன்கு உணர்ந்திருப்பதுடன் ஆர்வமுடன் ஆதரிக் கவும் செய்கிறது.

இராணுவ ஆக்கிரமிப்புக் கூட்டணிகளை ஏற்படுத்தும் கொள்கைக்கு எதிராகவும், கூட்டு சமாதான பந்தோபஸ்தைப் பாதுகாப்பதற்காகவும், சர்வதேசப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு பேச்சு வார்த்தைகளையே மார்க்க மாகக் கொள்ளவேண்டும் என்பதற்காகவும் இந்திய சர்க்கார் எடுத்து வரும் முயற்சிகளுக்கு சோவியத் மக்கள் பெரிதும் தலை வணங்குகின் றனர்.

புகழ் வாய்ந்த ஐம்பெரும் கோட்பாடுகளின் அடிப்படையில் அமைந் துள்ள சோவியத்-இந்திய உறவுகள், வெவ்வேறு சமூக அரசியல் அமைப்புகளை உடைய அரசுகள் சமாதானமாக ஒருங்கே ஒத்துவாழ முடியும், நமக்கிடையில் நேசபூர்வமான ஒத்துழைப்புக் கொண்டிருக்க முடியும் என்ற அறிவுரையின் பிழையற்றத் தன்மையைப் பூர்ணமாக

ஊர்ஜிதம் செய்கின்றன. இந்தப் பிரபல அறிவுரையின் கருத்திற்கு மென் மேலும் ஆதரவாளர்கள் பெருகி வருகின்றனர். தற்பொழுது பேச்சு வார்த்தைகள் மூலம் சர்வதேசப் பிரச்னைகளுக்கு சமாதான பூர்வமான தீர்வு காணும் முறைக்கு எதிராக இருந்து வருவோர் மத்தியிலும் கூட —இன்னமும் ஆயுத பலத்தின் உச்சிமீது நின்றுகொண்டு தமது அயல் நாட்டுக் கொள்கையை வகுத்து வருவோர் மத்தியிலும் கூட—பெரும் பாலானவர்கள் இவ்வறிவுரையை ஏற்றுக்கொள்ளும் நிலைமை ஏற்படும் என்ற நம்பிக்கையை நான் தெரிவிக்க விரும்புகிறேன்.

சோவியத் யூனியன் அயல்நாட்டுக் கொள்கை சமாதானக் கொள்கை; தேசங்களின் நட்புறவிற்காகவும் சமாதானத்திற்காகவும் தீவிரமாகவும் விடாப்பிடியாகவும் போராடும் கொள்கை; யுத்தத்திற்கு எதிரான கொள்கை; இதர அரசுகளின் உள்நாட்டு விவகாரங்களில் எவ்விதமான தலையீட்டிற்கும் இடமளிக்காத கொள்கை. எங்களுடைய போதனாசிரியர் மேதை லெனின் வகுத்த வழியில், சகல தேசங்களையும் மதித்து நடத்தல் என்ற கோட்பாட்டின் அடிப்படையில், எங்கள் கொள்கை அமைந்திருக்கிறது. ஒவ்வொரு நாட்டு மக்களும் நமது விருப்பத்திற்கும் நலன்களுக்கும் உகந்தவாறு சுயேச்சையான தேசிய வளர்ச்சிப் பாதையை மேற்கொள்ளும் உரிமையுடையவர்கள் என்ற கோட்பாடும் எங்கள் கொள்கைக்கு அடிப்படையாக விளங்குகிறது.

ஆக்கிரமிப்பு நடவடிக்கை ஒவ்வொன்றும் மனித வர்க்கத்தின் மனச் சாட்சிக்கும் கவுரவத்திற்கும் எதிரானதென்றும், ஏராளமான பொருள் வளங்களின் அழிவிற்கும் உலகிலேயே வேறு எதையும்விட புனிதமான மதிப்பிடற்கரிய மனித உயிர்களின் நாசத்திற்கும் அது வழிகோலுகிற தென்றும் சோவியத் யூனியன் கருதுகிறது. எனவேதான் சச்சரவி லுள்ள சர்வதேசப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு யுத்தத்தை ஒரு மார்க்க மாகக் கொள்வதை நாங்கள் அடியோடு நிராகரிக்கிறோம். இதே காரணத்திற்காகவே நாங்கள், இதுவரை தீர்க்கப்படாமலிருந்துவரும் பிரச்னைகளை பேச்சுவார்த்தைகளின் மூலம் சமாதானமான முறையில் ஒழுங்குபடுத்த வேண்டுமென்று கூறுகிறோம்.

இத்திசையிலே இந்தியா, சோவியத் யூனியன் உள்பட சமாதானத்தை நேசிக்கும் சக்திகள் மேற்கொண்ட கூட்டு முயற்சிகள் இதற்குள்ளாகவே சிறந்த பயன் அளித்துள்ளன. குறிப்பாக நான்கு வல்லரசுகளின் சர்க்கார் அதிபர்களுடைய ஜெனீவா, மகாநாட்டின் முடிவுகளுக்கு இவை தூண்டுகோலாக இருந்தன. மேலும் இதனால், நான்கு வல்லரசுகளின் அயல்நாட்டு மந்திரிகள் ஆயுதப்பரிஹாரணம், ஐரோப்பியப் பாதுகாப்பு, ஜெர்மனி. கிழக்கு நாடுகளுக்கும் மேலைய நாடு களுக்கும் இடையில் தொடர்புகளை வளர்த்தல் முதலிய பிரச்னைகளை ஸ்தூலமாக விவாதிப்பதற்கு ச ந்தர்ப்பம் ஏற்பட்டது.

சமீபத்தில் முடிவடைந்த நான்கு வல்லரசுகளின் அயல்நாட்டு மந்திரிகளுடைய மகாநாட்டில், இப்பிரச்னைகள் யாவற்றிலும் ஒருமித்த முடிவுகளைக் காண்பதற்காக, "ஜெனீவா மனப்பான்மை"யின் வழி நின்று பெரும் முயற்சி செய்தது, சோவியத் யூனியன்.

சம்பிரதாய யுத்த தளவாடங்களின் உற்பத்திப் பெருக்கமும், வெகுஜன நாசகார ஆயுதங்களின் உற்பத்திப் பெருக்கமும் உலக மக்களிடையில் பெரும் பீதியை ஏற்படுத்தி வருவதினால், தற்பொழுது ஆயுதப் பரிஹரணப் பிரச்னை மனிதகுலம் அனைத்தின் ஆழ்ந்த கவனத்தைக் கவர்ந்து வருகிறது என்பது யாவரும் அறிந்ததே.

ஆயுதப் பரிஹரணத்திற்கும், அணு, நீர்வாயு ஆயுதங்களுக்குப் பூரண தடை விதிப்பதற்கும் சோவியத் யூனியன் எப்பொழுதுமே ஆதரவாக இருந்துவந்துள்ளது, இன்றும் இருந்துவருகிறது. ஆயுதப் பரிஹரணத்தைத் தனது அயல்நாட்டுக் கொள்கையின் பிரதான நோக்கமாகக் கொண்டு, இந்தக் குறிக்கோளை ஈடேற்றுவதற்காக, சோவியத் யூனியன் பல ஆண்டுகளாகப் போராடிவந்துள்ளது. அணு, நீர்வாயு ஆயுதங்களுக்குத் தடை விதிப்பதும் ஆயுத உற்பத்திப் போட்டியை நிறுத்துவதும்தான் ஆயுதப் பரிஹரண பிரச்னையின் மிக முக்கியமான அம்சமென நாங்கள் கருதுகிறோம்.

அமெரிக்கா, சோவியத் யூனியன், சீனமக்கள் குடியரசு, பிரிட்டன், பிரான்ஸ் இந்நாடுகள் வைத்துக் கொள்ளக்கூடிய ஆயுதப் படைகளின் அளவு குறித்தும், அணு, நீர்வாயு ஆயுதங்களின் பரிபூரணத் தடை அமுலுக்கு வரும் தேதிகள் குறித்தும் இவ்வாண்டின் தொடக்கத்தில் மேற்கு அரசுகள் சமர்ப்பித்த பிரேரணைகளை சோவியத் யூனியன் ஏற்றுக் கொண்டது. இவ்விதம் அது தனது நல்லெண்ணத்தை வெளிப்படுத்தியதுடன், மெய்யான ஆயுதப் பரிஹரணத்தையும் அணு, நீர்வாயு ஆயுதத் தடையையும் ஏற்படுத்த முயன்றது. ஏற்றுக் கொள்ளப்பட்ட ஆயுதக் குறைப்பு அளவில் 75 சதவிகிதத்திற்கு சம்பிரதாய யுத்த தளவாடங்கள் குறைக்கப்படும் வரை அணு, நீர்வாயு ஆயுதங்களுக்குத் தடை விதிப்பதற்குத் தாம் இசைய முடியாது என்று மேலைய வல்லரசுகள் கூறின. நாங்கள் இந்தப் பிரேரணையையும் ஏற்றுக் கொண்டோம்.

மேலும், சொற்களைவிட கணீரென்று ஒலிப்பவை செயல்கள் என்ற விதியைப் பின்பற்றி, சோவியத் யூனியன் சர்க்கார் தனது இராணுவத்திலிருந்து ஆறு லட்சத்து நாற்பதாயிரம் துருப்புகளைப் படை விலக்கம் செய்து தன் படைகளைக் குறைத்துக்கொள்வதென்று முடிவு செய்தது. தற்பொழுது இந்த முடிவு பெரும்பாலும் நிறைவேற்றப்பட்டு விட்டது. தேசங்களுக்கிடையில் பரஸ்பர நம்பிக்கையை ஏற்படுத்துவதற்கு இது ஒரு முக்கிய சேவையாகும்.

ஆயுதக் குறைப்பையும், அணு, நீர்வாயு ஆயுதங்களுக்கு விதிக்கப் படும் தடையையும் திறம்படக் கட்டுப்படுத்தவல்ல ஒரு அமைப்பிற்கு (ஒரு அரசு மற்றொரு அரசின் மீது திடீரென்று தாக்குதல் தொடுக்காமல் தடுப்பதற்காக சம்பந்தப்பட்ட நாடுகளின் பிரதேசங்களில் கண்காணிப்பு நிலையங்கள் நிறுவுவதும் இவ்வமைப்பில் உள்ளடங்கியது) எங்களுடைய பிரேரணைகள் ஏற்பாடு செய்கின்றன. ஆயுதப்பரிஹாரணம் என்ற பிரதான பிரச்னையுடன் சம்பந்தப்படுத்தியே கண்ட்ரோல் பிரச்னை தீர்க்கப்பட வேண்டும் என்பது வெளிப்படை. ஆயுதப் பரிஹாரணமே இல்லாமல் ஆயுதப் பரிஹாரணத்தின் கண்ட்ரோல் பிரச்னையை தீர்க்க முயல்வது பகுத்தறிவிற்கும், உலக மக்களின் விருப்பத்திற்கும் முரணானதாகும்.

ஆயுதப் பரிஹாரணம், அணு. நீர்வாயு ஆயுதங்களுக்குத் தடைவிதிப் பது சம்பந்தமான பிரச்னையில் எழுந்த முட்டுக்கட்டையை உடைப் பதற்கு நாங்கள் எடுத்த முயற்சிகள் இதுவரையில் நற்பயன் அளிக்க வில்லை என்பதற்காக நாங்கள் பெரிதும் வருந்துகிறோம். உண்மை என்னவெனில் அமெரிக்காவும், இங்கிலாந்தும், பிரான்சும் இவ்வாண்டு துவக்கத்தில் அவை என்ன கூறினவோ, அதிலிருந்தே பின்வாங்கி விட்டன. ஆயுதப் பரிஹாரணப் பிரச்னையில் மேலைய வல்லரசுகள் பின் நோக்கிச் செல்கின்றன—தமது முந்திய நிலையைக் கைவிட்டுவிட்டன—தமது புதிய பிரேரணைகளின் மூலம் ஆயுதப்பரிஹாரணப் பிரச்னையை குறைந்தபட்சம் 10 ஆண்டுகளுக்குப் பின்னுக்கித் தள்ளி வருகின்றன என்பதைக் குறிப்பிடவேண்டியது அவசியம்.

இவ்வாறு பல முட்டுக்கட்டைகள் எழுப்பப்பட்டாலும், அணு, நீர்வாயு ஆயுதங்களுக்குத் தடை விதிப்பதற்கும், ஆயுதப் பரிஹாரணப் பிரச்னைக் குத் தீர்வு காண்பதற்கும் சோவியத் சர்க்கார் வருங்காலத்திலும் முழுமூச் சுடன் பாடுபடும்.

சிறப்புடைய பார்லிமெண்ட் உறுப்பினர்களே!

ஐரோப்பாவின் பந்தோபஸ்து பிரச்னை குறித்தும் ஒருசில விஷயங் களைக் கூற விரும்புகிறேன். இந்தியாவிலிருந்து வெகுதூரத்துக்கு அப் பால் உள்ளது ஐரோப்பா. ஆனால் உலகின் அந்தப் பிராந்தியத்திலே நிகழும் சம்பவங்கள், பல நூற்றாண்டுகளாகவே, உலகம் முழுவதையும் பாதித்து வந்துள்ளன. முதலாவது, இரண்டாவது உலகயுத்தங்கள் ஐரோப்பாவில்தான் ஆரம்பமாயின என்பதை ஞாபகப்படுத்திக்கொண் டாலே போதும், ஐரோப்பாவின் முக்கியத்துவத்தை உணருவதற்கு.

ஐரோப்பாவில் இராணுவக் கூட்டணிகள் இருந்துவருவதும், பல ஐரோப்பிய அரசுகளின் பிரதேசங்களில் அன்னியத் துருப்புகளும், இராணுவத் தளங்களும் இருந்துவருவதும் உலக மக்களின் கவலைக்குக் காரணமாகும். இதை யாவரும் புரிந்துகொள்ளமுடிகிறது. அடிக்கடி

நேரு அவர்கள் வலியுறுத்திக் கூறி வந்துள்ளதுபோல், இராணுவக் கூட்டணிகளை அமைக்கும் கொள்கை அரசுகளுக்கிடையிலுள்ள சச்சரவுகள் கூர்மையடைவதற்கும், இறுதியாக யுத்தத்திற்கும் வழிவகுக்கிறதேயன்றி, சமாதானத்திற்கும், சர்வதேசக் கெடுபிடி நிலை தணிவதற்கும் உதவவில்லை. இதே கருத்துக்களைத்தான் நாங்களும் கொண்டுள்ளோம் என்பது யாவரும் அறிந்ததே.

இராணுவக் கூட்டணிகளை ஏற்படுத்தும் கொள்கையை சோவியத் சர்க்கார் எதிர்ப்பதுடன், ஏற்கனவே அமைக்கப்பட்டுவிட்ட கூட்டணிகளை ரத்துசெய்ய வேண்டும் என்றும் கூறுகிறது. எல்லா ஐரோப்பிய அரசுகளுடனும் அமெரிக்காவும் பங்குகொள்ளும் ஒருகூட்டு பந்தோபஸ்து அமைப்பை ஏற்படுத்த வேண்டுமென நாங்கள் சென்ற வருடம் ஆலோசனை கூறினோம். நாங்கள் கூறிய இந்த ஆலோசனைக்கு மேலைய வல்லரசுகள் ஆட்சேபணைகள் தெரிவித்தன. முற்றிலும் தற்காப்பு நோக்கங்களுக்காகவே அமைக்கப்பட்டதாகக் கூறப்படும் வட அட்லாண்டிக் கூட்டணியைத்தகர்ப்பதாக இருக்கிறது எங்கள் ஆலோசனை என்று அவர்கள் ஆட்சேபித்தார்கள். ஆனால் வட அட்லாண்டிக் கூட்டணியில் நாங்கள் சேருவதற்கு விருப்பம் தெருவித்ததும், மேலைய வல்லரசுகள் எங்களை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டன. அவ்வாறு செய்ததின்மூலம், வட அட்லாண்டிக் கூட்டணியின் தற்காப்புத் தன்மை குறித்து அவர்கள் வாய்ப்பறை கொட்டுவது நியாயமல்ல என்பதை ஊர்ஜிதம் செய்துவிட்டனர் என்பதுடன், அக்கூட்டணியின் ஆக்கிரமிப்புத் தன்மையையும், அதில் பொறுக்கியெடுத்த சில அரசுகளுக்கே இடம் உண்டு என்பதையும் வெளிப்படுத்திக்கொண்டார்கள்.

இந்தச் சூழ்நிலைமைகளையும், ஜெர்மன் சமஷ்டிக் குடியரசை வட அட்லாண்டிக் கூட்டணியில் சம்பந்தப்படுத்திய பாரிஸ் ஒப்பந்தங்கள் கையொப்பமானதையும் மனதிற்கொண்டு, சோவியத் சர்க்காரும் இதர கிழக்கு ஐரோப்பிய அரசுகளின் சர்க்கார்களும் தமது பந்தோபஸ்திற்கு மேலும் அதிகமான உத்திரவாதம் அளிக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. இதனால் இவ்வாண்டு வசந்த காலத்தில் வார்ஸா ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று.

மேலைய வல்லரசுகளின் நிலையினாலேயே, வார்ஸா ஒப்பந்தம் உருவாயிற்று. ஐரோப்பாவில் கூட்டு பந்தோபஸ்து அமைப்பு ஏற்படுத்தப்பட்டவுடனே, மேலைய வல்லரசுகள் வட அட்லாண்டிக் கூட்டணியையும், பாரிஸ் ஒப்பந்தத்தையும் கைவிட்டவுடனே, நாங்கள் வார்ஸா ஒப்பந்தத்தை ரத்துசெய்யத் தயாராக இருக்கிறோம்.

இராணுவக் கூட்டணிகளை ஏற்படுத்துவதும் அவற்றை விரிவுபடுத்துவதுமான கொள்கையும், அன்னிய நாடுகளில் இராணுவத் தளங்களை நிர்மாணிப்பதும் நிலைநிறுத்தி வருவதுமான கொள்கையும் ; உலக

மக்களின் சமாதானபூர்வமான வளர்ச்சிப் பாதைக்கு முட்டுக்கட்டையாக விளங்குகிறதேயல்லாமல், சர்வதேச நம்பிக்கையை ஸ்தாபிக்க உதவுவதில்லை இதைக் கருத்தில்கொண்டு சோவியத் யூனியன், சீனாவின் பிரதேசத்திலுள்ள போர்ட் ஆர்தரிலிருந்த தனது தளங்களையும், பின்லாந்தின் பிரதேசத்திலுள்ள போர்க்காலா-உத்திலிருந்த தளங்களையும் கைவிட்டது. இப்பொழுது அன்னிய நாடுகளில் சோவியத் யூனியனுக்கு யாதொரு ராணுவத்தளமும் கிடையாது.

அன்னியப் பிரதேசங்களில் இராணுவத் தளங்களை வைத்துக் கொண்டிருக்கும் இதர சில அரசுகளும் சோவியத் யூனியனின் உதாரணத்தைப் பின்பற்றியிருந்தால், உலக நாடுகளுக்கிடையிலுள்ள உறவுகளில் இருந்துவரும் கெடுபிடி நிலையை மேலும் தணிவுறச் செய்யும் பணிக்கு அது ஒரு முக்கிய உதவியாக இருந்திருக்கும் என்பதுடன், 'ஜெனீவா மனப்பான்மை"யை ஸ்தூலமான செயல்களின் மூலம் நிலைநாட்டியதாகவும் இருந்திருக்கும்.

சில வட்டாரங்கள் தமது நடைமுறைச் செயல்களில் "ஜெனீவா மனப்பான்மை"யை பின்பற்ற விரும்பவில்லை என்பதை இங்கு மீண்டும் குறிப்பிட வேண்டியுள்ளது வருந்தத்தக்கது உதாரணமாக பெரும்பாலும் ஆசியாக் கண்டத்திற்கு வெளியேயுள்ள நாடுகளை உறுப்பினர்களாகக் கொண்ட அபகீர்த்திவாய்ந்த அந்த தென்கிழக்கு ஆசியக் கூட்டணியை (சியேடோவை) மேலும் விரிவுபடுத்திப் பலப்படுத்துவதற்காக, எடுக்கப் பட்டுவரும் முயற்சிகளே இதற்கு சான்றாகும். இந்தியா, சோவியத் யூனியன் இவ்விரு நாடுகளின் எல்லைகளுக்கு அருகில், சமீப கிழக்கிலும் மத்திய கிழக்கிலும் ஒரு இராணுவக் கூட்டணி ஏற்படுத்தப்பட்டுள்ளதும் இதற்கு மற்றொரு சான்றாகும். இத்தகைய சூழ்நிலைமைகளில், சமாதானத்தின், சர்வதேச ஒத்துழைப்பின் விரோதிகளுடைய சதிகளுக்கு எதிராக மிகவும் உஷாராக இருக்கவேண்டியது தனது கடமை என்று சோவியத் சர்க்கார் கருதுகிறது.

ஜெர்மனியின் ஐக்கியம்பற்றிய பிரச்னை மிகவும் முக்கியமான பிரச்னைகளில் ஒன்று என்பது மறுக்க முடியாதது. ஜெர்மனி, சமாதானத்தை நேசிக்கும் ஒரு ஜனநாயக அரசாக, இராணுவக் கூட்டணிகளில் பங்கெடுத்துக் கொள்ளாத ஒரு அரசாக வளர்ச்சியடையப் போகிறதா? அல்லது இராணுவ ஆதிக்கத்தை மீண்டும் ஸ்தாபித்து, மேலைய வல்லரசுகளின் இராணுவக் கோஷ்டிகளில் பங்கெடுத்துக்கொள்ளும் பாதையில் செல்லப்போகிறதா ? ஜெர்மனி ஐக்கியமடைந்து, முதலில் கூறிய பாதையிலே, சமாதானபூர்வமான ஜனநாயக வளர்ச்சியை நோக்கி செல்ல வேண்டும். இது ஐரோப்பாவிலும் உலகம் பூராவிலும் சமாதானத்தின் நலன்களுக்கு உகந்ததாகும். இந்த நலன்களைக் கருத்தில் கொண்டே, சோவியத் யூனியன் ஜெர்மன் பிரச்னை குறித்து

தனது கொள்கையைத் தீர்மானிக்கிறது. கடந்த 10 ஆண்டுகளில் உருவாக்கப்பட்டுள்ள வெவ்வேறான சமூக அமைப்புகளைக் கொண்ட ஜெர்மன் சமஷ்டிக் குடியரசு, ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு ஆகிய இரு ஜெர்மன் அரசுகள் இருந்து வருகின்றன என்ற யதார்த்த உண்மையையும் நாங்கள் கருத்தில் கொண்டே எங்கள் கொள்கையைத் தீர்மானிக்கிறோம். எங்கள் அபிப்பிராயத்தில் ஜெர்மன் பிரச்னை ஜெர்மன் மக்களாலேயே தீர்மானிக்கப்பட வேண்டிய பிரச்னை; சமாதான பூர்வமான ஜனநாயக வளர்ச்சிப் பாதையை மேற்கொண்டு ஜெர்மனி ஐக்கியமடைவதற்கு உதவி புரிவது வல்லரசுகள் செய்யவேண்டிய கடமை.

அகில-ஜெர்மன் கவுன்சில் ஒன்றை நிறுவ வேண்டுமென சோவியத் யூனியன் கூறியது. ஜெர்மன் மக்களின் அரசியல், பொருளாதார, கலாச்சார வாழ்க்கை சம்பந்தமாகவும், சமாதானத்தை வலிமை பெறச் செய்யும் நோக்கத்துடன் இதர அரசுகளுடன் ஒத்துழைப்பது சம்பந்தமாகவும் இன்றுள்ள இரண்டு ஜெர்மன் அரசுகளும் மேற்கொள்ளும் நடவடிக்கைகளை ஒருமுகப்படுத்தவல்ல அமைப்பாக இந்த அகில-ஜெர்மன் கவுன்சிலை நிறுவ வேண்டுமென்று சோவியத் யூனியன் பிரேரணை செய்தது. இது ஏற்பட்டிருந்தால், ஜெர்மன் மக்களின் தேசிய நலன்களுக்கும் ஐரோப்பிய பந்தோபஸ்தின் நலன்களுக்கும் உகந்த முறையில் ஜெர்மன் பிரச்னையைத் தீர்ப்பதற்கும், சுதந்திரமான தேர்தல்களின் மூலம் ஜெர்மனியை ஐக்கியப்படுத்துவதற்கும் தேவையான நிலைமைகளை உருவாக்க அனுசரணையாக இருந்திருக்கும்.

ஐரோப்பாவில் பரஸ்பர நம்பிக்கை நிலவும் ஒரு சூழ்நிலையை சமாதானத்தை பலப்படுத்தும் ஒரு சூழ்நிலையை ஏற்படுத்துவதற்காக, சோவியத் சர்க்கார் கடந்த 6 மாதங்களாக முக்கியமான பல புதிய நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. சோவியத் யூனியன் யுகோஸ்லாவியாவிடம் தனது நேசவுறவுகளை மீண்டும் ஸ்தாபித்துள்ளதுடன், வெற்றிகரமாக அந்நேசவுறவுகளை மேலும் வளர்த்துக் கொண்டுமிருக்கிறது. நிரந்தர நடுநிலைமைப் பாதையைத் தேர்ந்தெடுத்துள்ள ஆஸ்ட்ரியாவுடன் ஒரு சமாதான உடன்படிக்கை செய்து கொண்டுள்ளோம். சோவியத் யூனியனுக்கும் ஜெர்மன் சமஷ்டிக் குடியரசிற்கும் இடையில் ராஜிய உறவுகளை ஏற்படுத்துவதற்கும் ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது. சோவியத் யூனியனுக்கும் ஜெர்மன் ஜனநாயகக் குடியரசிற்கும் இடையிலுள்ள உறவுகள் பற்றியும் ஒரு உடன்படிக்கை கையெழுத்தாகியுள்ளது. இவ்வுடன்படிக்கை ஜெர்மன் ஜனநாயகக் குடியரசிற்கு பூரண அரசுரிமையை வழங்குகிறது. சோவியத் சர்க்காரின் இந்நடவடிக்கைகள் யாவும் அதன் கொள்கையை தெட்டத் தெளிவாக்குகின்றன; இவற்றைப் பற்றி மேலும் கூறவேண்டியதில்லை.

இன்று சர்வதேசத் துறையில், ஆசியா சம்பந்தமாகவும் பல பிரச்னைகள் உள்ளன. இவற்றைத் தீர்ப்பதற்குத் தீவிர முயற்சிகள் தேவைப்

படும். உதாரணமாக 1954ம் வருடத்திய ஜெனிவா மகாநாட்டின் முடிவுகளின்படி இந்தோ-சீனுவில் ஒரு அரசியல் முடிவுகாணும் பிரச்னை கவலையை அளித்து வருகிறது. இம்முடிவுகளை நிறைவேற்றுவதற்காக இந்தியாவின் நெருங்கிய ஒத்துழைப்புடன் சோவியத் யூனியன் இனி வருங்காலத்திலும் அயராது பாடுபடும்.

எனவே, சிறப்புடைய பார்லிமெண்ட் உறுப்பினர்களே! நம்மிரு அரசுகளின் அயல்நாட்டுக் கொள்கைகளுக்கிடையில் பொதுவான அம்சங்கள் பெருமளவுக்கு உள்ளன. நாமிருவரும் நீண்ட காலப் போக்கில் ஒருமித்துள்ள ஒரேவிதமான குறிக்கோள்களுக்காகவே பாடுபட்டு வருகிறோம். சர்வதேசக் கெடுபிடி நிலையைத் தணித்தல், சமாதானத்தைப் பராமரித்து பேணி வளர்த்தல், யுத்தத்தைத் தடுத்து நிறுத்தி அதன் கோரங்களிலிருந்து மனித குலத்தை பாதுகாத்தல், உலக முழுதுமுள்ள மக்கள் சமாதான வாழ்வின் இன்பங்களை நுகர்ந்து தமது வேலைகளைத் தங்குதடையின்றி செய்வதற்கு உத்திரவாதம் அளித்தல் முதலியவையே நம்மிரு நாடுகளின் குறிக்கோள்கள். இவற்றைவிட உன்னதமான உயர்ந்த இலட்சியங்கள் வேறு என்ன இருக்க முடியும்?

இத்தகைய உயரிய குறிக்கோள்களை ஈடேற்றுவதற்காக, நாங்கள் எங்கள் நாட்டிலே கூறுவதுபோல், சட்டைக் கைகளை மடக்கி விட்டுக் கொண்டு, எவ்வித கஷ்ட உழைப்பிற்கும் தயங்காது பாடுபட வேண்டியது அவசியமாகும் என்பதை நீங்கள் எல்லோரும் ஏற்றுக்கொள்ளுவீர்கள் என்று நினைக்கிறேன்.

நம்மிரு நாடுகளிலும் வாழ்க்கை நம்முன் வைத்துள்ள பிரச்னைகளுக்குத் தீர்வு காணும் விஷயத்திலும் நமக்கிடையில் பொதுவான அம்சங்கள் பெருமளவுக்கு உள்ளன.

அக்டோபர் புரட்சியில் வெற்றி அடைந்த எங்கள் மக்கள் தமது தாய்நாட்டில் பொருளாதார கலாச்சார மாறுதல்களை ஏற்படுத்தி, இயந்திர வளர்ச்சி அடைந்த சோஷலிஸ்ட் அரசாக அதை மாற்றியமைப்பதென்ற குறிக்கோளுக்காகப் பாடுபட முற்பட்டனர். இந்த சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த கடமையை சோவியத் மக்கள் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையின் கீழ் வெற்றிகரமாக நிறைவேற்றி விட்டனர்.

நீங்கள் உங்கள் சொந்தப் பாதையைப் பின்பற்றுகிறீர்கள். காலனி ஆதிக்கத்தை என்றென்றும் தலைதூக்க வொட்டாமல் விரட்டியடித்துள்ள நீங்களும், உங்கள் சொந்த நாட்டை வளர்ச்சியடைந்த தேசப் பொருளாதாரத்தையும் போதுமான அளவுக்கு உயர்ந்த வாழ்க்கைத் தரத்தையும் பெற்ற முன்னேற்றகரமான ஒரு அரசாக மாற்றியமைப்பதென்ற குறிக்கோளுக்காகத் தான் பாடுபட்டு வருகிறீர்கள். இக்குறிக்கோளை ஈடேற்றுவதற்காக நீங்கள் எடுத்துவரும் முயற்சிகளை சோவியத் மக்கள் பரிபூரண நல்லுணர்வுடனும் அனுதாபத்துடனும் பார்க்கின்றனர்.

எங்கள் அபிப்பிராயத்தில், பொருளாதார, கலாச்சாரத் துறைகளிலும், விஞ்ஞான, தொழில் நுணுக்க ஆராய்ச்சித் துறையிலும் சோவியத்-இந்திய ஒத்துழைப்பை மேலும் விரிவுபடுத்துவதற்கு தற்பொழுது சகல வாய்ப்புகளும் உள்ளன.

எங்களுடைய பொருளாதார, விஞ்ஞான அனுபவத்தை நாங்கள் உங்களுடன் பகிர்ந்து கொள்ளத் தயாராக இருக்கிறோம். நமது இரு மக்களின் விருப்பங்களுக்கும் அபிலாஷைகளுக்கும் இது முற்றிலும் பொறுத்தமானதாகும்.

இந்தியாவில் நாங்கள் இதுவரை தங்கியிருந்த காலத்தில் நாங்கள் பார்த்ததனைத்தும், நமது இரு நாடுகளுக்கிடையிலுமுள்ள உறவுகள் இரு தரப்பினருக்கும் பரஸ்பர நன்மை நல்கும் ஸ்திரமான அடிப்படையிலேயே மேலும் தொடர்ந்து வளர்ச்சியடையும் என்ற எங்கள் நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்கின்றன.

இந்திய, சோவியத் மக்களின் நலன்கள் தழைத்தோங்கும் பொருட்டும், உலக முழுதும் சமாதானத்திற்கு உத்திரவாதம் செய்து சமாதானத்தை பலப்படுத்தும் பொருட்டும் சமாதானத்தை விரும்பும் நம்மிரு மக்களுக்கிடையிலுள்ள நட்புறவும் ஒத்துழைப்பும் மென்மேலும் வலுப் பெற்று வளர்வதாக!

## இந்தியப் பார்லிமெண்டில் 1955 நவம்பர் 21ல் என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

சிறப்புடைய தலைவர் அவர்களே!

சிறப்புடைய பார்லிமெண்ட் உறுப்பினர்களே!

இந்தியக் குடியரசின் பார்லிமெண்டிலே, உங்கள் மத்தியில் பேசும் கவுரவம் எனக்கு அளிக்கப்பட்டுள்ளது குறித்து நான் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எங்கள் நாட்டிற்கு சமீபத்தில் விஜயம் செய்த இந்தியப் பிரதமர் ஜவாஹர்லால் நேரு அவர்களின் அழைப்பிற்கிணங்க நாங்களும் எங்கள் பங்கைச் செய்யும் முறையில், உங்கள் நாட்டிற்கு நண்பர்கள் என்ற முறையில் விஜயம் செய்துள்ளோம். நேசவுணர்வு மிகுந்த இந்திய மக்களிடத்தில் நாங்கள் கொண்டுள்ள ஆழ்ந்த மரியாதையையும், சோவியத் மக்கள் கொண்டுள்ள உண்மையான அன்பையும் நேரடியாகத் தெரிவிப்பதற்காகவும், இந்திய மக்களின் வாழ்க்கைபற்றியும்

அவர்கள் ஆற்றிவரும் பணிபற்றியும் தெரிந்து கொள்ளுவதற்காகவும் நாங்கள் வந்திருக்கிறோம்.

இந்திய மக்களின் மனமார்ந்த, நேசபூர்வமான வரவேற்பு நாங்கள் எதிர்ப்பார்த்ததைக்காட்டிலும் பெரிதும் மிஞ்சிவிட்டது. சகல சிறிய, பெரிய நாடுகளின் மக்களிடத்தும் தன்னலமற்ற நேர்மையான அக்கறை செலுத்தி வருவதற்காக, சோவியத் யூனியன் மக்களுக்கு இந்திய மக்கள் அளிக்கும் வெகுமதியாகவே, இந்திய மக்களின் இந்த குதூகலத்தையும் நேசபூர்வமான உணர்ச்சிகளையும் நாங்கள் கருதுகிறோம். காலனி அடிமைமுறையை எதிர்த்துப் போராடிவரும் மக்களுக்கு சோவியத் யூனியன் அளித்துவரும் தீவிர ஆதரவின் காரணமாகவும், உலக முழுதும் நிலையான சமாதானத்திற்காக நாங்கள் நடத்திவரும் போராட்டத்தின் காரணமாகவுமே, இந்திய மக்கள் இவ்வளவு பிரம்மாண்டமான ஆர்வத்துடன் தமது அன்புணர்ச்சிகளை வெளிப்படுத்தியுள்ளனர் என்று நாங்கள் கருதுகிறோம்.

சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பல்வேறு இடங்களை நாங்கள் சுற்றிப்பார்க்கும்போதும், அன்பு உள்ளம் படைத்த இந்திய மக்களை சந்திக்கும் பொழுதும், "இந்தியர்களும் ரஷ்யர்களும் சகோதரர்கள்" என்ற அற்புத வார்த்தைகளை நாங்கள் அடிக்கடி கேட்கிறோம்; இவ்வார்த்தைகளை கோஷ அட்டைகளிலும் படிக்கிறோம்.

நமது ஆர்வ அபிலாஷைகள் எல்லாம், நமது செயல்கள் எல்லாம் இவ்வார்த்தைகளிலேயே பொதிந்து கிடக்கின்றன. தமது உணர்விலும், போராட்டத்திலும் இந்திய மக்களும் சோவியத் யூனியன் மக்களும் உண்மை சகோதரர்கள், இதுவே இன்றைய நிலை; என்றென்றும் இதே நிலைதான் இருக்கும்.

சுதந்திர வேட்கையும் திறமையும் மிகுந்த மாண்புமிக்க இந்திய மக்களுக்கு சோவியத் மக்களின் மனமார்ந்த அன்பைத் தெரிவித்துக் கொள்வதற்கும் உங்களை நேரடியாக வாழ்த்துவதற்கும் சந்தர்ப்பம் கிடைத்ததற்காக நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம்.

நம்மிரு மக்களுக்கும் இடையிலுள்ள நட்பு பல நூற்றாண்டுகளாகவே வளர்ச்சியடைந்து வந்துள்ளது என்பதையும், தப்பெண்ணங்களினாலோ, சச்சரவுகளினாலோ இந்த நட்பு களங்கப்படுத்தப்பட்டதே இல்லை என்பதையும் இந்தப் பார்லிமெண்ட் மண்டபத்தில் பேசும் நான் கூறாமல் இருக்கமுடியாது.

இப்பொழுது இந்தியா தேசிய சுயேச்சையையும் அரசாங்க சுயேச்சையையும் அடைந்துவிட்டபடியால், நம்மிரு நாடுகளுக்கு இடையிலுள்ள நட்புறவுகள் நாளுக்கு நாள் பலமடைந்து வருகின்றன. இது நம்மிரு மக்களின் ஜீவாதார நலன்களுக்கும், சமாதானமாக ஒருங்கே வாழ்வதுபற்றி இந்தியாவும் சீனாவும் பிரகடனப்படுத்திய

ஐம்பெரும் கோட்பாடுகளுக்கும் முற்றிலும் பொருத்தமான நிலைமையாகும். இந்தியா, சீனு, சோவியத் யூனியன் ஆகிய இம்மாபெரும் நாடுகளின் மக்கள் உள்பட மனிதவர்க்கத்தின் பெரும்பாலானவர்கள் வசிக்கும் நாடுகளில் இப்பொழுது இக்கோட்பாடுகள் அங்கீகரிக்கப்பட்டு விட்டன.

பல நூற்ருண்டுகளாக இந்திபா காலனி நாடாக இருந்து வந்திருக்கிறது. மனித குலத்தின் கலாச்சார வரலாற்றிலே சிறப்புடைய பங்கை வகித்து வந்துள்ள உங்கள் உன்னத நாடு, காலனி வெறியர்களினுல் உரிமைகள் ஏதும் இல்லாத அவல வாழ்க்கைக்கு உட்படுத்தப்பட்டது.

தாய்த்திரு நாட்டின் சுதந்திரத்திற்காக இந்திய மக்கள் நடத்திய போராட்டத்தை சோவியத் மக்கள் பெரும் அனுதாபத்துடன் கவனித்து வந்துள்ளனர். ஏனெனில் அன்னிய ஏகாதிபத்தியவாதிகளின் ஒடுக்கு முறையின்கீழ் அவர்களும்கூட பெரும் துன்ப துயரங்களை அனுபவித்திருக்கின்றனர்.

மனிதவர்க்கத்தின் மிகப் பெரும்பாலான மக்களைக் கொண்ட ரஷ்யாவும் இந்தியாவும் சீனுவும் இதர நாடுகளும் தமது விமோசனத்திற்கான போராட்டத்தின் பால், அசாதாரணமான வேகத்துடன் கவர்ந்திழுக்கப்பட்டு வருகின்றன என்று 1923-லேயே மேதாவிலாசமிக்க எங்கள் போதனுசிரியர் வி. ஐ. லெனின் கூறினர். இம்மக்களின் போராட்டம் வாகைமாலை சூடப் போவதையும் அவர் தீர்க்கதரிசனத்துடன் முன்கூட்டியே கூறினர். உண்மையிலேயே தீர்க்கதரிசனம் வாய்ந்த இக்கணிப்பை வாழ்க்கையே பூரணமாக ஊர்ஜிதம் செய்துவிட்டது.

பல நாட்டு மக்களின் வாழ்விலும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த மாறுதல் ஏற்பட்டுள்ள ஒரு காலகட்டத்திலே, தேச விடுதலை இயக்கத்தின் சக்திமிக்க தாக்குதல்களின் கீழ் காலனி அமைப்பு தகர்ந்து கொண்டிருக்கும் ஒரு காலக்கட்டத்திலே நாம் வாழ்ந்து வருகிரேம்.

மாபெரும் சீன மக்கள் பிரம்மாண்டமான, சரிந்திர முக்கியத்துவம் வாய்ந்த வெற்றிகளை அடைந்துள்ளனர்! தமது புதிய சுதந்திர வாழ்வை வெற்றிகரமாக நிர்மாணித்துக் கொண்டிருக்கின்றனர். மாண்புமிக்க இந்திய மக்கள் தேசிய விடுதலை அடைந்துள்ளது குறித்து முற்போக்கு மனிதவர்க்கம் முழுமையும் அவர்களுக்கு நல்வாழ்த்து கூறியது. அன்னிய ஆதிக்கத்தின் தளைகளை இந்தோனேஷியா, பர்மா, மற்றும் பல நாடுகளின் மக்கள் தகர்த்தெறிந்து விட்டனர்.

இந்நாடுகள் யாவற்றின் ஜனத்தொகை மனிதவர்க்கத்தில் பாதிக்கு மேற்பட்டதாகும். இந்நாடுகளின் மக்கள் தாமாகவே தேர்ந்தெடுத்துக்

கொண்டுள்ள பாதையை அவர்கள் கைவிட்டுவிடும்படிச் செய்யும் முயற்சிகள் யாவும் தோல்வியுறுவது திண்ணம்.

தேசிய சுயேச்சையையும், அரசாங்கத் துறையில் பூரண அரசுரிமையையும் இந்திய மக்கள் சாதித்துள்ளதானது, மிகப்பெரிய சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகும். சுதந்திரமான, சுயேச்சையுள்ள வளர்ச்சிப் பாதையில் இந்திய மக்கள் முன்னேறுவதற்கு வழி திறக்கப்பட்டது குறித்து சோவியத் மக்கள் பெரு மகிழ்ச்சியையும் ஆழ்ந்த திருப்தியையும் அடைகின்றனர். தமது சுயேச்சை அரசினை மேலும் வளர்ப்பதின் மூலம் அவர்கள் தமது நாட்டின் நல்வாழ்வையும் கலாச்சார, பொருளாதார முன்னேற்றத்தையும் சாதித்திட முடியும்; இந்த மகத்தான கடமைகளை நிறைவேற்றுவது இந்திய மக்களின் சக்திக்கு உட்பட்டதே!

ஸ்திரமான, நிலையான சமாதானத்தை நிலைநிறுத்துவதற்கு இந்திய மக்கள் கொண்டுள்ள அபிலாஷைகளை சோவியத் மக்கள் பூரணமாகப் புரிந்து கொண்டுள்ளனர். ஏனெனில் சமாதான நிலைமைகளிலேயே, மேற்கூறிய உங்கள் குறிக்கோளை நிறைவேற்றமுடியும்.

உண்மையிலேயே சுயேச்சை நிலையை அடைய வேண்டுமென்ருல், மக்களுக்கு நல்வாழ்வை அளிக்கவேண்டும் என்ருல் ஒவ்வொரு நாடும் அன்னிய மூலதனத்தை நம்பி நிற்காத, வளர்ச்சியடைந்த தமது சொந்த பொருளாதாரத்தைப் பெற்றிருக்கவேண்டும். சமூக வளர்ச்சியின் போக்கே இதை நிரூபிக்கிறது. பின்தங்கிய நாடுகளை ஒடுக்குவதற்கு காலனி வெறியர்கள் கையாளும் மார்க்கங்கள் பல ரூபங்களைப் பெறுவதுண்டு என்பதை சரித்திரபூர்வமான அனுபவம் எடுத்துக்காட்டுகிறது. சகல சாத்தியமான வழிகளையும் மேற்கொண்டு இந்நாடுகளின் சுதேசித் தொழில்களின் வளர்ச்சிக்குக்குந்தகம் விளைவிப்பதற்கு அவர்கள் முயன்று வருகிருர்கள். இந்நாடுகளில் சுதேசித் தொழில்கள் ஸ்தாபிக்கப்படுவதும், சுதேசி அறிவுத்துறை ஊழியர்கள் உதயமாவதும், மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்த்தப்படுவதும் முன்பு சார்பு நிலையிலிருந்த இத்தேசங்களைப் பலப்படுத்துவதுடன், சுயேச்சை வளர்ச்சிப் பாதையில் அவை முன்னேறுவதற்கும் உதவிபுரியும் என்று அவர்கள் அஞ்சுவதே இதற்குக் காரணம்.

இதை நன்கு உணர்ந்துள்ளதுடன், இந்தியாவின் சுயேச்சைக்கு அபாயகரமான பயமுறுத்தல் எங்கிருந்து வரக்கூடும் என்பதை அறிந்து, இத்தகைய பயமுறுத்தல்களுக்கு எதிராக போராடிக் கொண்டிருக்கும் இந்தியத் தலைவர்களுடைய தூரதிருஷ்டியை நாங்கள் போற்றுகிறோம்.

நீங்கள் சக்திமிக்க சொந்த சுதேசித் தொழில்களைப் பெற்றிருக்க வேண்டும் என்றும், உங்கள் நாட்டில் விஞ்ஞானங்களும் கலாச்சாரமும்

கல்வியும் வளர்ந்தோங்கிப் பெருகவேண்டும் என்றும், உங்களுக்குக் கிடைக்கும் வெற்றிகளையும் இன்பங்களையும் இந்திய மக்கள் என்றென்றும் அனுபவித்து மகிழவேண்டும் என்றும் நாங்கள் மனப்பூர்வமாக விரும்புகிறோம். இவ்வாறு நாங்கள் கூறும்போது மேதை லெனின் அளித்த அமரத்துவம் வாய்ந்த போதனைகளையே பின்பற்றுகிறோம். ஒவ்வொரு நாட்டு மக்களும் தமது உள்நாட்டு விவகாரங்களில் இதர அரசுகளின் தலையீடு இன்றி நாம் விரும்பும் எம்முறையிலும் வாழ்வதற்கு உரிமை உண்டு என்று அவர் நம்பினர்.

மற்ற நாடுகளுக்கு கம்யூனிஸக் கருத்துக்களை ஏற்றுமதி செய்ய முயற்சித்துக்கொண்டிருப்பதாக எங்கள்மீது அடிக்கடி குற்றம் சாட்டப்பட்டு வருகிறது. மேலும் பல அபத்தங்களும் எங்களைப்பற்றிக் கூறப்பட்டு வருகின்றன. அன்னிய எஜமானர்களின் நுகத்தடியைத் தூக்கி எறிவதற்கு ஒடுக்கப்பட்ட மக்கள் எடுக்கும் எந்த ஒரு முயற்சியும் மாஸ்கோவின் தூண்டுதலென சித்தரிக்கப்படுகிறது.

சோவியத் மக்கள் தாம் தேர்ந்தெடுத்துள்ள சோஷலிப் பாதையிலே முன்னேறி, தமது நாட்டின் வளர்ச்சியிலே மிகப் பெரிய வெற்றிகளை சாதித்துள்ளனர். ஆனல் நாங்கள் சமூக அமைப்பை மாற்றியமைப்பது சம்பந்தமான எங்கள் கருத்துக்களை ஏற்றுக்கொள்ளுமாறு யாரையும் நிர்ப்பந்தித்ததில்லை.

சோவியத் யூனியனைப் பற்றி இத்தகைய அபாண்டத்தைப் பரப்பி வருவது யார் என்று கேட்கலாம். மக்களை மிரட்டி, யுத்த ஜன்னியை சிருஷ்டிக்க முயலும் பிற்போக்கு வட்டாரங்கள்தான் இந்த அவதூறான கட்டுக் கதைகளைப் பரப்பி வருகின்றன.

எங்கள் நாட்டைப் பற்றிய உண்மை உலக மக்களுக்கு எவ்வளவுக்கு எவ்வளவு தெரியாமல் இருக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு நல்லது என்று அவர்கள் கருதுகின்றனர். இது ஏனெனில், பிற்போக்கு சக்திகளுக்கு, காலனி ஆதிக்க வெறியர்களுக்கு, ஒரு நாட்டு மக்களை மற்ரெரு நாட்டினர் அடக்கி ஒடுக்குவதை நிரந்தரமாக நிலைநிறுத்த விரும்புகிறவர்களுக்கு மனிதனை மனிதன் சுரண்டுவதை ஸ்திரப்படுத்த விரும்புகிறவர்களுக்கு, ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுகளைப் பற்றிய உண்மை மரண பீதியை அளிக்கிறது.

சோவியத் யூனியனைப் பற்றிய இந்த உண்மைதான் என்ன? சோவியத் அரசு—தொழிலாளர், விவசாயிகளின் அரசு—ஸ்தாபிக்கப்பட்டதின் விளைவாக எங்கள் நாட்டின் பல்வேறு தேசீய இன மக்களான ரஷ்யர்களும், யுக்ரைனியர்களும், பைலோ ரஷ்யர்களும், உஸ்பெக்குகளும், டாஜிக்குகளும், அஸர்பெய்ஜானியர்களும், இதர தேசீய இனங்கள், தேசீய கோஷ்டிகள் ஆகியவற்றின் மக்களும் தமது பொருளாதாரத்தையும் தேசிய கலாச்சாரத்தையும் வளர்த்துக் கொள்வதற்கு உண்மை

யான சுதந்திரத்தைப் பெற்று, தமது ஆக்கல் பூர்வமான சக்திகளை கட்டவிழ்த்து விடுவதற்கு அவர்கள் வல்லவர்களாயினர் என்பதே அந்த உண்மை.

பல தேசிய இனங்களைக் கொண்டிருப்பினும் ஒரே கல்லாலான அமைப்புபோல் வலுவுடன் விளங்கும் அரசு சோவியத் யூனியன். இதில் சம அந்தஸ்துடைய 16 யூனியன் குடியரசுகள் தத்தம் வளர்ச்சியடைந்த தேசியப் பொருளாதாரத்துடனும், சுயச்சிறப்புடைய தேசிய கலாச்சாரத்துடனும் அங்கம் வகிக்கின்றன. சோவியத் யூனியனின் பிரஜைகள் அனைவரின் விஷயத்திலும், அவர்களுடைய தேசிய இனமும் வருண இனமும் என்னவாக இருப்பினும், பரிபூரண சமத்துவ உரிமை எங்கள் நாட்டிலே கராருக அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. பிரஜைகளின் உரிமைகளை எவ்விதத்திலேனும் மறைமுகமாகவோ, நேரடியாகவோ குறைப்பதற்கு முயற்சிக்கப்பட்டதாக ஸ்தாபிக்கப்பட்டால் அல்லது அதற்கு மாருக தேசிய இன அல்லது வருண இன அடிப்படையில் சில பிரஜைகளுக்கு எவ்விதத்திலேனும் மறைமுகமாகவோ நேரடியாகவோ விசேஷ சலுகைகள் அளிக்கப்படுவதாக ஸ்தாபிக்கப்பட்டால், சட்டத்தின் படி தண்டனை விதிக்கப்படுகிறது. எங்கள் நாட்டின் சகல தேசிய இன மக்களும் ஒருமித்த இன்பகரமான குடும்பம்போல வாழ்ந்து வருகின்றனர். எங்கள் நாட்டின் தேசிய இனங்களுக்கிடையிலுள்ள நேசப்பான்மை, எங்கள் சோவியத் அரசிற்கு வலுவையும் சக்தியையும் அளிக்கும் பிரதானமான ஒரு மூலாதாரமாகும்.

ஜாரிஸ்ட் ஆட்சி தூக்கியெறியப்பட்ட பிறகு, சோவியத் மக்கள் என்னென்ன சாதித்துள்ளனர் என்பதை தெளிவாக ஓரளவுக்கேனும் புரிந்துகொள்வதற்காக, குறைந்த பட்சம் பின்வரும் புள்ளி விவரங்களைக் கூற விரும்புகிறேன். 1955 ல் சோவியத் யூனியனின் மொத்த இயந்திரத் தொழில் உற்பத்தி 1913 ம் வருட அளவைவிட 27 மடங்கு அதிகரித்தது; உற்பத்தி சாதனங்களின் உற்பத்தி 60 மடங்கு அதிகரித்தது; உபயோகப் பண்டங்களின் உற்பத்தி 11 மடங்கு அதிகரித்தது; மின்சார சக்தியின் உற்பத்தி 86 மடங்கு பெருகியது; இயந்திரங்களை கட்டியமைக்கும் தொழில்களின் உற்பத்தி 160 மடங்கிற்கும் மேலாக உயர்ந்தது.

தொழில்களை வளர்ந்தோங்கச் செய்வதுடன், சோவியத் சர்க்கார் விவசாயத்தையும் மேலும் மேலும் முன்னேற்றுவதற்குப் பெரிதும் கவனம் செலுத்திவருகிறது. கூட்டுப்பண்ணைகளில் ஒருங்கே சேர்ந்துள்ள விவசாயிகள், இயந்திரங்களின் உதவியுடன், விவசாயப் பொருட்களின் உற்பத்தியை அதிகரிப்பதில் கணிசமான வெற்றிகளை அடைந்துள்ளனர்.

இன்று சோவியத் யூனியன் மிகுந்த இயந்திரத்தொழில் வளர்ச்சியடைந்த அரசாகிவிட்டது. தொழில் நுணுக்க ரீதியில் மிகவும் முன்

னேற்றமடைந்துள்ள நாடுகள் பெற்றுள்ள அதே அளவு பொருளாதார வளர்ச்சியை சோவியத் யூனியன் எட்டிப் பிடித்துவிட்டது.

கலாச்சார வளர்ச்சியில் எங்கள் நாடு பிரமாத முன்னேற்றம் அடைந்துள்ளதை இன்று உலகம் முழுவதும் அங்கீகரிக்கிறது. அக்டோபர் புரட்சிக்கு முன்பு ஜாரிஸ்ட் ரஷ்யாவில் 76 சதவிகிதம் மக்கள் எழுதப்படிக்கத் தெரியாதவர்களாக இருந்தனர். ஆனால் இரண்டாவது உலக யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்பே, எங்கள் நாட்டில் எழுத்தறி வின்மை நடைமுறையில் ஒழிக்கப்பட்டுவிட்டது.

இவ்வாண்டு சோவித் யூனியனில், சுமார் 3 கோடியே 50 லட்சம் பேர் ஆரம்பப் பள்ளிகள், உயர்நிலைப் பள்ளிகள், தொழில்நுணுக்கப் பள்ளிகள், இதரவகைப் பள்ளிகளுக்குப் போய்வருகிறார்கள். 17 லட்சத் திற்கு அதிகப்படியான மாணவர்கள் கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங் களிலும் பயின்றுவருகின்றனர்.

சோவியத் அரசு ஸ்தாபிதமானதும், ஆரம்ப வருடங்களிலேயே, நாடுபூராவும் வெகுஜனப் பள்ளிகளும், தொழிலாளர் கல்விப் பயிற்சி நிலையங்களும் நிறுவப்பட்டன. அரைகுறையாக எழுதப்படிக்கத் தெரிந்த தொழிலாளர்களும் விவசாயிகளும்கூட இப்பள்ளிகளில் சேர்ந் தனர். அதன் பிறகு அவர்கள் உயர்நிலைக் கல்வியும், கல்லூரிப் படிப்பும் பெற முடிந்தது. இப்பொழுது மக்களின் உண்மைப் புதல்வர் களான அதியற்புத அறிவுத்துறை ஊழியர்கள் எங்கள் நாட்டில் உள்ளனர். உயர்நிலைத் தொழில் நுணுக்கக் கல்வியும், கல்லூரித் தொழில் நுணுக்கப் பயிற்சியும் பெற்ற 55 லட்சத்திற்கும் அதிகமான நிபுணர்கள் தற்பொழுது சோவியத் யூனியனின் தேசப் பொருளாதா ரத்தினுடைய பல்வேறு துறைகளிலும் பணியாற்றி வருகின்றனர். இன்று சோவியத் யூனியனில் 2 லட்சத்து 17 ஆயிரம் பொதுக்கல்விப் பள்ளிகளும், 3796 தொழில் நுணுக்க, தொழிற் பயிற்சிப் பள்ளிகளும், 798 கல்லூரிகளும் பல்கலைக்கழகங்களும் உள்ளன.

தற்பொழுது சோவியத் யூனியனில் சர்வஜன, 10 ஆண்டு கால உயர்நிலைக் கல்வியை வருகிற சில வருடங்களுக்குள்ளாகவே அமுலுக்கு கொண்டு வருவதற்குரிய நிலைமைகள் சிருஷ்டிக்கப்பட்டுள்ளன.

ஆனால் சோவியத் யூனியன் இன்னமும் ஒரு சுவர்க்க பூமியாகவிட வில்லை என்பது உண்மையே. இன்னமும் எங்கள் மத்தியில் ஏராளமான குறைகள் உள்ளன. ஆனால் அவற்றை நாங்கள் பார்க்காமல் இல்லை; அவற்றைக் களைந்தெறிய எங்களால் இயன்ற அனைத்தையும் செய்து வருகிறோம்.

அன்னிய நாட்டு ராஜதந்திரிகளுடன் சம்பாஷிக்கும்போதும், அன்னிய நாட்டுப் பத்திரிகைகளைப் படிக்கும்போதும், சோவியத் யூனி

யன் கம்யூனிஸ்ட் கட்சியைப்பற்றித் தவருன கருத்துக்கள் இருந்துவரு வதைக் காண்கிருேம். சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டியின் பிரதம செயலாளர் என்ற முறையில் நான் இதுபற்றி மேலும் சிறிது விபரமாகப் பேச விரும்புகிறேன். சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியைப்பற்றி வெவ்வேறு விதமான பலப்பல கதைகள் பரப்பப்பட்டு வருகின்றன என்பது வாஸ்தவமே. இதில் ஆச்சரியப்படு வதற்கு ஒன்றுமில்லே. ஏனெனில் பழைய முதலாளித்துவ சமூகத்தி லிருந்து அடிப்படையில் மாறுபட்ட, முற்றிலும் புதியதான ஒரு கம்யூ னிஸ்ட் சமூகத்தை ஏற்படுத்துவதற்காக, எங்கள் கட்சி விரிவான உழைப் பாளி வெகுஜனங்களே ஸ்தாபன ரீதியாகத் திரட்டிப் பலப்படுத்தி வரும் கட்சியாகும்.

நான் பிரச்சாரத்தை அவிழ்த்துவிடுவதாக நீங்கள் எண்ணமாட்டீர் கள் என்றே நம்புகிறேன். கருத்துக்களேப்பற்றிய பிச்னேயை நாங்கள் ஒரு மனச்சாட்சிப் பிரச்னேயாகக் கருதுகிருேம் ; சித்தாந்தப் பிரச்னேயை நாங்கள் ஒவ்வொரு நாட்டின் பிரச்னேயாக மாத்திரமில்லாமல், ஒவ் வொரு தனி மனிதனின் பிரச்னேயாகவும் கருதுகிருேம் எங்கள் நாட்டிலே, கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர்களாக இல்லாதவர்களும் உண்டு. கம்யூனிஸ்ட் கட்சியின் அணிவரிசையில் 80 லட்சம் உறுப் பினர்களும், காம்சோமால் என்னும் இளம் கம்யூனிஸ்ட் கழகத்தில் ஒரு கோடியே 85 லட்சம் உறுப்பினர்களும் உள்ளனர். ஆனல் சோவியத் யூனியன் ஜனத்தொகை 20 கோடி. எனவே எங்கள் நாட்டிலுள்ள எல்லா மக்களுமே கம்யூனிஸ்டுகள் அல்ல என்பது தெளிவு. நாங்களும் எல்லா மக்களேயும் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்த்துக் கொள்வதற்கு முயற்சிப்பதும் இல்லே. ஆயினும் எங்கள் நாட்டின் மக்கள் பூராவும் கம்யூனிஸ்ட் கட்சியின்கீழ் ஒன்றுபட்டு நிற்பதுடன், கட்சியை அவர்கள உண்மையிலேயே தமது ஆர்களேசராகவும், தலேவனுகவும் மதிக் கின்றனர். எங்கள் நாட்டின் மக்களேயும் கட்சியையும் பிரிக்க முடியாது.

கருத்துக்களும், நம்பிக்கைகளும் தனி நபர்களின் சொந்தப் பிரச்னே. எங்கள் நாட்டில் கம்யூனிஸ்டுகளும், கம்யூனிஸ்ட் அல்லாதவர்களும் கடவுள் நம்பிக்கை உள்ளவர்களும், நாஸ்திகர்களும் ஒருங்கே நின்று, மக்களின் நன்மைக்காக நேசபூர்வமான ஒத்துழைப்புடன் பணியாற்றி வருகிருர்கள். மத நம்பிக்கைக்கும், மத வழிபாட்டிற்கும் சோவியத் யூனியன் பிரஜைகள் ஒவ்வொருவருக்கும் சுதந்திரம் உண்டு என்பது அங்கீகரிக்கப்பட்டுள்ளது. மனச்சாட்சி சுதந்திரமும், மத சுதந்திரமும் பிரகடனப்படுத்தப்பட்டுள்ளதுடன், சோவியத் யூனியன் பிரஜைகளின் அரசியல் சட்டத்தை ஆதாரமாகக் கொண்ட உரிமை அது என்ற முறையில், அரசாங்கம் அவ்வுரிமைக்குப் பூரண உத்திரவாதம் அளித்து வருகிறது. சோவியத் பிரஜைகளிடையில் கிறிஸ்தவர்களும், முஸ்லீம்

களும், புத்த மதத்தினரும், பாப்டிஸ்டுகளும், இதர மதங்களில் நம்பிக்கை கொண்டவர்களும் உள்ளனர்

மற்றெவரையும்விட நவீனகால சமுதாயத்தின் வளர்ச்சி விதிகளை மிகவும் ஆழ்ந்து பரிசீலித்து நன்கு உணர்ந்திருந்த எங்கள் மாபெரும் ஆசான் லெனின், தொழிலாளர் வர்க்கத்தின் முன்னணியாக, ரஷ்ய மக்களின் மிகவும் முற்போக்கான பகுதியாக, கம்யூனிஸ்ட் கட்சியை நிறுவினர். தொழிலாளி வர்க்கத்தின், உழைப்பாளி மக்களின் பிரம் மாண்ட சக்தியையும் அவர்களிடம் மறைந்திருந்த பெரும் திறமைக ளேயும் சரிவர மதிப்பிட்ட பிறகு, ரஷ்ய மக்களை விலங்கிட்டு பிணைத் திருந்த அடிமை, நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவ வாழ்க்கை வழிகளுக்கு எதிராக ஆர்த்தெழுந்து, தீர்மானமான தாக்குதலைத் தொடுக்குமாறு அவர்களை லெனின் தட்டியெழுப்பினர். லெனின் இதைச் செய்தது, எங்கள் நாட்டுமக்களின் சுதந்திரத்திற்கும் சுபீட்சத்திற்கும் மட்டுமின்றி இதர நாடுகளின் மக்களுக்கும் உதவியாக இருக்கும் என்பதை அவர் அறிந்திருந்தார்.

மகத்தான அக்டோபர் புரட்சி மனித வர்க்கத்தின் வாழ்வில் ஒரு புதிய சகாப்தத்தை ஆரம்பித்து வைத்தது. "இந்தியாவைக் கண்டறிந் தேன்" என்னும் தனது புத்தகத்தில் ஜவாஹர்லால் நேரு அவர்கள் பின்வருமாறு கூறுகிருர்கள்: "சோவியத் புரட்சி மனித சமுதாயத்தை பெருமளவுக்கு மேலும் முன்னேறச் செய்துள்ளது. அப்புரட்சி மூட்டி யுள்ள கனலை அணைப்பது சாத்தியமானதல்ல. இது ஒரு புதிய நாகரீக அமைப்பிற்கு அஸ்திவாரமிட்டுள்ளது. இப்புதிய அமைப்பை நோக்கி உலகம் செல்ல முடியும்." (ரஷ்ய மொழி பெயர்ப்பிலிருந்து கொடுக்கப் படுகிறது). இவ்வார்த்தைகளை நாங்கள் பூரணமாக ஏற்றுக்கொள்ளு கிருேம்.

இந்தப் புரட்சியின்போது பலர் அனுவசியமாகப் பலியானதாகக் கூறப்படுகிறது. ஆனல் இது உண்மை அல்ல. அக்டோபர் சோஷ லிஸ்ட் புரட்சி தான் மற்ற எந்தப் புரட்சியையும் விட இரத்தம் சிந்தாத, மாபெரும் புரட்சியாகும் அதிகாரத்தைத் தனது கையில் எடுத்துக் கொண்டதும், தொழிலாளி வர்க்கம் தன்னைப் பல நூற்றுண்டுகளாக சுரண்டிவந்த ஒடுக்குமுறையாளர்களையும், கொடுங்கோலர்களையும் கண்ணை மூடிக்கொண்டு தண்டிக்கத் தொடங்கவில்லை. அது மாத்திர மல்ல. அக்டோபர் புரட்சியைத் தொடர்ந்து ஆரம்ப மாதங்களில், பல பிற்போக்கு ஜாரிஸ்ட் இராணுவ தளகர்த்தர்கள் "பரோ"லில் விடுதலை செய்யப்பட்டனர். ஆனல் அதன் பிறகு இத்தளகர்த்தர்கள் தமது நாண யத்தையும் வாக்கையும் மீறி, தம் சொந்த மக்களுக்கு எதிராக சண்டாளத் தனமாக ஆயுதமேந்திப் போரிட்டார்கள். சோவியத் குடியரசுக்கு சமா தானம் தேவைப்பட்டது. லெனினும், தொழிலாளர்-விவசாயிகள் சர்க்

காரும் இந்த சமாதானத்தைப் பிரகடனப்படுத்தினர். ஆனல் ஆயுத மேந்திய போராட்டப் பாதையை நாங்கள் மேற்கொள்ளுமாறு நிர்ப்பந்திக்கப்பட்டோம். அந்தப் பாதையை நாங்களே விரும்பித் தேர்ந்தெடுத்துக் கொள்ளவில்லை. பூரண ஆயுத பலத்துடன் பிரெஞ்சு, ஆங்கில, அமெரிக்க, ஜப்பானிய படையெடுப்பாளர்களும் இதர படையெடுப்பாளர்களும் சோவியத் ரஷ்யாமீது பாய்ந்தனர் என்பது சரித்திரபூர்வமான உண்மை ; வெறும் பிரசாரமல்ல.

எங்கள் மீது திணிக்கப்பட்ட இந்த யுத்தத்தினல் எங்கள் மக்கள் சொல்லொணுத் துன்ப துயரங்களையும் கஷ்ட, நஷ்டங்களையும் அனுபவிக்க வேண்டியிருந்தது. இந்த வழியை நாங்களே விரும்பி, தேர்ந்தெடுத்துக் கொள்ளவில்லை என்பதை மீண்டும் கூறவிரும்புகிறேன். நாங்கள் தாக்கப்பட்டோம்—சோவியத் அரசை நசுக்கி அழிக்க விரும்பினர்கள் அவர்கள் ; எங்கள் நாட்டை துண்டு துண்டாகப் பிய்த்து எறிய விரும்பினர்கள் அவர்கள் !

பூரண ஆயுத பலத்துடனும், எங்களைவிட மிகப் பெரிய படை பலத்துடனும் எங்கள்மீது பாய்ந்த ஒரு எதிரியின் முன்னே, எங்கள் தலைகளைத் தாழ்த்தி, அஞ்சி, சோர்ந்து அடிபணிந்துவிடவில்லை நாங்கள். இது லெனினின் கீர்த்தியை, கம்யூனிஸ்ட் கட்சியின் புகழை, எங்கள் மக்கள் அனைவரின் பெருமையை எடுத்துரைக்கிறது! தொழிலாளி வர்க்கமும், பல தேசிய இனங்களைக் கொண்ட எங்கள் நாட்டின் சகல மக்களும், தமது கூட்டுத் தலைவனை கம்யூனிஸ்ட் கட்சியின்கீழ் ஒன்று திரண்டு, புனித தேசபக்த யுத்த வேள்வியிலே குதித்தனர். எதிரிகள் முறியடிக்கப்பட்டனர் ; விடுவிக்கப்பட்ட மக்களின் பலமிகுந்த சக்தியாக, ஸ்திரமாக சோவியத் அரசு ஸ்தாபிக்கப்பட்டது.

வெகு காலமாகத் தாம் விரும்பிய சமாதானத்தை அடைந்த பிறகு சோவியத் மக்கள், என்றும் தணிந்து அயராத சக்தியுடன் தமது நாட்டை சமாதானபூர்வமாக புனர்நிர்மாணம் செய்யும் பணியில் இறங்கினர். இத்துறையில் அவர்கள் பிரமாத வெற்றிகளை அடைந்துள்ளனர். சமாதான பூர்வமான நிர்மாணப் பணியில் மூழ்கியிருந்த நாங்கள், பிற்போக்கு சக்திகள் இன்னும் சோர்ந்து விடவில்லை என்பதை அறிந்திருந்தோம்.

மக்களுடைய உழைப்பின் பலனை மக்களே அனுபவித்துவரும் சோவியத் நாடு அழியாதிருப்பதைக் கண்டு அஞ்சிய எதிரிகள், எங்கள் நாட்டின்மீது ஒரு வெறி பிடித்த ஓநாயை—ஹிட்லர் பாஸிஸத்தை—ஏவி விட்டனர். பாஸிஸ்ட் படையெடுப்பின் முடிவு என்ன என்பது உலகப் பிரசித்தம். சுதந்திர மனித வர்க்கத்திற்கு எதிரான பயங்கர அபாயமான நாஜிஸம் ஒழித்துக்கட்டப்பட்டது ; ஹிட்லரின் பிரேதமும் புழுத்துப்போய் வெகுகாலமாகி விட்டது.

இரண்டாவது உலக யுத்தம் எங்கள் நாட்டிற்கு பெரும் சேதத்தை ஏற்படுத்தியது கம்யூனிஸ்ட் கட்சியினுல் உத்வேக மூட்டப் பெற்ற எங்கள் மக்கள் அன்றைய தினம் கஷ்டங்களுக்கு முன் பின்வாங்கவில்லை. யுத்தத்தின் கொடிய விளைவுகளை அவர்கள் பூரணமாகக் களைந்துவிட்டனர். அசாதாரணமான ஆர்வத்துடன் சோவியத் மக்கள் புதிய பாக்டரிகளையும் தொழிற்சாலைகளையும் உலகிலேயே மிகப் பெரிய மின்சார நிலையங்களையும் நிர்மாணித்து வருகின்றனர்.

நான் ஏன் இதை எல்லாம் கூறுகிறேன் என்ருல், எங்கள் மக்கள் முன்னேறி வந்துள்ள கடினமான பாதையைப் பற்றி நீங்கள் மேலும் விபரமாகத் தெரிந்து கொள்ளவேண்டும் என்பதற்காகவே அன்றி, சோவியத் வளர்ச்சிப் பாதையை உங்கள்மீது திணிப்பதற்காக அல்ல. அந்தப் பாதை மகோன்னதமானது. அதைப் பின்பற்றி எங்கள் மக்கள் மாபெரும் சாதனைகளையும் வெற்றிகளையும் அடைந்துள்ளனர். இவ்வருடங்களில் நாங்கள் மிகப் பெரிய அனுபவத்தைப் பெற்ருேம். அந்த அனுபவத்தை நீங்கள் உங்கள் பொருளாதாரத்தின் அல்லது கலாச்சாரத்தின் எந்தத் துறையில் பயன்படுத்திக் கொள்ள விரும்பினுலும், நண்பர்களைப் போல் நாங்கள், சுயநலம் ஏதுமின்றி, முழுமனதுடன் அதை உங்களுடன் பகிர்ந்து கொள்வதற்கும், சாத்தியமான சகல உதவியையும் உங்களுக்கு அளிப்பதற்கும் தயாராக இருக்கிருேம்.

பிரம்மாண்டமான நிர்மாணப் பணியில் எங்கள் மக்கள் முனைந்திருக்கின்றனர். சோவியத் நாட்டின் கலாச்சார, பொருளாதார சுபீட்சத்திற்காக மக்களுடைய பொருளாதார வசதிகளை மேலும் வளமடையச் செய்யும்பொருட்டு, தற்பொழுது சோவியத் யூனியன் ஒரு திட்டத்தை நிறைவேற்றி வருகிறது. இத்திட்டம் மக்கள் பொருளாதாரத்தின் சகல கிளைகளிலும் மிகப் பெரிய முன்னேற்றத்தை ஏற்படுத்தும்.

சமாதான பூர்வமான பணிகளே எங்களுக்கு குதூகலத்தையும் உத்வேகத்தையும் அளிக்கின்றன. சமாதானத்திற்காகவும், இதர நாடுகளுடன் சமாதானபூர்வமான உறவுகளை வளர்த்துக் கொள்வதற்காகவும் நாங்கள் சளையாது பாடுபடுகிருேம். ஆயினும் சமாதானத்தைப் பலப்படுத்தும் பணியில், இதர சில நாடுகளின் சரியான ஒத்துழைப்பு எங்களுக்கு எப்பொழுதுமே கிடைத்து வருகிறது என்று கூறுவதற்கில்லை; இதைச் சுட்டிக் காட்டுவது அவசியமாகும்.

தேசங்களுக்கிடையில் வர்த்தக உறவுகளும், கலாச்சாரத் தொடர்புகளும் வளர்ந்தோங்க வேண்டுமென நாங்கள் ஆசைப்படுகிருேம். சர்வதேச உறவுகளில் உள்ள கெடுபிடி நிலையைத் தணிவுறச் செய்வதற்காக சோவியத் யூனியன் எடுத்து வந்துள்ள முயற்சிகளை உலகம் முழுவதும் அறியும். சமாதானத்திற்காகவும், தமது சமூக அமைப்பு எத்தகைய

தாக இருப்பினும் அரசுகள் சமாதானபூர்வமாக ஒருங்கே ஒத்துவாழ வேண்டுமென்ற கொள்கைக்காகவும் நாங்கள் நிற்கிறோம். அயல்நாட்டுக் கொள்கையில் எங்கள் அரசாங்கத்தின் நடவடிக்கைகள் யாவும் இதற்குப் பூரண சான்றாக விளங்குகின்றன.

நான்கு சர்க்கார் அதிபர்களின் ஜெனீவா மகாநாடு, சர்வதேச வாழ்விலே மிகவும் முக்கியமான நிகழ்ச்சிகளில் ஒன்றாகும். இந்த மகாநாட்டின் விளைவாக, ஓரளவு சர்வதேச கெடுபிடி நிலையைத் தணிவுறச் செய்ய முடிந்தது. நான்கு வல்லரசுகளின் ஜெனீவா மகாநாட்டின் தாக்கீதுகளை பூர்த்தி செய்யும் பொருட்டு, இந்நாடுகளின் அயல்நாட்டு மந்திரிகளுடைய மகாநாடு ஒன்று சமீபத்தில் நடைபெற்றது. அயல்நாட்டு மந்திரிகளின்முன் மிகவும் சிக்கலான பிரச்னைகள் வைக்கப்பட்டிருந்ததின் விளைவாகவும், முதல் முயற்சியிலேயே ஒருமுடிவுக்கு வருவது கடினமாக இருந்ததினாலுமே, இம்மகாநாடு பெரிதாக எதையும் சாதிக்க முடியவில்லை. ஆனால், நான்கு வல்லரசுகளின் ஜெனீவா மகாநாட்டில் வகுக்கப்பட்ட பாதையிலே செல்வதின்மூலம், சகல சிக்கலான சர்வதேசப் பிரச்னைகளைத் தீர்க்கும் பணியில் படிப்படியாக முன்னேறிச் சென்று சர்வதேச கெடுபிடி நிலையை மேற்கொண்டும் தணிவுறச் செய்வதில் வெற்றியடைவோம் என்று நாங்கள் உறுதியாக நம்புகிறோம்.

ஜெனீவா மனப்பான்மை சில நபர்களுக்கு அஜீரணத்தை உண்டு பண்ணுகிறது என்பதை நாம் மறந்துவிட முடியாது. சில அரசுகளைச் சேர்ந்த குறிப்பிட்ட வட்டாரங்கள், "ஆயுத பலத்தின் உச்சியிலே நிற்ப" தென்ற அபகீர்த்திமிக்க கொள்கையையும், இன்றைய நாகரீக வாழ்விற்கே அவக்கேடாகவுள்ள அணு ஆயுதங்களைக் காட்டி மிரட்டும் கொள்கையையும் இன்னமும் பின்பற்றுவதற்கு முயன்று கொண்டிருக்கின்றன.

இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பிறகு பிற்போக்கு வட்டாரங்கள் அணுகுண்டைக்காட்டி மிரட்டி எங்களைப் பணிந்துவிடும்படிச் செய்வதற்கு விரும்பின. ஆனால் இதனால் ஒன்றும் பலிக்கவில்லை என்பது அனைவரும் அறிந்ததே. அணுசக்தியை உற்பத்தி செய்யும் இரகசியத்தை சோவியத் விஞ்ஞானிகள் கண்டுபிடித்துவிட்டார்கள். யுத்த வெறி கொண்ட சில அன்னிய ராஜதந்திரிகளின் ஆக்கிரமிப்புத் திட்டத்தை நிலைகுலையச்செய்யும் பொருட்டு, அணுகுண்டையும், நீர்வாயுக் குண்டையும் நாங்கள் உற்பத்தி செய்யும்படி நிர்ப்பந்திக்கப்பட்டோம். ஆனால் இந்த ஆயுதத்தை நாங்கள் உற்பத்தி செய்யத் தொடங்கியதுமே நாங்கள் இந்த ஆயுதம் எப்பொழுதுமே உபயோகிக்கப்படக்கூடாது என்ற எங்கள் விருப்பத்தைப் பிரகடனப்படுத்தினோம். அணுசக்தியை சமாதானப்பூர்வமான வளர்ச்சிக்காக பயன்படுத்துவதற்கான முதல் உதாரணத்தை அளித்துள்ளது சோவியத் யூனியன். அணு, நீர்வாயு

குண்டுகளை உற்பத்தி செய்வதற்கும் பிரயோகிப்பதற்கும் தடை விதிக்கும் பிரேரணைகளையும், இந்த ஆயுதங்களை உபயோகிப்பதில்லை என்ற புனித பிரதிக்ஞையை சர்க்கார்கள் எடுத்துக்கொள்ளவேண்டும் என்ற யோசனையையும் நாங்கள் சமர்ப்பித்தோம். ஆனால் இதுவரையிலும் மேலைய வல்லரசுகள் இந்த யோசனைகளை ஏற்றுக்கொள்ளவில்லை.

சமாதான இலட்சியத்தை உடைத்தெறிவதற்காக, பிற்போக்கு சக்திகள் தம்மால் ஆன அனைத்தையும் செய்து வருகின்றன. ஆனால் சமாதானத்திற்காகப் பாடுபட்டுவரும் தேசங்களும் தனி நபர்களும் நிச்சயம் வெற்றியடைவார்கள் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் தேசங்களுக்கிடையில் சமாதானம் நிலவவேண்டும் என்பது முற்போக்கு மனித குலத்தின் இலட்சியக் கனவாகத் திகழ்கிறது. இத்தகைய பணியிலே இந்தியாவைப் போன்ற நல்லதொரு நண்பன் எங்களுக்கு இருப்பது குறித்து நாங்கள் மகிழ்ச்சி அடைகிறோம்.

சமாதான இலட்சியத்திற்கான போராட்டத்திலும், ஒரு புதிய யுத்த அபாயத்திற்கு எதிராகவும் இந்திய மக்களும், இந்திய சர்க்காரும் ஆற்றியுள்ள மாபெரும் சேவையை சோவியத் மக்களும் இதர நாடுகளின் மக்களும் பெரிதும் போற்றுகிறார்கள். கொரியாவிலும், இந்தோ-சீனாவிலும் யுத்தத்தை நிறுத்துவதற்கு இந்தியா தீவிர ஆதரவளித்தது. கொரியாவிலும், இந்தோ-சீனாவிலும் போர் நிறுத்த ஒப்பந்த ஷரத்துக்கள் அமுலுக்கு வருவதை மேற்பார்வையிடுவது சம்பந்தமான கடினமான, ஆனால் மிகவும் புனிதமான, சர்வதேசக் கடமைகளை, சிலர் சிருஷ்டித்து வரும் தடைகளுக்கு இடையிலும்கூட, இந்தியா தொடர்ந்து நிறைவேற்றி வருகிறது.

இன்றைய உலகில் இன்னமும் தீர்க்கப்படாத சிக்கலான பிரச்னைகள் பல இருந்து வருகின்றன. சமாதான இலட்சியத்தைப் பாதுகாக்கவும் பலப்படுத்தவும் மிகப்பெரும் அளவிற்கு சக்தியையும் உறுதியையும் பொறுமையையும் கையாளவேண்டியிருக்கும். ஆனால் இந்த உன்னத இலட்சியம் வெற்றியடைந்தே தீரும் என்று நாங்கள் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டுள்ளோம்.

சிறப்புடைய தலைவர் அவர்களே! சிறப்புடைய பார்லிமெண்ட் உறுப்பினர்களே!

சமீபத்தில் நம்மிரு நாடுகளுக்கிடையில் பொருளாதார, காலச்சார தொடர்புகள் கணிசமான அளவுக்கு பலப்படுத்தப்பட்டுள்ளன என்று நாம் திருப்தியுடன் கூறிக்கொள்ள முடியும். இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையில் பரஸ்பர நன்மை பயக்கும் பொருளாதாரத் தொடர்புகள் விரிவடைந்து வருவதானது, மிகப்பெரிய வாய்ப்புகளை நமக்களிக்கும் திசை வழியைத் திறந்து விடுவதுடன், நமது இரு

மக்களும் மேலும் நெருங்கிய அன்யோன்ய உறவு பெறுவதற்கு நிச்சயமாக உதவிபுரியும். 1953-ல் கையெழுத்தான சோவியத் இந்திய வர்த்தக ஒப்பந்தத்தின் அடிப்படையில் வர்த்தகம் வெற்றிகரமாக வளர்க்கப்பட்டு வருகிறது. ஆண்டொன்றுக்கு 10 லட்சம் டன் எஃகு உற்பத்தி செய்யும் உலோகத் தொழிற்சாலையை சோவியத் யூனியன் உதவியுடன் இந்தியாவில் நிர்மாணிப்பது சம்பந்தமாக இவ்வாண்டு செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கை, நம்மிரு நாடுகளின் பொருளாதாரத் தொடர்புகளை பலப்படுத்தும் இலட்சியத்திற்கு ஆற்றிய முக்கியப் பணிகளில் ஒன்றாகும். இந்தத் தொழிற்சாலையின் நிர்மாணத்திற்குத் தேவையான கருவிகளையும் இயந்திரங்களையும் சோவியத் இஞ்சினியர்களும் தொழிலாளர்களும் பெரும் ஆர்வத்துடன் உற்பத்தி செய்வதற்குத் தொடங்கிவிட்டனர். இந்தியக் குடியரசின் தலைவர்களுக்கும், சோவியத் யூனியன் தலைவர்களுக்கும் இடையில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள நேரடியான தொடர்புகளுக்கு நாங்கள் பெரும் முக்கியத்துவம் அளிக்கிறோம். இந்தியாவின் பிரதம மந்திரி நேரு அவர்களுடைய சோவியத் விஜயம் எங்கள் மக்களின் உள்ளத்தை ஆட்கொண்டு விட்டது.

பல நூற்றுண்டுகால வரலாற்றைப் பெற்ற செழிப்புமிக்க இந்திய கலாச்சாரத்தில் சோவியத் மக்கள் மிகுந்த ஆர்வம் கொண்டுள்ளனர். இந்திய எழுத்தாளர்களின் நூல்கள் பல, ரஷ்ய மொழியில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. மாபெரும் இந்திய எழுத்தாளரும், பொதுஜனப் பிரமுகருமான ரவீந்திரநாத் தாகூரின் அற்புதமான நூல்கள் எங்கள் நாட்டில் மிகவும் பிரபலம் அடைந்துள்ளன. இன்றைய இந்திய எழுத்தாளர்களின் புத்தகங்களும் குன்றாத ஆர்வத்துடன் எங்கள் நாட்டில் வாசிக்கப்பட்டு வருகின்றன. சோவியத் அரசு தோன்றிய பின் இதுவரை 20 லட்சம் பிரதிகளுக்கும் அதிகமாக இந்தியக் கதைகளும், நாவல்களும் வெளியிடப்பட்டுள்ளன. தனது நாட்டையும், மாண்புமிக்க இந்திய மக்களையும் நன்கு புரிந்துகொண்டு, உங்கள் வரலாற்றில் ஒரு முக்கிய பாத்திரம் வகித்த மஹாத்மா காந்தியின் நூல்களும் ரஷ்ய மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன தலைசிறந்த ராஜதந்திரியும் அரசியல்வாதியுமான இந்தியக் குடியரசின் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு அவர்கள் இயற்றிய "இந்தியாவைக் கண்டறிந்தேன்" என்னும் புத்தகம் ஏராளமான பிரதிகளில் அச்சிடப்பட்டுள்ளது.

கலாச்சாரம், கலைகள் ஆகிய துறைகளில் இருதரப்பினரிடையினும் விரிவான பரிவர்த்தனை நடைபெற வேண்டுமென நாங்கள் விரும்புகிறோம்; தொழில் நுணுக்க, விஞ்ஞான சாதனைகளின் பரஸ்பர பரிவர்த்தனையையும் நாங்கள் ஆதரிக்கிறோம். எங்களுடைய இந்திய நண்பர்களை எங்கள் நாட்டிற்கு எப்பொழுதும் வரவேற்பதற்கு சோவியத் மக்கள் மகிழ்ச்சியடைவார்கள். நாம் ஒருவரை ஒருவர் எவ்வளவுக்கு எவ்வளவு நன்கு புரிந்து கொள்ளுகிறோமோ, எவ்வளவுக்கு எவ்வளவு உதவி

புரிந்து கொள்ளுகிறோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு நமது நட்புறவும், உலகம் முழுவதுமுள்ள சமாதான சக்திகளும் மேலும் பல மடையும். எங்கள் தூதுகோஷ்டிக்கு நீங்களும் விருந்தோம்பும் பண்புடைய உங்கள் மக்களும் அளித்துள்ள மனமார்ந்த வரவேற்பிற்காக உங்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். நேசப் பான்மையுடைய இந்திய மக்களின் இன்பத்திற்கும் சுபீட்சத்திற்கும் நாங்கள் மனமார்ந்த வாழ்த்துக்களைக் கூறுகிறோம்.

மகத்தான இந்திய மக்கள் நீடூழி வாழ்க !

இந்திய—சோவியத் மக்களின் நட்புறவு நீடூழி வாழ்க !

உலகெங்கும் சமாதானம் நீடூழி வாழ்க !

## 1955 நவம்பர் 22-ல், பஞ்சாபில் என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

என். ஏ. புல்கானின் சிறிது நேரம் பேசிய பிறகு என். எஸ். குருஷேவ் பின்வரும் சொற்பொழிவு ஆற்றினர் :—

" உங்களுடைய அற்புத நாட்டிற்கு நாங்கள் வந்து பல நாட்கள் ஆகின்றன. எங்கள் மனதைப் பூரணமாக ஆட்கொண்டுவிட்ட பல மறக்கமுடியாத நினைவுகளும், சந்திப்புகளும் நாங்கள், இந்தியாவிற்கு வந்து சேர்ந்து எத்தனை நாட்கள் ஆகின்றன என்பதைக்கூட மறக்கச் செய்துவிட்டன ! உண்மையாகச் சொல்கிறேன், நாங்கள் இங்கு வந்து எத்தனை நாட்கள் ஆகின்றன என்பது எனக்கு மறந்தே போய்விட்டது ! இந்திய மக்கள் சிருஷ்டித்துள்ள பல ருசிகரமான விஷயங்களை நாங்கள் நேராகக் கண்டோம். (கரகோஷம்). தொன்மை மிகுந்த கோயில்களையும் தற்பொழுது நடந்துவரும் நிர்மாண வேலை ஸ்தலங்களையும் கண்டு மகிழும் வாய்ப்பு எங்களுக்குக் கிடைத்தது. ஆனல் நாங்கள் சென்ற இடங்களெங்கும் மக்கள் வெளிப்படுத்திய நேசமும் பாசமுமே, நாங்கள் கண்ணுற்ற எல்லாவற்றிலும் பிரதானமானது !

உங்கள் பிரதம மந்திரி நேரு அவர்கள் சமீபத்தில்தான் எங்கள் நாட்டிற்கு விஜயம் செய்தார். நீங்கள் இப்பொழுது எங்களுக்கு அமோக வரவேற்பு அளிப்பதுபோலவே, எங்கள் மக்கள் அவருக்கு குதூகல வரவேற்பளித்தனர். நமது இரு நாடுகளுடைய நட்புறவின் முக்கியத்வத்தையும், தேசங்களுக்கிடையில் சமானத்தையும் நட்புறவையும் பலப்படுத்துவதற்கான நமது பொதுப் போராட்டத்தின் முக்கியத்

துவத்தையும் அவர் நன்குணர்ந்திருக்கிருர். இதனல்தான், அவரை நாங்கள் பெரிதும் பாராட்டுகிறேம்.

நாம் வெவ்வேருன அரசியல் கண்ணேட்டங்களை உடையவர்கள். உங்களுக்கு ஒரு கண்ணேட்டமும் தத்துவமும் உண்டு. நாங்களும் அதேபோல் எங்களுக்குரியதோர் கண்ணேட்டத்தையும் தத்துவத்தையும் பெற்றிருக்கிறேம். நம்மைப் பிரிக்கும் வேறுபாடுகளை இப்பொழுது கிளரவேண்டியது அவசியமில்லை. பிரதானமான விஷயத்தில், அதாவது யுத்தமா, சமாதானமா என்ற பிரச்னையில் நாம் ஒருமித்துள்ளோம் (கரகோஷம்) என்பதைப் பார்க்கவேண்டும். இதுதான் முக்கியம். இந்தப் பிரச்னைகள்தான் உலகிலுள்ள சகல மக்களின் கவனத்தையும் கவர்ந்துள்ள பிரச்னைகளாகும். எந்த நேர்மையாளரும் சமாதானம் வேண்டும் என்று விரும்பாமலோ அல்லது சமாதானத்திற்காகப் போராடாமலோ இருக்கமுடியாது. (கரகோஷம்). சமாதானத்திற்கும் சுதந்திரத்திற்குமான போராட்டத்தில் எங்களுக்குப் பல நண்பர்கள் இருக்க வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறேம். இந்நண்பர்களின் நாடுகள் எவ்வளவு பெரியதாயினும் சரி, சிறியதாயினும் சரி, அவர்களின் அரசியல் கருத்துக்களும், வர்ண இனமும், மத நம்பிக்கைகளும், சித்தாந்தமும் என்னவாக இருப்பினும் சரி அவர்கள் யாவரையும் நண்பர்களாகப் பெறவேண்டும் என்று நாங்கள் ஆவல் கொண்டுள்ளோம்.

சமாதானத்தைப் பேணிவளர்க்க வேண்டும் என்ற பொது வேட்கை இருக்க வேண்டும் என்பதே முக்கியமான விஷயமாகும். அரசாங்க அமைப்பு முறைகளைப் பொறுத்தமட்டில், அவை ஒவ்வொரு நாட்டினுடைய உள் விவகாரமாகும். அரசியல் கருத்துக்களைப் பொறுத்தமட்டில், அவை தனி மனிதன் ஒவ்வொருவரின் சொந்த விவகாரமாகும். ஆதலால் தான், மற்றவர்கள் எங்கள் உள் விவகாரங்களில் தலையிட வேண்டாம் என்று நாங்கள் கூறுகிறேம்; அதேபோல் நாங்களும் மற்றெரு நாட்டின் விவகாரங்களில் தலையிடத் துணிய மாட்டோம்.

(கரகோஷம்)

சமாதானமாக ஒருங்கே ஒத்துவாழ்வது சம்பந்தமாக பிரதமர் நேருவும், எங்கள் நண்பர் பிரதமர் சௌ-யென்-லாயும் பிரகடனப்படுத்திய ஐம்பெரும் கோட்பாடுகள் எங்களுக்குப் பூரண திருப்தி அளிப்பதாயுள்ளன. (கரகோஷம்). நேரு அவர்கள் சமீபத்தில் மாஸ்கோவிற்கு வந்திருந்தபோது அவருடன் சேர்ந்து வெளியிட்ட கூட்டறிக்கையில் இதை நாங்கள் ஊர்ஜிதம் செய்தோம். அரசியல் அமைப்பு சம்பந்தப்பட்ட பிரச்னைகளைப் பொறுத்தமட்டில், நாங்கள் தெட்டத் தெளிவான, முற்றிலும் மாறுபட்ட கருத்துக்களைக் கொண்டுள்ளோம். ஆனல் நாங்கள் இக்கருத்துக்களை மற்றவர்களின் மீது திணிக்கப் போவதில்லை. பொருளாதார நிர்மாண வேலைகளும் தொழில் நுட்ப ஆற்றலும் அரசியல்

அமைப்பு முறையைப் போன்றவை அல்ல; இவை எல்லோருக்கும் பொதுவான பிரச்னேகள்.

இன்று எங்களுக்கு மின்சார நிலேயத்தின் நிர்மாண ஸ்தலம் காண்பிக்கப்பட்டது. இதைப் பார்வையிட்டது, தமக்கு மகிழ்ச்சியூட்டுவதாக இருந்தது என்று நிகோலாய் அலெக்ஸாண்டிரோவிச் இங்கு கூறினர். இது முற்றிலும் உண்மை. ஆனல் இங்குள்ள தொழிலாளர்களேயும் அவர்களது ஒளிவீசும் கண்களேயும் அவர்கள் ஆர்வத்துடன் வேலே செய்யும் காட்சியையும் கண்டது அதை விடவும் மகிழ்ச்சி அளிப்பதாக இருந்தது.

குறிப்பாக மின்சார நிலேயத்தின் நிர்மாண ஸ்தலத்தை எங்கள் நண்பர்கள் எங்களுக்குக் காண்பித்ததானது, எங்களுக்கு விசேஷ மகிழ்ச்சியை அளிக்கிறது. ஏனெனில் இது இயற்கையின் சக்திகளுக்கு எதிரான போராட்டத்தை, இயற்கையைக் கட்டுப்படுத்தி மனிதனுக்குச் சேவை புரியும்படிச் செய்யும் போராட்டத்தை குறிக்கிறது. பிறருடைய தவறுகளின் காரணமாக (தமது தவறுகளின் காரணமாக அல்ல) பொருளாதார ரீதியில் பின்தங்கிய நிலேயில் இருந்துவரும் இந்திய மக்கள் இப்போராட்டத்தில் தமது பணியை நிறைவேற்ற வேண்டியது விசேஷ முக்கியத்துவம் வாய்ந்த கடமையாகும். பிறருடைய தவறுகளின் காரணமாக இந்திய மக்கள் பின்தங்கிய நிலேயில் இருப்பதாக நான் கூறினேன் அல்லவா? இந்தப் "பிறர்" என்பது யாரைக் குறிப்பிடுகிறது என்று நான் இங்கு சுட்டிக் காட்டப் போவதில்லே. நான் யாரைக் குறிப்பிடுகிறேன் என்பது உங்களுக்கும் தெரியும், "அவர்களு"க்கும் தெரியும்!

(கரகோஷம்)

சமாதான பூர்வமான நிர்மாண வேலேகளில் எங்களுடைய அனுபவத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்ள நாங்கள் தயாராக இருக்கிருேம் என்று நாங்கள் முன்பே கூறிவிட்டோம். ஆனல் எங்களுடைய இந்திய விஜயத்தைப்பற்றி வயிற்றெரிச்சல் கொண்டுள்ளவர்களின் கருத்துக்களேப் பிரதிபலிக்கும் சில பத்திரிகைகள், குருஷேவும் புல்கானினும் தந்திரசாலிகள் என்றும், தொழில்நுட்ப உதவி செய்வதாக வாக்குறுதிகள் அளித்து அவர்கள் இந்தியாவை ஏய்த்துவிட முடியும் என்றும், எனவே இந்தியர்கள் புல்கானின், குருஷேவ் விஷயத்தில் சர்வ ஜாக்கிரதையாகக் கண்விழிப்புடன் இருக்க வேண்டும் என்றும் உபதேசிக்கின்றனர்!

(நகைப்பு)

இவ்வாறு எழுதுகிறவர்களேப் பார்த்து, "இந்தியர்களுடன் நட்புறவு கொள்வதில் நீங்கள் எங்களுடன் போட்டி போடத் தயாரா?" என்று நாங்கள்சவால் விடுகிருேம். எங்களேப் பொறுத்தவரையில் இத்தகைய போட்டிக்கு நாங்கள் தயார். (கரகோஷம்) நாங்கள் இந்நாட்டிற்கு எவ்வாறு வந்திருக்கிருேம்? திறந்த உள்ளத்துடனும் (கரகோஷம்

கள்ளங்கபடமற்ற நேர்மையான எண்ணங்களுடனும் வந்திருக்கிறோம். (கரகோஷம்) நாங்கள் உங்களைப் பார்த்துக் கூறுகிறோம் ; "நீங்கள் தொழிற்சாலைகளைக் கட்ட விரும்புகிறீர்களா ? அப்படியானால் நாங்கள் மெத்த மகிழ்ச்சி அடைகிறோம். ஒருக்கால் இது விஷயத்தில் உங்களுக்குள்ள அனுபவம் போதுமானதல்ல என்று நினைக்கிறீர்களா ? பாதகமில்லை, எங்களிடம் வாருங்கள், நாங்கள் உங்களுக்கு உதவி செய்கிறோம். (கரகோஷம்) மின்சார நிலையங்கள் கட்ட விரும்புகிறீர்களா ? இது விஷயத்தில் தேவையான அனுபவம் போதாதென்றாலும் சரி, தொழில்நுட்ப உதவி தேவைப்பட்டாலும் சரி, எங்களை நீங்கள் அணுகலாம். நாங்கள் உங்களுக்கு உதவி புரிவோம். (கரகோஷம்) உங்களுடைய மாணவர்களையும், இஞ்சினியர்களையும் எங்கள் நாட்டில் பயிற்சி பெறுவதற்கு அனுப்ப விரும்புகிறீர்களா ? நல்லது, உடனே அனுப்புங்கள். (கரகோஷம்)

ஆம், எங்கள் "தந்திரம்" என்ன என்பதை சொல்லி விட்டேன். சில பத்திரிக்கைகள் எழுதுவதுபோல் நாங்கள் உங்களை ஏமாற்றாதிருக்கும் பொருட்டு எங்கள் "தந்திரத்"தை இப்பொழுது நீங்கள் நன்றாகக் கூர்ந்து பார்த்துக்கொள்ள வேண்டியது அவசியம்தான் ! (நகைப்பும் கரகோஷமும்) எங்களைப் போலவே இதே முறையில், மற்ற நாடுகளும் 'தந்திர'மாக நடந்துகொள்ள வேண்டும் என்றுதான் நாங்களும் ஆசைப்படுகிறோம். அணு, நீர்வாயு குண்டுகளை உற்பத்தி செய்வதில் போட்டி போடுவதைவிட, இதுபோன்ற விஷயத்தில் போட்டி போடுவது எவ்வளவோ சிறந்தது (பலத்த கரகோஷம்) ஏனெனில் இது அதைவிட மிகவும் மகோன்னதமான வேலை என்பதைச் சொல்லவும் வேண்டுமா ?

காது செவிடுபட ஓலமிடுகிறார்கள் சிலர். இவர்களின் வரட்டுக் கட்டுரைகளும் துவேஷ ஒலிபரப்புகளும் எங்களுக்கு சஞ்சலமளிக்கவில்லை. இவர்கள் வாய்கிழியப் பேசுகிறார்கள் ; பத்திபத்தியாகப் பத்திரிகைகளில் எழுதுகிறார்கள் ; ரேடியோவில் ஓலமிடுகிறார்கள் ; ஆனால் இந்த ஓலம் ஒரு காதுவழியாக நுழைந்து மற்றொரு காது வழியாக வெளியேறிவிடுகிறது. (கரகோஷம்) இப்பொழுதெல்லாம் சொல்லைவிட செயலுக்கே அதிக மதிப்பு அளிக்கிறார்கள் மக்கள். சொல்லைவிட செயலைக்கொண்டே ஒரு முடிவுக்கு வருவது மக்களின் பழக்கமாகி விட்டது. (கரகோஷம்) நாங்கள் இந்தியர்களை சந்திக்கும்போது, அவர்களுடைய பாஷை எங்களுக்குத் தெரியாவிட்டாலும், அவர்களுடைய கண்களிலே நேசத்தையம் பாசத்தையும் பார்க்க முடிகிறது.

(கரகோஷம்)

* * * *

பாட்டியாலா மகாராஜா அளித்த அன்பளிப்பிற்காக நன்றி தெரிவித்துவிட்டு, என். எஸ். குருஷேவ் கூறியதாவது :

"நண்பர்கள் நமது நட்பின் சின்னமாக வழங்கியுள்ள இந்த அன்பளிப்பை நான் மிகவும் பத்திரமாகப் பாதுகாத்து வருவேன். கண்ணைக் கவரும் இந்தப் போர்வாளைப் பார்க்கும்போது என் மனதில் பல எண்ணங்கள் தோன்றுகின்றன. குழந்தை பிறந்ததும் அதைக் கண்ணும்,கருத்துமாக பராமரித்தாகவேண்டுமென்று கருதுகிறோம் சோவியத் மக்களாகிய நாங்கள், குழந்தையை அவ்வாறு பராமரிக்காமல் பாதுகாப்பின்றி விட்டுவிட்டால், கவனியாது இருந்துவிட்டால், அக்குழந்தை பிழைப்பது அரிதாகிவிடும். சர்வ ஜாக்கிரதையுடன் அதைப் பேணி வளர்த்தாகவேண்டும். தன்னைத்தானே பாதுகாத்துக்கொள்ளும் சக்தியில்லாத குழந்தையை நாம்தான் பாதுகாத்தாக வேண்டும். உங்களுடைய மரங்களை நீங்கள் பேணிப் பாதுகாத்துவரும் முறையை நான் பெரிதும் பாராட்டுகிறேன். அவை சின்னஞ்சிறு செடிகளாக இருக்கும் போது சுற்றிலும் வேலிகள் அமைத்துப் பந்தோபஸ்து செய்கிறோம். காற்று அவற்றைச் சாய்த்துவிடாமலும் தவறுதலாக எவரும் அவற்றை மிதித்துவிடாமலும் பாதுகாக்கிறோம். ஆனால் ஓங்கி வளர்ந்து பல மடைந்துள்ள மரத்திற்கு காற்றும் புயலும் தீங்கிழைத்துவிட முடியாது. அரசு சம்பந்தமாகவும் நாம் இவ்விதம் கூறலாம். எங்களுடைய அரசு 38 ஆண்டுகளுக்கு முன்பு பிறந்தது. பச்சிளம் பருவத்திலிருந்த அது அன்று பலவீனமாக இருந்தது. எழுந்து நிற்பதற்குக்கூடத் தடுமாற வேண்டிய நிலையிலிருந்தது. அப்பொழுது திடீரென 14 அரசுகள் அதன் மீது பாய்ந்தன. எங்களை எதிர்த்து பிரிட்டிஷ்காரர்கள் வந்தனர். இங்கு கூடியுள்ள பிரிட்டிஷ் பத்திரிகையாளர்கள் எங்களை மன்னிக்கவேண்டும். ஆனால் ஒரு பாடலில் எந்த ஒரு பதத்தையும் ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. நான் கூறுவது ஒரு சரித்திர உண்மையாகும். பிரிட்டிஷ்காரர்கள் மட்டுமின்றி அமெரிக்கர்களும் பிரெஞ்சுக்காரர்களும் ஜப்பானியர்களும் எங்கள்மீது பாய்ந்தார்கள்.

அந்நிலையில் நாங்கள் என்ன செய்தோம்? கையைக் கட்டிக் கொண்டு வாளாயிருப்பது சாத்தியமா? எங்கள் மக்கள் செயலில் இறங்கினர். இளம் பருவத்திலிருந்த தமது அரசைப் பாதுகாப்பதற்கு அவர்கள் கையில் வாளேந்திப் புறப்பட்டனர். தியாகம் புரிந்து ஆக்ரோஷத்துடன் போரிட்டனர். படையெடுப்பாளர்களை நாங்கள் விரட்டியடித்தோம். மீண்டும் எங்கள்மீது யுத்தம் தொடுக்க முன்வராதீர்கள் என்று நாங்கள் அவர்களிடம் கூறினோம். வாள்கொண்டு எங்களைத் தாக்குவோன் வாளால் வீழ்த்தப்படுவான் என்று முன்னொரு காலத்தில் ரஷ்ய இளவரசன் ஒருவன் கூறினான். இன்றும் நாங்கள் இந்த விதியைப் பின்பற்றுகிறோம். விருந்தினர்களை நாங்கள் வரவேற்கிறோம். அன்புடன் உபசரிக்கிறோம். வாளேந்திய பகைவனாக எங்களிடம் வர விரும்புவோர், ஹிட்லருக்கு நேர்ந்த கதியே தமக்கும் நேருமென்பதை நினைவில் வைத்திருப்பார்களாக. (கரகோஷம்)

உங்களுக்கு நான் புத்திமதி கூற விரும்பவில்லை. ஆயினும் காலனி ஆட்சியாளரின் ஒடுக்குமுறையின் கீழ் இந்திய நாடு எவ்வளவு காலம் அவதியுற்றதென்ற கேள்வி என்னை அறியாமலே என் மனதில் எழுகிறது. நூறு ஆண்டுகள் இவ்வாறு அவதியுற்றது எனலாம். நீங்கள் உங்கள் சுதந்திரத்தையும் சுயேச்சையையும் பாதுகாக்க வேண்டுமென்ற உறுதியுடையவர்கள் என்பதில் ஐயமில்லை. எங்களுடைய சொந்த அனுபவத்தின் அடிப்படையில் நான் கூறுகிறேன். பேராசைக் கண்களுடன் எங்களை சிலர் நோக்குகிறார்கள்; எங்களை எப்படி அழிப்பதென்று அவர்கள் ஆலோசித்துக் கொண்டிருக்கிறார்கள். எங்களைப் பொறுத்தமட்டில் நாங்கள் எங்களுடைய குண்டுகளை வீசி யெறிந்து வெடிக்கவைக்க வேண்டிய அவசியம் ஏற்படக்கூடாதென்று தான் ஆசைப்படுகிறோம். டிராக்டர்களையும் உபயோககரமான இதர பொருள்களையும் மட்டுமே நாங்கள் உற்பத்தி செய்யவேண்டுமென்பது தான் எங்கள் விருப்பம்.

ஆனால் ஆயுதமின்றி வெறுங்கைகளுடன் நிற்போமானால், எங்கள் கதி என்னவது? நாங்கள் தகர்த்தெரியப்பட்டுவிடுவோம், சந்தேக மில்லை. எங்கள் பேரப்பிள்ளைகள் எங்களைப்பற்றிக் கூறுவார்கள்: மேதை லெனின் இருந்தார்; மக்களுடைய நலன்களை அவர் நன்கு உணர்ந்திருந்தார். அவர் தலைமையில் சோவியத் அமைப்பு நிறுவப் பட்டது, சோவியத் அரசு கட்டி யெழுப்பப்பட்டது. ஆனால் லெனி னுக்குப் பின் வந்தவர்கள் இந்த அரசின் சுதந்திரத்தையும் சுயேச்சை யையும் பாதுகாக்கும் சக்தியற்றவர்களாயிருந்தனர். இந்த நிலைமை ஏற்படாதிருக்கும் பொருட்டு நாங்கள் எங்கள் புனித சுதந்திரத்தைப் பாதுகாத்து வருகிறோம். இது தவிர்க்க முடியாததாகும். நீங்களும் இவ்வாறுதான் செய்தாகவேண்டும். கடுமையான போராட்டத்தின் மூலம் வென்றுகொண்டுள்ளதை நீங்களும் இவ்வாறே பேணிப் பாது காப்பது அவசியமாகும்.

உங்களுக்கு எங்கள் மனப்பூர்வமான நல்வாழ்த்துக்கள்.(கரகோஷம்)

## 1955 நவம்பர் 23-ம் தேதியன்று பம்பாய் வந்து சேர்ந்ததும் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

அருமை நண்பர்களே!

பாசமும் நேசமும் நிறைந்த உங்களுடைய வரவேற்பிற்காக நாங் கள் மனமார்ந்த நன்றி கூறுகிறோம். நிகிதா செர்கியேவிச்சும், நானும்

எங்களுடன் வந்துள்ள ஏனைய நண்பர்களும் உயர் சிறப்புடைய பம்பாய் நகரின் மக்கள் யாவரையும் நேரில் சந்தித்து வாழ்த்துக் கூறுவதற்கு மனம் மகிழ்கிறோம்.

உங்களுடைய அற்புத நகரின் வரலாற்றை நாங்கள் நன்கறிவோம். உங்களுடைய தேசிய சுயேச்சையை மீண்டும் பெறுவதற்கான ஸ்தாபன ரீதியான இயக்கம் இந்நகரில் தான் ஆரம்பமாகியது. உலக முக்கியத் துவம் வாய்ந்த போக்குவரத்துக் கேந்திரமாகவும், தொழில் கேந்திரமாக வும், உங்களுடைய தேசிய கலாச்சாரம், விஞ்ஞானத்தின் மூலஸ்தல மாகவும் இந்நகரம் பிரசித்தியடைந்துள்ளது.

இந்தியக் குடியரசின் பொருளாதார, கலாச்சார வளர்ச்சிக்கு உங் களுடைய அற்புத நகரம் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த பங்கை ஆற்றி வருகிறது என்பதை நாங்கள் நன்கறிவோம். அதனால்தான் இவ்வுன்னத பம்பாய் நகரைப் பார்த்து, இங்குள்ள மக்களைப் பரிச்சயம் செய்து கொண்டு, பொருளாதார, கலாச்சார, விஞ்ஞானத் துறைகளில் அவர்கள் ஆற்றியுள்ள சாதனைகளைப் பற்றி தெரிந்து கொள்வதற்கு நாங்கள் மட்டற்ற மகிழ்ச்சியுடன் இங்கு விஜயம் செய்துள்ளோம்.

சோவியத் யூனியன் மக்களின் உளமார்ந்த நேச வாழ்த்துக்களை பம்பாய் நகர மக்களுக்கு நேரடியாகத் தெரிவித்துக் கொள்வதற்கு நாங் கள் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

அருமை நண்பர்களே! நேச பூர்வமான அன்பு வரவேற்பிற்காக, மீண்டும் ஒருமுறை உங்களுக்கு நன்றி கூறுகிறோம்.

## 1955 நவம்பர் 23-ல், பம்பாய் நகரசபை வரவேற்பின் போது என். ஏ. புல்கானின் நிகழ்த்திய சொற்பொழிவு

கவர்னர் அவர்களே!

பம்பாய் நகர மேயர் அவர்களே!

அன்பார்ந்த நண்பர்களே!

என். எஸ். குருஷேவ் சார்பாகவும், என் சார்பாகவும், எங்களுடன் இந்தியாவிற்கு வந்துள்ள நண்பர்கள் சார்பாகவும் பலகோடி சோவியத் மக்கள் சார்பாகவும் உங்களுக்கு நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். சோவியத் மக்களின் பிரதிநிதிகளிடத்தில் நேசவுணர்ச்சி

களை வெளிப்படுத்துவதற்காக, இங்கு வந்துள்ள உங்கள் உன்னத நகரின் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு நாங்கள் எங்களுடைய உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இந்த மாபெரும் நகரிலே, சோவியத் மக்களுக்கு பல நல்ல நண்பர்கள், தேசங்களுக்கிடையில் நட்புறவைப் போற்றி மதித்திடும் நண்பர்கள் உள்ளனர் என்பதை இந்த வரவேற்பு தெட்டத்தெளிவாகக் காட்டுகிறது. (பலத்த கரகோஷம்)

பம்பாய் நகரை சோவியத் மக்கள் நன்கு அறிவார்கள். இது ஒரு பெரிய நவீன நகர்; மிகப்பெரிய இயந்திரத் தொழிற் கேந்திரம் என்பதை—இந்திய விஞ்ஞானத்திற்கும் கலாச்சாரத்திற்கும் முக்கியமானதோர் கேந்திரம் என்பதை – உலகிலுள்ள மிகப்பெரிய துறைமுகங்களில் ஒன்று என்பதை—நாங்கள் அறிவோம். சாமான்ய இந்திய உழைப்பாளி மக்கள் பல தலைமுறைகளாகத் தமது கடின உழைப்பின் மூலம் பம்பாய் நகருக்குப் பேரும் புகழும் பெற்றுத் தந்துள்ளனர். அவர்கள்தான் இந் நகரின் தொழில் நிலையங்களையும், தொழிற்சாலைகளையும், ரயில்வேக்களையும், நேர்த்தியான கட்டிடங்களையும் கட்டியெழுப்பியவர்கள். இதே மக்கள்தான் இந்நகரில் பொருள் உற்பத்திசெய்யும் தொழிற்சாலைகளில் வேலை செய்கின்றனர். அவர்கள் உற்பத்தி செய்யும் சரக்குகள் இந்தியாவின் எல்லைகளுக்கு வெளியேயும் வெகுவாகப் பிரபலமடைந்துள்ளன.

இந்திய மக்களின் ஆக்கல் பூர்வமான அறிவாற்றலுக்கும் தேசியப் பெருமித உணர்விற்கும் நிலைக்களமாகவுள்ள இடங்களில் ஒன்று, பம்பாய் நகரம். இங்கே இதர ஆசிய மக்களைப்போல இந்திய மக்களும், உலகக் கலாச்சாரத்தின், விஞ்ஞானத்தின் மிகப் பெரிய சாதனைகளில் பாண்டித்தியம் பெற்று வருகின்றனர்; மிகவும் நவீனத் தொழில்களை கட்டியமைத்து வருகின்றனர்; நவீனப் போக்குவரத்து சாதனங்களை வளர்த்து வருகின்றனர் என்பதை எல்லோரும் பார்க்க முடிகிறது. காலனி ஒடுக்கு முறையைக் களைந்தெறிந்து விட்டு, நெடுங்காலமாக நீங்கள் விரும்பிய சுதந்திரத்தை அடைவதற்கு வழிவகுத்த இந்திய தேச விடுதலை இயக்கத்தில், இந்நகரம் முக்கிய பங்காற்றியுள்ளது. இந்திய மக்கள் நடத்திய இந்தப் போராட்டத்தை சோவியத் மக்கள் எப்பொழுதுமே மிகுந்த அனுதாபத்துடனும் அக்கறையுடனும் கவனித்து வந்துள்ளனர். எங்கள் தலைவரும் உலகிலே முதல் சோஷலிஸ்ட் அரசை ஸ்தாபித்தவருமான விலாடிமிர் இலிச் லெனின் இந்தியாவில் காலனி ஆட்சி முறை சரிந்து விழப்போவது தவிர்க்க முடியாதது என்று 1908ம் ஆண்டிலேயே, தூரதிருஷ்டியுடன் கூறினர். அவரது இந்தக் அற்புதக் கணிப்பு உண்மையாகி விட்டது.

இப்பொழுது இந்தியா ஒரு சுதந்திர நாடு. இந்திய மக்கள் தமது சொந்த விருப்பத்தின்படி தமது எதிர்காலத்தைத் தீர்மானித்துக் கொள்ளும் வாய்ப்பைப் பெற்று விட்டார்கள். இந்தியாவிற்குள்ளும் அதன்

எல்லைகளுக்கு அப்பாலும் மிகுந்த முக்கியத்துவம் பெற்று விளங்கும் நிகழ்ச்சிகள் இவை. வெளி உலகிலிருந்து ஆசிய மக்களின் மீது திணிக்கப்பட்ட காலனி ஆட்சிகள் சரிந்து விழுந்து கொண்டிருக்கும் ஆசியாவிலே இன்று ஏற்பட்டு வரும் மாறுதல்களை, இச்சம்பவங்கள் பிரதிநிதித்துவப்படுத்துகின்றன.

இந்திய மக்களின் மகத்தான ஆக்கல்பூர்வமான வேலைகளை நாங்கள் மட்டற்ற மகிழ்ச்சியுடன் கவனித்து வருகிறோம். உங்கள் நாட்டை பொருளாதார ரீதியில் சுயேச்சை நிலை அடையச் செய்யும் மிகவும் முக்கியமான வேலையை நீங்கள் மேற்கொண்டிருக்கிறீர்கள். இந்தக் குறிக்கோளை ஈடேற்ற வேண்டியது எவ்வளவு முக்கியம் என்பதை சோவியத் மக்களாகிய நாங்கள் எங்கள் சொந்த அனுபவத்தின்வாயிலாக அறிந்துள்ளோம். பொருளாதார சுயேச்சை அடைவதற்கு இந்திய மக்கள் கொண்டுள்ள நியாயமான அபிலாஷையின்பால் அனுதாபம் கொண்டுள்ளதுடன், பொருளாதார நிர்மாணத் துறையில் இந்தியாவுடன் ஒத்துழைப்பதற்கும் தயாராக இருக்கிறது சோவியத் யூனியன். நம்மிரு நாடுகளுக்கிடையில் வர்த்தகத்தை விரிவுபடுத்துவதற்கும், விஞ்ஞான, தொழில் நுணுக்க சாதனைகளைப் பரிவர்த்தனை செய்து கொள்ளுவதற்காகவும், பரஸ்பர நன்மையின் அடிப்படையில் ஆக்கல்பூர்வமான ஒத்துழைப்பை ஏற்படுத்துவதற்காகவும் இந்தியாவுடன் நாங்கள் தொடர்புகளை மேலும் வளர்த்துக்கொள்வதற்கு விரும்புகிறோம்.

லெனின் வகுத்த கோட்பாட்டை—வெவ்வேறு சமூக அமைப்புகளைச் சேர்ந்த அரசுகள் சமாதானமாக ஒருங்கே ஒத்துவாழ வேண்டுமென்ற கோட்பாட்டை—சோவியத் யூனியன் சர்க்கார் ஆரம்பமுதற் கொண்டே தனது வெளிநாட்டுக் கொள்கையில் நிறைவேற்றிவருகிறது. சர்வதேச கெடுபிடி நிலைமையை மேலும் தணிவுறச் செய்வதும், அரசுகளுக்கிடையிலுள்ள உறவுகளில் நம்பிக்கையை மேலும் பலப்படுத்துவதும், பேச்சுவார்த்தைகளின் மூலம் சர்வதேசப் பிரச்னைகளை ஒழுங்குபடுத்துவதும், தீர்த்து வைப்பதும், பொது பந்தோபஸ்தையும் உறுதிவாய்ந்த நிலையான சமாதானத்தையும் ஸ்தாபிப்பதும்தான் சோவியத் யூனியன் பின்பற்றி வரும் அயல்நாட்டுக் கொள்கையின் குறிக்கோளாகும். விரிவான சர்வதேச ஒத்துழைப்பை ஸ்தாபிப்பதற்கும், அரசுகளின் சமூக அமைப்பு எப்படியிருப்பினும் அவை யாவற்றினிடையிலும் பொருளாதார விஞ்ஞான, தொழில்நுணுக்க கலாச்சார, உறவுகளை விரிவுபடுத்துவதற்கும் சோவியத் யூனியன் அயராது பாடுபடுகிறது.

சமாதானமாக ஒருங்கே ஒத்துவாழ வேண்டுமென்ற கோட்பாட்டை ஆதரிப்பவர்களின் முதல் வரிசையில் இந்திய மக்கள் நிற்கிறார்கள் என்பது குறித்து சோவியத் மக்கள் மகிழ்ச்சி அடைகின்றனர். இந்தியாவும் சீனமக்கள் குடியரசும்தான், பஞ்சசீலத்தை—அரசுகள் சமாதானமாக

ஒருங்கே ஒத்துவாழ்வதுபற்றிய ஐம்பெரும் கோட்பாடுகளை -முதன் முதலில் பிரகடனப்படுத்தின. (பலத்த கரகோஷம்) மாபெரும் ராஜதந்திரி யான இந்தியாவின் பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு அவர்களின் விசேஷ முக்கியத்துவம் வாய்ந்த பாத்திரத்தை இந்த சந்தர்ப்பத்தில் குறிப்பிடாமல் இருக்க முடியாது. உலக மக்களின் சமாதானப் போராட் டத்துடனும், தேசங்களுக்கிடையிலுள்ள உறவுகளில் சமாதானமாக ஒருங்கே ஒத்துவாழும் கோட்பாட்டை அமுலாக்குவதற்கான போராட்டத் துடனும் ஜவாஹர்லால் நேருவின் பெயர் நெருங்கப் பிணைக்கப் பட்டுள்ளது. (கரகோஷம்) சமாதானமாக ஒருங்கே ஒத்துவாழ்தலே சகல அரசுகளின்முன் உள்ள பகுத்தறிவிற்கு உகந்த ஒரேவொரு மார்க்கம் என்றும், இல்லையேல் பரஸ்பர அழிவையே அவை எதிர் நோக்க வேண்டிவரும் என்றும் இந்தியப் பிரதமர் நேரு பிழையற்ற முறையில் சுட்டிக்காட்டுகிறார். இது சம்பந்தமாக இங்கே நான் சோவியத் யூனியன் சர்க்காரின் சார்பாக இந்திய சர்க்கார் மேற்கொண்டுள்ள கொள்கைக்கு ஆழ்ந்த மரியாதையைத் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன். இந்திய சர்க்காரின் இந்தக் கொள்கை, ஆயுதபரிஹரணத்துக் காகவும், அணு ஆயுதங்களுக்குத் தடை விதிப்பதற்காகவும், புதிய யுத்தம் ஒன்று ஏற்படலாமென்ற அபாயத்தை ஒழிப்பதற்காகவும், சகல சர்வ தேசப் பிரச்னைகளையும் பேச்சுவார்த்தைகள் மூலம் பைசல் செய்து கொள்ளுவதற்காகவும் பாடுபடுகிறது ; ஆக்கிரமிப்பு யுத்தக் கூட்டணிகள் அமைக்கப்படுவதை எதிர்த்துவருகிறது. சர்வதேசக் கெடுபிடி நிலையைத் தணிப்பதற்கும், சமாதானத்தைப் பாதுகாப்பதற்கும் இந்திய சர்க்கார் எடுத்துவரும் முயற்சிகளை சோவியத் மக்கள் நன்கு அறிவார்கள்.

சமாதானப் பணிக்கும், ஆசியாவின் தீர்க்கப்படாத பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதற்கும் இந்தியா ஆற்றி வரும் சேவையை சோவியத் மக் கள் வரவேற்கிறார்கள். சீன மக்கள் குடியரசு, இந்தியா, சோவியத் யூனி யன் ஆகிய இம்மூன்று நாடுகளின் கூட்டு முயற்சிகளின் விளைவாகவே கொரியாவிலும், இந்தோ-சீனாவிலும் நடைபெற்று வந்த யுத்தங்கள் முடி வுற்றன. பலத்த கரகோஷம்) ஐ. நா. ஸ்தாபனத்தில் சீன மக்கள் குடியரசிற்குரிய சட்டபூர்வமான ஸ்தானம் அளிக்கப்பட வேண்டும் என் பதற்காக சோவியத் யூனியனும் இந்தியாவும் தோளோடு தோள் நின்று போராடி வருகின்றன. சீன மக்களின் தேசிய நலன்களுக்கு ஏற்ப, தைவான் பிரச்னை சமாதான பூர்வமாகத் தீர்க்கப்பட வேண்டும் என்ப தற்காக இந்திய சர்க்கார் பாடுபடுகிறது. பாண்டுங்கில் கூடிய முதல் ஆசிய-ஆப்பிரிக்க மகாநாட்டை ஏற்பாடு செய்த நாடுகளில் ஒன்று இந்தியா. உலக சமாதானத்தைப் பலப்படுத்தும் பணிக்கும், ஆசிய-ஆப்பிரிக்க மக்களின் உரிமைகளையும் நலன்களையும் நிலைநாட்டுவதற்கும் இந்த மகாநாடு முக்கியத்துவம் மிகுந்த சேவை புரிந்துள்ளது.

உலக சமாதானத்தைப் பாதுகாத்துப் பலப்படுத்தும் விஷயத்தில்

இந்தியா, சோவியத் யூனியன் இவ்விரு நாடுகளின் நலன்கள் ஒருமித்துள்ளன. இதனால் பல சர்வதேசப் பிரச்னைகளில் நம்மிரு நாடுகளுக்கிடையில் நேச பூர்வமான ஒத்துழைப்பு இருப்பது அவசியமாகிவிட்டது. நம்மிரு நாடுகளின் சுபீட்சத்திற்கு அவசியமான நிலைமைகளை ஏற்படுத்திக் கொள்ளுவதிலுள்ள நமது பொது நலன்களுக்கு இது முற்றிலும் பொறுத்தமாகும்.

விஞ்ஞானத் துறையில் நாம் ஒருவரிடமிருந்து ஒருவர் கற்றறிந்து கொள்வதற்கு விஷயங்கள் இருக்கின்றன. தொன்னெடுங்காலமாக பிரபலமடைந்திருக்கிறது இந்திய விஞ்ஞானம். தலைசிறந்த விஞ்ஞானிகள் பலரை இந்தியா உலகிற்கு அளித்துள்ளது. இவ்விஞ்ஞானிகள் தமது கண்டுபிடிப்புகள் மூலம் உலக விஞ்ஞானத்தையும் கலாச்சாரத்தையும் செழுமைப்படுத்தியுள்ளனர். உங்கள் விஞ்ஞானத்தின் இந்த நல்ல பாரம்பரியங்கள் இன்றுகூட நிலைநிறுத்தப்பட்டு வருகின்றன. இதர நாடுகளிலிருந்து பல விஞ்ஞானிகள் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்கிறார்கள். உங்கள் நாட்டின் முக்கிய விஞ்ஞானத்துறைக் கேந்திரங்களில் ஒன்றாகக் கருதப்படும் இந்நகரிலிருந்தும் இந்திய விஞ்ஞானிகள் எங்கள் நாட்டுக்கு விஜயம் செய்துள்ளனர். எங்கள் சோவியத் விஞ்ஞானிகளும் இந்தியாவில் பிரயோஜனகரமான பல விஷயங்களை கற்றறிந்து கொள்ளமுடியும் என்று நாங்கள் நம்புகிறோம். இத்தகைய விஞ்ஞான சாதனைகளின் பரிவர்த்தனையும் விஞ்ஞானத்துறையில் நம் ஒத்துழைப்பும் நமது இருவருக்கும், அதாவது உங்கள் விஞ்ஞானிகளுக்கும் எங்கள் விஞ்ஞானிகளுக்கும் மிகவும் நன்மை பயப்பதாகும்.

இந்தியக் கலாச்சாரத்தின் முக்கிய கேந்திரங்களில் ஒன்றான உங்கள் நகரிலே, உங்களுடைய பிரபல எழுத்தாளர்களும் சினிமா ஊழியர்களும் மற்றும் பலரும் வாழ்ந்து வருகிறார்கள்; பணியாற்றி வருகிறார்கள். இவர்களை சோவியத் மக்கள் நன்கறிந்துள்ளனர்; நேசித்து வருகின்றனர். பம்பாய் நகரம் இந்திய சினிமாத் தொழிலின் கேந்திரமாகும். சோவியத் யூனியனில் காண்பிக்கப்பட்ட இந்தியத் திரைப்படங்கள் பல, பம்பாயில் தயாரிக்கப்பட்டவையாகும். சோவியத் யூனியனிலுள்ள சினிமா ரசிகர்கள் இப்படங்களை மிகவும் பாராட்டினர். நம்மிரு நாடுகளுக்கிடையில் கலாச்சாரப் பரிவர்த்தனையை வளர்த்திடும் விஷயத்தில், உங்கள் நகரம் எவ்வளவு முக்கியமான சேவை புரிய முடியும் என்பதற்கு இது ஒன்றே போதுமானதாகும். இத்தகைய பரிவர்த்தனைக்கு இன்னமும் பயன் படுத்தப்படாத, விரிவான வாய்ப்புகள் நம்முன் உள்ளன. இந்தக் கலாச்சாரப் பரிவர்த்தனை நம்மிரு மக்களுக்கும் நாடுகளுக்கும் இடையில் நேசபூர்வமான உறவுகளை மேலும் பலப்படுத்துவதற்கு உதவிபுரியும்.

எனது பிரசங்கத்தை முடிக்கும் முன்பு' நீங்கள் வெற்றிமேல் வெற்றி பெற்று முன்னேறவேண்டும் என்ற எனது நல்லாசிகளை உங்கள்

நகருக்கும் ராஜ்யத்திற்கும், உங்களுடைய மாண்புமிக்க மக்களுக்கும், தெரிவித்துக்கொள்கிறேன். இந்த வாழ்த்து, நமது இந்திய நண்பர்களை நேசித்துப் போற்றும் சோவியத் மக்கள் அனைவரும் தெரிவிக்கும் வாழ்த்தாகும். (கரகோஷம்) சமாதானத்திற்காக இந்திய மக்கள் நடத்தும் போராட்டத்தையும், புது வாழ்வை நிர்மாணிப்பதற்கு அவர்கள் எடுத்து வரும் முயற்சிகளையும் சோவியத் மக்கள் மிகுந்த அக்கறையுடனும் மகிழ்ச்சியுடனும் கவனித்து வருகின்றனர். நமது இரு மக்களுக்கிடையிலுள்ள நட்புறவு உலக முழுதும் சமாதானத்திற்குப் பாதுகாப்பு அளிக்கும் உறுதிவாய்ந்த கோட்டையாகும். இந்த மகத்தான நட்பை நாம் பாதுகாத்துப் பலப்படுத்துவோமாக! (பலத்த கரகோஷம்)

இந்திய சோவியத் மக்களின் நட்புறவு நீடூழி வாழ்க! (பலத்த நீடித்த கரகோஷம்)

## 1955 நவம்பர் 23-ல், பம்பாயில் நகரசபை வரவேற்பு உபசாரத்தின்போது என். எஸ். குருஷேவ் நிகழ்த்திய உரை

கனவான்களே! நண்பர்களே!

எங்களுக்கு அளிக்கப்படும் உள்ளன்புமிக்க வரவேற்பு உபசாரத்திற்காக, இந்த மேடையிலிருந்து, இந்தியாவின் பிரதம மந்திரி நேரு அவர்களுக்கும், பம்பாய் ராஜயத்தின் தலைவர்களுக்கும், பம்பாய் மேயர் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். (கரகோஷம்)

எங்களுக்கு நல்வரவு கூறுவதற்காக இக்கூட்டத்திற்கு வந்துள்ள உங்கள் அனைவருக்கும் நன்றி கூறுகிறேன். மேலும் இன்று எங்களைச் சந்திப்பதற்காக வந்திருந்த பம்பாய் மக்கள் அனைவரின் கண்களிலும் அவர்கள் எங்களிடத்தில் கொண்டுள்ள உண்மை அன்பு வழிந்தோடுவதைக் கண்டேன். அந்த மக்கள் அனைவருக்கும் எனது நன்றியைக் கூறுகிறேன். (நீடித்த கரகோஷம்)

நாங்கள் இந்திய மக்களை நண்பர்கள் என்ற முறையில் சந்தித்து மகிழும் இந்நாட்களிலே, எங்கள் உள்ளங்களில் கரைபுரண்டோடும் அன்பு உணர்ச்சிகளை எவ்வாறு எடுத்துரைப்பேன்? இதற்கு வார்த்தைகள் போதாது. (கரகோஷம்)

உங்களுடைய முதல் வெற்றிகளைக் கண்டு நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம். வருங்காலத்திலும் நீங்கள் வெற்றிக்குமேல் வெற்றி அடைய வேண்டும் என்று நாங்கள் வாழ்த்துகிறோம். இந்திய மக்கள் தம்மை விடுவித்துக்கொண்டு, தேச சுயேச்சையை அடைந்து விட்டது குறித்து நாங்கள் பூரிப்படைகிறோம். (கரகோஷம்)

நமக்கிடையே ஆழமாக வேர்விட்டு வளர்ந்துள்ள நல்லுணர்வு மிகுதியாவுள்ளது. நாங்கள் உங்களுடன் கைகோர்த்துக் கொண்டு சமாதானத்திற்காகப் போராடுகிறோம். (பலத்த கரகோஷம்) இது சம்பந்தமாக சோவியத் மக்கள் சமாதானப் போராட்டத்தை எவ்வாறு புரிந்துகொள்கிறார்கள் என்பதுபற்றி ஒருசில வார்த்தைகளை இங்கு கூற விரும்புகிறேன். (கரகோஷம்)

யுத்தத்தை விரும்புகிறாயா அல்லது சமாதானத்தை விரும்புகிறாயா என்று இந்த உலகத்தில் எந்த மனிதனைக் கேட்டாலும் அவன் நிச்சயமாக சமாதானத்தை விரும்புவதாகவே கூறுவான்! (கரகோஷம்) உண்மையில் தன் மனதிற்குள் யுத்தத்தை விரும்புகிறவன் கூட, அதை வெளிப்படையாகக் கூற மாட்டான். சமாதானத்தை விரும்புவதாகவே அவனும் கூறிக்கொள்ள விரும்புவான். மக்கள் யுத்தத்தை விரும்பவில்லை, பகிரங்கமாக யுத்தத்தை ஆதரிப்பது தனக்கு ஆபத்தானது என்பதை அவன் அறிவான். (கரகோஷம்)

சமாதானத்தை ஆதரிப்பதாகத் தற்பொழுது கூறி வருகிறவர்களில் சிலர், தமது ஆசைத் திட்டங்கள் யுத்தமின்றியே நிறைவேறும் என்றால், அதற்காக வருத்தப்பட மாட்டார்கள் என்பது உண்மையே. ஒரு நாட்டை மற்றொரு நாடு அடிமைப்படுத்துவதற்கு உதவிகரமாக அமைந்துள்ள சமாதானத்தையே அவர்கள் விரும்புவார்கள். ஆனால் மக்கள் இதை விரும்பவில்லை. இதில்தான், விஷயத்தின் சாரம் அடங்கியுள்ளது; இதுவே சகல வேறுபாடுகளுக்கும் திறவு கோல்.

ஜெனிவாவில் நான்கு வல்லரசு சர்க்கார்களின் அதிபர்கள் கூடிப் பேசினார்கள் என்பதையும், அதற்குப் பிறகு நான்கு வல்லரசுகளின் அன்னிய நாட்டு மந்திரிகள் சந்தித்தார்கள் என்பதையும் நீங்கள் அறிவீர்கள். ஒரு உடன்பாட்டிற்கு வருவதற்கு மிகுந்த பிரயாசை எடுத்துக்கொள்ளப்பட்டது. ஆயினும், இதுவரையில், பெரும் பலன் எதுவும் கிடைக்கவில்லை. இதற்குக் காரணம் நாம் ஒரே வார்த்தைகளுக்கு வேவ்வேறான அர்த்தம் கூறுவதேயாகும்.

சோவியத் மக்களைப் பொறுத்தமட்டில், அவர்கள் கூறும் அர்த்தம் தெட்டத் தெளிவானது; எல்லோருக்கும் விளங்கக்கூடியது; உலக மக்கள் எல்லோருக்கும் சமாதானம் வேண்டும் என்பதே நாங்கள் கூறுவது! (பலத்த கரகோஷம்) இதர அரசுகள், நாடுகளின் உள்நாட்டு

அமைப்புகளில் எவ்விதமான தலையீடும் கூடாது என்று நாங்கள் கூறு கிறோம். (பலத்த கரகோஷம்) இதுதான் மிகவும் பிரதானமானது.

பிரசித்திபெற்ற இந்திய-சீன கூட்டுப் பிரகடனத்திலே வெகு தெளி வாகக் கூறப்பட்டுள்ள இந்தக் கோட்பாடுகளுக்காகவே நாங்கள் போராடிக் கொண்டிருக்கிறோம். (கரகோஷம்)

சத்தியம் வென்றே 'தீரும், சமாதானம் நிலைபெற்றே தீரும் என்று சகல சோவியத் மக்களையும்போல, நானும் ஆழ்ந்த நம்பிக்கை கொண் டுள்ளேன். (பலத்த கரகோஷம்) ஆனால் நாம் இதற்காக முழுமூச்சுடன் பாடுபட வேண்டும். உலக முழுதும் சமாதானத்திற்கான நமது உறுதியை, விடாமுயற்சியை நாம் தளர்த்தக்கூடாது. (கரகோஷம்)

கனவான்களே! நண்பர்களே! நாம் ஒரு இன்பகரமான கால கட்டத்திலே வாழ்ந்து வருகிறோம். பழைய ஆட்சிமுறை மீண்டும் தலை தூக்க முடியாதவாறு, காலனி அடிமைத்தனம் அழித்தொழிக்கப்பட்டு வரும் காலம் இது. மனிதவர்க்கத்திற்கு ஆனந்தமயமான வசந்த காலம் இது.

இப்பொழுது நாங்கள் இந்தியாவின் நகரங்களையும் கிராமங்களையும் சுற்றிவருகிறோம்; போகும் இடமெல்லாம் இந்திய மக்களை சந்தித்து வருகிறோம். தமது நாட்டின் சுயேச்சை சாதித்துள்ள, தமது அரசிற்கும், எதிர்காலத்திற்கும் தாமே எஜமானர்களாக இருக்க விரும்புகிற சுதந்திர மக்களின் கண்கள் எவ்வளவு தீட்சண்யமாகப் பிரகாசிக்கின்றன என்பதை நாங்கள் பார்த்துவருகிறோம்.

இந்த மகோன்னத நிகழ்ச்சிகள் குறித்து பலரும் பலதரப்பட்ட போக்குகளைக் கொண்டுள்ளனர். சோவியத் மக்களைப் பொறுத்த மட்டில், இந்த வெற்றிகளை அவர்கள் மனப்பூர்வமாக வரவேற்கின்றனர். மகத்தான சீன மக்கள் மாபெரும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த வெற்றியை அடைந்துள்ளனர்; ஏகாதிபத்திய நுகத்தடியை என்றென் றும் திரும்ப வொட்டாமல் தூக்கி எறிந்துவிட்டனர்; இப்பொழுது அவர்கள் தமது சிறப்புடைய மக்கள் - அரசை நிர்மாணித்து வருகின் றனர். இது குறித்து நாங்கள் மகிழ்ச்சி அடைகிறோம். மாண்புமிக்க இந்தியாவின் மக்கள் தேச சுயேச்சையைப் பெற்றுவிட்டனர். இது குறித்தும் நாங்கள் மகிழ்ச்சி அடைகிறோம். ஆசிய ஆப்ரிக்க மக்கள் அனைவரும் காலனி அடிமைத்தனத்திற்கு எதிராக இப் பொழுது ஆர்த்தெழுந்து வருகின்றனர். இவையாவும் யாராலும் தடுக்கமுடியாத பெரும் கடற் புயல்போல் உள்ளன. (பலத்த, நீடித்த கரகோஷம்).

என்றென்றும் அழியாத நட்புறவை நாடும் சோவியத் மக்கள் இந்திய மக்களிடத்தில் தமது சகோதரக் கரங்களை அன்புடன் நீட்டு கின்றனர். (நீடித்த கரகோஷம்).

ஒரு அரசின் உள்நாட்டு அமைப்பு அந்நாட்டு மக்களின் சொந்த விவகாரம் என்ற கோட்பாட்டை நாங்கள் எப்பொழுதும் ஆதரித்து வந்துள்ளோம்; இப்பொழுதும் தொடர்ந்து ஆதரித்து வருகிறோம். மற்றவர்களில் விவகாரங்களில் நாங்கள் தலையிடவில்லை; எப்பொழுதும் தலையிட மாட்டோம்

நமக்கிடையில் பல பொதுவான நலன்கள் உள்ளன. இவற்றை நாம் பரஸ்பரம் பரிபூரணமாகப் புரிந்து கொள்கிறோம். இந்தப் பரஸ்பர நல்லுணர்வின் அடிப்படையில், பரஸ்பர மதிப்பின் அடிப்படையில் உலக முழுதும் சமாதானம் தழைத்தோங்கும் பொருட்டு நாம் நமது நட்பைப் பலப்படுத்த வேண்டும்.

இந்தியாவின் நகரங்கள், கிராமங்கள் வழியாக நாங்கள் சுற்றிவரும் இந்நாட்களிலே அடிக்கடி எங்கள் காதில் விழுந்துவரும் அந்த அற்புதச் சொற்களை நான் பூரணமாக அங்கீகரிக்கிறேன். அந்த அற்புதச் சொற்களைக் கூறிக் கொண்டு இன்றைய எனது பேச்சை முடித்துக் கொள்ள விரும்புகிறேன்.

"இந்தியரும், ரஷ்யரும் சகோதரர்கள்!" (பலத்த, நீடித்த கரகோஷம்)

## பம்பாய் இராஜ்ய முதல் மந்திரி மொரார்ஜி தேசாய் 1955, நவம்பர் 24-ம் தேதி அளித்த வரவேற்பில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

முதல் மந்திரி அவர்களே, பம்பாய் இராஜ்ய சட்டசபை உறுப்பினர்களே, கனவான்களே,

நீங்கள் எங்களுக்கு அளித்துள்ள உபச்சாரத்திற்கு முதலில் நன்றி செலுத்த விரும்புகிறேன். என் சார்பாகவும், தோழர் குருஷேவ் சார்பாகவும், எங்களுடன் வந்துள்ள நண்பர்களின் சார்பாகவும் நீங்கள் அளித்துள்ள நேசபூர்வமான உபசாரத்திற்கு எங்களின் இதயபூர்வமான நன்றியைத் தெரிவிக்க என்னை நீங்கள் அனுமதிக்கவேண்டும். இந்த உபச்சாரம் சாதாரணமான ஒன்றல்ல; மிக நெருங்கிய நண்பர்களுக்குத்தான் இத்தகைய வரவேற்புக் கிடைக்கும். (கரகோஷம்).

சோவியத் மக்களின் உள்ளக்கிடக்கையைப் பிரதிபலிக்கும் முறையில், சோவியத் மக்களின் இதயபூர்வமான, உளங்கனிந்த வாழ்த்துக்களை இந்திய மக்களுக்குத் தெரிவிக்குமாறு சோவியத் சர்க்கார் எங்களுக்கு ஒரு தாக்கீது அனுப்பியுள்ளது. (கரகோஷம்).

மேன்மைதங்கிய இந்திய, சோவியத் மக்களுக்கிடையே உள்ள நேச உறவை எங்களின் இந்த விஜயம் மேலும் பலப்படுத்தும் என்பதில் எங்களுக்கு ஐயம் கிடையாது. (கரகோஷம்) இந்திய மக்களும் சோவியத் மக்களும் சமாதானத்தையே விரும்புகிறார்கள்; அமைதி சூழ வாழ்ந்து, எதிர்கால சந்ததியினருக்கு இன்பத்தைத் தரும் பயனுள்ள வேலைகளைச் செய்யவே அவர்கள் விரும்புகிறார்கள். நம்முடைய நட்புறவு எவ்வளவு பலமுடையதாக இருக்கிறதோ, அந்த அளவிற்கு சமாதானம் பலப்படும்; அந்த அளவிற்கு சமாதானம் நீடித்துநிற்கும் என்ற நம்பிக்கையும் உறுதிப்படும். (மாபெரும் கரகோஷம்).

உங்களோடு சேர்ந்து நாங்களும் இருபதாம் நூற்றாண்டின் மக்கள் தான். இந்தச் சந்தர்ப்பத்தில் நமக்குச் சாதகமான, ஆனந்தத்தை அளிக்கக்கூடிய ஓர் சூழ்நிலை உருவாகிவருகின்றது. மக்களின் உணர்வு கணக்கிடமுடியாத அளவிற்கு வளர்ந்துள்ள கட்டத்தில் நாம் வாழ்கிறோம்; தங்களின் தலைவிதியை நிர்ணயிக்கும் பொறுப்பை மக்கள் தங்கள் கையில் எடுத்துக்கொண்டுள்ளனர்; தங்களின் போதகர்கள் என்று அம்மக்கள் நம்பும் தலைவர்களின் போதனைகளுக்குகந்தமுறையில் ஒரு புதிய வாழ்வை அவர்கள் உருவாக்க ஆரம்பித்துள்ளனர்.

உங்கள் நாட்டிற்குப் பெரிய சாதனைகளாற்றிய தலைசிறந்த தலைவர் ஒருவர் உங்களுக்கிருந்தார். மிகச் சிறந்த தேசபக்தர், மக்களின் நண்பர் என்று உங்கள் நாட்டில் பெரிதும் கௌரவிக்கப்படுகின்ற மகாத்மா காந்தியையே நான் குறிப்பிடுகிறேன். அவரைப்பற்றிய ஞாபகத்தை நாங்கள் பெரிதும் மதிக்கிறோம்; அதைப்போலவே அவரின் சிஷ்யரான திரு. ஜவஹர்லால் நேருவின் பணியையும் பெரிதும் மதிக்கிறோம். (கரகோஷம்).

சோவியத் மக்களாகிய நாங்கள் மேதை லெனினின் போதனைகளைப் பின்பற்றுகிறோம். அவர் சுதந்திரம், விடுதலை, இன்ப வாழ்வு ஆகியவற்றிற்கான பாதையை எங்களுக்கும், எல்லா மக்களுக்கும் காட்டினார்.

லெனினின் சிஷ்யர்களான நாங்கள் திரு. காந்தியின் தத்துவார்த்தக் கருத்துக்களை ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால் உங்களின் சுதந்திரத்திற்கான போராட்டத்தில், உங்கள் மக்களின் சமாதானக் கருத்துக்களை வளர்ப்பதற்குப் பெரிதும் உதவிசெய்த தலைசிறந்த தலைவர் அவர் என நாங்கள் கருதுகிறோம்.

முதலாளித்துவத் தளையைத் தூக்கி எறிந்த பின்புதான், சுதந்திரமான ஆட்சியை எங்களால் உருவாக்க முடிந்தது; எங்களின் வாழ்க்கை நிலையை உயர்த்தமுடிந்தது. இந்தியா சுதந்திரமடைந்த பின்புதான் புதிய சாத்தியப்பாடுகள் தோன்றியுள்ளன; வளர்ச்சி அடைவதற்கான புதிய சூழ்நிலை உருவாகியுள்ளது.

இந்த உலகிலுள்ள எல்லா மக்களும் சமாதானத்திற்காக முயற்சிக்கிறார்கள். தங்களின் எதிர்கால சந்ததியினருக்கு அமைதி சூழ்ந்த, ஆனந்த வாழ்வை நிச்சயப்படுத்த வேண்டுமென்பதில் அவர்கள் தீர்மானமானமுடிவிற்கு வந்துள்ளனர். ஆனால் எல்லா மக்களின் கடமைகளையும் பற்றி இன்று நாம் பேசவேண்டியதில்லை. நம் இருமக்களையும், மகத்தான இந்திய மக்களையும் மகத்தான சோவியத் மக்களையும் எதிர்நோக்கும் கடமையையமட்டும் நாம் குறிப்பிடலாம். இன்றே கூறுவோம்!

நம் இருநாடுகளுக்குமிடையே நீடித்த சமாதானம் நீடுழி வாழ்க!

இந்திய, சோவியத் மக்களுக்கிடையே, பிரிக்கமுடியாத நிரந்த நட்புறவு நீடுழி வாழ்க! (மாபெரும் கரகோஷம்)

## 1955 நவம்பர் 24-ல், பம்பாயில் இந்திய-சோவியத் கலாச்சாரக் கழகத்தினர் அளித்த வரவேற்பில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

நண்பர்களே!

எல்லாவற்றிற்கும் முன்பு நீங்கள் அளித்துள்ள மனமார்ந்த வரவேற்பிற்காக உங்கள் அனைவருக்கும் நன்றி கூறுகிறேன்.

உங்கள் நாட்டின் எல்லையை அணுகியபோது எங்கள் உள்ளங்கள் கட்டுமீறிய குதூகல உணர்ச்சியால் படபடத்தன. இந்திய மண்ணில், உங்கள் நாட்டின் தலைநகராம் டில்லிமா நகரில் நாங்கள் அடியெடுத்து வைத்தபோதும் நாங்கள் மெய்மறந்து பரவசமடைந்தோம்.

உங்கள் நாட்டையும், உங்கள் மக்களையும், உங்கள் அனைவரையும் நேரில் பார்த்துப் பரிச்சயம் செய்து கொள்வதற்காக நாங்கள் வந்திருக்கிறோம்.

உங்கள் நாட்டிற்கு நாங்கள் வந்து பல நாட்களாகி விட்டன. இந் நாட்களில் நாங்கள் சந்தித்த இந்திய மஹா ஜனங்களும், அவர்களது பிரதிநிதிகளும், இந்திய அதிகாரிகளும் எங்களை நேசத்துடனும் பாசத்துடனும் வரவேற்றனர். இன்று இங்கே நீங்களும் மிகுந்த அன்புடனும் நேசமுடனும் எங்களை வரவேற்றிருக்கிறீர்கள். இவை யாவும் எங்களது

உள்ளங்களைப் பெரிதும் நெகிழச் செய்துள்ளன. சொந்த வீட்டிலே, அத்தியந்த நண்பர்கள் மத்தியிலே தங்கியிருப்பது போன்ற உணர்வே எங்களுக்கு ஏற்படுகிறது. (பலத்த கரகோஷம்).

இப்பொழுது நாங்கள் இந்திய-சோவியத் கலாச்சாரச் கழகத்தின் விருந்தினர்களாக இங்கு வந்துள்ளோம். இக்கழகத்தின் பெயரே அதன் நோக்கங்கள் என்ன என்பதை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

சமீப வருடங்களில் மாண்புமிக்க இந்திய மக்களின் சார்பாக ஏராளமான தூதுகோஷ்டிகளும், இந்திய மக்களின் பிரதிநிதிகளான தனி நபர்களும் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்துள்ளனர். இதே போல் பல சோவியத் பிரமுகர்களும் இந்தியாவிற்கு விஜயம் செய்திருக்கின்றனர்.

விஞ்ஞானிகள், இந்திய எழுத்தாளர்கள், பொதுஜனப் பிரமுகர்கள், திரைப்பட ஊழியர்கள், நடிகர்கள், நடிகைகள், திரைப்பட டைரக்டர்கள் முதலிய பலர் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்திருக்கிறார்கள். அவர்களில் பலர் சோவியத் மக்களிடையில் இப்பொழுது மிகுந்த பிரபலமடைந்து விளங்குகின்றனர். முன்பே எங்கள் நாட்டில் சந்தித்த பலரை இங்கு நாங்கள் மறுபடியும், சந்தித்துள்ளோம். (கரகோஷம்)

அவர்களை சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது குறித்து நாங்கள் மனம் மகிழ்கிறோம். இக்கழகத்தின் பணிகளுக்கு வழிகாட்டிவரும் அதன் மதிப்பிற்குரிய தலைவர் டாக்டர் பாலிகா அவர்களுக்கு இன்று நாங்கள் நன்றிகூறக் கடமைப்பட்டவர்கள். சிறப்புடைய இந்தக் கூட்டத்திலே நாங்கள் கலந்து கொள்வதற்கு வாய்ப்பளித்துள்ள பம்பாய் ராஜ்யக் கவர்னர் மெஹதாப் அவர்களுக்கும் நாங்கள் நன்றிகூறக் கடமைப் பட்டவர்கள்.

இந்திய-சோவியத் கலாச்சாரக் கழகத்தின் நடவடிக்கைகள் மென் மேலும் விரிந்து படரவேண்டும் என்று வாழ்த்தி நாம் பானம் அருந்துவோமாக! கழகத்தின் தலைவர் டாக்டர் பாலிகாவும், பம்பாய் ராஜ்யக் கவர்னர் மெஹதாப் அவர்களும் நல்ல உடல் ஆரோக்கியத்துடன் நீடுழி வாழவேண்டும் என்று ஆசிகூறி பானம் அருந்துவோம், வாருங்கள்!

இந்திய-சோவியத் நட்புறவு நீடுழி வாழ்க! (நீடித்த கரகோஷம்)

# 1955 நவம்பர் 24-ல், பம்பாய் நகரில் இந்திய-சோவியத் கலாச்சாரக் கழகத்தினர் அளித்த வரவேற்பின்போது என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

நண்பர்களே !

நட்புறவிற்காக நிற்கும் ஒரு கழகத்தின் கூட்டத்திலே நாம் கூடியுள்ளோம் என்ற முறையில்தான் உங்களை நான் இவ்வாறு அழைக்கிறேன். இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையிலுள்ள நேசத் தொடர்புகளை வளர்த்து வலுப்படுத்தவேண்டும் என்ற குறிக்கோளையுடைய ஒரு கழகத்தின் கூட்டம் இது. (கரகோஷம்)

எனது நண்பர் புல்கானின் தெரிவித்துக் கொண்டதுபோல் நானும் இக்கழகத்தின் தலைவர் டாக்டர் பாலிகாவிற்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். உங்களுடைய உன்னத நகருக்கு எங்களை அன்புடன் அழைத்த பம்பாய் கவர்னர் மெஹதாப் அவர்கள் இக்கழகத்தின் பணியில் ஒத்துழைத்து வருகிறார்கள். அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். (கரகோஷம்)

மேலும் உங்கள் ராஜ்யத்தின் முதல் மந்திரி தேசாய் அவர்களுக்கும், எங்களை சந்திக்க வந்துள்ள உங்கள் அனைவருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். (நீடித்த கரகோஷம்)

சில சமயங்களில் நாம் பேச ஆரம்பிக்கும்போது, மிகுந்த உணர்ச்சி வயப்பட்டு, நாம் பேசவேண்டிய விஷயத்தை சரிவர எடுத்துரைப்பதற்கு ஏற்ற முறையில் பிரசங்கத்தைத் தொடங்க முடியாமற் போய்விடுகிறது. (உற்சாகமும் கரகோஷமும்) தேசங்களுக்கிடையில் நட்புறவு என்ற பொருள்பற்றி பேசுவதுதான் மிகவும் பொறுத்தமானது என்று எனக்குத் தோன்றுகிறது.

நட்புறவில் பலவகை உண்டு. மக்கள் ஆப்த நண்பர்களாக, அன்யோன்யமாக வாழ்வது ஒருவகை நட்புறவு. அடுத்தடுத்துள்ள அண்டை வீட்டுக்காரர்களாக இருந்தபோதிலும், ஒருவரை ஒருவர் தமது வீட்டுக்கு அழைத்து உபசரிக்காமல் இருப்பதும் உண்டு ; மற்றொருவகை "நட்புறவு" இது. (சிரிப்பும் கரகோஷமும்)

அரசுகளுக்கிடையிலுள்ள நட்புறவிலும் இதேபோல் பல ரகங்கள் உண்டு. சில அரசுகளுக்கிடையிலே உண்மையான நட்புறவு நிலவவில்லை. ஆயினும் இவை இதே பூமியில்தான் வாழவேண்டியிருக்கிறது. இவை விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் எப்படியாவது இவை யாவும் இந்தப் பூமியிலே தான் காலம் தள்ள வேண்டியிருக்கிறது.

இவ்வாறு வாழ்வதைத்தான் ஒத்துவாழ்தல் என்று அழைத்தார், எங்கள் மாபெரும் லெனின். ஒத்துவாழ்வது பற்றிய கோட்பாடு அளவு கடந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஒத்துவாழ்வது சாத்தியம்தானு என்று கேட்பவர்கள் இவ்வுலகில் உள்ளனர். நடைமுறையில் அரசுகள் ஒத்துவாழ்ந்துதான் வருகின்றன. எனவே இதைப்பற்றி எவ்வித சந்தேகத்திற்கும் இடமில்லை என்றே தோன்றுகிறது (நகைப்பு) இருப்பினும் இந்த சந்தேகம் இன்னமும் கிளப்பப்பட்டு வருகிறது.

நான் உங்களிடம் ஒன்று கூற விரும்புகிறேன். குழந்தை பிறக்க வேண்டுமா, வேண்டாமா என்பது தாயையும் தகப்பனையும் பொறுத்திருக்கிறது என்ருலும், அந்தக் குழந்தை எந்த நாளில் எத்தனை மணிக்குப் பிறக்கும் என்பது அவர்களைப் பொறுத்ததில்லை. அதேபோல் அந்தக் குழந்தை அவர்கள் விரும்புவதுபோல் இருக்குமா என்பதும் அவர்களைப் பொறுத்ததல்ல. (கூட்டத்தில் உற்சாகம்) நான் கேட்கிறேன்: சரித்திரத்தின் முன்னேற்றத்தைத் தடுக்க முயல்வது எவ்வாறு சாத்தியம்? புதிய சமூக அமைப்புகள் தோன்றுவதைத் தவிர்க்க முயல்வது எவ்வாறு சாத்தியம்? ஒவ்வொரு நாளும் காலையிலே சூரியன் உதிப்பதுபோல், காலாவதியான சமூக அமைப்புகள் மறைந்தொழிந்து அவற்றைவிட முன்னேற்றகரமான புதிய அமைப்புகள் பிறந்தே தீரும். (நீடித்த கரகோஷம்)

இவ்வாறு தான் எங்களுடைய சோவியத் அரசு பிறந்தது. உலகிலேயே தொழிலாளி வர்க்கத்தின் முதல் அரசு அது; தொழிலாளர்கள் விவசாயிகளது அரசு அது. (கரகோஷம்) இவ்வரசு பிறந்ததும் ஏனைய அரசுகள் கொட்டு மேளத்துடன் அதை வரவேற்க முன்வந்துவிடவில்லை. (நகைப்பு)

ரஷ்யாவிலிருந்த பழைய ஜாரிஸ்ட் அமைப்பு அழுகி நசித்துப்போய் இருந்ததால், அக்டோபர் புரட்சி அனேகமாக இரத்தம் சிந்தாத புரட்சியாகவே நடந்தேறியது. ஆனுல் அதன் பின்னர் எங்கள்முன் பல கேள்விகள் எழுப்பப்பட்டன. சோவியத் அரசு உதித்தெழுந்ததற்கு ஆதாரம் ஏது? தொழிலாளர்களும் விவசாயிகளும் அதிகாரத்தைத் தாமே மேற்கொள்வதற்கு அவர்களுக்கு உரிமை ஏது? என்றெல்லாம் கேள்விகள் எழுப்பப்பட்டன. முகாந்திரமின்றி, சொற்கள் வாயிலாக மட்டுமின்றி நேரடி நடவடிக்கைகளின் வாயிலாகவும் இக்கேள்விகள் எழுப்பப்பட்டன. (கூட்டத்தில் உற்சாகம்)

இவ்வாறு கேட்டவர்கள் வெறும் சொற்களுடன் நின்றுவிடாமல் இளம் சோவியத் அரசின்மீது தமது இராணுவப் படைகளை ஏவி விட்டார்கள் பிரெஞ்சுத் தலையீட்டுக்காரர்கள் ஒடெஸ்ஸாவிலும், ஆங்கிலேய கள் ஆர்க்கேஞ்சல்ஸ்கிலும், அமெரிக்கர்கள் விலாடிவாஸ்டாக்கிலும் வந்திறங்கினுர்கள். இவர்களைத் தொடர்ந்து ஜப்பானியரும் படையெடுத்து வந்தார்கள்.

இந்த நடவடிக்கைகளின் விளைவு என்ன? இதை எல்லோரும் அறிவர். இல்லத் தலைவி தனது வீட்டில் அடையும் குப்பையைக் கூட்டியெடுத்து வந்து வெளியே எறிவதுபோல், சோவியத் மக்கள் அன்னிய ஆக்கிரமிப்புப் படைகளை முறியடித்து, தம் நாட்டைவிட்டு விரட்டியடித்தனர். (உற்சாகமும் நீடித்த கரகோஷம்). ஆனால் சில அரசுகளுக்கு இந்த அனுபவம் போதுமானதாக இல்லை. எனவே அவை இதே நடவடிக்கைகளைத் திரும்பவும் மேற்கொள்ள முற்பட்டு இரண்டாவது உலக யுத்தத்தை மூட்டிவிட்டன. அவை ஹிட்லர் ஜெர்மனியின் அளவுகடந்த இராணுவப் படைகளை சோவியத் யூனியன்மீது கட்டவிழ்த்துவிட்டன.

இது எவ்வாறு முடிவுற்றது என்பதை அனைவரும் நன்கு அறிவர். சோவியத் யூனியன் மீண்டும் தனது பகைவர்களை முடியடித்தது. யுத்தத்தின்போது சோவியத் யூனியன் பலவீனம் அடையவில்லை என்பது மட்டுமின்றி, மேலும் அதிகமான பலத்தையும் பெற்றது. (கரகோஷம்). இன்று சோவியத் மக்கள், யுத்தத்தால் ஏற்பட்ட காயங்களை ஆற்றிக்கொண்டு, நாசமடைந்த தமது பொருளாதாரத்தைப் புனர் நிர்மாணம் செய்து யுத்த பிற்காலத்தின் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றியுள்ளதுடன், இப்பொழுது அவர்கள் யுத்த பிற்காலத்தின் இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றி வருகின்றனர். எங்கள் நாடு துரிதமாக வளர்ந்தோங்கி வருகிறது; அற்புதமாக மலர்ச்சியுற்ற மணம் கமழ்கிறது.

அக்டோபர் புரட்சியின் ஆரம்ப நாட்கள் என் நினைவுக்கு வருகின்றன. உள்நாட்டு யுத்தம் அலைமோதிய அவ்வாண்டுகள் என் நினைவுக்கு வருகின்றன. அன்று லெனின் ஒருவர்தான் எங்கள் நாட்டின் எதிர்காலத்தை தெட்டத் தெளிவாகப்பார்த்தார். புதிதாகத் தோன்றிய சோவியத் அரசு வருங்காலத்தில் எவ்வளவு மகத்தான அரசாகத் திகழப் போகிறது என்பதை அவர் ஒருவரால்தான் பார்க்க முடிந்தது.

இங்கே கூடியுள்ளவர்களில் மிகப் பெரும்பாலோர் அறிவுத்துறை ஊழியர்கள். அன்று எங்கள் நாட்டின் அறிவாளிப் பகுதியினர் புரட்சியை எவ்வாறு வரவேற்றனர் என்பது பற்றிய எனது நினைவுகளை உங்களுக்கு எடுத்துறைக்க விரும்புகிறேன். அறிவாளிப் பகுதியினரில் பலர் எங்கள் புரட்சியை வரவேற்றதுடன், நேர்மையான முறையில் இளம் சோவியத் அரசிற்கு சேவையும் புரிந்தனர். ஆனால் ஒரு சிலர் வேறுவிதமாக நடந்துகொண்டனர். இனி என்ன நடக்கப் போகிறதோ? தொழிலாளர்களும் விவசாயிகளும் அரசாங்கத்தை நடத்தவேண்டும் என்று லெனினும், கம்யூனிஸ்டுகளும் அறைகூவல் விடுத்துவிட்டார்களே! எழுத்தறிவில்லாத தொழிலாளர்களும், அவர்களைவிடப் படுமோசமான தற்குறிகளான விவசாயிகளும் தேசத்தின் தலைமைப் பீடத்திற்கு வந்துவிட்ட

னரே! ரஷ்யக் கலாச்சாரத்திற்கு என்ன கதி நேரப்போகிறதோ? இனி ரஷ்யக் கலையை ரசித்து மதிப்பிடக் கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்? புரட்சிக்கு முன்பு உலகப் புகழ்பெற்று விளங்கிய ரஷ்ய பாலே நாடகங்கள் இனி அழிந்தொழிந்துவிடும் என்பது வெளிப்படை! புரட்சிக்கு முன்பு ஓங்கி வளர்ந்து நின்ற ஓபெரா இசை நாடகக் கலையும் இனி சிதைந் தழியும்! இதே போல் இதர கலைகளும் அழிந்துபோய்விடும் என்பதில் ஐயமில்லை! ஏனெனில் கலைகளைப் பேணிப் பாதுகாக்கும் ரசிகர்கள் இனி இருக்கமாட்டார்கள்!—இவ்வாறெல்லாம் அவர்கள் புலம்பினார்கள்.

இந்தச் சந்தேகங்கள் யாவற்றையும் வாழ்க்கை பொய்யாக்கிவிட்டது. பழைய ரஷ்யாவின் கலாச்சாரத்தைவிட சோவியத் கலாச்சாரம் பன் மடங்கு வளர்ந்து ஒப்பிடற்கரிய உயர்நிலை அடைந்துவிட்டது. உங்க ளில் பலர் சோவியத் யூனியனுக்கு இவ்வருடம் விஜயம் செய்தவர்கள். புரட்சிக்கு முற்பட்ட ரஷ்யாவில் என்றுமே காணப்பட்டிராத அளவிற்கு இன்று சோவியத் யூனியனில் கலைகள் உயர் மதிப்பும் கவுரவமும் பெற்று விளங்குகின்றன என்பதை நீங்கள் நேரே கண்ணாரப் பார்த்துவிட்டுத் திரும்பியவர்கள். தொழிலாளர்களும் விவசாயிகளும் தமக்கிடையில் மிக வும் சிறந்தவர்களைப் பொறுக்கியெடுத்து, கல்லூரிகளுக்கும் பல்கலைக் கழகங்களுக்கும் அனுப்பிவைத்தனர். இவ்வாறு கல்லூரிகளுக்குச் செல் லாது தமது தொழிலைக் கவனித்து வந்தவர்களும்கூட கலாச்சார வளர்ச்சி பெற்று முன்னேறினார்கள்.

இது குறித்து நாங்கள் பெருமிதமடைகிறோம்.

எங்கள் எதிரிகள் விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி, சோவி யத் யூனியன் இருக்கத்தான் செய்கிறது. அது மாத்திரமா? வெற்றிகர மாக வளர்ந்து முன்னேறியும் வருகிறது அது. எங்கள் பொருளாதாரம் பலப்பட்டுவிட்டது; எங்கள் கலாச்சாரம் தழைத்து வளர்ந்து வருகிறது; எங்கள் மக்களின் சுபீட்சமும் பெருகி வருகிறது.

எங்கள் நாட்டை நசுக்கி அழிக்கும் நோக்கத்தை இன்னமும் கைவிடாதுள்ள அரசுகள்—எங்களிடம் பகைமை உணர்வு கொண்டுள்ள அரசுகள்—இருந்துவருகின்றன என்பதை நாங்கள் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் இருந்துவரும் சூழ்நிலைமைகளிலே, இவற்றையெல்லாம் நாங்கள் சாதித்தோம். எங்கள் நாட்டின் தற்காப் பிற்காக நாங்கள் ஏராளமான செல்வதாரங்களைச் செலவிட வேண்டி யிருந்துள்ளது. ஆயுதங்களுக்காகச் செலவிடப்படும் செல்வாதாரங்கள் யாவற்றையும் சமாதானபூர்வமான தேவைகளுக்கு மாத்திரம் எங்களால் செலவிட முடிந்திருந்தால், எங்கள் மக்களின் நல்வாழ்வு மேலும் பன் மடங்கு உயர்ந்திருக்கும்.

இதை எங்கள் எதிரிகள் புரிந்துகொண்டிருக்கிறார்கள். இதனால் தான் அன்னிய ராஜதந்திரிகள் சிலர் ஆயுதப் பரிஹரணத்தைப்பற்றி

இன்று திட்டவட்டமாகப் பேசுவதற்கு நடுங்குகிறார்கள். இதனால்தான் அவர்கள் சர்வதேச உறவுகளிலுள்ள கெடுபிடி நிலைமையை அகற்றுவதற்கு விரும்பவில்லை. இப்பொழுது தற்காப்பிற்காகச் செலவிடும் செல்வாதாரங்களை நாங்கள் சமாதான பூர்வமான நிர்மாணத்திற்குச் செலவிட ஆரம்பித்து விடுவோம் என்று அவர்கள் நடுங்குகிறார்கள்.

ஆயினும், எது எப்படி இருப்பினும், இன்றுள்ள நிலைமைகளிலுங் கூட, முதலாளித்துவ, சோஷலிஸ்ட் அமைப்புகளின் சமாதானபூர்வமான போட்டியின் விளைவாக நாங்கள்தான் வெற்றியடைவோம், சோஷலிஸம் தான் வெற்றியடையும் என்ற திடமான நம்பிக்கை எங்களுக்கு உண்டு. (நீடித்த கரகோஷம்).

இதே விஷயத்தை நான், முன்பொரு சமயத்தில், கிரெம்ளினில் நடந்த வரவேற்புகள் ஒன்றின்போது, பகிரங்கமாகக் கூறினேன் உடனே சோவியத் யூனியனின் அந்தரங்கத்தை குருஷேவ் தான் அறியாமலே வெளிப்படுத்திவிட்டார் என்றும், போல்ஷவிக்குகள் தமது அரசியல் திட்டங்களைக் கைவிடவில்லை என்பது அம்பலமாகிவிட்டது என்றும் முதலாளித்துவப் பத்திரிகை நிருபர்கள் உலகம் பூராவும் பறைசாற்றத் தொடங்கிவிட்டார்கள். ஆனால் உண்மை என்ன? எந்த அந்தரங்கத்தையும் நான் வெளிப்படுத்திவிடவில்லை. வாய் தவறி எதையும் நான் கூறிவிடவில்லை. எங்கள் கருத்தையும் ஆழ்ந்த நம்பிக்கையும்தான் நான் வெளிப்படுத்தினேன். மேதை லெனின் தெளிவுபடுத்திய எங்களுடைய அரசியல் கொள்கையை நாங்கள் ஒருபொழுதும் கைவிட்டதுமில்லை, ஒருபொழுதும் கைவிடப்போவதுமில்லை. எங்கள் அரசியல் திட்டத்தை நாங்கள் எப்பொழுதும் கைவிட்டதில்லை; எப்பொழுதும் கைவிடப் போவதுமில்லை. (நீடித்த கரகோஷம்)

முதுமொழி ஒன்று கூறுவதுபோல், பொன் மோதிரம் இருக்கும்போது, பித்தளை மோதிரத்திற்காக யாரும் அலையமாட்டார்கள்! (நகைப்பு)

நீண்ட நெடுங்காலமாகப் பின்தங்கிய நிலையிலிருந்த எங்கள் நாட்டை, தொழிற் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் மிகவும் வளர்ச்சியடைந்த முன்னேற்றம் மிகுந்த நாடுகளின் நிலைக்கு உயர்த்தியுள்ள ஒரு கொள்கையை நாங்கள் ஏன் கைவிடவேண்டும்? எதன் நிமித்தம், எந்தக் காரணத்திற்காகக் கைவிடவேண்டும்?

எனவேதான் நாங்கள், சோவியத் யூனியன் தனது அரசியல் திட்டத்தை மாற்றிக்கொள்ளாதா என்று கனவு கண்டுகொண்டிருக்கும் கனவான்களைப் பார்த்துச் சொல்கிறோம், "அத்தைக்கு மீசை முளைக்கும் வரையில் காத்துக்கொண்டிருங்கள்" என்று! அத்தைக்கு மீசை முளைக்குமா என்பதை நீங்கள் அறிவீர்கள். (கூட்டத்தில் உற்சாகம்).

எனவே ஒன்றே ஒன்றுதான் சாத்தியம். சமாதானமாக ஒருங்கே ஒத்து வாழ்வது ஒன்றுதான் சாத்தியம். சோஷலிஸ்ட் அமைப்பு, முதலாளித்துவ அமைப்பு ஆகிய இவ்விரு அமைப்புகளும் ஒத்துவாழ்வதைத் தவிர வேறு வழியே இல்லை.

முதலாளித்துவ அமைப்பு எனக்குப் பிடிப்பதில்லை. (கரகோஷம்). சமாதானபூர்வமாக ஒருங்கே ஒத்துவாழ்வதுபற்றி நான் பேசுகிறேன் என்றால், அதற்குக் காரணம் முதலாளித்துவ அமைப்பு தொடர்ந்து இருக்கவேண்டும் என்று நான் விரும்புகிறேன் என்பதல்ல; முதலாளித்துவ அமைப்பு இருந்துவருகிறது என்ற உண்மையை நான் அங்கீகரிக்கிறேன் என்பதே, அங்கீகரிக்காமல் இருக்கமுடியாது என்பதே, அதற்குக் காரணமாகும். (கூட்டத்தில் உற்சாகம்).

ஆனால் எங்கள் எதிரிகள், சோஷலிஸ்ட் அமைப்பு இருந்துவருகிறது என்ற உண்மைக்கு இணங்கிப்போக விரும்பவில்லை. சோஷலிஸ்ட் அரசை ஏற்படுத்தியது நாங்கள் மாத்திரமல்ல; இதர பல நாடுகளும் இதே பாதையை மேற்கொண்டுவிட்டன. அப்படியிருந்தாலும் எங்கள் எதிரிகளின் நிலை மேற்கூறியதாகவே இருந்து வருகிறது. மாபெரும் நமது நண்பர்களான சீன மக்கள் சோஷலிஸத்தை நிர்மாணித்துக் கொண்டு இருக்கின்றனர். இந்த அரசை எவரும் உதாசீனம் செய்துவிட முடியாது. இந்த அரசை யாரும் பார்க்கத்தவறவும் முடியாது. சோவியத் யூனியனுடன் ஒன்றுபட்டு நிற்கும் ஐரோப்பிய, ஆசிய நாடுகள் பல சோஷலிஸத்தை நிர்மாணித்துக்கொண்டிருக்கின்றன.

இந்தியாவும் சோஷலிஸப் பாதையை மேற்கொண்டுள்ளதென இந்தியப் பிரதமர் நேரு அறிவித்தார். (பலத்த கரகோஷம்) மகிழ்ச்சிக்குரியது இது. சோஷலிஸத்தை நாங்கள் வேறு வகையில் புரிந்து கொள்கிறோம் என்பது உண்மையே. ஆயினும் இத்தகைய அறிவிப்பையும் இத்தகைய போக்கையும் நாங்கள் வரவேற்கிறோம்.

எனவே சோஷலிஸ்ட் அமைப்பு இருந்து தான் வருகிறது. இதற்கு அது யாரிடமிருந்தும் அனுமதி பெறவேண்டிய தேவையில்லை. (உற்சாகம், கரகோஷம்) நாங்கள் இருந்து வருகிறோம் என்பது மட்டுமல்ல, எங்களை நாங்கள் தற்காத்துக்கொள்ளும் சக்தியுடையவர்களாகவும் இருக்கிறோம். ஒத்துவாழ்வதற்கு இடமளிக்குமாறு வேண்டுகோள் விடுப்பதுடன் நின்றிருந்தால் நாங்கள் வெகு காலத்திற்கு முன்பே அழிக்கப்பட்டிருப்போம்.

எங்களுடைய எதிரிகள் எங்களை அழித்துவிட வேண்டும் என்று எவ்வளவு தான் விரும்பினாலும், அது நடைபெறப் போவதில்லை; எங்களை அழிப்பதற்கான சக்தி அவர்களிடமில்லை. (நீடித்த கரகோஷம்)

எனவே எவரும் கேட்டாலும் சரி, கேட்காவிட்டாலும் சரி, விரும்பினுலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி, முதலாளித்துவ அரசுகளும் சோஷலிஸ்ட் அரசுகளும் இதே பூமியில் தான் அடுத்தடுத்து வாழ வேண்டியிருக்கிறது.

நாங்கள் முதலாளித்துவ நாடுகளைப் பார்த்து கூறுகிருேம்—எங்களை உங்களுக்குப் பிடிக்கவில்லையா ? அப்படியானுல் எங்களை நீங்கள் விருந்தினர்களாக அழைத்து உபசரிக்க வேண்டாம். உங்கள் விருந்துபசாரம் இல்லாமல் எங்களால் வாழமுடியும்.

இன்றைய உலகின் நிலைமை இதுதான்.

எல்லா அரசுகளுக்குமிடையிலும் பரஸ்பர உறவுகள் வளருவதற்கு உதவி புரியக்கூடிய முறையில் அரசுகள் ஒத்துவாழ வேண்டுமென நாங்கள் கூறுகிருேம். குறிப்பாக எல்லா நாடுகளுடனும் வர்த்தகம் செய்ய நாங்கள் விரும்புகிருேம். அவர்கள் எங்களிடமிருந்து பொருள்கள் வாங்கட்டும். நாங்களும் அவர்களிடமிருந்து பொருள்களை வாங்குவோம்.

வர்த்தகத்தில் தற்பொழுது அவர்கள் எங்களுக்கு விரோதமாகப் பாரபட்சம் காட்ட முயலுகின்றனர். முக்கியப் பொருள்களில் அவர்கள் எங்களுடன் வர்த்தகம் செய்ய விரும்பவில்லை. இப்படியிருந்தும் எங்கள் நாடு வளர்ந்து வலுவடைந்து வருகிறது. மேலும் உங்களிடம் ஒரு விஷயத்தை இரகசியமாகச் சொல்கிறேன். அவர்களது பாரபட்சத்திஞல் ஏற்பட்ட பலன் என்னவெனில், முதலாளிகள் எங்களிடம் விற்பதற்கு மறுத்துவரும் பொருள்களை நாங்களே எங்கள் முழு சக்தியையும் திரட்டி உற்பத்தி செய்யவேண்டுமென நாங்கள் தூண்டிவிடப்பட்டோம். இப்பொழுது இப்பொருட்களை நாங்களே உற்பத்தி செய்கிருேம். மேலும் முன்னேறிச் சென்று வெற்றி பெற்று வருகிருேம். இவ்வாறு, வர்த்தகப் பாரபட்சத்தைக் கையாளும் கொள்கை எங்களுக்கு உதவி புரிந்ததேயன்றி தீங்கிழைத்துவிடவில்லை.

அரசுகளுக்கிடையே கலாச்சார உறவுகளை வளர்க்க வேண்டுமென நாங்கள் விரும்புகிருேம். முதலாளித்துவ நாடுகளிலிருந்து மேலும் அதிகமான மக்கள் எங்கள் நாட்டிற்கும், இதேபோல் எங்கள் மக்கள் அவர்களின் நாட்டிற்கும் விஜயம் செய்துவரவேண்டும் என்று நாங்கள் விரும்புகிருேம்.

ஏதோ ஒருவித "இரும்புத் திரையை" நாங்கள் ஏற்படுத்தியிருப்பதாக எங்கள் மீது குற்றம் சாட்டப்படுகிறது. ஆனல் இந்த ஆண்டில் மாத்திரம் அமெரிக்க செனட்டர்களும், அமெரிக்க விஞ்ஞானிகளும், பத்திரிகையாளர்களின் பிரதிநிதிகளும், அமெரிக்க, ஆங்கில விவசாயிகளும் ஏராளமான எண்ணிக்கையில் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்தனர். இரண்டாவது உலக யுத்தத்தில் போரிட்ட அமெரிக்க இராணுவ வீரர்களும், இவ்வாண்டு வந்திருந்தனர்.

எங்கள் நாட்டிற்கு விஜயம் செய்ய விரும்புவோர் யாவருக்கும் நாங்கள் பயண அனுமதிச் சீட்டு கொடுக்க மறுப்பதில்லை.

நோவாவின் தோணிபற்றிய பைபிள் கதை உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். நோவா தனது தோணிக்கு மிருகங்களைப் பொறுக்கியெடுத்தபோது, சுத்தமான மிருகங்களில் ஏழு ஜதையும் அசுத்தமான மிருகங்களில் ஏழு ஜதையும் எடுத்துவந்தான். இதேபோல் அடிக்கடி எங்கள் நாட்டிற்கு அசுத்தமானவர்களுங்கூட வந்தார்கள் என்று நான் கூறலாம். ஆனால் நாங்கள் பயப்படவில்லை; யாவரையும் வரவேற்கிறோம். (உற்சாகம்)

அசுத்தமானவர்கள் எங்களிடம் வருவதால் நாங்களும் அசுத்தமடைந்துவிடப் போவதில்லை என்பது எங்களுக்குத் தெரியும்.

எனவே நாம் விரும்பும் வேகத்தில் சர்வதேசக்கலாச்சாரக் கூட்டுறவு வளராமலிருப்பதற்கு பொறுப்பாளி நாங்கள் அல்லவென்பது நன்கு புலனாகிறது.

சமாதானமாக ஒத்து வாழ்வதுபற்றிய சில பிரச்னைகள் இவை. சமாதானமாக ஒத்துவாழ்வதற்கு ஒரு உதாரணம் கூறவேண்டுமானால், நாங்கள் இந்தியாவுடன் கொண்டுள்ள உறவுகளைக் கூறலாம் என்று நினைக்கிறேன். நாம் இருவரும் ஒத்துவாழ்வதுடன் நின்றுவிடவில்லை; பல பிரச்னைகளில் நமது கருத்துக்கள் வேறுபட்டிருந்தபோதிலும், நாம் நண்பர்களாகவும் திகழ்கிறோம். சமாதானத்திற்கான நமது பொதுப் போராட்டமே இந்த நட்பிற்கு அடிப்படை. எனவேதான், இத்திசையில் நமது முயற்சிகளை நாம் தளர்த்தக்கூடாது. சமாதானமாக ஒத்து வாழ்வதற்குத் தடையாக உள்ள சகலவற்றையும் நாம் தொடர்ந்து தகர்த்தெறிய வேண்டும். அரசுகள் சமாதானமாக ஒத்து வாழ்வதற்கு வகை செய்யும் சகலவற்றையும் நாம் பலப்படுத்துவோமாக!

இது சம்பந்தமாக, ஜெனீவா சந்திப்புகள் மிகவும் குறைவான வெற்றிகளையே அளித்துள்ளன; எள்ளளவு வெற்றிகளையே அளித்துள்ளன என்றுதான் கூறவேண்டும். நான்கு வல்லரசுகளின் அயல் நாட்டு மந்திரிகள் மகாநாடு சமீபத்தில்தான் முடிவுற்றது எதிர்பார்த்த பலன்களை அளிக்கவில்லை அது. ஆனால் இதற்காக நாங்கள் நம்பிக்கையை இழந்து மனம் பதறவில்லை. ஏனெனில் பிரச்னைகள் தீர்க்கப்படுவதற்கு இன்னும் காலம் வரவில்லை; பக்குவ நிலைமை ஏற்படவில்லை; எங்களுடைய கூட்டாளிகள் "ஆயுதபலத்தின் உச்சிமீதிருந்துகொண்டு" எங்களுடன் பேச்சுவார்த்தை நடத்தும் மனப்பான்மையை இன்னமும் கைவிடவில்லை.

"ஆயுத பலத்தின் உச்சிமீதிருந்து" எங்களுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தப்போகிறவர்கள் ஒருவித நன்மையும் அடையமாட்டார்கள் என்று நான் மீண்டும் ஒருமுறை எச்சரிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

ஒட்டுமொத்தமாகப் பார்த்தால், ஜெனீவா மகாநாட்டில் எழுப்பப் பட்ட பிரச்னைகளுக்குத் தீர்வு காணவேண்டுமானால் மேலும் நாம் காத்தி ருக்கவேண்டியது அவசியம் என்பது வெளிப்படுகிறது. நாங்கள் காத்தி ருக்க தயாராக இருக்கிறோம்; இது ஒன்றும் பிரமாதமில்லை. வாடைக் காற்றில் வாடுவது எங்கள் முகமல்ல. தக்க பருவம் வரும்வரை நாங்கள் காத்திருப்போம். இப்பிரச்னைகள் மக்களின் நலன்களுக்கு உகந்தவாறு தீர்க்கப்படும் நாள் வரும்வரையில் நாங்கள் காத்திருப் போம்.

ஜெனிவா மகாநாட்டின் முடிவுகளை மதிப்பீடு செய்து பல ராஜ தந்திரிகள் பேசியுள்ளதை, இந்தியாவில் எனது சுற்றுப் பிரயாணத்திற் கிடையில் நான் படித்தேன். ஜெனீவா மகாநாட்டில் பங்கெடுத்துக் கொண்டவர்களின் பிரசங்கங்கள் தணிவான முறையில் இருப்பது குறித்து நான் திருப்தி அடைகிறேன். சர்வதேசக் கெடுபிடி நிலையை மேலும் தீவிரமடையச் செய்யும் முறையில் அவர்கள் உணர்ச்சிவயப்பட்டு வாய்க்கு வந்தபடி பேச விரும்பவில்லை என்பது விளங்குகிறது.

நான் எனது சொற்பொழிவை முடித்துக் கொள்ளப் போகிறேன். ஒத்து வாழ்ந்துதான் ஆகவேண்டும். எங்கள் கோரிக்கையோ, வேண்டு கோளோ அல்ல இது. முதலாளித்துவ அரசுகளைப் போலவே நாங் களும் இதே பூமியில்தான் இருந்து வருகிறோம். யாரும் எங்களைப் பெயர்த்து, செவ்வாய் கிரகத்திற்குக் கொண்டுபோய் வைத்துவிட முடி யாது. விஞ்ஞானிகள்கூட, இன்னமும் இதற்கு வழி கண்டுபிடித்து விடவில்லை. முதலாளித்துவ அரசுகளும் இந்தப் பூமியை விட்டகன்று செவ்வாய் கிரகத்தில் குடியேறிவிட விரும்பவில்லை என்பது வெளிப்படை. (கூட்டத்தில் உற்சாகம்). எனவே நாம் யாவரும் இதே பூமியில் தான் வாழவேண்டியுள்ளது. இதே பூமியில் வாழ்வது என்றால் நாம் ஒத்து வாழ்வதையன்றி வேறு வழியில்லை.

இந்நிலைமைகளில், ஆக்கிரமிப்பு சக்திகள் ஒரு புதிய யுத்தத்தை ஆரம்பித்து விடாதபடி தடுத்து நிறுத்தியாக வேண்டும்; இதுவே நம் முன்னுள்ள கடமை.

சமாதானமாக ஒத்துவாழ்வதென்ற பிரச்னைகளுக்குத் தீர்வு காண் பதற்கு உங்கள் கழகம் பணியாற்றி வருகிறது. ஒருவரை ஒருவர் எவ் வளவுக்கு எவ்வளவு புரிந்துகொள்ளுகிறோமோ, ஒருவருடன் ஒருவர் எவ் வளவு தூரம் ஒத்துழைக்கிறோமோ, ஒருவருக்கு ஒருவர் எவ்வளவு அதிக மாக உதவி செய்துகொள்ளுகிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவு சமா தான சக்திகள் பலமடைந்து வளரும்; அவ்வளவிற்கு அவ்வளவு ஆக்கிரமிப்பு சக்திகள் தடுத்து நிறுத்தப்படும். ஆக்கிரமிப்பாளர்கள் அவர்களுடைய ஆக்கிரமிப்புக் குணத்தை விட்டுவிடுவார்கள் என்று

எதிர்பார்ப்பது சாத்தியமல்ல. ஆக்கிரமிப்பாளர்கள் அவர்களுக்கு இயல்பான நடவடிக்கைகளில் இறங்க முடியாதபடி அவர்களைத் தடுத்து நிறுத்துவது தான் சாத்தியமானது. உலக மக்கள் செயல் வன்மையுடன் சமாதானத் திற்காகப் போராடுவது தான் இதற்கான வழி.

இக்கூட்டத்திலுள்ள எல்லோருக்கும், இக்குறிக்கோளுக்காக அயராது பணியாற்றிவரும் ஒவ்வொருவருக்கும் நல்வாழ்த்துக்கூறி நாம் பானம் அருந்துவோமாக!

நண்பர்களே! நட்புறவிற்கும், உங்கள் உடல் நலத்திற்கும் ஆசி கூறி, பானம் அருந்துவோமாக! (பலத்த நீடித்த கரகோஷம்)

## பூனு, தேசிய இராணுவப்பயிற்சிக் கழகத்தில், 1955, நவம்பர் 25-ம் தேதி என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

கனவான்களே!
தளபதிகளே, அதிகாரிகளே, இராணுவப் பயிற்சி மாணவர்களே,

முதலில், குருஷேவ் சார்பாகவும், என் சார்பாகவும், எங்களுடன் வந்துள்ள நண்பர்களின் சார்பாகவும், சோவியத் இராணுவத்தின் சார்பாகவும், சோவியத் மக்களின் சார்பாகவும் இதயபூர்வமான, அன்பு கலந்த வாழ்த்துக்களை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நீங்கள் எங்களுக்கு அளித்துள்ள சிறந்த வரவேற்பிற்கு எங்களின் நன்றி.

எங்கள் நாட்டிற்கும் இந்தியாவுக்குமிடையே நீண்ட நெடுங்காலமாக நேசபூர்வமான அண்டை நாட்டுறவு இருந்து வந்துள்ளது. இந்தியாவிற்கும் சோவியத்யூனியனுக்குமிடையே உள்ள உறவு என்றைக்குமே எந்த நெருக்கடிக்கும் ஆளானதில்லை. நம் உறவின் வரலாற்றிலேயே ஆயுதந்தாங்கிய போருக்கான பயமுறுத்தல்கள் இரு பக்கத்திலிருந்தும் ஏற்பட்டது கிடையாது. பல்வேறு தேசிய இனங்களைச் சேர்ந்த இந்திய மக்கள் சுறுசுறுப்பும், திறமையும் உடையவர்கள் ; தேச சுதந்திரம், விடுதலைக்கான அவர்களின் ஆர்வம் மிகவும் உறுதியானது ; சமாதானத்தின் பால் அவர்கள் கொண்டுள்ள அன்பு மாற்றமுடியாதது. எங்கள் நாட்டு மக்கள் இவற்றையெல்லாம் பெரிதும் கௌரவிக்கின்றனர் ; உங்கள்பால் அவர்களுக்கு ஆழ்ந்த அனுதாபமும் உண்டு.

மாறுபட்ட சமூக, பொருளாதார அமைப்புகளுடைய நாடுகள் யாவும் சமாதான பூர்வமான சகவாழ்வு வாழவேண்டுமென்ற மகத்தான கோட்பாடுதான் சோவியத் யூனியனின் வெளிநாட்டுக் கொள்கையின் பிரதான கோட்பாடாகும். எங்கள் போதகர் லெனின் பிரகடனப்படுத்திய இந்தக் கோட்பாடுகளை உறுதியாகவும், தளராமலும் நாங்கள் பின்பற்றி வருகிறோம். மக்களுக்குச் சொல்லொணுத் துயரங்களை இழைக்கும் யுத்தங்களைத் தடுத்தி நிறுத்தி, சமாதானத்தைப் பாதுகாத்துப் பலப்படுத்த வேண்டும் என்ற சகல மக்களின் அபிலாஷைக்குகந்த ஒரு கொள்கையையே சோவியத் யூனியன் என்றும் கடைப்பிடித்து வந்துள்ளது.

பிரதேச உரிமையையும், அரசுரிமையையும் பரஸ்பரம் கௌரவிப்பது; அனுக்கிரமிப்பு; பொருளாதார, அரசியல், தத்துவ வார்த்த ரீதியான எக்காரணத்தை முன்னிட்டும் ஒருவர், மற்றொருவருடைய உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாமலிருத்தல்; சமத்துவம், பரஸ்பரம் சாதகம்; சமாதானபூர்வமான சகவாழ்வு என்ற கோட்பாடுகளையே இந்திய சோவியத் உறவு அடிப்படையாகக் கொண்டுள்ளது.

மிகச் சிறந்த இராணுவ ஸ்தாபனமான, தேசிய இராணுவப் பயிற்சிக்கழகத்திற்கு வந்து பார்க்கும் வாய்ப்பு கிடைத்ததற்காக நாங்கள் பெரிதும் மகிழ்ச்சியடைகிறோம்.

இந்திய, சோவியத் மக்கள் சமாதானபூர்வமான ஆக்க வேலைகளில் ஈடுபட்டுள்ளனர்; அவர்கள் பெரும் யுத்தம் ஏற்படுவதை விரும்பவில்லை. சமாதானத்திற்கும், முன்னேற்றத்திற்கும் இந்திய மக்கள் செய்யும் மகோன்னத முயற்சியை சோவியத் மக்கள் என்றும் ஆதரிப்பார்கள் என்பதை உங்களுக்கு உறுதிகூற விரும்புகிறேன்.

இக்கழகத்தின் தளபதியான நீங்கள், உங்களின் சொற்பொழிவில், சோவியத் யூனியனின் மார்ஷலான ஜி. கே. ஜுக்காவைப்பற்றி அன்பாகவும், நன்ருகவும் பேசினீர்கள். நீங்கள் அவரை ஒரு சிறந்த இராணுவத் தலைவர் என வர்ணித்தீர்கள். சோவியத் இராணுவப் பயிற்சிக் கழகத்தின் மாணவர்களுக்கும், அதிகாரிகளுக்கும், உங்கள் வாழ்த்துக்களையும், நல்லாசிகளையும் கூறுமாறு சொன்னீர்கள். எங்கள் பயிற்சிக் கழக அதிகாரிகளுக்கும் மாணவர்களுக்கும் நீங்கள் அளித்துள்ள வாழ்த்துக்களுக்கும், நல்லாசிகளுக்கும். அன்புகனிந்த வார்த்தைகளுக்கும் நாங்கள் பெரிதும் நன்றி செலுத்துகிறோம். உங்களின் வேண்டுகோளைப் பேரன்புடன் நிறைவேற்றுவோம். உங்களின் அச்செய்தியை அனுப்ப வேண்டிய விலாசத்திற்கு அனுப்பிவிடுகிறோம்.

எங்களுக்கு நீங்கள் அளித்த அன்பான, நேசபூர்வ வரவேற்பிற்கும், எங்களுக்கு நீங்கள் செலுத்திய ஆழ்ந்த அக்கறைக்கும், கவனத்திற்கும் மீண்டும் எங்களுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இக்கழகத்தின் தளபதிக்கும், ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும்,

அவர்கள் பணியில் மேலும் பல வெற்றிகள் பெற எங்கள் வாழ்த்துக்களை தெரிவித்துக்கொள்கிறோம்.

கனவான்களே, இந்தியாவின் தேசிய இராணுவப் பயிற்சிக் கழகம் மேலும் பல வெற்றிகள் பெறவேண்டுமென வாழ்த்திப் பானமருந்த என்னை அனுமதிக்க வேண்டுகிறேன்!

இந்தியக் குடியரசின் ஜனாதிபதியின் உடல் நலம் நன்றாயிருக்க வேண்டுமெனும் என் அவாவைக்கூறியும் இப்பானக் கோப்பையை மரியாதைக்காக உயர்த்துகிறேன்!

# 1955 நவம்பர் 25-ம் தேதி பூனா நகர சபை அளித்த வரவேற்பில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

திரு. மேயர் அவர்களே, அன்புள்ள நண்பர்களே,

உங்களுக்கும், உங்கள் மூலமாக, பூனா நகர மக்களுக்கும், சோவியத் மக்களின் இதய பூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளு கிறேன்.

உங்கள் நகரத்திற்கு மகத்தான சரித்திரப் பரம்பரை உண்டு. அன்னிய ஆக்கிரமிப்பாளர்களுக்கு எதிராக தங்கள் தாயகத்தைத் தைரியமுடனும், வீரமுடனும் விடாப்பிடியாகப் பாதுகாத்த மராட்டியர்கள் தலைநகராக அது சென்ற காலத்திலே திகழ்ந்தது. இங்குதான், பூனாவுக்கு மிக அருகாமையில் தான் உங்களின் வீரமிக்க இராணுவ வீரர்கள் காலனி வாதிகளை எதிர்த்துப் போரிட்டார்கள். உங்கள் மூதாதையர்கள் வீணாக ரத்தத்தைச் சிந்தவில்லை. அவர்களின் வீரச் செயல்கள் இந்திய மக்களின் தேச விடுதலைப் போராட்ட காலத்தில் சிறந்த ஆதர்சங்களாக விளங்கின. உங்களின் வீரமிக்க முன்னோர்களின் அபிலாஷைகள் நிறைவேறிவிட்டன; இந்தியா ஒரு சுதந்திர அரசாகியுள்ளது.

இன்று இந்திய மக்கள் சரித்திரப் பிரசித்தி பெற்ற பூனா நகரை, விஞ்ஞான அறிவு வளர்ச்சியின் கேந்திரமாகப் படிப்படியாக மாற்றிவருகிறார்கள். பல்கலைக் கழகம், கல்லூரிகள், வானசாஸ்திர நிலையம், தேசியக் கழகம், ஜல-மின்சார ஆராய்ச்சி நிலையம் ஆகியவை எல்லாம் மிக உயர்ந்த கலாச்சாரத்தின், கல்வியின் உறைவிடமாகும்.

மராட்டியர்களின் மகோன்னத சுதந்திர வாஞ்சையுள்ள பரம்பரை பூனுவில் என்றுமே வாழட்டும்; மராட்டிய மக்களின் நவீன கலாச்சாரம் வளர்ந்து ஓங்கட்டும்!

சோவியத் இந்திய மக்களுக்கிடையேயுள்ள நட்பு பெருகி வளரட்டும்! "நீண்ட கால நிரந்தர சமாதானத்திற்கும், எல்லா மக்களிடையேயும் நட்புறவு ஏற்படுத்தவும் நாம் இருவரும் சேர்ந்து போராடுவோமாக!

உங்களது அற்புத நகரத்தில் இன்று நீங்கள் எங்களுக்கு அளித்த அன்பான வரவேற்பிற்கு எங்களின் நன்றி. (நீண்ட மாபெரும் கரகோஷம்)

## 1955 நவர்பர் 26-ல்
## பங்களூரில் நகரசபை வரவேற்பு உபசாரத்தின்போது
## என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

நண்பர்களே! சகோதரர்களே!

உங்களுடைய மைசூர் ராஜ்ஜியத்திற்கும், சிறப்புடைய பங்களூர் நகருக்கும் விஜயம் செய்யும் வாய்ப்பை அளித்ததற்காக, எனது சார்பிலும், எனது நண்பர் நிகொலாய் அலெக்ஸாண்டிரோவிச் புல்கானின் சார்பிலும், உங்கள் மாண்புமிக்க நாட்டிற்கு எங்களுடன் விஜயம் செய்துள்ள எல்லா நண்பர்களின் சார்பிலும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். (கரகோஷம்)

மைசூர் ராஜப்பிரமுகர் திரு ஜெயச்சாமராஜ உடையார்பகதூர் அவர்களுக்கும், முதன் மந்திரி கே. ஹனுமந்தையா அவர்களுக்கும், எங்கள் சோவியத் நாட்டையும் அதன் சாதனைகளையும் மிகவும் பாராட்டிப் பேசிய நகர மேயர் பி. தீனதயாளநாயுடு அவர்களுக்கும் எனது நன்றியைக் கூறுகிறேன். (கரகோஷம்)

உங்களுடைய மகத்தான நாட்டிற்கு நாங்கள் வந்துசேர்ந்து சில நாட்கள் ஆகின்றன. தலைதெறிக்கும் வேகத்தில் சுற்றுப்பிரயாணம் செய்து இந்தியா நாடுபற்றி மிகத் துரிதமாக அறிமுகம் பெற்று வருகிறோம். இந்த வேகத்தின் காரணமாக நாங்கள் காலம், நேரத்தைகூட மறந்துவிட்டோம். உதாரணமாக இன்று சனிக்கிழமையா அல்லது ஞாயிற்றுக்கிழமையா என்பதுபற்றி, புல்கானினுக்கும் எங்களுக்கும் ஒரு சர்ச்சையே நடந்துவிட்டது. (நகைப்பு)

நாங்கள் இந்தியாவில் இதுவரை தங்கியிருந்த நாட்களில் பலவற்றைப் பார்த்தோம், பல விஷயங்களை அறிந்துகொண்டோம். எங்கள் மனதில் ஏராளமான விஷயங்கள் பதிந்துவிட்டன. இன்று உங்களுடைய கண்கவர்ந்த நகரைச்சுற்றி வந்தோம். தெருக்களெங்கும் வயது வந்தவர்களும் சிறுவர், சிறுமிகளும் எவ்வளவு ஏராளமாகக் கூடியிருந்தனர்! சோவியத் மக்களிடம் இந்திய மக்கள் கொண்டுள்ள அன்பையும் நேசவுணர்வையும் வெளிப்படுத்திய அவர்களின் வாழ்த்துக் கோஷங்களையும் ஆரவாரத்தையும் என்னென்று சொல்வேன்! (கரகோஷம்)

இந்திய மக்கள் காட்டியுள்ள இந்த அன்பும் நேசவுணர்வும் தனிப்பட்ட முறையிலே எனக்கும், எனது நண்பர் நிகொலாய் அலெக்ஸாண்டிரோவிச் அவர்களுக்கும், எங்களுடன் வந்துள்ள இதர நண்பர்களுக்கும் காட்டப்பட்டுள்ள அன்பாகும் என்று நாங்கள் நினைத்தால், அது நாங்கள் சிறுமதி உடையவர்கள் என்பதையே காட்டும். உண்மையில் இந்திய மக்கள் காட்டியுள்ள அன்பும் மரியாதையும் சோவியத் மக்களுக்கே ஆகும்.

மகத்தான இந்திய மக்கள் தெரிவிக்கும் இத்தகைய அபரிமித அன்பிற்கும், இத்தகைய ஆர்வமிகுந்த நன்றிக்கும் சோவியத் மக்கள் அருகதையுடையவர்களாகியது எங்ஙனம்?

புதிய அஸ்திவாரங்களின்மீது நிறுவப்பெற்ற சோவியத் அரசு உதயமானதை முதலாளித்துவ உலகம் நட்புணர்வுடன் நோக்கவில்லை; ஏன், விரோத மனப்பான்மையுடன் நோக்கியது என்றுகூடக் கூறலாம். எனவேதான், மேற்கூறிய கேள்வியை நான் உங்கள்முன் வைக்கிறேன். முதலாளித்துவ உலகின் போக்கு இவ்வாறு இருந்தும், எங்கள் அரசு இடையறாது வளர்ந்தோங்கியது என்பதை அனைவரும் அறிவர்.

சோவியத் அரசு நிறுவப்பட்ட பிறகு நாங்கள் நீண்டதோர் பாதையைக் கடந்துவந்துள்ளோம். சமாதானப் போராட்டத்தின் பதாகையை, எங்கள் நாட்டில் ஒரு புதிய சமூகத்தை நிர்மாணிக்கும் போராட்டத்தின் பதாகையை மேதை லெனினும், அவரால் சிருஷ்டிக்கப்பட்ட கம்யூனிஸ்ட் கட்சியும், சோவியத் மக்கள் அனைவருமே உயர்த்திப் பிடித்தனர். சோவியத் ஆட்சியின் ஆரம்ப நாட்களில், எங்கள் நாடு நாசமடைந்து ஏழ்மையுற்று இருந்தது. தொழில்கள் சீர்குலைந்திருந்தன. ஜனத்தொகையில் பெரும்பான்மையோர் எழுதப்படிக்கத் தெரியாதவர்களாக இருந்தனர். இத்தகைய நிலைமைகளில், புதிதாகத் தோன்றிய தொழிலாளர்கள் - விவசாயிகளது அரசின் மகத்தான எதிர்காலத்தை முன்கூட்டியே கணித்தறிந்து, எங்கள் நாட்டு மக்கள் அனைவருக்கும் தலைமை தாங்கித் தன்னுடன் அழைத்துச் செல்வதற்கு லெனினது தெளிவான பார்வையும், அஞ்சா நெஞ்சமும், தூரதிருஷ்டியும் தேவைப்பட்டன.

அச்சமயத்தில் எங்கள் எதிரிகள், ஒரு ஆண்டு முடிவதற்குள் சோவியத் அரசு சிதைவுறும் என்றும், லெனினும் போல்ஷ்விக்குகளும் ஒன்றையும் சாதிக்கப்போவதில்லை ஏன்றும் கூறினார்கள்.

இப்பொழுது இதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் ? இந்த கனவான்களைத் தீர்க்கதரிசிகள் என்று கூறமுடியுமா ? (நகைப்பு)

சோவியத் நாடு சக்திவாய்ந்த இயந்திரத் தொழிலையும், மிகவும் வளர்ச்சியடைந்த பொருளாதாரத்தையும் கொண்ட ஒரு வன்மைமிக்க அரசாக வளர்ச்சியடைந்ததேயன்றி, சிதைந்து சின்னாபின்னமடைய வில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள்.

சோவியத் அரசின் பலம் எதில் அடங்கியிருக்கிறது ? எல்லா முதலாளித்துவ நாடுகளின் எதிர்ப்புக்கிடையில் சோவியத் அரசு தோன்றியது என்பதை நீங்கள் பார்க்க வேண்டும். யாரிடமிருந்தும் எவ்வித உதவியோ, மூலதனமோ அதற்குக் கிடைக்கவில்லை. மாறாக, சகல வழிகளிலும் சோவியத் அரசு நிர்மாணிக்கப்படுவதைத் தடுப்பதற்கு முயற்சிகள் எடுக்கப்பட்டன. எங்களுக்கு எதிராக யுத்தங்களும், பொருளாதார முற்றுகைகளும் நடத்தப்பட்டன ; மற்றும் எங்கள் பாதையில் இதர பல இடர்களும், தடைகளும் ஏற்படுத்தப்பட்டன. இவை எல்லாவற்றிற்கும் இடையிலும் எங்கள் நாடு ஆண்டுதோறும் மென்மேலும் வளர்ந்து வலுப்பெற்று, தொழில் நிலையங்களையும், பாக்டரிகளையும் எழுப்பியது ; பள்ளிகளையும் கல்லூரிகளையும், பல்கலைக்கழகங்களையும் நிறுவியது ; தனது கலாச்சாரத்தை வளர்ந்தோங்கச் செய்து, இடையறாது முன்னேறிச் சென்றது.

எந்த நாட்டில் அழிவுத்துறை ஊழியர்கள் அதிகம் ? எந்த அரசில் இஞ்சினியர்கள் அதிகம் ? சோவியத் யூனியனிலா அல்லது ஏதாவது ஒரு முதலாளித்துவ நாட்டிலா ? இவ்வாறு நாம் இப்பொழுது வாதாட முடியும்.

எனவே, எங்கள் பலம் எதில் அடங்கியுள்ளது ? எங்கள் பலம் எங்களுடைய மக்களிடத்தில் அடங்கியுள்ளது. மக்கள்தான் மிகவும் முக்கியமான மூலதனம். மனிதவர்க்கம் உற்பத்தி செய்துள்ள சகலவற்றின் சிருஷ்டிகர்த்தாக்கள் அவர்களே.

தமது சுயேச்சை வாழ்வை ஏற்படுத்திக்கொண்டுவிட்ட ஒரு நாட்டின் மக்கள் இன்று எழுதப்படிக்கத் தெரியாதவர்களாக இருக்கிறார்கள் என்றால் நாளைக்கு எழுத்தறிவுடையவர்களாக மாறிவிடுவார்கள். இதை நாங்கள் எங்களுடைய சொந்த அனுபவத்திலிருந்து அறிவோம். இன்று ஒரு நபர் எழுதப்படிக்கத் தெரியாதவராக இருக்கலாம். ஆனால் நாளைக்கு அவர் எழுதப்படிக்கத் தெரிந்துகொள்வதுடன், இஞ்சினியராகவோ அன்றி விஞ்ஞானியாகவோ வளர்ச்சிபெறமுடியும்.

சோவியத் அரசின் ஆரம்ப வருடங்களில் எங்களவர்களான, எங்களுக்குச் சொந்தமான அறிவுத்துறை ஊழியர்கள் இருக்கவில்லை. ஆனால் இப்பொழுது மக்களிடமிருந்து தோன்றிய ஏராளமான அறிவுத்துறை ஊழியர்களை நாங்கள் பெற்றிருக்கிறோம். தொழிலாளர்கள், விவசாயிகள் மத்தியிலிருந்து தோன்றிய அறிவுத் துறை ஊழியர்கள் இவர்கள். (கரகோஷம்). இதை நாங்கள் எங்களுடைய மிக முக்கிய சாதனைகளில் ஒன்றாகக் கருதுகிறோம். (கரகோஷம்)

சிலர் எங்களைத் தூற்றும்போது, நீங்கள் மட்டும் எங்களை ஏன் இவ்வளவு உள்ளன்புடனும், நேசவுணர்வுடனும் போற்றி வரவேற்கிறீர்கள்? யார் எங்களைத் தூற்றுகிறார்கள் என்பதைக் கூறி, நான் பிரசாரத்தில் இறங்கப் போவதில்லை. எங்களுடைய இந்திய விஜயத்தைப் பற்றி முதலாளித்துவப் பத்திரிகை நிருபர்கள் சிலர் என்ன எழுதி வருகிறார்கள் என்பதை நீங்களே பத்திரிகைகளில் படித்து வருகிறீர்கள். ஆனால் நாங்கள் அவற்றை நம்புவதில்லை. நீங்களும் அவற்றை நம்புவதில்லை. ஏனெனில், அவர்கள் எங்களைப்பற்றி எழுதிவரும் கீழ்த்தரமான விஷயங்கள் யாவும் வெறும் அவதூறு என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். (கரகோஷம்)

இத்தகைய எழுத்தாளர்களைப் பார்த்து நாங்கள் சொல்கிறோம்; எழுதுங்கள், என்ன வேண்டுமானாலும் எழுதுங்கள்! சொல்லுங்கள் எதை வேண்டுமானாலும் சொல்லுங்கள்! ஏனெனில், எவ்வளவு தான் சுட்டாலும் சங்கு கருத்துவிடப் போவதில்லை. இங்கே எங்களுடைய முதுமொழிகளில் ஒன்றைக் கூற விரும்புகிறேன்: "நாய்கள் குரைக்கட்டும், காற்று வீசட்டும், மனிதன் முன்னேறிக் கொண்டுதான் இருப்பான்." (சிரிப்பு)

எங்களுக்குரிய பாதையில்—மனித வர்க்கம் இதுவரை சென்றறியாத பாதையில்—சோஷலிஸ நிர்மாணப் பாதையில்—நாங்கள் முன்னேறுகிறோம். மனிதவர்க்கம் முழுமையின் பிரகாசமான எதிர்காலத்திற்கு எங்கள் நாடு வழிவகுத்து வருகிறது.

கம்யூனிஸ சமுதாயத்தை நிறுவிக்கொண்டிருக்கிறார்கள் எங்கள் மக்கள். அவர்கள் தமது குறிக்கோளை—கம்யூனிஸத்தை அடைந்தே தீருவார்கள்.

நீங்கள் எங்களுடைய கருத்துக்களிலிருந்து மாறான போக்குகளைக் கொண்டிருக்கலாம். பல பிரச்னைகளில் உங்களுடையதிலிருந்து எங்கள் கருத்து மாறுபட்டதாக இருக்கலாம். நீங்கள் சிறந்ததெனக் கருதும் வளர்ச்சிப் பாதையை, நீங்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். இது விஷயத்தில் நாங்கள் குறுக்கிட்டு இடையூறு செய்யமாட்டோம் என்பது மட்டுமின்றி, சீரும் சிறப்பும் மிகுந்த உங்கள் மக்களின் நன்மையையும்

உங்கள் நாட்டின் வளர்ச்சியையும் நோக்கமாகக் கொண்டுள்ள உங்களுடைய நற்பணிக்கு, நாங்கள் உதவியும் செய்வோம். (கரகோஷம்)

எங்களுடைய நடைமுறை அனுபவங்களில் சில உங்களுக்கு உதவியாக இருக்கக்கூடுமென நாங்கள் நினைக்கிறோம். எங்கள் அனுபவம் உங்களுக்குப் பயன் அளிப்பதாக இருந்தால் நீங்கள் அதைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். இல்லையேல் நீங்கள் அதை எடுத்துக்கொள்ளவேண்டாம். எதையும் யார்மீதும் நாங்கள் பலவந்தமாகத் திணிக்கவில்லை; யாரையும் நாங்கள் நிர்ப்பந்திக்கவில்லை. அரசியல் நிபந்தனைகள் எதையும் நாங்கள் விதிப்பதில்லை. இதைப்பற்றி நாங்கள் உங்களிடம் ஒளிவு மறைவின்றிப் பேசுவதற்குக் காரணம் என்ன? ஏனெனில் சகோதரர்களுக்கிடையில் ஒளிவு மறைவு கிடையாது. உங்களை நாங்கள் சகோதரர்களாகவே பாவிக்கிறோம். (கரகோஷம்)

நீங்கள் எங்களுக்கு மிகுந்த விமரிசையான வரவேற்பு அளிக்கிறீர்கள். நாங்கள் இதை உணருகிறோம். இந்தியாவின் பல நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் நாங்கள் விஜயம் செய்தோம்; பலவற்றையும் நாங்கள் பார்த்தோம். இன்றைய இந்தியா, தனது பாதையிலுள்ள சகல தடைகளையும் தகர்த்துக்கொண்டு மென்மேலும் ஆழமும் விஸ்தாரமும் பெற்று ஓடும் காட்டாற்று வெள்ளத்தை நினைவூட்டுவதாக உள்ளது. இந்த வெள்ளப் பெருக்கம் பழைய உலகைக் கதிகலங்கச் செய்கிறது. காலனி அடிமைத்தனத்தை இந்திய மக்கள் ஒழித்துக்கட்டி விட்டார்கள் என்பது குறித்து, இந்தியா சுயேச்சை வளர்ச்சிப் பாதையை மேற்கொண்டு விட்டது என்பது குறித்து, நாங்கள் பெரு மகிழ்ச்சி அடைகிறோம். (கரகோஷம்)

இந்தியாவிடம் நாங்கள் இத்தகைய போக்கைக்கொண்டிருப்பதேன்? அதே சமயத்தில் வேறு சில அரசுகள் இந்தியாவின் சுயேச்சையான வளர்ச்சியை விரும்பாதது ஏன்? ஏனெனில், இயந்திரத் தொழில் வளர்ச்சியில் நீங்கள் பின்தங்கிய பலஹீன நிலையில் இருப்பதைப் பயன்படுத்திக் கொண்டு லாபமடைவதல்ல எங்கள் நோக்கம். ஆனால் வேறு சில அரசுகள் உங்களுடைய இந்தப் பலஹீன நிலையைப் பயன்படுத்திக் கொண்டு, தமது செல்வத்தைப் பெருக்கிக் கொள்ள விரும்புகின்றன.

உங்களுடைய ஆலைகளையும் தொழில் நிலையங்களையும் நீங்கள் இன்னமும் துரிதமாகக் கட்டி முடிக்க வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். நல்லதொரு விஞ்ஞானக் கழகத்தை இன்று நீங்கள் எங்களுக்குக் காண்பித்தீர்கள். இந்தக் கழகம் சிறியது. முதற்படியாகவுள்ள ஆரம்ப முயற்சியையே இது குறிக்கிறது என்று நீங்களே கருதப்போகும் நாள் தொலைவில் இல்லை.

இந்தியா இன்று ஆன்மீக உணர்விலும் கலாச்சாரத்திலும் தார்மீக மகத்துவத்திலும் தலைசிறந்து விளங்கும் ஒரு அரசாகத் திகழ்கிறது. இதேபோல், பொருளாதார ரீதியிலும் இந்திய நாடு பலம் மிகுந்த ஒரு மாபெரும் அரசாகத் திகழவேண்டும் என்பதே எங்கள் மனப்பூர்வமான ஆவல். மிகவும் வளர்ச்சியடைந்த இயந்திரத் தொழில்களையும், முன்னேற்றமடைநத விவசாயத்தையும் இந்தியா பெற்றிருக்க வேண்டும் என்றும், இந்திய மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்து ஓங்கவேண்டும் என்றும் நாங்கள் விரும்புகிறோம். இந்த அரும்பெரும் பணியிலே நாங்கள் உங்களுடன் ஒத்துழைக்கத் தயாரா யிருக்கிறோம், (கரகோஷம்)

நண்பர்களே !

நேரு அவர்களும், நமது மாபெரும் நண்பர் செள-யென்-லாய் அவர்களும் கையொப்பமிட்ட கூட்டறிக்கையில்தான், ஐம்பெரும் கோட்பாடுகள் முதன் முதலில் பிரகடனப்படுத்தப்பட்டன. (கரகோஷம்) பங்களூர் மேயர் அவர்கள் தமது பிரசங்கத்தில், இக்கோட்பாடுகளைப் பற்றி நன்ருகப் பேசினுர்கள். நேரு அவர்கள் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்திருந்தபோது, இதே கோட்பாடுகள் இந்திய-சோவியத் கூட்டுப் பிரகடனத்தில் ஊர்ஜிதம் செய்யப்பட்டன. இந்தப் பிர கடனத்தின் அடிப்படையில் தான் நாங்கள் உங்களுடன் உறவுகளை அமைத்துக்கொண்டு வருகிறோம்.

நான் முன்பே சொன்னதுபோல், சில பிரச்னைகளில்—வழி முறைகளிலும் தத்துவத்திலும்—உங்களுடைய கருத்திலிருந்து நாங்கள் மாறுன கருத்தைக் கொண்டுள்ளோம் ; இதை நாங்கள் மூடி மறைக்கவில்லை. நீங்களும் அப்படியே. ஆயினும் நம் இருவரும் நண்பர்களாக இருப்பதை இது தடுத்துவிடவில்லை. இது ஏன் ? இது ஏனெனில் நீங்களும் சரி, நாங்களும் சரி ஒருவருக்கு ஒருவர் விரோத மான எண்ணங்கள் எதையும் கொண்டில்லை. வாஸ்தவமாக நீங்கள் எங்களுடைய உண்மை நண்பர்கள். அதேபோல் நாங்கள் உங்களுடைய சிறந்த நண்பர்கள், சகோதரர்கள். (கரகோஷம்) வெவ்வேறுன சமூக அமைப்புகளைக்கொண்ட அரசுகள் ஒருங்கே ஒத்து வாழ்வதற்கு இது கண்கூடான உதாரணமாகும்.

நாங்கள் சகல நாடுகளையும் பார்த்துக் கூறுகிறோம் ; "பிரசங்கங் களிலும், பத்திரிகைகளிலும் நாம் ஒருவரை ஒருவர் தாக்கி, சண்டை போட்டுக்கொள்ள வேண்டாம். நாம் நட்புரிமையுடன் ஒத்துவாழ் வோம், வாருங்கள்." தேசப் பொருளாதாரத்தை முதலாளித்துவ முறையில் நிறுவுவதை நாங்கள் விரும்பவில்லை என்பதைப் பகிரங்கமாகக் கூறுகிறோம். இதேபோல் எங்களுடைய வழிமுறைகளும் எல்லோருக்கும் பிடித்திருக்கவில்லை என்பதும் உண்மை.

எந்த அமைப்பு சிறந்தது என்பதை நடைமுறையில் ஆராய்வோம் வாருங்கள் என்று முதலாளித்துவ ராஜதந்திரிகளை நாங்கள் அறைகூவி அழைக்கிறோம் யுத்தம் இல்லாமல் நாம் ஒருவரோடு ஒருவர் போட்டி போடுவோம், வாருங்கள்! (கரகோஷம்). இது நல்ல யோசனை அல்லவா? யாரால் கூடுதலாக ஆயுதங்களை உற்பத்தி செய்ய முடியும், யாரால் மற்றவர்களை அழித்தொழித்துவிட முடியும் என்று நாம் போட்டி போடுவதைவிட, இது சிறந்ததல்லவா? ஆயுத உற்பத்திப் போட்டியில் இறங்குவது மனித வர்க்கத்தை அழிப் பதற்கான போட்டி; மக்களுக்கு விரோதமான போட்டி. ஆனால் நாங்கள் பிரரேபிக்கும் போட்டி சமாதானபூர்வமானது; சகல நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரத்தையும் உயர்த்துவதற்கான போட்டி. உலக மக்களின் சுபீட்சத்தை மேலும் உயர்த்த உதவும் இத்தகைய போட்டியையே நாங்கள் ஆதரிக்கிறோம்; இனியும் ஆதரிப் போம். எனவே எங்கள் யோசனைகள் மிகவும் தெட்டத் தெளிவானவை; புரிந்துகொள்ளக்கூடியவை. எங்கள் யோசனைகளை எல்லோரும் புரிந்து கொள்கிறார்கள். சோவியத் யூனியன் பிரரேபிக்கும் இந்தத் தெட்டத் தெளிவான, நியாயமான யோசனையை இந்திய மக்கள் வரவேற்கிறார் கள் என்று நான் நம்புகிறோம். ஆனால், விஷயங்களை நிதானமாகப் பரிசீலித்து, நிலைமையைப் பற்றிச் சரியான கணிப்புக்கு வரவேண்டியது அவசியம். ஒவ்வொரு பிராணியும் அதற்குப் பழக்கமான தீனியையே தின்னும் என்பதை நாம் யாவரும் அறிவோம். உதாரணமாக புலி மாமிச உணவை உட்கொள்கிறது; மாடு புல் மேயும். மாட்டை மாமிசம் தின்னும்படியோ, புலியைப் புல் மேயும்படியோ நிர்ப்பந்தம் செய்துவிட முடியாது. (நகைப்பு) பிரசாரம் செய்வதாக என்மீது பழி சுமத்தாமல் இருக்கும் பொருட்டு இந்தக் கருத்தை நான் மேலும் விரிவாக்கப் போவதில்லை. இக்கருத்தை நீங்கள் புரிந்து கொண்டுவிட்டீர்கள் என்றே நான் நினைக்கிறேன். (சிரிப்பும் கரகோஷமும்)

நண்பர்களே! ஆயுதப் பரிஹரணம் சம்பந்தமாக நாங்கள் மிகவும் தெட்டத் தெளிவான யோசனையை முன்வைக்கிறோம். எங்கள் இராணு வப் படைகளில் 6,40,000 பேரை படைவிலக்கம் செய்துள்ளோம் என்பதை நகர மேயர் அவர்கள் தன் பிரசங்கத்தில் குறிப்பிட்டு விட்டார்கள். பின்லாந்தில் போர்க்கலா-உத்திலிருந்த எங்கள் தளத் தையும், போர்ட் ஆர்தலிருந்த எங்கள் கப்பற் படைத் தளத்தையும் நாங்கள் கைவிட்டு விட்டோம்.

அணு ஆயுதங்களையும் நீர்வாயு ஆயுதங்களையும் தடை செய்வதற் கும், சம்பிரதாய யுத்த தளவாடங்களைக் குறைப்பதற்கும் சோவியத் யூனியன் யோசனைகளை சமர்ப்பித்திருக்கிறது. திறமையான கண்ட் ரோலை ஏற்படுத்துவதற்கும் நாங்கள் பிரேரணை செய்தோம். ஆனால்

சோவியத் யூனியனின் பிரதேசத்தை அமெரிக்காவும், இதேபோல் அமெரிக்காவின் பிரதேசத்தை சோவியத் யூனியனும் விமானத்திலிருந்து ஆகாயத்தின் மார்க்கமாக கட்டுப்படுத்துவதற்கு அனுமதியளிக்கும் ஒரு குறிப்பிட்ட ரகத்தைச் சேர்ந்த கண்ட்ரோல் முறைக்கு நாங்கள் சம்மதிக்காவிட்டால், ஆயுதப் பரிஹரணத்தைப் பற்றி உங்களுடன் விவாதிக்க முடியாது என்ற பதில் எங்களுக்குக் கிடைத்திருக்கிறது.

இந்த ரகத்தைச் சேர்ந்த கண்ட்ரோலினுல் பிரச்னையைத் தீர்க்க முடியாது. எனவே இது ஏற்கத்தக்கதல்ல என்பது எல்லோருக்கும் விளங்கும். அமெரிக்க விமானங்கள் சோவியத் யூனியன்மீதும், சோவியத் விமானங்கள் அமெரிக்காவின்மீதும் வட்டமிட ஆரம்பித்துவிடுகின்றன என்று வைத்துக்கொள்வோம். இதனுல் நன்மை உண்டா? விமானம் பறக்கும், விமானி பார்ப்பார்: இதோ ஒரு நகரம்! அதோ, அங்கே ஒரு கிராமம்! அங்கே இராணுவப் படைகள் உள்ளன! இவையெல்லாம் தொழிற்சாலைகள்! இதே முறையில் எங்கள் விமானிகளும் பார்ப்பார்கள். இதனுல் அமெரிக்கர்களிடம் அதிக விமானத் தளங்கள் உள்ளன என்று எங்களுக்குத் தெரிகிறது என்று வைத்துக்கொள்வோம். பிறகு என்ன நடக்கும்? பின்தங்கிக் கிடக்கும் நிலையில் இருக்கக்கூடாது என்பதற்காக, நாங்கள் மேலும் அதிகமான விமானத் தளங்களைக் கட்டியமைத்து எங்கள் நிலையை உயர்த்திக்கொள்ளத்தான் வேண்டும் என்ற நிர்ப்பந்தம் எங்களுக்கு ஏற்படும். (சிரிப்பு) இதேபோல் அமெரிக்கர்களும் எங்களிடம் என்னென்ன இருக்கிறது என்று பார்த்துவிட்டு, தாம் மேலும் அதிகமான விமானத் தளங்களையும், விமானங்களையும் மற்றும் பலவற்றையும் வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம் என்று கூறுவார்கள்.

இத்தகைய கண்ட்ரோல் யோசனையை நாம் ஏற்றுக்கொண்டால், அது ஆயுத உற்பத்திப் போட்டியையே ஏற்படுத்தும் என்பது தெளிவு. மேலைய வல்லரசுகளின் ராஜதந்திரிகளைப் பார்த்து நாங்கள் கூறுகிறோம்,—ஆயுதப் பரிஹரணத்திற்கு நீங்கள் அஞ்சினுல், உங்கள் அணு, நீர்வாயு குண்டுகளின் சேமிப்பை அழிப்பதற்கு நீங்கள் பயப்பட்டால் நாம் இன்னொரு காரியம் செய்யலாம். ஆயுதங்களை நாங்கள் யாரும் ஒருபொழுதும் உபயோகிக்கமாட்டோம் என்று வாக்குறுதி செய்வதென்று ஒத்துக்கொள்வோம். ஆனுல் இத்தகைய வாக்குறுதி அளிக்க முடியாது என்று பதிலளிக்கிறுர்கள் அவர்கள். ஏனெனில், "சமநிலை பலம்" என்ற கொள்கையின் நிமித்தம் அவர்களுக்கு நீர்வாயு, அணு குண்டுகள் வேண்டியிருக்கிறதாம். "சமநிலை பலம்" என்பது தான் என்ன? ஆயுத உற்பத்திப் போட்டியை மேற்கொள்வதென்பது தான் அர்த்தம். மேலும் அதிகமான அளவுக்குப் பணமும் மக்களின் உழைப்பில் கணிசமான பகுதியும் நாட்டின் சமாதானபூர்வ வளர்ச்சிக்காகப் பயன்படுத்தப்

படாமல், யுத்த தேவைகளுக்காகச் செலவிடப்படும் என்பதுதான் அதன் அர்த்தம். எனவே, ஆயுதக் குறைப்பை மேலைய வல்லரசுகள் விரும்பாத போது, நாங்கள் ஒருவர் மாத்திரம் தன்னந்தனியாக ஆயுதங்களை மேலும் தொடர்ந்து குறைத்துக்கொண்டு போக முடியுமா? "ரோமா புரியிலிருந்தால் ரோமானியர்களைப்போல் நடந்துகொள்" என்ற முது மொழியே இதற்கு நான் அளிக்கும் பதில். (சிரிப்பு)

அணு, நீர்வாயு ஆயுதங்களை மேலைய வல்லரசுகள் தடைசெய்ய விரும்பவில்லை என்றால், அவற்றை உபயோகப்படுத்துவதில்லை என்ற வாக்குறுதியைக்கூட அளிக்க விரும்பவில்லை என்றால், நாங்களும் அணு, நீர்வாயு குண்டுகளையும், ராக்கெட் ஆயுதங்களையும் இதர நாசக் கருவி களையும் உற்பத்தி செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படத்தான் செய்யும்.

சோவியத் யூனியனில் அணுகுண்டு ஒன்று வெடிக்கப்பட்ட செய் தியை, சில இந்தியப் பத்திரிகைகள் உள்பட பல நாடுகளின் பத்திரிகை களும் இன்று பிரசுரித்துள்ளன. அணுகுண்டு ஒன்றும் வெடிக் கப்படவில்லை என்று நான் கூறவில்லை. (ஆரவாரம், சிரிப்பு) குண்டு வெடிக்கப்பட்டது உண்மையே. இந்தப் பரிசோதனை வெடிப்பு நம்ப முடியாத அளவுக்கு பிரம்மாண்டமான சக்தி வாய்ந்த தாக இருந்தது. இதுபற்றிய செய்தியை நாளைக்கு எங்கள் பத்திரி கைகள் பிரசுரிக்கும்.

அணுசக்தி பற்றிய விஞ்ஞான ஆராய்ச்சிப் பரிசோதனை வேலைகளை மேற்கொள்வதற்கான திட்டத்தின்படி கடந்த சில காலமாகவே எங்கள் நாட்டில் புதிய ரக அணு, நீர்வாயு குண்டுகள் வெடித்துப் பரிசோதிக்கப் பட்டு வந்துள்ளன. விஞ்ஞான ஆராய்ச்சியாளர்களின் கணிப்புகளை இந்தப் பரிசோதனைகள் முற்றிலும் ஊர்ஜிதம் செய்துள்ளன. மேலும் இச்சோதனைகள் சோவியத் விஞ்ஞானிகளும் இஞ்சினியர்களும் புதிதாக சாதித்துள்ள முக்கிய பல வெற்றிகளையும் எடுத்துக் காட்டின. கடைசி யாக நடத்தப்பட்ட நீர்வாயுக் குண்டு வெடிப்புப் பரிசோதனைதான், இது வரை நடந்துள்ள எல்லா சோதனைகளையும்விட மிகவும் பலம் வாய்ந்தது சாதாரண வெடி குண்டைவிட பல லட்சக்கணக்கான டன்கள்வரை கூடுதலான எடையுடைய வெடி குண்டு வெடித்தால் எவ்வளவு சக்தி வாய்ந்த வெடிப்பு அதிர்ச்சி ஏற்படுமோ, அதே அளவு பிரம்மாண்டமான வெடிப்பு அதிர்ச்சியை எங்கள் விஞ்ஞானிகளும் இஞ்சினியர்களும் ஏற்படுத்தினார்கள். இதை அவர்கள் மிகவும் குறைவான அணுச் சிதைவுப் பொருட்களைக்கொண்டே சாதித்திருக்கிறார்கள். ஆனால் நண்பர்களே, இந்த ஆயுதங்களை சோவியத் யூனியன் துஷ்பிரயோகம் செய்யாது என்று நான் உறுதி கூறுகிறேன். (உற்சாகமும் கரகோஷ மும்). இந்தக் குண்டுகள் வெடிக்கப்பட்டு எந்த நகரமோ கிராமமோ அழிக்கப்படாமலிருந்தால் நாங்கள் மிகவும் மகிழ்ச்சி அடைவோம்.

(கரகோஷம்). இந்தக் குண்டுகள் அப்படியே இருந்து, யுத்தத்தைக் கட்ட விழ்த்துவிட விரும்புகிறவர்களுக்கு தயக்கத்தை உண்டாக்கட்டும். யுத்தத்தை கட்டவிழ்த்துவிட முடியாது; அவ்வாறு யுத்தத்தை யாராவது ஆரம்பித்தால், அவர்களுககுச் சரியான பதில் கிடைக்கும் என்பதை அவர்கள் தெரிந்துகொள்ளட்டும். (உற்சாகம்)

இந்தப் பயங்கர ஆயுதங்களை உற்பத்தி செய்யும்படி நாங்கள் நிர்ப்பந்தம் செய்யப்படுகிறோம். ஆனால் இந்த வேலை எங்களுக்கு உற்சாகமூட்டவில்லை. வெவ்வேறு விதமான இயந்திரங்கள், டிராக்டர் கள், உழுபடைக் கருவிகள் முதலியவற்றை மென்மேலும் அதிகமாக உற்பத்தி செய்து கோதுமையும், நெல்லும், பருத்தியும் பயிர் செய்து குவிப்பதுதான்—மக்களுக்கு இறைச்சியும், காய்கறிகளும், மீனும், இதர பண்டங்களும் அபரிமிதமாக கிடைக்கச் செய்யும் பணிதான்—எங்களுக் குப் பெரும் திருப்தியை அளிக்கும் பணி. இதுதான் நாங்கள் விரும்பு வது ; இதற்காகத்தான் நாங்கள் பாடுபடுகிறோம். (கரகோஷம்)

இதே பணிக்காகத்தான் உலக முழுவதும் சமாதானம் நிலவுவதற் கான போராட்டத்தை நாங்கள் மேலும் தொடர்ந்து நடத்துவோம். (கரகோஷம்) சர்வதேசக் கெடுபிடி நிலைமையை மேலும் தணிவுறச் செய்ய நாங்கள் தொடர்ந்து போராடுவோம். (கரகோஷம்) "கெடுபிடி யுத்த"த்தை நிறுத்துவதற்காகவும், எல்லா நாடுகளுக்கிடையிலும் வர்த்தகம் வளர்ந்து பெருக வேண்டும் என்பதற்காகவும் நாங்கள் தொடர்ந்து பணியாற்றுவோம்; போராடுவோம். சகல மக்களுக்கிடை யிலும் நேசத் தொடர்புகளை வளர்ப்பதற்காக நாங்கள் எங்களால் ஆனதனைத்தும் செய்வோம். வாழ்க்கையின் கோரிக்கை இது ; மனித வர்க்கத்தின் தேவை இது.

மனித வர்க்கத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு நாங்கள் எங்கள் சக்திக்கு உட்பட்டதனைத்தையும் செய்வோம். நாம் நமது முயற்சிகளைத் தளர்த்தக்கூடாது. சில நாடுகளைச் சேர்ந்த ஆக்கிர மிப்பு மனப்பான்மை கொண்ட வட்டாரங்கள் யுத்தத்தைப்பற்றிப் பேசு வதைக் குறைத்துக்கொண்டு, அரசுகளுக்கிடையில் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்வதுபற்றியும், சமாதானபூர்வமான உறவுகளை வளர்த்துக்கொள்வதுபற்றியும், சர்வதேசக் கெடுபிடி நிலையை அகற்றுவது பற்றியும் பேசும்படி நிர்ப்பந்திப்பதற்காக, அவசியமானதனைத்தையும் நாம் செய்யவேண்டும்.

நான் பேசியதில் ஏதாவது யாருக்காவது பிடிக்கவில்லை என்றால், என்னை மன்னித்து விடுமாறு நான் கேட்டுக்கொள்கிறேன். (நகைப்பும் கரகோஷமும்) எல்லாவற்றையும்விட முக்கியமாக உங்களுடைய மகத் தான நாட்டின் மக்களிடத்தில் எனக்குள்ள அன்பையும், நேசவுணர்வை

யும் எடுத்துக்கூற விரும்பினேன் ; இந்திய மக்களிடத்தில் சோவியத் மக்கள் கொண்டுள்ள மிகுதியான சிநேக மனப்பான்மையை எடுத்துரைக்க விரும்பினேன். (நீடித்த கரகோஷம்)

எனது பேச்சை முடிப்பதற்குமுன், அன்புள்ளம் படைத்த மாண்பு மிக்க உங்கள் நாட்டிற்கு எங்களுடைய தூதுகோஷ்டியை வரவேற்ற மஹா புருஷரும், உயர் சிறப்புடைய ராஜதந்திரியுமான இந்தியப் பிரதம மந்திரி நேரு அவர்களுக்கு எனது ஆழ்ந்த நன்றியை மீண்டும் ஒருமுறை தெரிவித்துக்கொள்கிறேன். (கரகோஷம்)

இந்திய-சோவியத் மக்களுக்கிடையிலுள்ள சகோதர நட்புறவு நீடூழி வாழ்க!

இந்தியரும் ரஷ்யரும் சகோதரர்கள்! (நீடித்த கரகோஷம்).

## பெங்களூரில் 1955 நவம்பர் 26-ம் தேதி மைசூர் முதல் மந்திரி அளித்த வரவேற்பில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

திரு. முதல் மந்திரி அவர்களே! மேன்மை தங்கிய ராஜப் பிரமுக் அவர்களே! கனவான்களே, தாய்மார்களே!

இங்கு எங்களுக்களிக்கப்பட்ட விசேஷமான, உளங்கனிந்த வரவேற்பிற்கு நிகிதா செர்ஜெயேவிச் குருஷேவ் சார்பாகவும், என் சார்பாகவும் உங்களுக்கும், உங்கள் மூலமாக பெங்களூர் நகர வாசிகளுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். மைசூரின் திறமை மிக்க, சுறுசுறுப்பான மக்களைப் பற்றி மிகச் சிறந்த எண்ணங்கள் எங்கள் உள்ளத்தில் பதிந்துள்ளன. ஒரு புதிய வாழ்வை உருவாக்குவதில் அவர்கள் பெற்றுள்ள மகத்தான வெற்றிகள், உங்களின் சிற்பிகளால் உருவாக்கப்பட்ட பண்டைக்காலக் கலாச்சாரத்தின் ஆச்சரியகரமான சின்னங்கள் ஆகியவைகளும் எங்கள் உள்ளத்தில் பதிந்துள்ளன.

வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் மைசூரிலுள்ள பல இடங்களையும் நன்ருகப் பார்க்க வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். ஆனால் துரதிருஷ்டவசமாக அவற்றையெல்லாம் காண எங்களுக்கு அவகாசமில்லாமற்போய்விட்டது. பெங்களூர் நகர வாசிகளுடன் இங்கு நாங்கள் ஏற்படுத்திக்கொண்டுள்ள உறவுகளை எதிர்காலத்தில்வெற்றிகரமாகத்

தொடர்ந்து வளர்ப்போம் என்ற நம்பிக்கையை நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்குமிடையேயுள்ள உறவை சகல துறைகளிலும் வளர்க்க வேண்டியதின் முக்கியத்துவத்தை இங்கு நிரூபிக்க வேண்டிய தேவையில்லை. இத்தகைய உறவுகளின் முக்கியத் துவம் மிகப் பெரியது. அவற்றை விரிவுபடுத்துவது சோவியத், இந்திய மக்களின் நலன்களுக்கு உகந்ததே என நாங்கள் திடமாக நம்புகிறோம். இச்சந்தர்ப்பத்தில் ஓர் உதாரணத்தை எடுத்துக் கூற விரும்புகிறேன். சோவியத் நாட்டின் ஆண்களும் பெண்களும் இந்திய மக்களுடன் நேச உறவு கொள்வதால் இரு நாட்டு மக்களும் பயனடைகிறார்கள் என்பதை இந்த உதாரணம் தெளிவாகக் காட்டுகிறது. 1948-ம் ஆண்டிலிருந்து சோவியத் யூனியன் விஞ்ஞானக் கழகத்திலிருந்து விஞ்ஞானிகளின் தூது கோஷ்டிகள் இந்திய விஞ்ஞான மகா சபையின் ஆண்டு விழாக் கூட்டங் களில் கலந்து கொண்டு வந்துள்ளனர். இக்காலத்தில், மருத்துவ நிபு ணர்கள், புள்ளி விவரத் தொகுப்பு சாஸ்திர நிபுணர்கள், பூமிசாஸ்திர நிபு ணர்கள், தாதுப் பொருள் சாஸ்திர நிபுணர்கள் ஆகிய பல்வேறு விஞ் ஞான சாஸ்திரங்களின் நிபுணர்கள் சோவியத் யூனியனிலிருந்து இந்தி யாவிற்கு வந்திருக்கிறார்கள். அதே போன்று பல இந்திய விஞ்ஞானி களும் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்துள்ளார்கள். இவர்கள் ஒருவருக்கொருவர் தங்கள் அனுபவங்களைப் பரிமாறிக்கொண்டனர்; ஒருவருக்கொருவர் யோசனை கூறிக்கொண்டனர். இவையெல்லாம் சோவியத் யூனியனுக்கும், இந்தியாவிற்கும் நிச்சயமான பலனை அளித் துள்ளன.

எங்களது தொழில், விவசாய வளர்ச்சியோடும், விஞ்ஞான, தொழில் நுணுக்க, கல்வி, சுகாதாரத்துறைகளின் சாதனைகளோடும், கலை, கலாச் சாரத் துறைகளில் பெற்றுள்ள வெற்றிகளோடும் சோவியத் யூனியனுக்கு வரும் தூதுகோஷ்டிகள் பரிச்சயம் கொள்ள எதிர்காலத்தில் சகல வசதி களும் செய்துகொடுக்கப்படும். சோவியத் யூனியனில் தங்கியிருக்கும் காலத்தில் அவர்களுக்கு வேண்டிய உதவி அளிக்கப்படும்; போதிய கவனம் செலுத்தப்படும். இதை அவர்கள் எப்பொழுதுமே எதிர்பார்க் கலாம். (கரகோஷம்)

சோவியத், இந்திய மக்களுக்கிடையே நேரடித்தொடர்பும், நெருங் கிய, விரிந்த உறவுகளும் இருநாட்டு நலன்களுக்கும் உதவுகின்றன. அவை இருநாடுகளுக்குமிடையே நேச உறவையும், ஒத்துழைப்பையும் வளர்க்கும். இரு மகத்தான மக்களின் இத்தகைய நேச உறவு சர்வ தேசப் பாதுகாப்பையும், சமாதானத்தையும் கெட்டிப்படுத்துவதற்கு வேண்டிய மிக முக்கியமான அம்சமாகும். இந்திய சோவியத் மக்களி

டையே வளர்ந்துவரும், நட்புறவு நீடூழி காலம் வாழ்க! (கரகோஷம்) உலக சமாதானம் நீடூழி வாழ்க! (கரகோஷம்)

## 1955 நவம்பர் 28-ம் தேதி சென்னையில் நகரசபை உபசாரத்தின்போது என். ஏ. புல்கானின் நிகழ்த்திய உரை

மதிப்பிற்குரிய கவர்னர் அவர்களே! மதிப்பிற்குரிய முதன் மந்திரி அவர்களே! திரு. மேயர் அவர்களே! அன்பார்ந்த நண்பர்களே!

அழகொளி வீசும் உங்களுடைய சென்னை நகருக்கு வரும்படி எங்களுக்கு அனுப்பப்பட்ட அழைப்பை நாங்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டோம். உங்கள் நகரில் நீங்கள் எங்களுக்கு அளித்த அமோக வரவேற்பிற்காக, என் சார்பிலும், நிகிதா செர்ஜெயெவிச் குருஷேவ் சார்பிலும், மற்றும் எங்களுடன் வந்துள்ள நண்பர்கள் சார்பிலும் நன்றி கூறுகிறேன். நீங்கள் எங்களுக்கு அளித்துள்ள அன்பளிப்புகளுக்காகவும் நன்றி கூறுகிறோம். சமாதானத்தை நேசிக்கும் மாண்புமிக்க இந்திய மக்களிடத்தில் ஆழ்ந்த மதிப்பு கொண்டுள்ள சோவியத் மக்களின் உள்ளம் நிறைந்த நேச வாழ்த்துக்களை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். (கரகோஷம்) சென்னைக்கு வருவதற்குமுன், இந்தியாவின் நகரங்கள் பலவற்றிற்கு நாங்கள் விஜயம் செய்தோம். இந்த சுற்றுப் பிரயாணத்தின்போது எங்களுக்குக் கிடைத்த அனுபவங்கள் எங்களுக்குப் பெரும் பயன் அளித்துள்ளன. இந்த அனுபவங்கள்பற்றி நெடுநேரம் தொடர்ந்து விவரித்துக்கொண்டு போகமுடியும். ஆனால் எல்லாவற்றிற்கும் மேலாக நான் ஒரு விஷயத்தைப்பற்றி கூற விரும்புகிறேன். சமாதானத்தைப் பேணிப் பாதுகாப்பதிலே இந்திய மக்கள் அளவிட முடியாத ஆர்வம் கொண்டுள்ளனர் என்பதை நாங்கள் சென்ற இடங்களிலெல்லாம் கண்கூடாகக் கண்டோம். தமது தாய்த் திருநாட்டிற்கு தேசிய சுயேச்சையை வென்று கொண்டுள்ள பிரயாசை மிகுந்த இந்திய மக்கள் இன்று ஆக்கல் பணிகளிலே ஆழ்ந்துள்ளனர்.

இதேபோல் சோவியத் யூனியன் மக்களும் சமாதானபூர்வமான ஆக்கல் பணிகளிலே ஈடுபட்டுள்ளனர். ஒரு புதிய சமூகத்தை அவர்கள் நிர்மாணித்து வருகின்றனர். யுத்தத்தின் கொடுமைகளைத் தமது சொந்த அனுபவத்தின் வாயிலாக நன்கறிந்துள்ளவர்கள் சோவியத் மக்கள். எனவே அவர்கள் சமாதான வேட்கையுடைய இதர பல நாடுகளின்

மக்களுடன் கைகோர்த்து நின்று, உலக யுத்தம் ஏற்படாமல் தடுப்பதற்குக் கங்கணம் கட்டிக்கொண்டு பாடுபடுகின்றனர். தம்மைத் தற்காத்துக் கொள்வதற்கு என்றும் தயாராகவுள்ள சோவியத் மக்கள், உலக சமாதானத்தைக் காப்பதற்காக, முன்பின் முரணின்றிப் போராடி வருகின்றனர் ; சர்வதேசக் கெடுபிடி நிலையைத் தணியச் செய்வதற்காகவும், புதிய யுத்தம் மீண்டெழுமென்ற அபாயத்தை அகற்றுவதற்காகவும், அரசுகளின் சமூக அமைப்புகள் எப்படி இருப்பினும் சகல அரசுகளும் சமாதானமாக ஒருங்கே ஒத்துவாழ்வதற்குச் சாதகமான நிலைமைகளை ஏற்படுத்துவதற்காகவும் அவர்கள் முழு முயற்சி எடுத்து வருகின்றனர். இந்த உன்னதப் பணியில் உங்கள் மாபெரும் நாட்டின் மக்களைப் போன்ற உயர் சிறப்புடைய கூட்டாளிகள் பலரையும் அவர்கள் பெற்றிருப்பது குறித்து சோவியத் மக்கள் பெரு மகிழ்ச்சி அடைகின்றனர்.

தமது சரித்திரத்தின் மிகப்பெரிய திரும்புமுனைக் கட்டத்தில் வாழ்ந்துவரும் இதர ஆசிய மக்களும், உறுதியுடன் நீடித்து நிலவக் கூடிய சமாதானத்தைப் பேணி வளர்ப்பதற்கான போராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர். மிகப் பல ஆண்டுகளாக, ஏன் நூற்றுண்டுகளாகக்கூட அன்னிய ஆதிக்கத்தின் கீழ் அவதியுற்று வந்த ஆசிய மக்கள் சமாதானத்திற்காகவும் தமது சுதந்திரத்திற்காகவும் தேச சுயேச்சைக்காகவும் போராடி வந்துள்ளனர். ஆனல் இன்று காலனி அடிமை அமைப்பு அழிந்தொழிந்து வருகிறது; என்றும் தலைதூக்க முடியாதவாறு அது மறைந்தொழிந்து வருகிறது. (கரகோஷம்) ஆயினும் காலம் மலையேறிவிட்டது என்பதை, பழைய காலனி அடிமை அமைப்பிற்கு இனித் திரும்பமுடியாது என்பதை சில ஐரோப்பிய அரசுகள் இன்னமும் புரிந்து கொள்ளாமல் இருந்து வருகின்றன. தொன்னெடுங்காலமாக இந்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த ஒரு பகுதியாக விளங்கும் கோவா இன்னமும் போர்த்துகீசியக் காலனியாக இருந்து வருவதற்கு எவ்வித நியாயமும் இல்லை. நாகரீக உலகிற்கே ஒரு அவக்கேடு இது. (கரகோஷம்) காலனி அமைப்பிற்கும் அதன் மீதமிச்சங்களுக்கும் எதிராகப் போராடிக்கொண்டிருக்கும் மக்களின் பக்கம் தான் சோவியத் மக்களின் அனுதாபம் எப்பொழுதும் இருந்து வந்துள்ளது, இனியும் இருந்துவரும். (பலத்த கரகோஷம்)

ஆசிய மக்கள் தமது சுயேச்சை வாழ்விற்கும், சுயேச்சையான தேசிய வளர்ச்சிக்கும் தடைகளாகவுள்ள இடையூறுகள் யாவற்றையும் சமாளித்து விட்டார்கள் என்று கூறுவதற்கில்லை. சமாதான பூர்வமான வளர்ச்சிப் பாதையிலிருந்து இராணுவ மயமாக்கும் பாதைக்கு, புதியதோர் யுத்தத்திற்குத் தயாரிப்புகள் செய்யும் பாதைக்கு அவர்களைத் திருப்புவதற்கு இன்னமும் முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. குறிப்பாக தென் கிழக்கு ஆசியாவிலும், சமீப கிழக்கிலும்,

மற்றும் பல பிராந்தியங்களிலும் உருவாக்கப்பட்டுள்ள பல்வேறு யுத்த ஒப்பந்தங்களும், கூட்டமைப்புகளும், இந்த நோக்கத்திற்கே பயன்படு கின்றன. இந்த யுத்த ஒப்பந்தங்களேயும், இராணுவக் கூட்டமைப்பு களேயும் ஆசிய மக்கள் சந்தேகக் கண்களுடன் பார்ப்பது முற்றிலும் நியாயமானதே. ஏனெனில், எந்த அரசுகள் ஒரு காலத்தில் காலனி ஆதிக்க முறையைப் பரப்பி வளர்த்துப் பாதுகாத்து வந்தனவோ, அதே அரசுகள்தான் இக்கூட்டணிகளின் சூத்திரதாரிகள். நமது காலத்தின் தலைசிறந்த ராஜதந்திரி ஜவாஹர்லால் நேரு அவர்களின் தலைமையி லுள்ள உங்கள் சர்க்கார், உறுதியுடன் நீடித்து நிலவக்கூடிய சமாதா னத்தைப் பேணிப் பாதுகாப்பதற்கு உலக மக்கள் எடுத்துவரும் முயற்சி களுக்கு இந்த யுத்தக் கூட்டமைப்புகள் குந்தகம் விளைவிக்கின்றன என்பதையும், இத்தகைய யுத்தகோஷ்டிகள் இருந்துவருவது புதியதோர் யுத்தம் மூண்டெழலாமென்ற அபாயத்தைப் பெரிதும் அதிகரிக்கச் செய் கின்றன என்பதையும் நன்கு உணருகிறது. எனவேதான் அது, இந்த யுத்தக் கூட்டமைப்புகளில் சேருவதில்லை என்று விவேகமுடன் முடி வெடுத்தது.

தமது பிரதேசங்களில் அன்னிய இராணுவத் தளங்கள் அமைக்கப் படுவதாலும், அன்னியத் துருப்புக்கள் முகாமடிப்பதாலும் படுநாசம் விளைவிக்கும் யுத்த களமாக அவை மாற்றப்படும் பேரபாயம் உண்டா கிறது என்பதை, பல ஆசிய அரசுகள் உணருகின்றன. ஆகவேதான் அவை, தமது பிரதேசங்களில் அன்னிய இராணுவத் தளங்கள் அமைக்கப் படுவதையும் அன்னியத் துருப்புகள் முகாமடித்துக்கொள்வதையும், உறுதியாக எதிர்த்து வருகின்றன. இதைக்கண்டு நாங்கள் மிகுந்த திருப்தி அடைகிறோம்.

பழம்பெரும் கலாச்சாரத்திற்குப் பேர்போனது சென்னை என்பதை நாங்கள் அறிவோம். உங்கள் மக்களின், சிற்பிகளின், கட்டிடக் கலைஞர் களின் மகத்தான திறமையைப் பறைசாற்றும் அற்புதக் கட்டிடக் கலைப் படைப்புகள் பல உங்கள் மண்ணிலே, பல நூற்றாண்டுகளுக்கு முன்பே எழுப்பப்பட்டன.

நாட்டின் பொருளாதார, கலாச்சார வாழ்வில் உங்களுடைய சென்னை ராஜ்யம் ஒரு முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. ஆனால் இந்த ராஜ்யத்தின் செல்வத்திற்கும் மதிப்பிற்கும் காரணம் அதன் செல்வத்தை யும் பொருளாதார வளத்தையும் சிருஷ்டித்துக் கொடுக்கும் அதன் மக் கள் தான் என்பதில் ஐயமில்லை. இவர்கள் தான் இந்த ராஜ்யத்திற்குப் பெருமிதமளிக்கும் பிரதான மூலாதாரமாக விளங்குகின்றனர்.

இன்று இந்தியாவிலுள்ள சகல மக்களும் தமது தாய்நாட்டின் சுயேச் சையைப் பலமடையச் செய்வதற்கான வேலைகளில் ஈடுபட்டுள்ளனர்.

உங்கள் நாட்டின் பொருளாதார, கலாச்சார வாழ்வின் சகல துறைகளி லும் புதிய வெற்றிகளை அடைவதற்கான ராஜப்பாட்டை உங்கள் முன் திறக்கப்பட்டுள்ளது என்பதைப் பற்றிச் எங்களுக்கு சந்தேகமில்லை. இந்திய மக்களின் ஒற்றுமையை நீங்கள் மேலும் பலப்படுத்துவதிலும், இந்தியாவின் வளத்தை மேலும் பெருக்குவதிலும், சமாதான லட்சியத்தை உறுதியாகப் பாதுகாப்பதிலும் நீங்கள் மேலும் வெற்றியடைய வேண் டும் என்று நாங்கள் வாழ்த்துகிறோம். சமாதானப் பணியிலே, சோவி யத் மக்கள் உங்கள் உண்மையான நம்பகமான நண்பர்கள்; (கரகோஷம்) முரணின்றி சலியாது சமாதானத்திற்காகப் போராடும் வீரர்கள். (கரகோஷம்)

நமது இரு நாடுகளுக்கிடையிலுள்ள நட்புரிமைக்குத் தொன்மை மிகுந்த மகோன்னதப் பாரம்பரியங்கள் உண்டு. எவ்வித நெருக்கடி யினாலோ அல்லது அதைவிட முக்கியமாக ஒருவரை ஒருவர் எதிர்க்கும் நடவடிக்கைகளினாலோ நம்மிருவரின் உறவில் எப்பொழுதுமே களங்கம் ஏற்பட்டதில்லை. எனவே, இந்திய-சோவியத் உறவுகள் வளர்ந்தோங்கு வதற்கான சாத்தியப்பாடுகள், நமது இரு அரசுகளுக்கிடையிலுள்ள நட் புறவும் ஒத்துழைப்பும் மேலும் பலமடைவதற்கான சாத்தியப்பாடுகள் மிகுதியாக உள்ளன என்பதற்கு மேற்கூறிய இந்த விஷயம் ஒன்றே போதுமான சான்றாகும்.

தேசங்கள் சமாதானமாக ஒருங்கே ஒத்துவாழ வேண்டும் என்பதற் காகவும், "பஞ்சசீல"க் கோட்பாடுகளை (கரகோஷம்) அமுல் நடத்து வதற்காகவும் போராடுவதில் இந்தியா முன் வரிசையில் நிற்கிறது (கரகோஷம்) என்பது குறித்து சோவியத் மக்கள் ஆழ்ந்த திருப்தி அடைகின்றனர். "பஞ்சசீலம்" என்னும் இந்த ஐம்பெரும் கோட்பாடுகள் ஜவஹர்லால் நேரு—சௌ யென்-லாய் கூட்டுப் பிரகடனத்திலும், பிரதமர் நேரு சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்ததின் விளைவாக வெளியிடப்பட்ட இந்திய-சோவியத் கூட்டறிக்கை யிலும் பிரகடனப்படுத்தப்பட்டன. சமாதானப் பணிக்கும், தீர்க்கப்படா துள்ள சர்வதேசப் பிரச்னைகளை சமாதானபூர்வமாகத் தீர்ப்பதற்கும் இந்தியாவும், அதன் சர்க்காரும் ஆற்றிவரும் சேவையை சோவியத் மக்கள் பெரிதும் போற்றுகிறார்கள். இந்தியக் குடியரசையும், அதன் சர்க்காரையும் அவர்கள் ஒரு நண்பனாக, சமாதானப் போராட்டத்திலும், சர்வதேசக் கெடுபிடி நிலையைத் தணிப்பதற்கான போராட்டத்திலும் தனக்கு ஒத்த அபிப்பிராயங்களைக்கொண்ட நண்பனாகக் கருதுகிறார்கள்.

நேசப்பான்மையுடைய இந்திய மக்கள் நீடூழி வாழ்க! (கரகோஷம்)

இந்திய-சோவியத் மக்களின் அழிக்கமுடியாத நட்பு வளர்ந்து ஓங்குக! (பலத்த கரகோஷம்)

உலக முழுதும் சமாதானம் தழைத்தோங்குக! (பலத்த கரகோஷம்)

# 1955 நவம்பர் 28-ல் சென்னையில் நடைபெற்ற நகரசபை வரவேற்பில் என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

நண்பர்களே !

எனது நண்பர் நிகோலாய் அலெக்சாண்டிரோவிச் புல்கானின் அவர்கள் தமது பிரசங்கத்தில் கூறியது யாவற்றையும் நான் மனப் பூர்வமாக ஆதரிக்கிறேன். நான் மேற்கொண்டு சொல்ல விரும்புவது என்னவெனில் நேசவுணர்வால் நாம் இருவரும் இணைக்கப்பட்டுள்ளோம். நாங்கள் உங்களுடன் சேர்ந்து சமாதானத்திற்காகப் போராடிக் கொண்டிருக்கிறோம் என்றும் நான் கூற விரும்புகிறேன். (கரகோஷம்)

நாம் நமது நட்புறவுன் பலத்தை விவேகத்துடன் பயன்படுத்துவோமானால், சமாதானத்திற்கான போராட்டத்தில் நமது முயற்சிகளை ஒன்றிணைத்துச் செல்வோமேயானால், மற்றொரு யுத்தத்தைக் கட்டவிழ்த்துவிட முயற்சித்து வரும் சக்திகள் எவையும் நம்மை எவ்விதத்திலும் பயமுறுத்த முடியாது ; மேலும் அத்தீய சக்திகள் நிர்மூலமாக்கப்பட்டு சமாதானம் நிச்சயமாக நிலை நாட்டப்படும் என்று சொல்லமுடியும். (பலத்த கரகோஷம்)

இந்திய மக்கள் சாதித்துவரும் ஒவ்வொரு வெற்றியையும் கண்டு சோவியத் மக்கள் பெரு மகிழ்ச்சி அடைகின்றனர். உங்களுடைய வெற்றிகள் குறித்து அவர்கள் மகிழ்ச்சி அடையக் காரணம் என்னவெனில், கடந்த காலத்தில் அவர்களும் ஜாரிஸ்ட் எதேச்சாதிகாரத்தின் கீழும், மற்றும் உள்நாட்டு, வெளிநாட்டு ஒடுக்குமுறையாளர்களின் கீழும் கொடிய சுரண்டலுக்கு ஆளாகியிருந்தனர். கடினமான போராட்டத்தின் மூலம் சக்திவாய்ந்த தொழிலாளர்—விவசாயிகள் அரசை, அன்னிய ஏகாதிபத்தியவாதிகளின் மேலாதிக்கத்திற்குக் கட்டுப்படாததோர் சுயேச்சை அரசை அவர்கள் நிறுவினார்கள். இதனால்தான், காலனி ஒடுக்குமுறையிலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டுள்ள இந்தியமக்கள் தமது சொந்தச் சுயேச்சை அரசைப் புதிதாக நிர்மாணித்து வருவதைக் கண்டு சோவியத் மக்கள் மகிழ்ச்சி அடைகின்றனர்.

யாரும் தமது நாட்டின் சுயேச்சையை வென்று கொண்டால் மாத்திரம் போதாது. அந்த சுயேச்சையைப் பாதுகாத்து நிலைநிறுத்தும் பொருட்டு அதைப் பலப்படுத்தி வலிமையுறச் செய்ய வேண்டும் என்பது நாங்கள் எங்கள் சொந்த அனுபவத்தில்கண்ட உண்மை. (பலத்த கரகோஷம்) சக்திவாய்ந்த தேசியத் தொழில்களை நிர்மாணிப்பதும் மக்களின் சுபீட்சத்தை இடையறாது மேலோங்கி வளரும்படி செய்வதும்தான் நீங்கள் வென்றுள்ள சுயேச்சையைப் பலப்படுத்து

வதற்கான மார்க்கம். (கரகோஷம்) இந்தியக் குடியரசு தமது சொந்த இயந்திரத் தொழில்களை—சக்திவாய்ந்ததும் மிகவும் வளர்ச்சி யடைந்ததுமான இயந்திரத் தொழில்களை—பெற்று விளங்க வேண்டும் என்றும், தனக்கேவுரிய தேசியப் பொருளாதாரத்தை—ஏகாதிபத்திய அரசுகளின் பிடியிலிருந்து சுயேச்சை நிலை அடைந்துள்ள தேசியப் பொருளாதாரத்தைப் பெற்று விளங்கவேண்டும் என்றும் நாங்கள் மனப் பூர்வமாக விரும்புகிறோம்.

இந்தக் குறிக்கோளை எங்கள் மக்கள் தமக்கேவுரிய முறையில் ஈடேற்றியுள்ளனர். இதில் அவர்கள் மகத்தான பலன்களை அடைந் துள்ளனர் நீங்கள் உங்கள் சொந்த விருப்பப்படி தெரிந்தெடுத்துள்ள பாதையைப் பின்பற்றி வருகிறீர்கள். ஆனால் நண்பர்களே நீங்கள் வென்றுள்ள சுயேச்சையை வலிமையுறச் செய்வதற்கு நீங்கள் எடுக்கும் முயற்சிகள் யாவற்றிற்கும் சோவியத் மக்கள் எப்பொழுதுமே அனுசரணை யாக இருப்பார்கள் என்று தெரிவித்துக் கொள்கிறேன். (பலத்த கரகோஷம்) மாண்புமிக்க இந்திய மக்கள் நீடூழி வாழ்க! என்றென்றும் அழிக்கமுடியாத உருக்குக் கோட்டை போன்றுள்ள இந்திய-சோவியத் மக்களின் நட்புறவு நீடூழி வாழ்க! கரகோஷம்) உலக சமாதானம்—தேசங்களுக்கிடையில் நிலையான சமாதானம்—என்றென்றும் தழைத் தோங்குவதாகுக! (பலத்த, நீடித்த கரகோஷம்).

# 1955 நவம்பர் 29 ம் தேதி கல்கத்தா நகருக்கு வந்துசேர்ந்ததும் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

" அருமை நண்பர்களே!

" கட்டுக்கடங்காத மகிழ்ச்சிப் பெருக்குடன் இன்று நாங்கள் வங்க மண்ணின்மீது அடியெடுத்து வைக்கிறோம். இந்திய வரலாற்றிலும் தேச விடுதலை இயக்கத்திலும் இந்திய நாட்டின் பொருளாதார, கலாச்சார வளர்ச்சியிலும் வங்காளம் முக்கியத்துவமுடைய பாத்திரம் வகித் துள்ளது.

" ஆகாய விமானத்தில் இருந்தபடி நாங்கள் செழிப்புடைய பசுமை யான கழனிகளையும் சாந்தி நிலவும் கிராமங்களையும் ஆழமான நதி களையும் கண்ணுற்றோம். இந்திய நாட்டின் மாபெரும் நகரான கல்கத்தா நகரையும் அதன் ஆலைகளையும் தொழிற்சாலைகளையும் புகையை கக்கும்

அவற்றின் புகைபோக்கிகளையும் நாங்கள் கண்டோம். பொன் விளையும் வங்க நாட்டின் செல்வத்திற்கு எல்லையே இல்லை. வங்க மக்கள் இன்று தாம் உற்பத்தி செய்யும் செல்வங்களுக்குத் தாமே எஜமானர்கள் ஆகி விட்டனர்; இனி அவர்கள் இந்தச் செல்வத்தை தமது தாயகத்திற்கு நலமளிக்கும் சிறந்த வகையில் பயன்படுத்திக்கொள்ள முடியும். இது குறித்து உங்களுடன் சேர்ந்து நாங்களும் மனம் மகிழ்கிறோம்.

"வங்க மக்களின் வாழ்க்கைப்பற்றியும் அவர்கள் மேற்கொண்டுள்ள செயல்கள்பற்றியும் அவர்களுடைய வெற்றிகள், சாதனைகள்பற்றியும் நாங்கள் மேலும் நன்கறிந்துகொள்வதற்கு வாய்ப்புக் கிடைத்துள்ளது குறித்து சந்தோஷமடைகிறோம்.

"சுயேச்சையடைந்துள்ள இந்தியாவின் முன்னேற்றத்தை அக் கறையுடன் கவனித்துவரும் சோவியத் நாட்டின் பல்வேறு இன மக்க ளிடமிருந்தும் ஆர்வமிகுந்த வாழ்த்துக்களையும் நல்லாசிகளையும் நாங்கள் உங்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறோம்.

"இந்திய, சோவியத் மக்களிடையே நட்புறவையும் பயன்தரும் ஒத்துழைப்பையும் நாம் பலமடையச் செய்வோமாக!"

## 1955 நவம்பர் 30-ம் தேதி கல்கத்தா நகர மக்களின் வரவேற்பு உபசாரத்தின்போது என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

மதிப்பிற்குரிய மேற்கு வங்க கவர்னர் டாக்டர் முக்கர்ஜி அவர்களே!

மதிப்பிற்குரிய மேற்கு வங்க முதன் மந்திரி டாக்டர் ராய் அவர்களே!

மதிப்பிற்குரிய மேயர் கோஷ் அவர்களே!

அருமை கல்கத்தா நகரவாசிகளே! (கரகோஷம்)

உங்கள் உண்மை நண்பனும் சகோதரனுமான சோவியத் நாட்டின் பிரதிநிதிகளாகிய எங்களுக்கு எல்லையில்லா ஆர்வமுடனும் நேசமுடனும் நீங்கள் அளித்த வரவேற்பிற்காக நன்றி தெரிவித்துக்கொள்ள அனுமதி யுங்கள். (பலத்த கரகோஷம்)

சோவியத்மக்களுடன் தமது நட்புறவைப்பலப்படுத்தி மேலும் வளர்ந் தோங்கச் செய்ய வேண்டுமென்று இந்திய மக்கள் மனப்பூர்வமாக

விரும்புகிறார்கள் என்பதை உங்கள் நாட்டில் தங்கியிருந்த இந்த ஒரு சில நாட்களிலேயே நாங்கள் தெட்டத் தெளிவாகக் காண முடிந்தது. இந்நட்புறவு ஆழமான வேர்களையுடையதாகும். (கரகோஷம்)

நம்மிரு தேச மக்களின் சரித்திரரீதியான எதிர் காலங்களில் பொது அம்சங்கள் அதிகமுண்டு. எனவேதான் நாம் இருவரும் ஒருவரை ஒருவர் இலகுவில் புரிந்துகொள்ள முடிகிறது. சுதந்திரத்திற்காகவும், சுயேச்சை வாழ்விற்காகவும் சென்ற காலத்தில் நடைபெற்ற நமக்கிருந்த பொதுவான குறிக்கோள்களும், தவிரவும் தற்காலம் சம்பந்தமாகவும் இனி வருங்காலம் சம்பந்தமாகவும் நமக்குள்ள பொதுவான குறிக்கோள்களும் இந்த நட்பிற்கு அடிப்படையாக அமைந்துள்ளன.

நெடுங்கால காலனி ஒடுக்குமுறையிலிருந்து விடுதலையடைந்து சுயேச்சையான வளர்ச்சிப் பாதையில் அடியெடுத்து வைத்துள்ள இந்திய மக்கள் சுயேச்சையான தேசிய வளர்ச்சியும் புது வாழ்வும் பெறுவதற்கான பிரமாதமான வாய்ப்புகள் ஏற்பட்டுள்ளன.

இந்திய நாடு அரசியல் சுயேச்சையடைந்து விட்டது. ஆதலால் மாபெரும் உங்கள் நாடு சகல வழிகளிலும் வளர்ந்தோங்குவதற்குத் தேவையான அடித்தளம் நிறுவப்பட்டு விட்டது.

உலகரீதியான காலனி அடிமைமுறையை எதிர்த்துக் கிளர்ந்தெழுந்து தீர்மானகரமான முறையில் தாக்குதல் தொடுத்து ஆசிய மக்கள் பெரும் பெரும் வெற்றிகளைப் பெற்றுள்ளனர். ஆசிய மக்களின் உறுதிவாய்ந்த ஒருமைப்பாடு எங்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சி அளிப்பதாயுள்ளது.

நம்மிருவரின் நண்பனும் சகோதரனுமான மாபெரும் சீன மக்கள் சரித்திர முக்கியத்துவமுடைய மகத்தான வெற்றி பெற்றுள்ளனர். (கரகோஷம்)

மகத்தான இந்திய நாடு அரசியல் சுயேச்சை அடைந்துவிட்டது! (கரகோஷம்).

ஆசியாவைச் சேர்ந்த இதர மக்களும் வெறுக்கத் தக்க காலனி ஒடுக்குமுறையிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு வருகிறார்கள். இதர அரசுகள் தமது உள் விவகாரங்களில் தலையிடுவதற்கு இடமளிக்காமல், தமக்குரிய வளர்ச்சிப் பாதைகளை இம்மக்கள் தெரிந்தெடுத்து வருகின்றனர். இந்த உன்னதப் பணியில் ஈடுபட்டுள்ள இம்மக்களை நாங்கள் வாழ்த்துகிறோம்.

ஆரோக்கியமான உடலில் உண்ணிபோல் ஒட்டிக்கொண்டு தொல்லை செய்யும் நாடுகள் இன்னமும் இருக்கத்தான் செய்கின்றன. போர்த்துகலை மனதிற்கொண்டே நான் இவ்வாறு கூறுகிறேன். கோவாவிலிருந்து அது வெளியேற விரும்பவில்லை. நியாயமாக இந்தியாவிற்குச் சொந்த

மான ஒரு பிரதேசம் தனது ஆட்சியிலிருந்து விடுபட்டு விடுவதை அது விரும்பவில்லை. (கரகோஷம்)

ஆனல் சீக்கிரத்தில் இந்தப் பிரதேசம் விடுபட்டே தீரும். அன்னிய ஆட்சியிலிருந்து கோவா விடுதலை பெற்று இந்தியக் குடியரசைச் சேர்ந்த பிரிக்க முடியாத ஒரு பகுதியாகிவிடும் என்பதில் ஐயமில்லை. (பலத்த கரகோஷம்)

**ஆசிய மக்களுடைய ஒருமைப்பாடு, காலனி அடிமை அமைப்பிற்குக் கொடுக்கப்படும் மரண அடியைக் குறிக்கிறது.**

மேற்கு வங்காளத்தின் தலைநகரான அற்புதமான கல்கத்தாவிற்கு நாங்கள் வந்திருக்கிறோம். இந்தியாவின் சுதந்திரப்போரில் வேறு எந்த இந்திய ராஜ்யத்தையும்விட அதிகமாக மேற்கு வங்காள ராஜ்யம் தியாகம் புரிந்தது. (பலத்த கரகோஷம்)

இந்திய நாடு சுயேச்சையான வாழ்வு பெறுவதற்கான போராட்டத்தில் தமக்குரிய பங்கை வங்க மக்கள் மிகவும் நன்கு உணர்ந்திருந்தனர். இம்மக்களுக்கு வாழ்த்துக் கூறும் வாய்ப்புக் கிடைத்துள்ளது குறித்து நாங்கள் மனம் மகிழ்கிறோம். சோவியத் நாட்டின் மக்களுடைய ஆர்வ மிகுந்த வாழ்த்துக்களை மகிழ்ச்சியுடன் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம். அருமை நண்பர்களே, உங்களுடைய ராஜ்யத்தை வலிமையுறச் செய்வதில் நீங்கள் வெற்றி பெறுவீர்களாக என்று வாழ்த்துகிறோம். (பலத்த கரகோஷம்)

தாய்த் திருநாட்டின் சுயேச்சையை வென்று கொண்டுள்ள மக்கள் அந்த சுயேச்சையைப் பலமடையச் செய்வதென்ற மகத்தான இலட்சியத்திற்காகப் போராடும்போது அவர்களிடமிருந்து அளவு கடந்த சக்திகள் வெளிப்படும். எங்கள் நாட்டின் அனுபவத்திலிருந்து நாங்கள் கண்டுள்ள உண்மை இது. எங்கள் மக்கள் சக்திமிகுந்த தமது சொந்தத் தொழில்களைக் கட்டியமைத்துக் கொண்டார்கள். யாரும் எங்களுக்கு உதவிபுரியவில்லை என்பதுடன், முதலாளித்துவ அரசுகள் சகல வழிகளிலும் எங்களுக்கு இடையூறு செய்தன.

ஆயினும் எங்களுடைய உள்நாட்டு செல்வாதாரங்கள் அனைத்தையும் பயன்படுத்தி நாங்கள் சக்தி மிகுந்த ஒரு சோஷலிஸ அரசைக் கட்டியெழுப்பியுள்ளோம்.

சக்தி வாய்ந்த இயந்திரத் தொழில்கள் இன்று உள்ளன. எங்கள் தேசப் பொருளாதாரத்தை வளர்ந்தோங்கச் செய்வதில் நாங்கள் பெரும் பெரும் வெற்றிகளைப் பெறுவதற்கு இவை துணைபுரிகின்றன.

சொந்தத்தில் தொழில்களை உருவாக்கி வளர்த்துக் கொள்வது தான், எந்தப் பெரிய அரசின் சுயேச்சையையும் வலுவடையச் செய்வதற்கான மூலாதாரமான அடிப்படையாகும். உங்கள் சொந்தத் தொழில்களை வளர்த்துக் கொள்வதில் நீங்கள் வெற்றி பெறுவீர்களாக! என்று முழு மனதுடனும் ஆர்வமுடனும் நாங்கள் ஆசி கூறுகிறேம். (கரகோஷம்)

சக்தி மிகுந்த உங்கள் சொந்தத் தொழில்களை வளர்த்துக் கொள்வதற்கான செழுமிய சக்திகள் உங்களிடம் உண்டு. அபரிமிதமான கச்சாப் பொருள் மூலாதாரத்தை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். பிரயாசை மிகுந்த, தேர்ச்சி வாய்ந்த மக்கள் இங்குள்ளனர். நீங்கள் இன்னமும் போதுமான அனுபவம் பெறவில்லை என்பது மெய் தான். ஆனால் எங்களுடைய அனுபவத்தை உங்களுடன் பகிர்ந்துகொள்ள நாங்கள் தயாராயிருக்கிறேம்; அவசியமான தொழில் நுட்ப ஆற்றலை உங்களுக்குக் கொடுத்து உதவ நாங்கள் தயாராயிருக்கிறேம். (கரகோஷம்)

நாங்கள் எங்கள் தொழில்களைக் கட்டியமைக்கத் தொடங்கியபோது இத்தகைய சாதக நிலைமைகள் எங்களுக்கு இருக்கவில்லை ; இத்தகைய நண்பர்கள் எங்களுக்குக் கிடைக்கவில்லை. ஆனால் சகலவிதமான இன்னல்களையும் தாக்குப்பிடிக்கவல்ல சக்திகளை நாங்கள் எங்கள் மத்தியிலிருந்தே பெற முடிந்தது. மிகுந்த சக்தி படைத்த தனது சொந்தத் தொழில்களை இந்திய நாடு கட்டியமைத்துக் கொள்ளுமென நாங்கள் நம்புகிறேம்.

முதலாளித்துவ அமைப்பும் சோஷலிஸ அமைப்பும் சமாதானமாக ஒருங்கே ஒத்துவாழ வேண்டுமென்ற கருத்தை சோவியத் ஆட்சி ஆரம்பமான முதலாவது ஆண்டுகளிலேயே மேதை லெனின் பறைசாற்றினர். சோஷலிஸ அமைப்பு இடைவிடாமல் தொடர்ந்து வளர்ந்து வலிமை பெறுமென்றும், முதலாளித்துவ நாடுகள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் சோவியத் நாட்டுடன் அவை வர்த்தகம் புரிந்து எங்களுடன் நெருங்கிய பொருளாதாரத் தொடர்புகள் கொள்ளும்படி ஏற்படுமென்றும் லெனின் கூறினர்.

அரசுகளுடைய அரசியல் அமைப்பு எப்படி இருப்பினும் அவை யாவற்றினிடையிலும் சமாதானபூர்வமான உறவுகள் நிலவவேண்டுமென்றும், பெரியவை சிறியவை என்ற பேதமின்றி எல்லா நாடுகளும் சுயேச்சையான வளர்ச்சிப் பாதையில் முன்னேற வேண்டுமென்றும், அவற்றின் பிரதேச உரிமை மதிக்கப்பட வேண்டுமென்றும், எந்த அரசும் இதர அரசுகளின் உள்விவகாரங்களில் தலையிடக்கூடாதென்றும்தான் சோவியத் மக்களாகிய நாங்கள் என்றுமே கூறி வந்துள்ளோம். இன்றும் கூறிவருகிறேம். எனவேதான் இந்தியாவின் பிரதம மந்திரி நேரு அவர்களும் மகத்தான சீன மக்களின்

பிரதிநிதி சௌ என்-லாயும் கையொப்பமிட்ட அறிக்கையில் எடுத்துக்கூறப்பட்ட ஐம்பெருங் கோட்பாடுகளை நாங்கள் இத்தனை உற்சாகத்துடன் அங்கீகரிக்கிறோம். (கரகோஷம்) இந்த கோட்பாடுகள் எங்கள் அயல்நாட்டுக் கொள்கைக்கு முற்றிலும் இசைந்துள்ள கோட்பாடுகள். சோவியத் யூனியன், இந்தியக் குடியரசு ஆகிய இருநாடுகளின் கூட்டடிக்கையில் கையொப்பமிட்டுள்ள நாங்கள் இந்த ஐம்பெருங் கோட்பாடுகளை முழு மனதுடன் ஆதரிக்கிறோம். (கரகோஷம்)

நண்பர்களே! சமாதான ஆக்கல் வேலைகளில் ஈடுபட்டுள்ள நம்மிரு தேச மக்களும் சமாதானத்தைப் பேணிப் பாதுகாப்பதிலும் பலமடையச் செய்வதிலும் ஆழ்ந்த அக்கறைகொண்டுள்ளவர்கள். சமாதானத்திற்கான போராட்டதிலே இந்திய மக்களுக்கும் சோவியத் மக்களுக்குமிடையே நட்புறவு வளர்ந்தோங்கி வலிமையடைந்து வருகிறது.

அவரவருக்கும் உரித்தான சொந்த வழியைப் பின்பற்றிவரும் நம்மிரு தேச மக்களும் பிரகாசமான எதிர்காலத்திற்காகப் போராடி வருகிறார்கள்.

நம்மிருவரிடையே நட்புறவு மேலும் பலமடைவதும், அனுபவங்கள் பரஸ்பரம் பரிவர்த்தனை செய்துகொள்ளப்படுவதும் பொருளாதார, கலாச்சாரத் தொடர்புகள் விரிவாக வளர்வதும், நம்மிரு மக்களும் அவர்களுடைய புனிதமான குறிக்கோள்களை விரைவில் வந்தடைவதற்குத் துணைபுரியுமென்பதில் சந்தேகமில்லை.

நம்முடைய நட்பு இந்திய மக்களையும் சரி, சோவியத் மக்களையும் சரி பொருளாதாரரீதியிலும் ஆன்மீகரீதியிலும் வளமடையச் செய்கிறது.

எனினும் இந்திய, சோவியத் மக்களிடையே நிலவும் இந்த நட்புறவு சிலருக்கு வயிற்றெரிச்சலை உண்டாக்குகிறது. இந்த நட்புறவை அழித்துவிடவேண்டும்மென்று அவர்கள் விரும்புகிறார்கள். சில அரசுகளைச் சேர்ந்த சில வட்டாரங்கள் ஏன் இத்தகைய முயற்சிகளை மேற்கொள்கின்றன என்பதை நாம் நன்கறிவோம். பல்வேறு தேச மக்களிடையிலும் நட்புறவு நிலவுவதைக் கண்டு அவை நடுங்குகின்றன; ஏனெனில் இந்நட்புறவு அகில உலகிலும் சமாதானத்தை வலுப்படுத்த உதவி புரிகிறது.

வேறு சில அரசுகளின் சர்க்கார்கள் செய்துவருவது போல் நாங்கள் இதர நாடுகள்மீது எங்கள் கருத்துக்களையும் எங்கள் வாழ்க்கை நெறியையும் பலவந்தமாக என்றுமே திணித்ததுமில்லை. இனியும் என்றுமே திணிக்கப்போவதுமில்லை. அந்தந்த நாடும் தெரிந்தெடுத்துக் கொண்டுள்ள வாழ்க்கை நெறியைப் பரஸ்பரம் மதித்து நடப்பதென்ற அடிப்படையில் தான் இதர நாடுகளுடன் நாங்கள் எங்கள் உறவுகளை அமைத்துக்கொள்கிறோம்.

யுத்த ஆயுதங்களைக் குறைப்பதற்காகவும், அணுசக்தி, நீர்வாயு ஆயுதங்களுக்குத் தடை விதிப்பதற்காகவும் நாங்கள் போராடுகிறோம். (கரகோஷம்). ஆனால் இதில் மேலைய நாடுகள் எங்கள் முயற்சிகளுக்குத் தக்கபடி ஆதரவளிக்காமல் இருக்கின்றன; இது வருந்தத் தக்கது. ஆயுத உற்பத்திப் போட்டியினால் ஏகபோக முதலாளிகள் கொள்ளை லாபம் பெருவதால் அவர்கள் இதை விரும்பவில்லை. மேலும் எங்கள் மக்களுடைய தேசப் பொருளாதாரத்தின் சமாதானபூர்வமான வளர்ச்சிக்காக அதிகமான செல்வாதாரத்தை நாங்கள் பயன்படுத்த முடியாதபடி செய்யும் பொருட்டும், பொருளாதாரத் துறையில் பின்தங்கியுள்ள நாடுகளுக்கு நாங்கள் உதவிபுரிய முடியாதபடி செய்யும் பொருட்டும், கூடுதலான செல்வதாரங்களைத் தற்காப்பு வேலைகளுக்காகச் செலவிடும்படி எங்களை நிர்பந்தம் செய்ய அவர்கள் விரும்புகிறார்கள். ஆயுத உற்பத்தி குறையவேண்டுமென அவர்கள் விரும்பாமலிருப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

பிற்போக்கு சக்திகளை தக்கபடி கட்டுப்படுத்தி, அணுசக்தி ஆயுதங்களுக்குத் தடைவிதிக்கப்படும்படி செய்வதே நம்முன்னுள்ள வேலை. ஆயுதப் பரிஹரணம் அமுலுக்கு வருவதை மேற்பார்வை செய்வதற்கான கண்ட்ரோல் அமைப்பு வேண்டுமெனக் கூறுகிறோம் நாம். இவ்வமைப்பு போலி அமைப்பாக இல்லாது உண்மையான கண்ட்ரோல் அமைப்பாக இருக்கவேண்டுமென்கிறோம் நாம். (கரகோஷம்)

உங்களுடைய அற்புத நகருக்கு வர முடிந்துள்ளது குறித்து நாங்கள் உண்மையிலேயே பூரிப்படைகிறோம். ஏனெனில் இந்நகர் தொழிற் துறையிலும், கலாச்சாரத் துறையிலும் இந்தியாவின் மிகப் பெரியதோர் கேந்திரமாகும்; தவிரவும் கல்கத்தா நகர் வங்க மக்களின் அரும் புதல்வரும் மேதாவிலாசமுடைய எழுத்தாளரும் சமூக ஊழியருமான ரவீந்திரநாத் தாகூரின் பிறப்பிடமாகும். (கரகோஷம்). ரவீந்திரநாத் தாகூர் சோவியத் நாட்டின் உண்மை நண்பர். சோவியத் மக்கள் அவரைப் பெரிதும் போற்றுகிறார்கள்; அவரது நூல்களை மிகவும் பாராட்டுகிறார்கள். (கரகோஷம்)

எங்கள் தேசத்தவரான ஜிராஸிம் லெபதெவ் உங்கள் நகரில்தான் வாழ்ந்து வந்தார். இந்திய அறிவாளிப் பகுதியினரின் முற்போக்கு பிரதிநிதிகளுடன் சேர்ந்து அவர் 1759-ம் ஆண்டில் முதலாவது வங்காள நாடக மன்றத்தை நிறுவினார்.

நம்மிரு நாடுகளிடையிலுள்ள தொடர்புகள் வளர்ந்து வலிமையுற வேண்டுமென நாங்கள் ஆசைப்படுகிறோம். உங்கள் மக்கள் மென்மேலும் கூடுதலாக எங்கள் நாட்டிற்கு விஜயம் செய்யவேண்டுமென ஆசைப்படுகிறோம். எங்கள் நாட்டில் எப்பொழுதும் உங்களுக்கு இதய பூர்வமான அமோக வரவேற்பு கிடைக்கும். (கரகோஷம்)

அருமை நண்பர்களே, ஆர்வமும் அன்பும் கரைபுரண்டோடும் முறையில் நீங்கள் எங்களுக்கு அளித்த இந்த வரவேற்பிற்காக மீண்டும் உங்களுக்கு நன்றி கூறுவதற்கு அனுமதியுங்கள். சோவியத் மக்களிடம் நீங்கள் கொண்டுள்ள நேசத்திற்கும் அன்பிற்கும் இந்த வரவேற்பு ஒரு அறிகுறியாகுமென நாங்கள் கருதுகிறோம். இந்த நேசம் குறித்தும் அன்பு குறித்தும் நாங்கள் மிகுந்த பெருமிதமடைகிறோம். இந்திய மக்களும் சோவியத் மக்களும் சகோதரர்கள் ஆவர்! (பலத்த கரகோஷம்)

தலைசிறந்த ராஜதந்திரியும் அரசியல் தலைவருமான ஜவாஹர்லால் நேரு அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். அவரிடம் நாங்கள் மனப்பூர்வமான ஆழ்ந்த மரியாதை கொண்டுள்ளோம். (கரகோஷம்). உங்கள் நாட்டிற்கு விஜயம் செய்து அதன் வாழ்க்கையைப்பற்றியும் சிறப்புடைய இந்திய மக்கள்பற்றியும் பரிச்சயமடைய வாய்ப்பளித்ததற்காக அவருக்கு மீண்டும் நாங்கள் நன்றி தெரிவிக்க விரும்புகிறோம்.

இந்திய, சோவியத் மக்களிடையே உள்ள சகோதர நட்புறவு வலிமையடைந்து வளர்ந்தோங்குக! (கரகோஷம்)

அகில உலகிலும் சமாதானம் நீடூழி வாழ்க! (நீடித்த கரகோஷ முழக்கம்)

## 1955 டிசம்பர் 8-ம் தேதி ஜெய்பூர் நகரசபை வரவேற்பில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

முதன் மந்திரி அவர்களே!

மேயர் அவர்களே!

அருமை நண்பர்களே!

எனது சார்பாகவும், தோழர் நிகிதா செர்ஜெயேவிச் குருஷேவ் சார்பாகவும், எங்களுடன் வந்துள்ள இதர நண்பர்கள் சார்பாகவும், பல கோடி சோவியத் மக்கள் அனைவரின் சார்பாகவும் உங்களுக்கு நேச வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். (கரகோஷம்)

அருமை நண்பர்களே!

உங்களுடைய அன்பு வாழ்த்துக்களுக்கும், சகோதரர்களைப்போல் எங்களைக் கருதி நீங்கள் உபசரிப்பதற்கும் எங்களது மனமார்ந்த நன்றி உரித்தாகுக! (கரகோஷம்)

ஜெய்பூர் மகோன்னதமான பண்டைப்பெரும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நகரம்; இந்தியக் கட்டிடக் கலையின் அற்புதமான சின்னங்கள் நிறைந்த நகரம் என்பது பிரசித்தம்.

ஜெய்பூர் நகர மக்கள், ராஜஸ்தான் மக்கள் அனைவருடனும் சேர்ந்து, தமது நாட்டின் தேச சுயேச்சைக்காக நீண்ட நெடுங்காலமாகப் போராடி வந்துள்ளனர் என்பதையும், இந்திய சுதந்திரப் போராட்டத்தின் வரலாற்றின் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய பல வீரச் செயல்களை ஆற்றியுள்ளனர் என்பதையும் நாங்கள் அறிவோம். (கரகோஷம்) கல்நெஞ்சம் கொண்ட இயற்கைக்கு எதிராக ராஜஸ்தானிய மக்கள் எத்தகைய தைரியத்துடன் போராடி வருகிறார்கள் என்பதையும் நாங்கள் அறிவோம். இந்த ராஜ்யத்தின் வறண்ட பிரதேசங்கள் மக்களின் நல்வாழ்வில் மூலாதாரமான பசுமை நிறைந்த பயிர் நிலங்களாகவும், பூத்துக் காய்த்துத் குலுங்கும் பழத் தோட்டங்களாகவும், மாறவேண்டும் என்றும், இந்தப் பணியில் ராஜஸ்தானிய மக்கள் வெற்றியடைய வேண்டும் என்றும் நாங்கங் வாழ்த்துக் கூறுகிறோம். (பலத்த கரகோஷம்)

இந்தியாவில் தங்கியிருந்த இந்நாட்களில் நாங்கள் உங்கள் மகத்தான நாட்டின் பல நகரங்களையும் இடங்களையும் சுற்றிப் பார்த்தோம். பல விஷயங்களைத் தெரிந்து கொண்டோம். எங்கும் எங்களை அன்புடன் வரவேற்று, சோவியத் மக்களிடத்தில் தாம் கொண்டுள்ள அத்தியந்த நட்பை வெளிப்படுத்திய இந்திய மக்களை நாங்கள் பரிச்சயம் செய்து கொண்டுள்ளோம். (பலத்த கரகோஷம்)

இந்த மனமார்ந்த சகோதர வரவேற்பு எங்கள் உள்ளத்தைப் பெரிதும் ஆட்கொண்டு விட்டது. இதை நாங்கள் என்றும் மறக்க மாட்டோம். (பலத்த கரகோஷம்)

இந்திய மக்களுக்கும் சோவியத் மக்களுக்கும் இடையில் நிலவும் நட்புறவு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த மகத்தான சாதனையாகும். யுத்தத்திற்கு எதிராகவும், சமாதானத்தையும் பந்தோபஸ்தையும் நிலைபெறச் செய்வதற்காகவும் சமாதான வேட்கை கொண்ட உலக மக்கள் நடத்தும் போராட்டத்தில் தோன்றியது இந்த நட்புறவு. நமது மக்களிடையிலுள்ள நட்புறவு சமாதான சக்திகளை மேலும் வலிமையுறச் செய்வதற்கு பிரமாத வாய்ப்பை ஏற்படுத்தும் மகத்தான முக்கியத்துவம் வாய்ந்ததாகும். (கரகோஷம்)

பிரசித்திபெற்ற "பஞ்சசீலம்" என்னும் ஐம்பெரும் கோட்பாடுகளின் அடிப்படையில் அமைந்திருக்கிறது நம்மிரு நாடுகளுக்கிடையிலுள்ள உறவு. (பலத்த கரகோஷம்). இந்தக் கோட்பாடுகளை சோவியத் யூனியன் தடம் புரளாமல் உறுதியாகப் பின்பற்றி வருகிறது. (கரகோஷம்)

நமது மகத்தான நாடுகளின் நன்மையை உத்தேசித்தும், சமாதான இலட்சியத்தின் நன்மைக்காகவும் இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையில் நட்புறவும் ஒத்துழைப்பும் வளர்ந்து வலிமையுற வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். (நீடித்த கரகோஷம்)

அருமை நண்பர்களே! இந்த அற்புத நகராம் ஜெய்பூரும், உங்கள் ராஜ்யமும், இந்திய மக்கள் அனைவரும் வெற்றிமேல் வெற்றிபெற்று மென்மேலும் சுபீட்சமும் ஆனந்தமும் பெறவேண்டும் என்று வாழ்த்துகிறோம். (நீடித்த கரகோஷம்)

எங்கள் நாட்டின் மகத்தான நண்பனாகிய பூரண அரசுரிமை கொண்ட சுயேச்சை இந்தியக் குடியரசு மென்மேலும் வளர்ந்து வலுப்பெற்று பெருவாழ்வு வாழ்வதாகுக! (கரகோஷம்)

இந்திய-சோவியத் மக்களின் நட்புறவு நீடூழி வாழ்க! (பலத்த கரகோஷம்)

* * *

"இந்தியர்களும் ரஷ்யர்களும் சகோதரர்கள்" என்ற கோஷத்துடன் என். ஏ. புல்கானின் தனது சொற்பொழிவை முடித்துக்கொண்ட போது, கூட்டத்திலிருந்த மக்கள் வானதிரக் கரகோஷம் செய்தனர்.

கூட்டம் முடிவுற்றதும் கைத்தொழிலாளர்களின் கலைப்படைப்புகள் பல, விருந்தினர்களுக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டன. அதன் பிறகு என். ஏ. புல்கானினுக்கும், என். எஸ். குருஷேவுக்கும் ராஜப்பிரமுகர் அவர்கள் ஒரு விருந்துபசாரம் நடத்தினர்.

## 1955 டிசம்பர் 9-ம் தேதி ஸ்ரீநகர் விமான நிலையத்தில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

சதார்–இ–ரியாசத் அவர்களே!

பிரதம மந்திரி அவர்களே!

கனவான்களே!

உள்ளம் நிறைந்த அன்பு வரவேற்பிற்காக உங்களுக்கும், உங்கள் மூலம் காஷ்மீர் மக்களுக்கும் எங்களுடைய மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தியாவிலே பல நகரங்களையும், இயந்திரத் தொழிற்சாலைகளையும் தோட்டக்காடுகளையும், நிர்மாண வேலை ஸ்தலங்களையும், விஞ்ஞானக் கழகங்களையும் நாங்கள் பார்வையிட்டோம். இந்த மாபெரும் நாட்டில் பார்த்ததனைத்தும், எங்கள் மனதிலே வரைந்த சித்திரங்களும், நினைவுகளும், கருத்துக்களும் இப்பொழுது எங்கள் சிந்தனையில் நிரம்பி நிற்கின்றன.

பிரமாதமான வாய்ப்புகளும், செல்வாதாரங்களும் பொதிந்து கிடக்கும் நாடு, இந்தியா! பொருளாதார ரீதியில் சக்திவாய்ந்ததொரு நவ இந்தியாவை நிர்மாணிப்பதற்காக இந்திய மக்கள் முழு உறுதி பூண்டிருக்கின்றனர்.

எங்கள் சுற்றுப் பிரயாணத்தின்போது இந்தியாவில் வாழும் பல தேசிய இனத்தவர்களை சந்தித்தோம். மொழியிலும், சரித்திரபூர்வமான பாரம்பரியங்களிலும், கலாச்சாரத்திலும் அவர்களிடையில் வேறுபாடுகள் உண்டு. ஆயினும் அவர்கள் யாவரும் சமாதான ஆர்வத்திலும், சமாதான பூர்வமான நிர்மாணப் பணியில் கொண்டுள்ள வேட்கையிலும் ஒருமித்த வர்களாவர். சமாதானத்திற்கான பணியிலே இந்திய மக்களுக்கு விசுவாசமுள்ள, மாருத நண்பர்களாக சோவியத் மக்கள் விளங்குகின்றனர் என்று நான் உறுதிகூற முடியும். (கரகோஷம்)

இந்தியப் பிரயாணம் எங்களுக்கு மிகவும் பிரயோஜனகரமாக இருந்தது. இந்தியாவைப்பற்றி நாங்கள் தெரிந்து வைத்திருந்தது மிகவும் குறைவானவை என்பதை நாங்கள் ஒளிவுமறைவின்றி ஒப்புக்கொள்ளத் தான் வேண்டும். எங்களுக்கு அன்புடன் அளிக்கப்பட்ட வாய்ப்பின் காரணமாக நாங்கள் தென் இந்தியா, மத்திய இந்தியாபூராவிலும் சுற்றுப்பிரயாணம் செய்ய முடிந்தது. ஆனால் இந்நியாவின் வட பகுதிக்கு விஜயம் செய்யாமல், இந்தியாவைப்பற்றிய முழுமையான சித்திரத்தை நாங்கள் பெற்றிருக்க முடியாது. (கரகோஷம்) இதனால் தான் சதார்-இ-ரியாசத் அவர்கள் காஷ்மீருக்கு வருமாறு விடுத்த அழைப்பை நாங்கள் பெரு மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டோம். (கரகோஷம்) காஷ்மீரின் அலாதி இயற்கை அழகும், அதன் மக்களின் சுயச் சிறப்புடைய கலாச்சாரத்தின் வளமும், அதன் பெருங்குடி மக்களாகிய கைத்தொழிலாளர்களுடைய கலைத்திறனும் காஷ்மீருக்கு உலகப் புகழை அளித்துள்ளன. எனவேதான் காஷ்மீருக்கு வருவது எங்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி அளிக்கக்கூடியதாக உள்ளது. மேலும் காஷ்மீர் எங்கள் நாட்டிற்கு அருகாமையில் உள்ளது. சோவியத் மக்களின் பிரதிநிதிகளாகிய எங்களுக்கு இங்கு வருவது மகிழ்ச்சி அளிக்கக் கூடியதாக இருப்பதற்கு இதுவும் மற்றொரு காரணமாகும் மேலும் கடந்த காலத்தில் நாங்கள் எப்பொழும் காஷ்மீருடன் விரிவான வர்த்தகத் தொடர்புகளைப் பெற்றிருந்தோம். (கரகோஷம்)

காஷ்மீர் மக்களின் வாழ்க்கையையும் சாதனைகளையும், வளமும் சுயச் சிறப்பும் உடைய அவர்களது கலாச்சாரத்தையும், பார்த்துப் பரிச்சயம் செய்துகொள்வதற்காக, எங்களது காஷ்மீர் விஜயத்தைப் பயன்படுத்து வதற்கு நாங்கள் விரும்புகிறோம்.

அருமை நண்பர்களே! உங்கள் அன்பு வரவேற்பிற்காக மீண்டும் ஒருமுறை நன்றி கூறுகிறேன். (பலத்த கரகோஷம்)

## 1955 டிசம்பர் 10-ம் தேதி ஸ்ரீநகரில் காஷ்மீரின் சதார்-இ-ரியாசத் அளித்த விருந்துபசாரத்தில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

சதார்-இ-ரியாசத் அவர்களே!

நேசமும் பாசமும் மிகுந்த உங்கள் வரவேற்பிற்காக, இங்கு நீங்கள் எங்களைப் பார்த்துக் கூறிய அன்பு மொழிகளுக்காக, உங்களுக்கு மனமார்ந்த நன்றி தெரிவித்துக் கொள்கிறோம். காஷ்மீருக்கு விஜயம் செய்ய வேண்டும் என்ற உங்களது அழைப்பை நாங்கள் ஆழ்ந்த திருப்தியுடன் ஏற்றுக் கொண்டோம்.

செழுமிய கலாச்சாரத்தைப் பெற்றுள்ள காஷ்மீர், தலைசிறந்த பல விஞ்ஞானிகளையும், சரித்திர நிபுணர்களையும், எழுத்தாளர்களையும், அரசியல் வாதிகளையும் கலை ஊழியர்களையும் இந்தியாவிற்கு அளித்துள்ளது. இவர்களைப் பற்றி சோவியத் மக்கள் நன்கு அறிவார்கள்.

திறமையும் பிரயாசையும் மிகுந்த காஷ்மீரின் கைத் தொழிலாளர்களின் படைப்புகள் சோவியத் யூனியனில் பெரிதும் போற்றப்படுகின்றன. அவர்களுக்குக் கிடைத்துள்ள இப்புகழ் முற்றிலும் நியாயமானதே. இந்நகரின் கைத் தொழிலாளர்களின் கலையழகுமிகுந்த படைப்புகளைக் கொண்ட கண்காட்சியை இன்று நாங்கள் கண்ணுற்றபோது, உங்களுடைய கைத்தொழிலாளர்களின் மிக உயர்ந்த வேலைத் திறனை நாங்கள் மீண்டும் உணர முடிந்தது.

இந்தியாவிலுள்ள இதர மக்களுடன் சேர்ந்து, திறமையும் சுறு சுறுப்பாகப் பாடுபட்டுழைக்கும் பண்பும் உடைய காஷ்மீர் மக்கள் பொருளாதார, கலாச்சார துறைகளில் புதியபுதிய வெற்றிகளைக் காண்பார்கள் என்று நாங்கள் திடமாக நம்புகிறோம்.

சதார்-இ-ரியாசத் அவர்களே! "பஞ்சசீலம்" எனப்படும் ஐம்பெரும் கோட்பாடுகளின் அடிப்படையில் சமீப காலத்தில் நமது இரு நாடு

களுக்கு இடையில் மிகுந்த பலன்தரும் வகையில் ஒத்துழைப்பு வளர்ந் தோங்கியிருப்பதாக, தாங்கள் குறிப்பிட்டது முற்றிலும் உண்மை. இந்த ஐம்பெரும் கோட்பாடுகள் நமது இரு நாடுகளும் சமாதானமாக ஒருங்கே ஒத்துவாழ்வதற்கும் ஒன்றோடொன்று ஒத்துழைப்பதற்கும் உத்திரவாத மளிக்கின்றன என்பது மட்டுமின்றி, உலகமுழுதும் சமாதானத்தையும், சந்தோபஸ்தையும் பலப்படுத்தும் பணிக்கும் சேவை புரிகின்றன.

சர்வதேசக் கெடுபிடி நிலையைத் தணிவுறச் செய்வதற்கும், சர்வதேச உறவுகளில் நம்பிக்கையும் சவுஜன்யமும் உறுதிபெறுவதற்கும், சர்வ தேசப் பிரச்னைகளுக்கு பேச்சுவார்த்தைகளின் மூலம் பூரணமான தீர்வு காண்பதற்கும் சோவியத் யூனியன் முழுமூச்சுடன் நிலைபிறழாமல் பாடு பட்டுவந்துள்ளது. இராணுவக் கூட்டணிகளை நிறுவும் கொள்கைகள் கைவிடப்பட வேண்டும் ; ஆயுத உற்பத்திப் போட்டி முடிவடைய வேண் டும் ; இராணுவப் படைகளும் ஆயுதபலமும் படிப்படியாக குறைக்கப்பட வேண்டும் ; அணு, நீர்வாயு ஆயுதங்களை உற்பத்தி செய்வதும் பிரயோ கிப்பதும் பரிபூரணமாகத் தடைசெய்யப்பட வேண்டும். இத்தகைய நட வடிக்கைகளின் மூலம் சர்வதேச ரீதியில் பரஸ்பர நம்பிக்கையும் சவுஜன்யமும் நிலைநாட்டப்பட்ட பிறகே, சர்வதேசக் கெடுபிடி நிலைமை உண்மையான முறையில் தணிவுற முடியும் என்று நாங்கள் திடமாக நம்புகிறோம்.

இப்பிரச்னைகள் பலவற்றில் எங்கள் கருத்தையே இந்தியாவும் கொண்டுள்ளது என்பது குறித்து நாங்கள் மிகுந்த திருப்தி அடை கிறோம்.

நீங்களும், உங்கள் மக்களும், காஷ்மீரின் மக்கள் அனைவரும் வெற்றிக்குமேல் வெற்றி பெறவேண்டும்; மென்மேலும கூடுதலான வெற்றிகளைக் காண வேண்டும் என்று நான் வாழ்த்துகிறேன்.

நீங்கள் எங்களுக்கு அளித்துள்ள நேசமும் பாசமும் மிகுந்த வரவேற்பு, உங்கள் மக்கள் சோவியத் யூனியனிடம் கொண்டுள்ள நட்புறவுக்கு அத்தாட்சியாகும்.

இந்திய-சோவியத் மக்களின் நட்புறவு நீடூழி வாழ்க !

உலக சமாதானம் என்றென்றும் தழைத்தோங்குக !

# 1955 டிசம்பர் 10-ல் ஸ்ரீநகரில் காஷ்மீர் பிரதமர் அளித்த வரவேற்பு உபசாரத்தின்போது என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

அருமை நண்பர்களே!

எங்களுக்கு நீங்கள் அளித்த மனமார்ந்த வரவேற்பிற்காக, ஜம்மு-காஷ்மீர் ராஜ்யத்தின் சதார்-இ-ரியாசத் யுவராஜ் கரன் சிங் அவர்களுக்கும், ஜம்மு-காஷ்மீர் ராஜ்யத்தின் பிரதம மந்திரி பக்ஷி குலாம் மகமத் அவர்களுக்கும், இங்கு பிரசன்னமாகியுள்ள உங்கள் எல்லோருக்கும், உங்கள் ராஜ்யத்தின் மக்கள் அனைவருக்கும் முதலில் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். (நீடித்த கரகோஷம்)

காஷ்மீர் மக்கள் அளித்த அமோகமான வரவேற்பை என்றுமே நாங்கள் மறவோம். நதியில் நேற்று படகுகளில் நாங்கள் சென்றபோது, நதியின் இருமருங்கிலும் திரளாக நின்றிருந்த காஷ்மீர் மக்களும், ஸ்ரீநகரின் தெருக்களெங்கும் கூடியிருந்த ஏராளமான மக்களும் உளங் கனிந்த அன்புடன் எங்களை வாழ்த்தி வரவேற்ற கண்கொள்ளாக் காட்சியை நாங்கள் மறக்கவேமாட்டோம். நாங்கள் விஜயம் செய்த இதர இந்திய நகரங்களிலும் ராஜ்யங்களிலும் உள்ள மக்களைப் போலவே, காஷ்மீர் மக்களும் தமது நண்பர்களும் சகோதரர்களுமான சோவியத் மக்களிடத்தில் உண்மையான நட்பும் நேசமும் கொண்டிருப்பதை எடுத்துக்காட்டும் இந்த அமோக வரவேற்பு எங்கள் உள்ளங்களை ஆட்கொண்டுவிட்டது. (கரகோஷம்)

சோவியத் யூனியன் மத்திய ஆசிய குடியரசுகளான டாஜிகிஸ்தான், டர்க்மெனிஸ்தான், உஸ்பெக்கிஸ்தான், ஆகியவற்றிற்கு மிகவும் அருகாமையில் உள்ளது உங்கள் ராஜ்யம். (கரகோஷம்) எனவேதான், காஷ்மீருக்கு வருமாறு உங்கள் ராஜ்யத்தின் அதிபர் மதிப்பிற்குரிய யுவராஜ் கரன்சிங் அவர்கள் எங்களுக்கு அளித்த அழைப்பை நாங்கள் நன்றியுடன் ஏற்றுக்கொண்டோம். மேலும், இந்த ராஜ்யம், நாங்கள் பெரிதும் போற்றும் உங்கள் பிரதம மந்திரி நேரு அவர்களின் தாயகமாகும். இத்தகைய உங்கள் ராஜ்யத்திற்கு விஜயம் செய்வதற்கு நாங்கள் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம்.

தவிரவும், உங்கள் நாட்டின் சீதோஷ்ண நிலைமைகள் எங்களுடைய மத்திய ஆசியக் குடியரசுகளின் சீதோஷ்ண நிலைமைகளை ஒத்திருக்கிறது எனலாம்; விவசாயப் பயிர்களை எடுத்துக்கொண்டாலும் இங்கும் அங்கும் அனேகமாக ஒரேவிதமான பயிர்கள்தான் சாகுபடியாகின்றன. இங்கே நாங்கள் வந்து சேர்ந்ததும், எங்கள் அருமை நாட்டின் தென் மத்திய ஆசியப் பகுதிக்கு வந்திருப்பதுபோன்ற உணர்வு எங்களுக்கு

ஏற்பட்டது. காஷ்மீரிலும, இந்த ராஜ்யத்தின் தலைநகர் ஸ்ரீநகரிலும் வாழும் மக்கள் பல்வேறு இனத்தவர்களாவர். இங்கே காஷ்மீரிகளும், டோக்ராக்களும், லடாக்கிகளும் வசிக்கின்றனர். இதேபோல் காஷ்மீர் மக்களிடையில் இந்துக்களும், முஸ்லிம்களும், சீக்கியர்களும், இதர தேசிய இனத்தவர்களும் மதத்தினர்களும் வாழ்கின்றனர். ஆனால் ஸ்ரீநகரின் வீதிகளின் வழியாக நாங்கள் சென்றபோது, சகல மதத்தவர்களும் தேசிய இனத்தவர்களும் ஒருங்கே ஏகோபித்து எங்களை அன்புடன் வரவேற்றதை நாங்கள் உணரமுடிந்தது. இந்த அன்பை அவர்கள் கோஷித்த வாழ்த்துக்கோஷங்களிலும் ஸ்ரீநகர் மக்கள் எங்களைப் பார்த்துக் கூறிய அன்புமொழிகளிலும் பார்க்க முடிந்தது.

இந்தியக் குடியரசின் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு அவர்கள் இந்தியாவின் இதர ராஜ்யங்களில் உள்ளதுபோல் இங்கும் பிரமாத புகழும் செல்வாக்கும் பெற்று விளங்குகிறார். (நீடித்த கரகோஷம்) அவரது பெயருடன்தான் இவை யாவும் பின்னிப் பிணைந்துள்ளது.

பல்வேறு தேசிய இனங்கள், மத நம்பிக்கைகளைச் சேர்ந்த ஜம்மு-காஷ்மீர் ராஜ்யத்தின் மக்கள் ஒருமித்து நண்பர்களாக வாழ்கின்றனர் என்பதையும், தமது அரும்பெரும் இந்தியக் குடியரசின் சுபீட்சத்திற்காக பணியாற்ற விரும்புகின்றனர் என்பதையும் இது எடுத்துக் காட்டுகிறது. (கரகோஷம்)

பல்வேறு தேசிய இனத் தலைவர்கள் நேசபூர்வமாகக் கலந்து ஒத்துழைப்பதை நாங்கள் பெரிதும் விரும்புகிறோம், நன்கு புரிந்துகொள்கிறோம். எங்கள் நாடு பல தேசிய இனங்களைக் கொண்டது. பல்வேறு மத நம்பிக்கைகளைப் பின்பற்றும் மக்கள் சோவியத் யூனியனில் வாழ்கின்றனர். ஆயினும் இதனால் எவ்வித தப்பபிப்பிராயங்களும் ஏற்படுவதில்லை; சோவியத் மக்கள் ஒருமித்த ஒரே குடும்பத்தினரைப்போல், குதூகலமாக ஒருங்கே வாழ்ந்து வருகின்றனர்; பணியாற்றி வருகின்றனர். (கரகோஷம்)

மத நம்பிக்கை என்பது தனிப்பட்ட ஒரு நபர் அல்லது தேசத்தினரின் மனச்சாட்சியைப் பொறுத்த விஷயமாகும். எங்கள் தூதுகோஷ்டியிலே, முஸ்லீம் மத நம்பிக்கையைப் பின்பற்றும் மக்கள் வாழும் உஸ்பெக்கிஸ்தான், டாஜிகிஸ்தான் இவ்விரு குடியரசுகளின் பிரதிநிதிகளான ஜாபர் ரசுலோவும், ஜோஹராவும், ராஹீம் பாபாயீவாவும், ஷராப் ரஷீதோவும் உள்ளனர். ஆனால், எங்கள் நாட்டில் முஸ்லீம் மதத்தைப் பின்பற்றுகிறவர்களுக்கும், இதர மதங்களைப் பின்பற்றுகிறவர்களுக்கும் என்ன வித்தியாசமிருக்கிறது? ஒரு வித்தியாசமுமில்லை! ஏனெனில் எங்கள் நாட்டின் மக்கள் அனைவரும் மகத்தான சோவியத் யூனியனைச் சேர்ந்த மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்; அவர்கள் யாவரும் எங்கள் நாட்டின் ஒரே குடும்பம்போல் ஒன்றுபட்டு வாழ்கின்றனர். (கரகோஷம்)

தேசிய இனப் பிரச்னேக்கும் மத சுதந்திரம் பற்றிய பிரச்னேக்கும் நாங்கள் சோவியத் யூனியனில் நல்ல முறையில் தீர்வு கண்டுள்ளோம். எங்கள் நாட்டின் ஒவ்வொருபிரஜையும் தான் விரும்பும் முறையில் தனது மத வாழ்க்கையை அமைத்துக்கொள்ள முடியும்.

இப்பிரச்னே குறித்து எங்கள் நிலே என்ன என்பதை உங்களுக்கு நன்கு தெளிவுபடுத்துவதற்கே நான் இதைக் கூறுகிறேன். தேசியக் குரோதங்களே மூட்டிவிடுவதன் மூலமும், மத நம்பிக்கையின் அடிப்படையில் மக்களே பிளவுபடுத்துவதன் மூலமும் இந்திய மக்களிடையில் பிரிவினேயை வளர்ப்பதற்கு இன்றுங் கூட சில அரசுகள் முயன்று வருவதைப் பார்க்கிறேம். இத்தகைய அரசுகளின் அதிகாரபூர்வமான பிரதிநிதிகள் வேண்டுமென்றே இயற்கைக்குப் புறம்பாக சச்சரவுகளே ஏற்படுத்துவதற்கு முயன்று வருகின்றனர்.

ஆனல் இது இந்தியாவின், அதன் மக்களின் நலன்களுக்கு உகந்ததா? இதன் விளேவாக இந்திய நாட்டிற்கும் இந்திய மக்களுக்கும் தீமையே ஏற்படும் என்று நாங்கள் கருதுகிறேம்.

மக்கள் தமது கலாச்சார நிலேயை உயர்த்திக் கொள்வதற்கு, நல் வாழ்விற்கு உத்திரவாதம் செய்வதற்கு வாய்ப்புப் பெற்றிருக்கவேண்டும் என்று விரும்புகின்றனர். ஏகாதிபத்திய அரசுகளின் ஆதிக்கத்திற்கு உட்படாமல் சுயேச்சையுடன் விளங்கும் சுதந்திர அரசாகத் தம் நாடு திகழவேண்டுமென அவர்கள் விரும்புகின்றனர்

ஆனல் இவை யாவும் குறிப்பிட்ட ஒரு தேசத்தினர் எந்த மதத்தைச் சேர்ந்தவர்கள் என்பதையா பொறுத்துள்ளன? இல்லே என்றே நான் கருதுகிறேன். (கரகோஷம்)

அரசியல் சுதந்திரமுடையவர்களாக இருப்பதற்கும், இடைவிடாது மக்களின் கல்வி நிலேயை உயர்த்துவதற்கும், நல்வாழ்வுக்கு உத்திரவாதமளிப்பதற்கும் குறிப்பிட்ட எந்த ஒரு மதத்தின் அடிப்படையிலும் அரசாங்கத்தை நிறுவ வேண்டும் என்பது அவசியமில்லே. இதற்குத் தேவைப்படுவது சுதந்திரமுடைய மக்களே; தவிரவும் மனிதனே மனிதன் சுரண்டுவதை ஒழித்துக்கட்டுவதும் அவசியமாகும். (கரகோஷம்)

எங்கள் கருத்துக்களேயோ, எங்கள் அரசாங்க அமைப்பு முறையையோ, நாங்கள் மற்றவர்களின் மீது எப்பொழுதுமே திணித்ததில்லே; இன்றும் திணிக்க விரும்பவில்லே. ஒவ்வொரு நாட்டின் மக்களும் தமது அரசாங்க அமைப்புமுறை எத்தகையதாக இருக்கவேண்டும் என்பதையும், தாம் எந்த சித்தாந்தத்தைக் கடைப்பிடிப்பது என்பதையும் தாமாகவே தீர்மானித்துக் கொள்ள முடியும்; தீர்மானித்துக்கொள்ளவும் வேண்டும். ஆயினும் எங்கள்

மக்கள் தெரிந்தெடுத்துக்கொண்ட பாதை அவர்களின் ஆக்கல்பூர்வ சக்திகள் மலர்ந்து மணம் வீசுவதற்கு வழிவகுத்தது என்பதுடன், வருங்கால முன்னேற்றத்திற்குப் பிரமாதமான வாய்ப்புகளையும் ஏற்படுத்தின என்பதை நாங்கள் குறிப்பிடாமலிருக்க முடியாது. அந்தப் பாதை அவர்களின் பொருளாதாரத்தையும், கலாச்சாரத்தையும் வளர்த்து மேன்மையுறச் செய்ததுடன், பொதுவாக எல்லா மக்களின் இடைவிடாத சுபீட்சத்திற்கும் வகை செய்தது.

காஷ்மீர் பிரச்னை என்று கூறப்படும் பிரச்னை ஏன் எழுந்தது? இப்பிரச்னையைக் கிளப்பியது மக்களல்ல. காலனி அடிமை அமைப்பிலிருந்து விடுபட்டு, அன்னிய ஒடுக்குமுறையாளர்களின் நீண்டகால ஆதிக்கத்தை ஒழித்துக்கட்டிய நாடுகளின் மக்களுக்கிடையில், பகைமை உணர்ச்சிகளைத் தூண்டிவிடுவது சில அரசுகளுக்கு லாபகரமானதாக உள்ளது. (கரகோஷம்)

இந்தக் கைங்கரியத்தை செய்வதின் மூலம், ஏகபோக முதலாளிகள் தமது சொந்த நோக்கங்களையே ஈடேற்றிக்கொள்கின்றனர். மக்களின் ஒரு பகுதியை மற்றொரு பகுதிக்கு எதிராக அவர்கள் திருப்பிவிடுகின்றனர். இவ்வாறு இந்நாடுகளை பொருளாதாரரீதியில் மேலும் அதிகமாக அடிமைப்படுத்துவதற்கும், தமது இச்சைக்கு அடிபணிந்து கிடக்கும்படிச் செய்வதற்கும் முயலுகின்றனர்.

காஷ்மீர் பிரச்னையை இடைவிடாது தூண்டிவிட்டுக் கொந்தளிக்கச் செய்துவரும் அரசுகள் எவை என்பதை நான் குறிப்பிட்டுக் கூற வேண்டியது அவசியமில்லை. ஏனெனில் இவ்வரசுகள் எவை என்பது எல்லோருக்கும் தெரியும். தவிரவும் இவ்வரசுகள் காஷ்மீர் பிரச்னையை மேலும் மோசமடையச் செய்வதில் தமக்குள்ள ஆவலை ஒளிவு மறைவின்றி வெளிப்படுத்திக் கொள்கின்றன.

காஷ்மீர் பிரச்னை பந்தோபஸ்து சபையில் விவாதிக்கப்பட்ட போது, சோவியத் யூனியன் பிரதிநிதிகள் இப்பிரச்னை குறித்து சோவியத் கருத்தைத் தெட்டத்தெளிவாக எடுத்துரைத்தனர்.

இப்பிரச்னை குறித்து எங்கள் நிலை முற்றிலும் தெட்டத் தெளிவானது, கறுரானது. காஷ்மீர் ராஜ்யம் சம்பந்தப்பட்ட இந்தப் பிரச்னையை காஷ்மீர் மக்களேதான் தீர்மானிக்க வேண்டும் என்று சோவியத் யூனியன் எப்பொழுதும் கருதிவந்துள்ளது. (நீடித்த கரகோஷம்) ஏனெனில் இம்முறை ஜனநாயகக் கோட்பாடுகளுக்கு உகந்தது என்பதுடன், இந்தப் பிராந்தியத்தின் மக்களிடையில் நேசவுறவுகளை பலப்படுத்தவும் உதவும். காஷ்மீர் மக்களின் தேசீய அபிலாஷைகளை நன்கு உணர்ந்துள்ள இந்தியக் குடியரசின் சமாதானம் விரும்பும் முற்போக்கு சக்திகளுடன், காஷ்மீரின் சமாதான வேட்கை கொண்ட ஜனநாயக சக்திகள்

முன்பே நேச உறவுகளை ஏற்படுத்திக் கொண்டுவிட்டன. காஷ்மீர் பிரச்னையைப் பாரபட்சமின்றியும், யதார்த்தக் கண்கொண்டும் நோக்கும் சோவியத் யூனியன், காஷ்மீர் மக்களிடத்தும், அவர்களுடைய சமாதானம் விரும்பும் ஜனநாயக சக்திகளிடத்தும் எப்பொழுதுமே மனப்பூர்வமான நேச உணர்ச்சிகளை வெளிப்படுத்தி வந்துள்ளது.

காஷ்மீர் மக்கள் ஏகாதிபத்திய அரசுகளின் கைப்பாவையாக ஆவதற்கு விரும்பவில்லை என்பதை யாதார்த்த உண்மைகள் நிரூபிக்கின்றன. (பலத்த கரகோஷம்) ஆயினும் சில வல்லரசுகள் காஷ்மீர் பிரச்னையில் பாக்கிஸ்தானின் நிலையை ஆதரிப்பதாகப் பாசாங்கு செய்து காஷ்மீரைத் தமது கைக்கருவியாக்க முயற்சித்து வருகின்றன.

இந்தியா துண்டாடப்பட்டது குறித்து, பொதுவாக இந்திய நாடு இரு அரசுகளாகக் கூறுபோடப்பட்டது குறித்து, உங்கள் அனுமதியுடன், எனது அபிப்பிராயத்தைக் கூற விரும்புகிறேன். உங்கள் நாட்டை இந்தியா என்றும் பாக்கிஸ்தான் என்றும் இரு கூறுகளாக பிரிவினை செய்வதில் ஏகாதிபத்யவாதிகள் வெற்றியடைந்தனர். இந்திய நாட்டின் நண்பர்களான எங்களுக்கு இது மிகுந்த வருத்தத்தை அளித்தது. இந்திய மக்கள் தமது தேச சுயேச்சையைப் பெறுவதற்கு முன்பு, இந்தியாபூராவும் ஒரே நாடாக—ஐக்கிய இந்தியாவாக—விளங்கியது என்பதை யாரும் மறுக்கமுடியாது. இந்திய நாட்டிலுள்ள மக்களின் நலன்களுக்குப் புறம்பாகவே, இந்தியா இரு கூறுகளாகத் துண்டாடப்பட்டது. எந்த ஒரு அரசையும் அமைப்பதற்கு, மதப்பிரச்னைகள் என்றுமே முக்கிய அமசமாக இருந்ததில்லை. எனினும் இந்திய மக்களின் நலன்களுக்குப் புறம்பாக இந்தியாவை இரு கூறுகளாகத் துண்டாட வேண்டும் என்பதற்காகவேண்டியே இந்திய மக்களிடையில் மதப் பூசல்களும் மதவெறி ஆவேசமும் கிளப்பிவிடப்பட்டன.

உதாரணமாக எங்கள் நாட்டை எடுத்துக்கொள்வோம். அங்கு $1\frac{1}{2}$ கோடிக்குமேல் முஸ்லிம்கள் உள்ளனர். இதர மத நம்பிக்கைகளைச் சேர்ந்தவர்களும் வசிக்கின்றனர். ஆனால் மத நம்பிக்கைகளில் வேறுபாடுகள் இருந்தபோதிலும், எங்கள் நாட்டு மக்கள் சகோதரர்களைப்போல் நேசமுடன் வாழ்கின்றனர். சோஷலிஸ் நாடான ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுகள் என்னும் ஒரே ஐக்கிய அரசை அவர்கள் நிறுவினர்; இடையருது அதைப் பலப்படுக்கொண்டிருக்கின்றனர். (கரகோஷம்)

எனவே, பாகிஸ்தான் உருவாக்கப்பட்டு, அது ஐக்கிய இந்திய அரசிலிருந்து பிரிவினை செய்யப்பட்டதற்கு முக்கிய காரணம், மக்களின் மத்தியிலுள்ள மத நம்பிக்கை வேறுபாடுகளல்ல என்பதை யாரும் பார்க்க முடியும். அபகீர்த்திமிக்க "பிரித்தாலும் கொள்கை"யிலே வெகுகால

மாகவே கைதேர்ந்து விளங்கும் சில அரசுகள், இந்தப் பிரிவினைக் கைங் கர்யத்திற்கு தீவிரமாக உதவின. இவ்வரசுகள் தமது சொந்த நோக்கத் திற்காகவே, மத வேறுபாடுகளைத் தமக்கு அனுகூலமாகப் பயன்படுத்திக் கொண்டன.

ஆவேசமும் ஆத்திரமும் தணிந்த, பிறகு, இயற்கைக்குப் புறம்பாக இந்தியா பிரிவினை செய்யப்பட்டதின் முழு பலாபலன்களை மக்கள் உணரும்போது, அவர்கள் இத்தகைய பிரிவினை ஏற்பட்டது குறித்து வருந்துவார்கள் என்பதில் எங்களுக்கு சந்தேகமில்லை.

ஆனால் இரண்டு தனித்தனி அரசுகளாக இந்தியாவும், பாகிஸ் தானும் ஏற்கனவே அமைக்கப்பட்டுவிட்டன; இவ்விரு தனித்தனி அரசுகளை அமைக்கும் பிரச்னை முன்னமேயே முடிவு செய்யப்பட்டு விட்டது. இப்பிரச்னையைப் பற்றி ஒளிவு மறைவின்றி எனது கருத்தைக் கூறிவிட்டேன். இதனால் நான் இம்முடிவடைந்த பிரச்னையை புன ராலோசனை செய்யவேண்டும் என்று விரும்புதாக யாரும் எண்ணவேண் டாம். இதன்மூலம் நான் ஒரு உண்மையை சுட்டிக் காட்டினேனே யன்றி, வேறொன்றுமில்லை. இவ்விரு அரசுகளும் இன்று பிரத்யட்சமாக இருந்து வருகின்றன. வளர்ச்சியுற்று வருகின்றன. எனவே சில குறிப்பிட்ட வல்லரசுகள் விரும்புவதுபோல், இவற்றின் எல்லைகளைத் திருத்தியமைப்பதற்கு இப்பொழுது எவ்வித அவசியமும் இல்லை. (கரகோஷம்) எல்லைகளைத் திருத்தியமைப்பதென்பது எப்பொழுதுமே துன்பகரமானது என்பதும், இரத்தக் களரியின்றி எல்லை மாறுதல் நிகழ்வதில்லை என்பதும் எல்லோரும் அறிந்ததே.

காஷ்மீர் இந்தியக் குடியரசின் ராஜ்யங்களில் ஒன்று என்று காஷ்மீர் மக்கள் ஏற்கனவே முடிவுசெய்துவிட்டனர். மக்கள் தாமாகவே செய்துள்ள முடிவு இது. (பலத்த நீடித்த கரகோஷம்) இப்பிராந்தி யத்தில் சமாதானத்தைப் பராமரித்துக் காக்கவேண்டும் என்ற எண்ணம் இரு தரப்பினருக்கும் இருக்க வேண்டுவது அவசியம் என்று நான் கருது கிறேன். ஏனெனில் சமாதானமாக ஒத்துவாழ்வதின் மூலமாகவே இந்தியாவும் சரி, பாக்கிஸ்தானும் சரி, வளர்ச்சியடைந்து முன்னேறுவது சாத்தியம்.

இந்தியக் குடியரசுடன் நாங்கள் மிகவும் நேசபூர்வமான உறவுகளை ஏற்படுத்திக் கொண்டுள்ளோம். (கரகோஷம்) நமது பரஸ்பர உறவுகள் இவ்வாறு மிகவும் நேசபூர்வமான அடிப்படையில் வளர்ச்சியடைந்திருப் பதற்குக் காரணம் ஒத்துவாழ்வது சம்பந்தமான புகழ்வாய்ந்த ஐம்பெரும் கோட்பாடுகளை அவை அஸ்திவாரமாகப் பெற்றிருப்பதேயாகும். சர்வ தேச அரசியலில் நம்மிருவருக்கும் பொதுவான அபிப்பிராயங்கள் பல உள்ளன. இராணுவக் கூட்டணிகள், கோஷ்டிகள் அமைக்கப்படுவது குறித்து நாமிருவர் நிலையும் ஒன்றே; இவற்றை நாமிருவரும் கண்டித்

திருக்கிறேம். சர்வதேசக் கெடுபிடி நிலையைத் தணிவுறச் செய்வதும், யுத்தம் மூளாமல் தடுப்பதுமே நம்மிரு நாடுகளின் சர்க்கார்களும் பின் பற்றிவரும் கொள்கையின் நோக்கமாக இருந்து வருகிறது.

சுயேச்சை அந்தஸ்தும் பூரண அரசுரிமையுங்கொண்ட இந்தியக் குடியரசு இளம் பிராயத்திலுள்ளதோர் அரசு; வளர்ந்து முன்னேறி வரும் அரசு. உலக முழுதும் சமாதானம் தழைத்தோங்குவதற்காக இது செயல்வன்மையுடன் போராடி வருகிறது.

நாங்கள் இந்தியக் குடியரசுடன் மேலும் நெருங்கிய நட்பு கொண்டி ருப்பதற்கு இதுவே காரணமாக உள்ளது.

இந்தியக் குடியரசின் உள்விவகாரங்களில் நாங்கள் தலையிடுவ தில்லை. அதேபோல இந்தியாவும் எங்களுடைய உள்நாட்டு விவகாரங் களில் தலையிடுவதில்லை. (கரகோஷம்) ஒவ்வொரு அரசின் உள்நாட்டு விவகாரங்களும் அந்தக் குறிப்பிட்ட நாட்டின் மக்களே முடிவு செய்ய வேண்டிய விஷயங்களாகும்.

சமாதானத்திற்கான போராட்டத்திலும், இதுவரை தீர்க்கப்படா துள்ள பிரச்னைகளுக்கு சமாதானபூர்வமான தீர்வு காண்பதற்கான போராட்டத்திலும் இந்தியக் குடியரசு எங்களுடைய நேச சக்தியாக, நண்பனுக விளங்குகிறது. ஆனல் துர்ப்பாக்கியவசமாக, பாக்கிஸ் தானைப் பற்றி இவ்வாறு கூறுவதற்கில்லை.

பாக்கிஸ்தானும் இளம் பிராயத்திலுள்ள அரசு தான் என்பது மெய்யே. ஆயினும் இவ்வரசின் ஆளும் வட்டாரங்கள் பின்பற்றிவரும் கொள்கை எங்களுக்குக் கவலை அளிக்கிறது. அவர்கள் பின்பற்றி வரும் கொள்கை இதர நாடுகளின் ஏகபோக முதலாளித்துவ வட்டாரங்களின் கட்டளைகளை நிறைவேற்றுவதாக உள்ளதேயன்றி, அவர்களுடைய அரசின், மக்களின் ஜீவாதார நலன்களை அடிப்படையாகக் கொண்டில்லை என்பதை யதார்த்த உண்மைகள் சுட்டிக் காட்டுகின்றன. இன்றைய பாக் கிஸ்தான் சர்க்கார் அமெரிக்க ஏகபோக முதாளித்துவ வட்டாரங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறது. இதைப்பற்றி அது பகிரங்கமாக பிரகடனம் செய்துகொள்கிறது! (நகைப்பு) சமாதானத்தின் நலன்களுக் குப் புறம்பாக ஏற்படுத்தப்பட்ட அபகீர்த்திவாய்ந்த பாக்தாத் ஒப்பந்தத் தில் முதன் முதலில் பங்கெடுத்துக்கொண்ட நாடுகளில் ஒன்று பாக்கிஸ்தான். இந்த ஒப்பந்தத்தை உருவாக்கிய சூத்திரதாரிகளில் ஒன்று பாக்கிஸ்தான். (நகைப்பு) மேலும் அவர்கள் சோவியத் யூனிய னுக்கு மிகவும் அருகாமையிலே தன் பிரதேசத்தில், அமெரிக்க இராணு வத் தளங்களை அமைப்பதற்கு அது அனுமதித்துள்ளது.

பாக்கிஸ்தான் பிரதேசத்தில் அமெரிக்க இராணுவத் தளங்கள் நிறுவப்பட்டிருப்பது எங்களுக்குக் கவலையை அளிக்காமலிருக்கமுடியுமா? ஆம், இது எங்களுக்குக் கவலை அளிக்கத்தான் செய்கிறது என்று நாங்

கள் பகிரங்கமாக கூறுகிறோம். பாக்தாத் ஒப்பந்தத்தில் சேர்ந்துள்ள நாடுகளின் எண்ணிக்கையை அதிகரிப்பதற்காக இப்பொழுது மேலும் முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகின்றன: இம்முயற்சிகளில் பாகிஸ்தான் தீவிரமாகப் பங்கெடுத்து வருகிறது. இரானிய சர்க்கார் ஏகாதிபத்திய வல்லரசுகளுக்கு அடிபணிந்து இவ்வொப்பந்தத்தில் சேர்ந்துவிட்டது வருந்தத்தக்கது.

பாக்தாத் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுள்ள நாடுகளையோ, சோவியத் யூனியனுக்கு எதிராக அமைந்துள்ள வேறு எந்தக் கூட்டமைப்பிலும் பங்குகொள்ளும் நாடுகளையோ நாங்கள் ஒருபொழுதும் ஆதரித்ததில்லை, ஆதரிக்கப்போவதுமில்லை என்று வெளிப்படையாகக் கூறுகிறோம்.

நாங்கள் வேறுவிதமாக நடந்துகொண்டால், அரசியல் குருடர் களாவோம். பாக்தாத் ஒப்பந்தம் சோவியத் யூனியனுக்கும் இதர சமாதானம் விரும்பும் நாடுகளுக்கும் எதிராக உருவாக்கப்பட்ட ஒப்பந்தமேயாகும் என்பது வெளிப்படை. இதனுல்தான் இந்த இராணுவ கூட்டமைப்பை—மதியீனமான வெறிச் செயல்களுக்கு, யுத்தத் திற்கு வழிகோலக்கூடிய இக்கூட்டமைப்பை—நாம் பலவீனமடையச் செய்வது அவசியமாகும்.

சமாதான ஆர்வமிகுந்த சுயேச்சை இந்தியக் குடியரசு தழைத் தோங்கி வளர்ந்து மென்மேலும் வன்மையும் திண்மையும்பெற்று விளங்க வேண்டும் என்று நாங்கள் மனப்பூர்வமாக விரும்புகிறோம். (பலத்த கர கோஷம்).

சிநேக மனப்பான்மைக்கு விரோதமான முறையில் பாக்கிஸ்தான் சர்க்கார் செய்துள்ள மற்றொரு காரியம் எங்களுக்குத் தெரியவந்துள்ளது. பாக்கிஸ்தான் வெளிநாட்டு மந்திரி காரியாலயத்தினர் அங்குள்ள சோவி யத் ஸ்தானிகரை அழைத்து, நானும் என்னுடைய நண்பர் நிகோலாய் அலெக்ஸாண்டிரோவிச் புல்கானினும் காஷ்மீருக்கு விஜயம் செய்ய மறுக்கவேண்டும் என்றும், ஸ்ரீநகருக்கும் உங்கள் ராஜ்யத்தின் இதர பகுதிகளுக்கும் விஜயம் செய்யும்படி உங்கள் ராஜ்ய அதிபர் விடுத்த அழைப்பை நிராகரிக்க வேண்டும் என்றும் அபிப்பிராயம் தெரிவித்தார் கள். (சிரிப்பு).

பிறநாட்டு மக்களின் விவகாரங்களில் அப்பட்டமாகத் தலையிடுவதையே இது குறிக்கிறது என்றுதான் கூறவேண்டும். நாங்கள் எங்கே போக லாம், எங்கே போகக்கூடாது, என்ன செய்யலாம், என்ன செய்யக் கூடாது, யாருடன் நட்புக் கொள்ளலாம், யாருடன் நட்புக் கொள்ளக் கூடாது என்று எங்களுக்கு சுட்டிக்காட்டும் அளவுக்கு இதுவரை மற் றெந்த அரசாங்கமும் சென்றதில்லை. (நகைப்பும் கரகோஷமும்).

பாக்தாத் ஒப்பந்தத்தில் பங்கெடுத்துக்கொள்வதினால் பாக்கிஸ்தானுக்கும் அதன் மக்களுக்கும் எவ்வித நன்மையுமில்லை என்றபோதிலும் அது இவ்வொப்பந்தத்தில் தீவிரமாக முனைந்து பங்கெடுத்துக்கொண்டு வருகிறது. பாக்தாத் ஒப்பந்தம் எங்கள் விருப்பத்திற்கு நேர் முரணானது. ஆயினும் இந்த பாக்தாத் ஒப்பந்தம் நீர்க்குமிழிபோல இருந்த இடம் தெரியாமல் வெடித்து மறையுமென்றும், அதன் பிறகு இதைப்பற்றிய கசப்பான நினைவுகளே எஞ்சி நிற்கும் என்றும் நாங்கள் திடமாக நம்புகிறோம். பொறுமையுடன் நாங்கள் காத்திருப்போம். (நகைப்பும் பலத்த கரகோஷமும்)

எங்களுடைய அண்டை நாடான ஆப்கானிஸ்தானத்திற்கு நாங்கள் விஜயம் செய்யக்கூடாது என்றும் பாகிஸ்தான் சர்க்கார் விரும்புவதாக, பாகிஸ்தான் வெளிவிவகார மந்திரி காரியாலயத்தின் பிரதிநிதி ஒருவர் எங்கள் ஸ்தானிகரிடம் தெரிவித்தார். (நகைப்பு) இது சற்று அத்துமீறிச் செல்வதாகும். இத்தகைய சிபாரிசுகள் செய்பவர்கள் தங்கள் நிலையை மறந்து தமக்கு அப்பாற்பட்ட விஷயங்களையும் தமதென்று நினைப்பவர்களாவர் !

ஆப்கானிஸ்தானம் எங்களுக்குப் பக்கத்திலிலுள்ள நல்லதொரு அண்டை நாடு. இந்த தேசத்துடன் நாங்கள் வெகுகாலமாக நேசவுறவுகள் கொண்டிருக்கிறோம். (கரகோஷம்) இந்த நேசவுறவுகளை நாங்கள் மேலும் வளர்த்து வலிமையுறச் செய்ய விரும்புகிறோம். இது விஷயத்தில் நாங்கள் ஆப்கானிஸ்தானத்திற்கு விஜயம் செய்வது உதவிகரமாக இருக்கும் என்று நாங்கள் விரும்புகிறோம். (கரகோஷம்)

இம்மாதிரியாகவே பாகிஸ்தானுடனும் நாங்கள் நேச உறவு கொள்ள மிகவும் விரும்புகிறோம். ஆனால் இதுவரையில் அந்நாட்டுடன் இத்தகைய நேசவுறவுகள் வளர்ந்து பெருகவில்லை என்றால் அது எங்கள் தவறல்ல. ஆயினும் சமாதான நலன்களை உத்தேசித்து பாகிஸ்தானுடன் நமக்குள்ள உறவுகளில் அபிவிருத்தி ஏற்படுவதற்கு நாங்கள் இடையருத முயற்சி செய்வோம்.

உலகம் பூராவும் சமாதானத்தை நிலைபெறச் செய்வதற்காகவும் தேசங்கள், மக்களிடையில் நட்புறவு வளர்ந்தோங்குவதற்காகவும் சோவியத் யூனியன் எப்பொழுதுமே பாடுபட்டு வந்துள்ளது ; இன்றும் பாடுபட்டு வருகிறது. இத்தகைய பாதையை எங்களுக்கு வகுத்துத் தந்தவர், இத்தகைய பாதையை பின்பற்றுவாறு எங்களைப் பணித்துச் சென்றவர் மேதை லெனின் ஆகும். (பலத்த கரகோஷம்) நாங்கள் இந்தப் பாதையை நிலைபிறழாமல் பின்பற்றுவோம். மற்ற அரசுகளுடனும் மக்களுடனும் எங்கள் நட்புறவை மேலும் பலப்படுத்தி விரிவுபடுத்துவோம்.

இந்தியக் குடியரசிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையிலுள்ள நட்புறவும் ஒத்துழைப்பும் நீடூழி வாழ்க! (நீடித்த கரகோஷம்).

உலக முழுதும் சமாதானம் தழைத்தோங்குக! (பலத்த, நீடித்த கரகோஷம்).

## 1955 டிசம்பர் 12-ம் தேதி ஹைதராபாத் மாளிகையில் நடந்த வரவேற்பில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

திரு. ஜனாதிபதி அவர்களே!

திரு. பிரதம மந்திரி அவர்களே!

அன்புள்ள நண்பர்களே!

இந்தியாவில் நாங்கள் தங்கியிருந்த நாட்கள் ஒரு முடிவுக்கு வரவிருக்கின்றன. ஏறத்தாழ மூன்று வாரங்களை நாங்கள் உங்கள் நாட்டில் செலவழித்துள்ளோம். உங்கள் அரசாங்கமும், திரு. நேருவும் கனிவுடன் எங்களுக்களித்த வாய்ப்பால் இந்தியாவின் பல பிரதேசங்களையும், நகரங்களையும் எங்களால் காணமுடிந்தது; பல தொழிலகங்களுக்கும், நிர்மாண வேலை நடக்கும் ஸ்தலங்களுக்கும், தோட்டங்களுக்கும், விஞ்ஞானக் கழகங்களுக்கும் விஜயம் செய்ய முடிந்தது. உங்கள் நாட்டின் மேற்கிலும், தெற்கிலும், கிழக்கிலும், வடக்கிலும் பல இடங்களுக்குச் சென்றோம். உங்கள் நாட்டு மக்களுக்கு எங்களை அறிமுகப்படுத்திக் கொண்டோம். உங்களின் பண்டையக் கலாச்சாரத்தின், பொருளாதாரத்தின் அற்புதச் சின்னங்களையும் கண்டோம். இவை எல்லாவற்றிற்கும் உங்களுக்கு நாங்கள் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம்.

எங்களது சுற்றுப்பயண காலத்தில் எண்ணற்ற விஷயங்களைக் கண்டோம். பல பயன்தரத்தக்க விஷயங்களைப் படித்தறிந்தோம். நான் மிக முக்கியமானதென்று கருதுகிற ஒரு விஷயத்தை மட்டும் இப்பொழுது குறிப்பிட விரும்புகிறேன்.

எங்களிடத்து இந்திய மக்கள் காட்டிய அன்பின் பலமும், கபடமற்ற தன்மையும், இந்திய மக்கள் சோவியத் மக்களின் மிக உண்மையான நண்பர்கள் என்பதை மிகவும் நம்பத் தகுந்த முறையில் காட்டியுள்ளது. (கரகோஷம்) எங்கள் கண்ணாலே பலவற்றைக் கண்டோம்; பல்வேறு வகுப்பாரின் பிரதிநிதிகளைச் சந்தித்தோம்; மக்களின் வாயாலேயே

அவர்களின் விருப்பங்களை, ஆசைகளை, கனவுகளைப் பற்றியெல்லாம் நாங்கள் கேட்டோம்.

சென்ற விடமெல்லாம் நாங்கள் கேட்ட ''இந்திய மக்களும், சோவியத் மக்களும் சகோதரர்கள்'' என்ற அந்த அற்புதமான வார்த்தையை, நாங்கள் மறக்கவேமாட்டோம். (கரகோஷம்). நேச உறவும், ஒத்துழைப்பும் வேண்டுமென்ற நம் மக்களின் ஆசையை, இந்தச் சாதாரண வார்த்தைகள் பிரதிபலிக்கின்றன. நம் இரு இராஜ்யங்களின் நல்வாழ்வுக்கும், இன்பத்திற்கும் மட்டுமல்ல நம் இருமக்களிடையே நேச உறவும், ஒத்துழைப்பும் தேவை என்று கூறுவது; எல்லா மக்களிடையே சமாதானத்தையும், பாதுகாப்பையும் பலப்படுத்துவதற்கும் அது தேவையாகும் என நாங்கள் உறுதியாக நம்புகிறோம். சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்குமிடையே உள்ள நேச உறவானது, சமாதானத்தின் எதிரிகள் புறக்கணித்துத் தள்ள முடியாத. சமாதானத்திற்குச் சாதகமான ஓர் மாபெரும் உண்மையாகும். இந்தியாவிற்கும், சோவியத் யூனியனிக்குமிடையே உள்ள நட்புறவும், ஒத்துழைப்பும் மேலும் வளரவேண்டுமென்றும், இந்தியப் பிரதமர் திரு ஜவஹர்லால் நேரு நல்ல ஆரோக்கியமுடன் வாழவேண்டுமென்றும் வாழ்த்தி இப்பானத்தைப் பருகுகிறேன். (கரகோஷம்).

# 1955 டிசம்பர் 13-ல்
# அகில இந்திய ரேடியாவில்
# என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

அருமை நண்பர்களே,

இந்திய வானொலி மூலம் சொற்பொழிவாற்றும் வாய்ப்புக் கிடைத்துள்ளது குறித்து எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

விருந்தோம்பி உபசரிக்கும் இந்திய நாட்டிலிருந்து நாளைய தினம் விடைபெற்றுக்கொண்டு புறப்படப்போகிறோம். உங்கள் நாட்டையும் உங்கள் மக்களையும்பற்றிய இனிய நினைவுகள் என்றென்றும் மறையாது எங்கள் ஞாபகத்தில் நிலைத்திருக்கும். ஆங்காங்கு நடைபெற்ற நேசபூர்வமான கூட்டங்களில் நாங்கள் சந்தித்த மக்களையும் ஆர்வம் மிகுந்த அவர்களுடைய வாழ்த்துக்களையும் என்றென்றும் நாங்கள் மறவாதிருப்போம். இந்தியாவில் தங்கியிருந்த இந்நாட்களிலே நாங்கள் இந்நாட்டின் பல நகரங்களுக்கும் பகுதிகளுக்கும் விஜயம் செய்தோம்; பிரம்

மாண்டமான நிர்மாண வேலைகள் நடைபெறும் ஸ்தலங்களையும் பம்பாய், கல்கத்தா, பங்களூர், சென்னை, சிந்திரி முதலிய இடங்களிலுள்ள பல தொழிற்சாலைகளையும் பார்வையிட்டோம்; விவசாய அபிவிருத்திக்கான மூலஸ்தலங்களுக்குச் சென்றிருந்தோம்; பல்வேறு விஞ்ஞான நிலையங்களைக் கண்ணுற்றோம்; பண்டைப் பெரும் சட்டிடக் கலையின் அற்புதச் சின்னங்களைப் பார்த்து மகிழ்ந்தோம். தவிரவும் நாங்கள் பல்வேறு இனங்களைச் சேர்ந்த உங்கள் மக்களுடைய வாழ்க்கையைப்பற்றியும், அவர்கள் ஈடுபட்டுள்ள வேலைகள்பற்றியும், அவர்களுடைய கலாச்சாரம் பற்றியும் தெரிந்துகொண்டோம்.

மற்றெதையும்விட மக்களும், அவர்களுடைய உற்சாகமும் சக்தியும், குதூகலம் பொங்கும் இளமையும், அவர்களுடைய திறமையும் தேர்ச்சியும், சமாதானம் நிலவேண்டுமென்றும் சமாதானத்தை நேசிக்கும் சகல மக்களுடன் ஒத்துழைக்க வேண்டுமென்றும் அவர்களிடமுள்ள தணியாத வேட்கையும்தான் எங்கள் மனதில் மிகவும் ஆழகாகவும் மறக்கமுடியாத வகையிலும் பதிந்துவிட்டன. நாங்கள் சென்ற ஒவ்வொரு இடத்திலும் இந்திய மக்கள் எங்களை உற்சாகத்துடன் வரவேற்று உபசரித்தார்கள். சோவியத் மக்களிடம் அவர்கள் ஆர்வமிகுந்த தூய நட்பு பாராட்டுகின்றனர் என்பதை நாங்கள் சென்றிருந்த எல்லா இடங்களிலும் கண்ணுற்றோம்.

உங்கள் நாட்டின் சரித்திரத்தில் மிகவும் முக்கியமானதோர் கட்டத்தில் நாங்கள் உங்கள் நாட்டிற்கு விஜயம் செய்துள்ளோம். நீண்ட நெடுங்காலம் காலனி ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்த பின் இந்திய மக்கள் முதன்முதலாக இன்று தமது எதிர்காலத்தைத் தாமே நிர்ணயித்துத் கொள்ளும் உரிமையை வென்றுகொண்டுள்ளனர். இந்திய நாடு இன்று அரசியல் சுதந்திரத்தை சுவைத்து வருகிறது. அரசியல் சுதந்திரமடைந்த பின் இந்த ஒருசில ஆண்டுகளில் இந்திய நாடு பெரிய பல சாதனைகளைக் கண்டுள்ளது. முக்கியமான சர்வதேசப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதில் இந்தியா இன்று மிகவும் முக்கியமான பங்காற்றி வருகிறது.

மற்றும் தமது பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்துகொள்வதிலும் இயந்திரத் தொழில்களை நிர்மாணிப்பதிலும் இந்திய மக்கள் மாபெரும் வெற்றி கண்டுள்ளனர். இதை நாங்கள் கண்கூடாகக் காண முடிந்தது.

நம்மிரு நாடுகளிடையிலும் இன்று இருந்துவரும் நேசவுறவுகளின் விளைவாக நமக்கிடையே சகல வழிகளிலும் பொருளாதார, விஞ்ஞான, கலாச்சார ஒத்துழைப்பு ஓங்கி வளர்வதற்கான வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. இந்தியாவிற்குத் தேவைப்படும்போது எங்களுடைய விஞ்ஞான,

தொழில் நுட்ப அனுபவத்தையும், நிர்மாண வேலை அனுபவத்தையும் உங்களுடன் பகிர்ந்துகொள்ள நாங்கள் எப்பொழுதுமே தயாராக இருக்கிறோம்.

நம்மிரு நாடுகளிடையிலும் பொருளாதார, விஞ்ஞான, தொழில் நுட்ப ஒத்துழைப்பு மேலும் வளர்ந்தோங்குவது சம்பந்தமான முக்கியப் பிரச்னைகள் பலவற்றிலும் நம்மிடையே உடன்பாடு ஏற்படுவதற்கு எங்களுடைய இந்திய விஜயம் உதவி புரிந்துள்ளது. பிரதம மந்திரி நேருவுடன் எங்கள் சம்பாஷணைகளைத் தொடர்ந்து நடத்துவதற்கும் இந்திய அரசாங்கத்தின் இதர தலைவர்களுடன் தொடர்புகள் ஏற்படுத்திக்கொள்வதற்கும் எங்கள் விஜயம் வாய்ப்பு அளித்துள்ளது. இந்த நேரடியான தொடர்பின்மூலம் நமது இரு நாடுகளும் பொதுவான ஒரே குறிக்கோள் உடையவை என்பது—அதாவது நண்பர்களாக வாழ வேண்டும், உலகெங்கும் சமாதானத்தைப் பாதுகாத்து அதைப் பலமடையச் செய்ய வேண்டும், பல்வேறு தேச மக்களுக்கும் அவர்களுடைய எதிர்காலத்தில் நம்பிக்கை உண்டாகும்படிச் செய்யவேண்டும் என்ற குறிக்கோள் உடையவை என்பது—மீண்டுமோர் முறை நிரூபித்துக் காட்டப்பட்டது.

இந்தியக் குடியரசிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையே உள்ள உறவுகள் நிலையான, நம்பகமான ஒரு அடித்தளத்தின்மீது —"பஞ்சசீலம்" எனப்படும் பிரசித்தி பெற்ற ஐம்பெரும் கோட்பாடுகளின் அடித்தளத்தின்மீது—நிறுவப்பெற்றவை என்பதை நீங்கள் நன்கறிவீர்கள்.

இதர அரசுகளுடைய பிரதேச உரிமையையும் அரசுரிமையையும் மதித்து நடப்பது, அவற்றின் உள் விவகாரங்களில் தலையிடாமல் இருப்பதென்பதின் அடிப்படையில் அமைந்துள்ள லெனின் கோட்பாடுகளை சோவியத் யூனியன் இடைவிடாமல் பின்பற்றி வருகிறது

மாறுபட்ட அரசியல் அமைப்புகளையுடைய இரு அரசுகள் நட்புறவுடன் வாழ்ந்து ஒன்றோடொன்று ஒத்துழைக்க முடியுமென்பதற்கு சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்குமிடையே உள்ள உறவுகள் சிறந்ததோர் எடுத்துக்காட்டு.

நேரு அவர்களுடனும் இந்திய சர்க்காரின் இதர பல தலைவர்களுடனும் நாங்கள் சம்பாஷணை செய்து, கருத்துப் பரிமாறிக்கொண்டபோது இந்திய-சோவியத் உறவுகள் சம்பந்தமான எல்லாப் பிரச்னைகளிலும் பரஸ்பரம் பரிபூரண உடன்பாடு நிலவுகிறதென்பதும். மிகவும் முக்கியமான சர்வதேச பிரச்னைகளிலும் இதேபோல் பல வழிகளிலும் ஒருமித்த போக்குகள் உள்ளன என்பதும் வெளிப்பட்டன. நம்மிரு நாடுகளிடையிலும் அண்டை நாடுகளுக்குரிய நல்லுறவுகளும் நட்புறவும் வளர்ந்து வலிமையடையுமென்பதில் எங்களுக்கு சந்தேகமில்லை. நமது இரு

நாடுகளின் வளர்ச்சிக்கும், உலகெங்கும் சமாதானத்தை வலிமையடையச் செய்வதற்கும் இது உதவி புரியுமென்பதிலும் சந்தேகமில்லை.

இறுதியில் இந்தியாவில் நாங்கள் சென்றிருந்த ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு நகரிலும் உற்சாகம் கரைபுரண்டோடும் முறையில் எங்களுக்கு அளிக்கப்பட்ட அமோக வரவேற்புபற்றி குறிப்பிட விரும்புகிறேன். உங்கள் நாட்டில் நாங்கள் செலவிட்டுள்ள இந்நாட்களை இனிமையானதாகவும் பயன்நிறைவல்லதாகவும் செய்வதற்கு சகல வழிகளிலும் முயற்சி செய்த உங்கள் சர்க்காருக்கும் குறிப்பாக பிரதம மந்திரி நேரு அவர்களுக்கும் எங்கள் உளமார்ந்த நன்றியை மீண்டும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

எங்களுடைய சுற்றுப் பிரயாணத்திற்கு சிறந்த முறையில் ஏற்பாடு செய்து கொடுத்து எங்களை ஆர்வமுடன் வரவேற்றதற்காக நாங்கள் விஜயம் செய்த ராஜ்யங்களின் சர்க்கார்களுக்கும், நகர்களின் நிர்வாகத் தலைவர்களுக்கும் நன்றி தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். உற்சாக வரவேற்பு அளித்து எங்களுக்கு இதயபூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவித்த பொது ஸ்தாபனங்களுக்கும் தனிப்பட்டவர்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக. நேசமுடன் எங்களுக்கு அனுப்பப்பட்ட எல்லா அழைப்புகளையும் வாழ்த்துக்களையும் அவகாசமில்லாத காரணத்தால் நாங்கள் ஏற்க முடியாமற்போய்விட்டது குறித்து நான் வருந்துகிறேன்.

எங்கள் அருமை நண்பர்களே! மீண்டுமோர்முறை உங்களுக்கு மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். வணக்கம்!

## 1955 டிசம்பர் 13-ல், அகில இந்திய ரேடியோவில் என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

எங்கள் அருமை நண்பர்களே!

இந்தியக் குடியரசின் பிரஜைகளே!

விருந்தினர்களாக உங்கள் நாட்டில் மூன்று வாரங்களுக்கு மேல் தங்கி இந்தியாவிலுள்ள பல ராஜ்யங்களுக்கும் நகரங்கள் கிராமங்களுக்கும் நாங்கள் விஜயம் செய்தோம்; இந்நாட்டின் மகோன்னத மக்கள் பற்றியும் அவர்களுடைய செழுமிய பழம்பெரும் இந்தியக் கலாச்சாரம் பற்றியும் நாங்கள் அறிந்துகொண்டோம்.

சோவியத் நாட்டின் பிரதிநிதிகளான எங்களுக்கு இந்தியக் குடியரசின் தலைவர்களும், அதன் மக்களும் அளித்த நேசபூர்வமான, உளங்கனிந்த வரவேற்பு எங்கள் இதயத்தையே கொள்ளைகொள்வதாய் இருந்தது. என்றுமே இதை நாங்கள் மறக்கமாட்டோம். சோவியத் நாட்டினிடம் இந்திய மக்களுக்குள்ள நேசவுணர்வுபற்றி இங்கு வரு முன்பே நாங்கள் அறிந்திருந்தோம். ஆனால் இங்கு நாங்கள் கண்டதும் கேட்டதும், நாங்கள் எதிர்பார்த்தது அனைத்தையும் பன்மடங்கு மிஞ்சுவ தாய் இருந்தன. நாங்கள் கலந்துகொண்ட பொதுக்கூட்டங்கள் கற்பனைக்கும் எட்டாத பிரம்மாண்டமான கூட்டங்களாகும். எங்கள் இதயத்தில் பொங்கிவழிந்த உணர்ச்சி வெள்ளத்தை வெறும் சொற்கள் வாயிலாக விவரித்துக் கூறுவது இலகுவானதல்ல.

இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்குமுள்ள நட்புறவை பிரகடனம் செய்யும் வாழ்த்துக் கோஷங்கள் நகரங்களிலும் கிராமங்களி லும் மற்றும் நாங்கள் சென்றிருந்த எல்லா இடங்களிலும் எங்கள் செவி களில் முழங்கின ; கோஷ அட்டைகளிலும் வரவேற்பு வளைவுகளிலும் தீட்டப்பெற்று கண்முன் தோற்றமளித்தன.

"இந்தியர்களும ரஷ்யர்களும் சகோதரர்கள்"—இதயத்திலிருந்து எழும் இந்த எளிய சொற்களை நாங்கள் சென்றவிடமெங்கும் அடிக்கடி கேட்டோம். இச்சொற்கள் எங்கள் உள்ளத்தைப் பெரிதும் நெகிழச் செய்தன. ஏனெனில் இந்திய மக்களிடம், எங்களுக்கும், சோவியத் மக்களுக்குமுள்ள பாசத்தையும் அன்புணர்வையும் அப்படியே வெளி யிடும் சொற்கள் இவை.

ஆம் ; நம்மிரு மக்களும் சகோதரர்கள் தான். இன்பம் பொங்கும் நல்ல காலத்தில் மட்டுமின்றி துன்பம் மலிந்த கஷ்ட காலத்திலும் நாம் சகோரர்களே !

நம்மிரு மக்களுக்குமிடையில் நிலவும் நட்புறவு சரித்திர முக்கியத் துவம் வாய்ந்த மாபெரும் சாதனையாகும் ; இந்நட்பை நாம் போற்றிப் பாராட்டவேண்டும். சாத்தியமான சகல வழிகளிலும் பலமடைந்து ஓங்கச் செய்தாக வேண்டும் ; ஏனெனில் இந்நட்பு நம்முடைய இரு தேசங்களுக்கும் அனுகூலமானது.

வரலாற்றின் கண் தோன்றி இன்று நாளொரு மேனியாக வளர்ந் தோங்கிவரும் இந்நட்பை வலிமையுறச் செய்ய வேண்டுமென்ற அவா எங்கள் உள்ளத்தில் குடி கொண்டுள்ளது. ஆனால் உலகெங்கும் சமா தானத்தைப் பாதுகாக்க வேண்டுமானால் எந்த ஒரு தேச மக்களுடன் மட்டும்—அவர்கள் எவ்வளவு மகத்தான மக்களாயிருப்பினும் சரி—நமது நட்பை உறுதி செய்துகொண்டால் போதாது, சகல தேச மக்களுடனும் நமது நட்பை உறுதி செய்துகொண்டாக வேண்டுமென்பதை நாங்கள்

நன்குணருகிறோம். சகல நாடுகளையும் கண்டங்களையும் சேர்ந்த சமாதானவேட்கையுடைய மக்கள், உலக மக்கள் அனைவரிடமும் நட்புறவு வளரவேண்டுமென்று தான் ஆசைப்படுகிறார்கள். உலகில் சகல மக்களிடையிலும் நட்புறவை இடைவிடாமல் வளர்த்து விரிவடையச் செய்வது அவசியமாகும். மகத்தான இந்தப் புனித நோக்கம் கைகூடுவதற்கு எங்களால் இயன்றது அனைத்தையும் நாங்கள் செய்வோம்.

இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்குமிடையே நேசவுறவுகள் தழைத்தோங்குவதின் விளைவாக உலகெங்கும் சமாதானம் மேலும் பலமடையுமென்றும், நமது இரு நாடுகளும் வளர்ச்சியுற்று முன்னேறுமென்றும் நாங்கள் திடமாக நம்புகிறோம்.

உங்கள் நாட்டின் பொருளாதாரம் விரைவாக முன்னேறுவதற்கு இயந்திரத் தொழில் வளர்ச்சி அத்தியாவசியமாகும். தேசியத் தொழில்களைக் கட்டியமைக்காமல் மெய்யான சுயேச்சை வாழ்விற்கு உத்திரவாதம் செய்துவிட முடியாது எங்களுடைய சொந்த அனுபவத்தின் வாயிலாக நாங்கள் கண்டறிந்த உண்மை இது.

மிகப் பெரிய தொழில் நிலையங்களும், நீர்-மின்சாரத் திட்டங்களும் உள்பட இந்தியாவிற்குச் சொந்தமான பல தொழிற்சாலைகளுக்கும், தொழில் நிலையங்களுக்கும் நாங்கள் சென்றிருந்தோம். இவற்றை எங்களுக்குக் காண்பித்தபோது எங்கள் இந்திய நண்பர்கள் எவ்வளவு பெருமிதமடைந்தார்கள்! இந்தப் பெருமிதம் முற்றிலும் நியாயமானதே. ஏனெனில் தொழில் வளர்ச்சி மிகுந்த வல்லரசாக விளங்கி, தனது தேசத்தின் சுயேச்சையையும் வன்மையையும் காத்து நிற்கும் உருக்குக்கோட்டை போன்ற வருங்கால இந்தியாவின் வடிவத்தை இந்தத் தொழிற்சாலைகளும், தொழில் நிலையங்களும் விளக்கிக் காட்டுகின்றன.

இவ்விதம் தேசியத் தொழில்களைக் கட்டியமைக்க வேண்டுமானால் நீங்கள் உங்களுடைய சொந்த ஊழியர்களை—குறிப்பாக தொழில் நுணுக்க வல்லுனர்களான அறிவுத்துறை ஊழியர்களை—பெற்றிருப்பது அவசியமாகும். உங்களுடைய தொழில் நுணுக்க அறிவுத்துறை ஊழியர்களின் எண்ணிக்கை பெருகிவருகிறது. இந்திய அறிவுத்துறை ஊழியர்களைச் சேர்ந்த இளம் இஞ்சினியர்களையும், தொழில் நுட்ப நிபுணர்களையும், தேர்ச்சி வாய்ந்த நிர்மாண வேலையாளர்களையும் நாங்கள் சந்தித்தோம். அவர்கள் தமது தாயகத்தின் நன்மைக்காகப் பாடுபடவேண்டுமென்ற துடிப்புடையவர்கள்.

உங்களுடைய நாட்டில் இத்தகைய ஊழியர்கள் மேலும் அதிகமாக இருக்கும்பொருட்டு சொந்தத்தில் இயந்திரத் தொழில்களைக் கட்டியமைத்துக் கொள்வதென்ற சிக்கலான, கடின பாதையை—நாங்கள் கடந்து வந்துள்ள இந்தப்பாதையை—நீங்கள் விரைவில் கடந்துவரும் பொருட்டு எங்களுடைய ஆற்றலையும் அனுபவத்தையும் உங்களுடன் பகிர்ந்து

கொள்ள நாங்கள் தயாராக இருக்கிறோம். உங்களுக்குப் போதனை செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் நான் இதைக் கூறவில்லை. இந்திய மக்களுக்கும், இந்தியக் குடியரசிற்கும் தன்னலமின்றி உதவி புரியவேண்டும்; அரசுரிமையுடைய சுதந்திர இந்தியக் குடியரசு வளர்ந்தோங்கி வலிமைபெற வேண்டும் என்று நாங்கள் விரும்புவதால் தான் இதை நான் கூறுகிறேன்.

சோவியத் யூனியனும் இந்தியாவும் மேற்கொண்டுள்ள வளர்ச்சிப் பாதைகள் வெவ்வேறானவை என்பது உண்மையே. அந்தந்த நாடும் எந்த வளர்ச்சிப் பாதையைப் பின்பற்றுவதென்ற பிரச்னை அந்நாட்டின் மக்களால் தீர்மானிக்கப்படவேண்டிய அவர்களுடைய உள்நாட்டு விவகாரமாகுமென்று ஆதிமுதற்கொண்டே நாங்கள் கூறி வருகிறோம்.

இன்று பல நாடுகளாலும் அனுசரிக்கப்பட்டுவரும் பிரபல ஐம்பெரும் கோட்பாடுகளின் அடிப்படையில்தான் நாங்கள் பல்வேறு அரசுகளுடனும் எங்கள் பரஸ்பர உறவுகளை நிறுவிக்கொண்டுள்ளோம். மாறுபட்ட சமூக அமைப்புகளுடைய அரசுகள் சமாதானமாக ஒருங்கே ஒத்து வாழ்வதென்பது இன்று மறுக்கமுடியாத ஒரு உண்மையாகிவிட்டது.

இந்தியாவில் நாங்கள் தங்கியிருந்த இந்நாட்களிலே இந்திய நாட்டின் பல்வேறு நகர்களிலிருந்தும் ராஜ்யங்களிலிருந்தும் எங்களுக்கு ஆர்வமிகுந்த வாழ்த்துக்களும் அழைப்புகளும் வந்தன. துரதிருஷ்டவசமாக உங்கள் நாட்டில் நாங்கள் அதிக நாட்கள் தங்குவதற்கு இயலாததினால் இந்த அழைப்புகளை நாங்கள் ஏற்க முடியாமற் போய் விட்டது. எனவேதான் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு எங்களுடைய இந்திய நண்பர்கள் யாவரையும்—நாங்கள் சந்தித்தவர்களையும், துரதிருஷ்டவசமாக நாங்கள் சந்திக்க முடியாதவர்களையும்—அவர்களுடைய நேசபூர்வமான ஆர்வமிகுந்த வாழ்த்துக்களுக்காகவும் ஆசிகளுக்காகவும் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

எங்களுடைய இந்திய நண்பர்கள் எவ்வளவு அதிகமாக எங்கள் நாட்டிற்கு வரமுடியுமோ அவ்வளவுக்கு நாங்கள் மகிழ்ச்சியடைவோம். நீங்கள் யாவரும் எங்கள் நாட்டிற்கு வரவேண்டும்; எங்கள் வாழ்க்கை பற்றியும் நாங்கள் மேற்கொண்டுள்ள வேலைகள் பற்றியும் எங்களுடைய அனுபவம்பற்றியும் நீங்கள் நேரில் கண்டறிய வேண்டும். எந்நேரத்திலும் எங்கள் மக்கள் உங்களை உள்ளன்புடன் வரவேற்பார்கள்.

பரஸ்பரம் நம்மிரு நாடுகளும் பிரதிநிதிக் கோஷ்டிகளைப் பரிமாறிக்கொள்வதின் மூலம் நம்மிரு மக்களிடையே நட்புறவு மேலும் பலமடைந்து வளரும் என்பதில் ஐயமில்லை.

உங்களுடைய அற்புத நாட்டிற்கு விஜயம் செய்யும் பாக்கியத்தையும், உங்களுடைய தேசத்தையும், பிரயாசை மிகுந்த திறமைவாய்ந்த இந்திய

மக்களையும் நேரில் கண்டு செல்வதற்கான வாய்ப்பையும் எங்களுக்கு அளித்ததற்காக பிரதம மந்திரி நேரு அவர்களுக்கும், இந்திய சர்க்காருக்கும் மீண்டுமோர்முறை எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

அருமை நண்பர்களே, நாங்கள் சென்று வருகிறோம்! நண்பர்களாகிய நாம் மீண்டும் மீண்டும் சந்திப்போம் என்று கூறிவிடை பெற்றுக்கொள்கிறோம்!

## 1955 டிசம்பர் 13-ம் தேதி இந்திமொழி வளர்ச்சிக்கான பார்லிமெண்டரிக் கழகத்தினர் முன் எஸ். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

அருமை நண்பர்களே!

இதயபூர்வமான அமோக வரவேற்பு அளித்தமைக்கு என் சார்பிலும், என். ஏ. புல்கானின் சார்பிலும் உங்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். உங்களுடைய கழகத்திற்கு எங்களுடைய வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். இக்கழகத்தின் நடவடிக்கைகள் இந்திய மக்களுக்கு, அவர்களுடைய கலாச்சார உணர்ச்சிக்கு மிகவும் உதவிகரமாகவும் பயன் தரத்தக்கதாகவும் இருக்கும் என நாங்கள் கருதுகிறோம்.

நாங்கள் இந்தியாவிற்கு புறப்பட்டபோது இந்நாட்டைபற்றி அதிகம் அறிந்திராதவர்களாகவே இருந்தோம் ஒளிவு மறைவின்றி உங்களுக்கு இதை நான் கூறியாக வேண்டும். இந்தியாவில் நாங்கள் வந்து சேர்ந்ததும் இதை நாங்கள் திட்டவட்டமாக உணரமுடிந்தது. உங்கள் நாட்டில்அதிக காலம் தங்கவில்லை யென்றாலுங்கூட, இந்தச் சுற்றுப் பிரயாணம் இக்குறைபாட்டை பெருமளவிற்கு நிவர்த்தி செய்து கொள்வதற்கு எங்களுக்கு உதவியது.

இந்திய மொழிகளை, குறிப்பாக இந்தி மொழியைப் பயிலுவதற்கு சோவியத்மக்களுக்கு மேலும் கூடுதலான வசதிகள் கிடைக்கும்பொருட்டு, இந்தியாவிலிருந்து திரும்பியதும் நாங்கள் சகல முயற்சிகளையும் மேற்கொள்ளவேண்டிய அவசியம் குறித்து என். ஏ. புல்கானினுடன் நான் விவாதித்திருக்கிறேன். இதைச் செய்து முடிப்போமென்று நாங்கள் உறுதி கூறுகிறோம்.

நாம் ஒருவரையொருவர் மேலும் நன்கறிந்து கொள்வதற்காகவும் நம்மிரு நாடுகளிடையே பொருளாதார, கலாச்சார உறவுகளை மேலும்

பூரணமாக வளர்ந்தோங்கச் செய்வதற்காகவும் நம்மிடையே நேரிடையான தொடர்பு இருக்க வேண்டியது அவசியம். மகத்தான நமது இரு மக்களிடையிலும், உறவிற்கான சாதனமாக, நம்மிருவரையும் சேராத மூன்ருவது மொழி ஒன்று உபயோகிக்கப்படுவதை நாம் நீண்டகாலத்திற்கு பொருத்துக்கொண்டு இருக்கமுடியாது திறமை வாய்ந்த இளைஞர்கள் இந்தி மொழியும் இதர இந்திய மொழிகளும் கற்றுக்கொள்ளக்கூடிய ஒரு கல்வி நிலையத்தை எங்கள் நாட்டில் நிறுவுவதற்கு நாங்கள் பாடுபடுவோம். நம்மிரு மக்களிடையிலும் பரஸ்பர நல்லுணர்வு மேலும் ஓங்குவதற்கும், ஒருவரையொருவர் மேலும் விரிவாகவும் தெளிவாகவும் அறிந்துகொள்வதற்கும் இது துணைபுரியும்.

காலனி ஆட்சியைக் கண்டித்து உங்கள் நாட்டிலும் பர்மாவிலும் நானும் என் ஏ. புல்கானினும் செய் பிரசங்கங்கள் பிரிட்டிஷ், அமெரிக்க பத்திரிகையாளர்கள் மத்தியில் மிகுந்த சீற்றத்தை உண்டாக்கியுள்ளன. அவர்கள் சீற்றமடைவதால் பயனில்லை காலனி அடிமை முறையை எதிர்த்து நாங்கள் செய்துள்ள பிரசங்கங்களில், ஒரு தேசத்திற்கு விரோதமாக இன்னொரு தேசத்தைத் தூண்டிவிடும் முறையில் நாங்கள் எதுவும் சொல்லவில்லை. காலனிகளை சூறையாடுவது என்ற கொள்கையைக் கண்டிக்கும், காலனி அடிமை அமைப்பைக் கண்டிக்குப் பிரசங்கங்களாகவே இவற்றைக் கொள்ளவேண்டும். இத்தகைய பிரசங்கங்கள் சிலருக்குப் பிடிக்கவில்லையென்ருல் அது அவர்களுடைய மனச்சாட்சியைப் பொறுத்த விஷயம். நாங்கள் காலனி அடிமை அமைப்பின் வைரிகள் என்பதை எக்காலத்திலும், எவ்விடத்திலும் நாங்கள் கூறிக்கொண்டுதான் இருப்பேம்.

அமெரிக்காவிற்கும் பிரிட்டனுக்கும் விரோதமாக எவரையும் கிளப்பிவிட நாங்கள் விரும்பவில்லை. நாங்கள்கூட இந்நாடுகளுடன் சச்சரவின்றி வாழவேண்டும் என்றுதான் விரும்புகிரேம். இந்நாடுகளுடன் நட்புறவு கொண்டு வாழ ஆசைப்படுகிறது சோவியத் யூனியன். ஆனல் இதற்காக உண்மையை நாம் மூடிமறைத்திட முடியாது; காலனி ஆட்சியின் பாதுகாவலர் உட்பட யாவருக்கும் பிடித்தமான விஷயங்களை மட்டும் பேசிக்கொண்டிருக்கவும் முடியாது.

நீண்ட நெடுங்காலமாக ஆங்கிலேயர்கள் ஆட்சி புரிந்ததின் பயனாய் இந்திய மக்களுக்கு நன்மை ஏற்பட்டது என்று கூற முடியுமா? இவ்வாறு கூறுவதற்கு வாய் வருமா? இவ்வாறு பேச முற்படுவது அயோக்கியத்தனமாகும.

காலனி அடிமை அமைப்பு என்பது ஒரு சரித்திர உண்மையாகும். காலனி அடிமை முறைக்கு எதிரான, குறிப்பாக கோவாவிலும், இந்திய பிரதேசத்திலுள்ள இதர போர்த்துகீசியப் பகுதிகளிலும் போர்ச்சுகலின் காலனி ஆதிக்கம் இன்னமும் நீடித்து வருவதற்கெதிரான எங்கள்

பிரசங்கங்கள் அமெரிக்க ராஜதந்திரிகள் சிலருக்குக் கொதிப்பை ஏற்படுத்தியுள்ளன. போர்த்துகீசிய காலனி ஆட்சியாளர்களை ஆதரித்து பேசமுற்படும் இவர்கள், சுமார் நானூறு ஆண்டுகளாக இப்பகுதிகள் போர்ச்சுகல் வசம் இருந்துள்ளன என்பதால் இதே நிலைமை இனியும் நீடிக்க வேண்டுமென்று நியாயம் கற்பிக்க முயற்சிக்கின்றனர். எத்தனை வருடங்களாயினும் களவாடிய பொருள் களவாடிய பொருளாகவேதான் இருக்கும்; நியாயமாக அது யாருக்கு உரியதோ அவர்களிடம் திருப்பிக் கொடுத்துத்தான் ஆகவேண்டும். நேர்மை உள்ளம் இருக்குமாயின் மற்றவருக்குச் சொந்தமானதை அவரிடம் திருப்பிக் கொடுத்தாக வேண்டும்; ஆம்; வட்டியும் முதலுமாகச் சேர்த்துக் கொடுத்தாகவேண்டும்! (பலத்த கரகோஷம்).

மற்றுமோர் பிரச்னையைக் குறித்து நான் பேச விரும்புகிறேன். இந்தியாவின் ஜனத் தொகை 37 கோடி ஆகுமென எண்ணுகிறேன். எனவே சீனாவிற்கு அடுத்தபடியாக இந்தியாதான் மிகவும் அதிகமான ஜனத் தொகை உடைய நாடு. ஆதலால் உலகிலேயே இந்தியா மிகவும் சக்தி வாய்ந்த அரசுகளில் ஒன்ருகும் என்பது விளங்குகிறது. (கரகோஷம்).

இந்திய மக்களின் கலையும் இலக்கியமும் மிகவும் உயர்ந்த நிலையில் உள்ளன. உலக நாகரீகத்தின் மிகவும் தொன்மை வாய்ந்த பிறப்பிடங்களில் ஒன்று இந்தியா. இந்திய மக்களின் திறமைக்கும் அவர்களுடைய கலாச்சாரத்தின் உயர் நிலைக்கும் இந்நாட்டின் மூலை முடுக்குகளில் காணப்படும் புகழ் வாய்ந்த எண்ணற்ற சரித்திரச் சின்னங்கள் தக்க சான்றுகளாகும். இக்கட்டிடங்களில் பல, பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டவை. இந்திய நாட்டின், இந்திய மக்களின் சிறப்பை இவை பறைசாற்றுகின்றன.

இருப்பினும், இன்னும் இந்தியா உலகின் வல்லரசுகளில் ஒன்ருக அதிகாரபூர்வமாக ஏற்றுக்கொள்ளப் படாமல்தான் இருந்து வருகிறது. சோவியத் யூனியன், அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், சீனு இந்நாடுகள் தான் இதுவரையிலும் வல்லரசுகளாகக் கருதப்படுகின்றன. ஆயினும் வல்லரசாக இயங்கும் உரிமையை சீனுவிடமிருந்து பறிப்பதற்கு விரும்புகிருர்கள் மேற்கத்திய அரசியல்வாதிகள் சிலர். நகைக்கத்தக்க விஷயமாயினும்கூட, சீனுவைப்பற்றிப் பேசும்போதெல்லாம் அவர்கள் தைவான் தீவில் குடியேறியுள்ள சியாங்-கே-ஷேக் கூட்டத்தையே குறிப்பிடுகிருர்கள்.

இவ்விதம் ஐந்து நாடுகள் வல்லரசுகளாக ஏற்கப்பட்டு இருக்கின்றன. இவ்விஷயங்கள் குறித்து யதார்த்தக் கண்ணுடன் பரிசீலிக்க முற்பட்டால், இந்தியாவும் ஒரு வல்லரசாக ஏற்கப்படாதிருப்பது ஏன் என்ற கேள்வி எழாமல் இருக்கமுடியாது. இதற்குக் காரணமென்னவெனில், காலனி ஆட்சியாளர்கள் உங்கள் அரசையும் உங்கள் மக்களையும் இழிவு

படுத்த விரும்புகிருர்கள். இந்தியாவை ஒரு வல்லரசாக அங்கீகரிப்பது என்பது அவர்கள் தங்களுடைய நிலைமையை மாற்றிக்கொண்டால்தான் முடியும்.

ஆனால் நாங்கள் இந்தியா ஒரு வல்லரசு என்றுதான் கருதுகிருேம். உலகின் வல்லரசுகளுக்கான முதல் ஸ்தானங்களில் ஒன்று இந்தியாவுக்கு உரித்தாகுமென்று நாங்கள் கருதுகிருேம். (பலத்த ரகோஷம்).

மேலும் ஒரு விஷயம்பற்றி பேச விரும்புகிறேன் நான். மேற்கு உலகிற்கு விரோதமாக கிழக்கு உலகைத் தூண்டிவிடுவதாக என். எ. புல்கானின்மீதும் என்மீதும் சிலர் குற்றம் சாட்டுகின்றனர். இது அப்பட்டமான பித்தலாட்டமாகுமே யன்றி வேறு எதுவும் இல்லை. எங்களுடைய நாடு ஐரோப்பா, ஆசியா இரண்டு கண்டங்களையும் பிரதிநிதித்துவப் படுத்துகிறது. உலகின் ஒரு பகுதியை இன்னொரு பகுதிக்கு விரோதமாகத் தூண்டிவிடுவதை என்றுமே நாங்கள் எதிர்த்து வந்திருக்கிருேம்; இன்றும் எதிர்த்து வருகிருேம். ஒரு கண்டத்தின்மீது இன்னொரு கண்டம் ஆதிக்கம் செலுத்துவதை நாங்கள் எதிர்க்கிருேம். (கரகோஷம்)

எல்லா மக்களும் சுயேச்சையுடன் வாழவேண்டும்; தங்கள் விருப்பத்திற்கு ஏற்ற முறையில் வளர்ச்சி பெறவேண்டும். தம் பொருளாதாரத்தையும், கலாச்சாரத்தையும் அவர்கள் பூரணமாக வளர்த்து, சமாதானமாகவும் நட்புரிமையுடனும் அவர்கள் வாழவேண்டும் என்பதுதான் எங்கள் விருப்பம். (கரகோஷம்)

நீங்கள் வெற்றி பெறுவீர்களாக என்று நான் ஆசி கூறுகிறேன் நம்மிரு மக்களிடையிலும், நம்மிரு நாடுகளிடையிலும் நட்புறவு வலுவடைந்து வளர்ந்தோங்கும் பொருட்டு நாங்கள் எங்களால் இயன்றது அனைத்தையும் செய்வோம். (பலத்த கரகோஷம்)

## 1955 டிசம்பர் 14-ல் டில்லியில் பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் என். ஏ. புல்கானினும், என். எஸ். குருஷேவும் நிகழ்த்திய உரை

இந்திய சர்க்காரின் அழைப்பின் பேரில் நட்புறவை வலியுறுத்தும் முறையில் நாங்கள் இந்திய நாட்டிற்கு விஜயம் செய்தோம். நாங்கள் இந்தியாவிற்கு வந்துள்ளதும், இவ்வருடம் ஜூன் மாதத்தில் நேரு அவர்

கள் நட்புறவு யாத்திரையை மேற்கொண்டு சோவியத் நாட்டிற்கு வந்திருந்ததும் நம்மிரு தேசங்களிடைய நட்புறவை மேலும் வளர்ந்தோங்கச் செய்வதற்கும், உலகெங்கும் சமாதானத்தை வலுவடையச் செய்வதற்கும் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த சம்பவங்களாகும்.

நேற்றைய தினம் கையொப்பமிடப்பட்ட இந்திய-சோவியத் கூட்டுப் பிரகடனம் பற்றி உங்களுக்குத் தெரிந்திருக்கும். சோவியத் யூனியன், இந்தியா இரு நாடுகளின் ராஜதந்திரிகளும் இவ்விரு நாடுகளிடையிலுள்ள உறவுகள் சம்பந்தமான மிகவும் முக்கியமான பிரச்னைகள் பற்றியும் மற்றும் மிகவும் முக்கியமான சர்வதேசப் பிரச்னைகள் பற்றியும் கொண்டுள்ள அபிப்பிராயங்கள் இந்தப் பிரகடனத்தில் எடுத்துரைக்கப்படுகின்றன. சோவியத் நாட்டிற்கும் இந்தியாவிற்குமிடையே நேசவுறவுகளை மேலும் வலிமையடையச் செய்வதில் தலையாய முக்கியத்துவம் பெற்றிருப்பதுடன், இப்பிரகடனம் சர்வதேச ரீதியிலும் மிகுந்த முக்கியத்துவமுடையதாகும்.

இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்த நாங்கள் எழிலுடைய உங்கள் நாட்டின் பல்வேறு நகர்களுக்கும், பிரதேசங்களுக்கும் சென்றிருந்தோம். மிகப் பெரிய நிர்மாண வேலை அரங்கங்கள் சிலவற்றையும் பம்பாய், கல்கத்தா, பெங்களூர், சென்னை முதலிய இடங்களிலுள்ள தொழில் நிலையங்களையும் பார்வையிட்டோம். விவசாய வளர்ச்சி வேலைகள் நடைபெறும் கேந்திர இடங்களுக்கு விஜயம் செய்தோம். இந்தியாவின் விஞ்ஞான நிலையங்கள் பலவற்றைப் பற்றியும் தெரிந்து கொண்டோம். பழம்பெருங் கட்டிடக் கலையின் அதியற்புத சின்னங்களைக் கண்டு களித்தோம். பல்வேறு இனத்தவர்களையும் கொண்ட இந்திய மக்களுடைய வாழ்க்கை பற்றியும், அவர்கள் ஈடுபட்டுள்ள வேலைகள் பற்றியும், தேச சுயேச்சை பெற்றபின் இவ்வாண்டுகளில் அவர்கள் கண்டுள்ள சாதனைகள்பற்றியும் நாங்கள் கண்டறிந்து கொணடோம். தவிரவும் இந்திய நாட்டின் பிரம்மாண்டமான செல்வாதாரங்கள் குறித்தும் அதன் சக்திகள் குறித்தும் நாங்கள் ஒருவாறு தெரிந்துகொள்ள முடிந்தது.

மற்றெதையும்விட இந்திய மக்களும், குதூகலமான அவர்களுடைய இனிய குழந்தைகளும் இளைஞர்களும், அவர்களுடைய திறமையும் தேர்ச்சியும், சமாதானம் நிலவவேண்டுமென்றும், சகல நாடுகளுடனும் நேசப்பான்மையுடன் ஒத்துழைக்க வேண்டுமென்று அவர்கள் தணியாத வேட்கை கொண்டிருப்பதும்தான் எங்கள் உள்ளத்தில் மிகவும் ஆழமாகவும் மறக்கமுடியாத முறையிலும் பதிந்துவிட்டன. சென்றவிடமெங்கும் இந்திய மக்கள் விருந்தினர்களாக எங்களை உள்ளன்புடன் வரவேற்று உபசரித்தனர். சோவியத் நாட்டின் மக்களிடம் இந்திய மக்கள் கொண்டுள்ள ஆழ்ந்த அனுதாபத்தையும் நேசவுணர்வையும் இந்த வரவேற்பு எடுத்துக்காட்டியது.

தமது தேசப் பொருளாதாரத்தை வளர்த்துச் செல்வதற்காகவும், மேலும், முக்கியமாக பொருளாதார முன்னேற்றத்திற்கான அடிப்படையாகவும், எந்த நாட்டிற்கும் அதன் சுயேச்சை நிலையைப் பாதுகாத்துக் கொள்வதற்கான பிரதான தேவையாகவும் விளங்கும் இயந்திரத் தொழில்களை வளர்த்து உயர்த்துவதற்காகவும் இந்திய மக்கள் மேற்கொண்டுவரும் முயற்சிகள் எங்களைப் பெரிதும் கவர்ந்துவிட்டன. தாமோதர் பள்ளத்தாக்கிலும் நங்கலிலும் நடைபெற்று வரும் பிரம்மாண்டமான நிர்மாண வேலைகளும், உருக்குத் தொழிற்சாலைகளை நிறுவுவதற்கு மேற்கொள்ளப்பட்டுள்ள திட்டங்களும், புதிய இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கான தயாரிப்பு வேலைகளும் உங்கள் நாட்டின் பொருளாதாரத்தை வளர்ச்சிபெறச் செய்யும் பொருட்டு இந்திய சர்க்கார் எடுத்துக்கொண்டுள்ள முக்கியமான நடவடிக்கைகளாகுமென்பது வெளிப்படை.

இந்தியாவின் தேசப் பொருளாதாரத்தை வெற்றிகரமாக வளர்ந்தோங்கச் செய்வதற்குத் தேவையான சகல வசதிகளும் இந்தியாவினிடம் இருக்கின்றன. ஏராளமான இயற்கைச் செல்வாதாரங்களும், வளமுடைய பிரமாண்ட நிலப் பரப்புகளும், மிகவும் முக்கியமாக பல நூற்றுண்டுகால வரலாற்றின் எண்ணற்ற ஆண்டுகளிலே அழியாப் புகழ் படைத்த கலாச்சார படைப்புகளை சிருஷ்டித்துள்ள திறமையும் பிரயாசையும் மிகுந்த இந்திய மக்களின் அளவுகடந்த ஆக்கல் சக்திகளும் தேசப் பொருளாதாரத்தின் வளர்ச்சிக்குத் தேவையான சகல வசதிகளும் இந்தியாவினிடம் உள்ளன என்பதைக் குறிக்கின்றன. தனது பொருளாதாரத்தை வளர்ப்பதற்கும் தனது செல்வாதாரங்களையும் ஆள் பலத்தையும் பூரணமாகப் பயன்படுத்திக்கொள்வதற்கும் தற்போது இந்தியா மேற்கொண்டுவரும் முயற்சிகளின் பயனாய் இயந்திரத் தொழிலுற்பத்திகளையும் விவசாய உற்பத்திகளையும் சிறிது காலத்திற்குள் வளர்ந்து பெருகும்படிச் செய்வதற்கும் அதன் மூலம் தன் மக்களின் நல்வாழ்வைக் கணிசமான அளவிற்கு உயர்த்துவதற்கும் முடியுமென்றே நாங்கள் அபிப்பிராயப்படுகிறோம். திட்டரீதியில் பொருளாதாரத்தை வளர்த்துச் செல்வதில் எங்களுக்குக் கிடைத்துள்ள அனுபவத்தின் அடிப்படையில் சோவியத் மக்களாகிய நாங்கள் இந்த அபிப்பிராயத்தை வெளியிடுகிறோம்.

நம்மிரு மக்களிடையிலும் இப்பொழுது நிறுவப்பட்டுவரும் நேச உறவுகள் நமது இரு நாடுகளிடையே நெருங்கிய பொருளாதார, விஞ்ஞான, கலாச்சார ஒத்துழைப்பு வளர்வதற்கான சாதக நிலைமைகளை உண்டாக்கிவருகின்றன. விஞ்ஞான–தொழில் நுட்பத் துறைகளிலும், பொருளாதாரத் திட்ட வேலைகளிலும், தொழில் நிலையங்களையும் நீர்மின்ராச நிலையங்களையும் நிர்மாணம் செய்வதிலும் தனக்குள்ள அனுபவத்தை பரஸ்பர அனுகூலத்தின் அடிப்படையில் பகிர்ந்துகொள்ள சோவியத் யனியன் தயாராக இருக்கிறதென்பதை ஏற்கனவே நாங்கள்

அறிவித்துள்ளோம். அதே சமயத்தில் பொருளாதாரம், விஞ்ஞானம், கலாச்சாரம் போன்ற பல துறைகளிலும் இந்திய மக்கள் பெற்றுள்ள அனுபவத்தை சோவியத் யூனியன் மகிழ்ச்சியுடன் கற்றுக்கொள்ளும். இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்குமிடையே கலாச்சாரத் தொடர்பு களை விரிவடையச் செய்வதானது நமது இரு நாடுகளிடையிலும் நேச உறவுகளை மேலும் வலுவடையச் செய்யுமென நாங்கள் நம்புகிறோம். நாங்கள் இந்தியாவிற்கு விஜயம் செய்ததின் பயனாகவும், நேரு அவர் களுடனும் இந்திய நாட்டில் இதர தலைவர்களுடனும் சம்பாஷணைகள் நடத்தியதின் விளைவாகவும், சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கு மிடையே பொருளாதார ஒத்துழைப்பு மேலும் வளர்ச்சி பெறுவது சம்பந்தப்பட்ட பல முக்கிய விஷயங்கள் குறித்து உடன்பாடு ஏற்பட்டிருக் கிறது.

இந்திய மக்கள் சமாதானத்தைப் பெரிதும் விரும்புகிறார்கள் என் பதையும், சமாதானத்தைப் பாதுகாப்பதற்காகவும், வலுவடையச்செய் வதற்காகவும் தீர்மானகரமான முறையில் போராடுவதற்கு அவர்கள் தயாராக இருக்கிறார்கள் என்பதையும் எங்களுடைய இந்திய விஜயம் ஐயந்திரிபற எங்களுக்கு உணர்த்தியுள்ளது

சர்வதேசப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதிலும் அரசுகளிடையே நேசவுறவுகள் ஏற்படும்படி செய்வதிலும் இந்தியா இன்று மென்மேலும் கூடுதலான முக்கியத்துவமுடைய பணியாற்றி வருகிறது. இந்தியாவும் சீன மக்கள் குடியரசும் பங்கெடுத்துக்கொள்ளாவிடில் ஆசியாவிலும் சரி, இதர பகுதிகளிலும் சரி, எந்த நெருக்கடியான பிரச்னைக்கும் இன்று தீர்வு காண முடியாது. இந்தோ-சீன யுத்தத்திற்கு முடிவு ஏற்பட்டதற்கு இந் தியாவும் சீன மக்கள் குடியரசும் பங்கெடுத்துப் பணி புரிந்தது முக்கிய மான ஒரு காரணமாகும் சர்வதேச கெடுபிடி நிலைமையைத் தணியச் செய்வதற்கும் ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளிடையே ஒத்துழைப்பை வளர்ப் பதற்கும் முக்கிய சேவைபுரிந்த பாண்டுங் மகாநாட்டின் நடவடிக்கைகளி லும் இதேபோல் இவ்விரு நாடுகளும் பங்குகொண்டு தீவிரமாக செய லாற்றின. சர்வதேசப் பிரச்னைகளைத் தீர்த்துவைக்கும் வேலையில் இவ் விரு நாடுகளும் தீவிரமாகவும் பயன்தரத் தக்க வகையிலும் பங்கெடுத்து பணிபுரிகின்றன என்பதற்கு இவை மிகச் சிறந்த உதாரணங்கள்.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்குமுள்ள உறவுகள் சமாதான மாக ஒத்துவாழ்வது பற்றிய பிரபல ஐந்து கோட்பாடுகளையே அடிப் படையாகக் கொண்டிருக்கின்றன. இனியும் அவ்வாறேதான் இருக்கும். ஏனெனில் இந்த ஐந்து கோட்பாடுகள் சமாதானத்தை நேசிக்கும் சகல மக்களின் நலன்களுக்கும், சமாதானத்தைப் பலமடையச் செய்வதென்ற இலட்சியத்தின் நலன்களுக்கும் உகந்த கோட்பாடுகள்.

சோவியத் அரசு நிறுவப்பட்டது முதற்கொண்டே சோவியத் சர்க்கார் பின்பற்றி வரும் அயல்நாட்டுக் கொள்கைக்கு முற்றிலும் பொறுத்தமான கோட்பாடுகள் இவை. மிகப் பல நாடுகளால் இக்கோட்பாடுகள் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கின்றன. பாண்டுங் மகாநாடு வெளியிட்ட பிரகடனம் இக்கோட்பாடுகளின் அடிப்படையில் வரையப்பட்டதாகும். இன்னமும் இக்கோட்பாடுகளை அங்கீகரிக்காமல் இருந்துவரும் அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் போன்ற நாடுகளும் இவற்றை ஏற்றுக் கொள்ளுமேயானால், சர்வதேச கெடுபிடி நிலைமையை மேலும் தணியச் செய்வதற்கும் பல்வேறு தேசங்களிடையிலும் அவசியமான நம்பிக்கையை உண்டாக்குவதற்கும் இது மிகவும் உதவியாக இருக்கும். சோவியத் யூனியனைப் பொறுத்தமட்டில், அது சமாதானக் கொள்கையை—பல்வேறு தேசங்களின் பரிபூரண அரசுரிமையை மதித்து நடக்கும் கொள்கையை—அனுக்கிரமிப்பு, சமத்துவம், பரஸ்பர அனுகூலம், இதர அரசுகளின் உள்விவகாரங்களில் தலையிடாதிருத்தல் என்ற கொள்கையை -மாறுபட்ட சமூக, அரசியல் அமைப்புகளையுடைய அரசுகள் சமாதானமாக ஒத்துவாழ்வதென்ற கொள்கையை—பின்பற்றி வந்துள்ளது; இனியும் பின்பற்றிவரும். சோவியத் அரசின் அடிப்படைக் குணுதிசயத்திலிருந்து பெறப்படும் கொள்கை இது. சமாதானக் கொள்கையை இம்மியும் பிறழாமல் தொடர்ந்து பின்பற்றுவதுதான் சோவியத் அரசின் அடிப்படைக் குணுதிசயம்.

தூரகிழக்கு சம்பந்தமான அவசரப் பிரச்னைகள் பல இன்னமும் தீர்க்கப்படாமலிருப்பதை யாவரும் அறிவர். இந்தோ-சீனு பற்றிய ஜெனீவா ஒப்பந்தங்களின் அடிப்படையில் தான் இந்தோ-சீனு பிரச்னைக்கு பூரணமான இறுதித் தீர்வு ஏற்பட முடியுமென்பது தெளிவு. சீன மக்கள் குடியரசிற்கு ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தில் அதற்குரிய நியாயமான ஸ்தானத்தை அளிப்பதுபற்றிய முக்கியமான பிரச்னையைத் தீர்க்காமல் காலங்கடத்தி வருவதும், தைவானையும் ஆதிகாலந்தொட்டு சீன மக்கள் குடியரசினுடைய பிரதேசத்தின் பகுதியாக இருந்துவரும் இதர தீவுகளையும்பற்றிய பிரச்னையை சீன மக்களுடைய தேசிய நலவுரிமைகளுக்கு உகந்த முறையில் தீர்க்காமல் ஒத்திப்போட்டுக் கொண்டு போவதும் சாத்தியமல்ல.

உலகின் பல்வேறு பகுதிகளிலும் எவ்விதமான இராணுவக் கூட்டமைப்புகளையும் நிறுவக்கூடாதென்றும், இதர நாடுகளுடைய பிரதேசங்களில் இராணுவத் தளங்களை அமைத்துக்கொள்ளக் கூடாதென்றும்தான் ஆரம்ப முதற்கொண்டே சோவியத் யூனியன் சர்க்கார் கூறி வந்திருக்கிறது. இத்தகைய கூட்டமைப்புகளும் தளங்களும் நிறுவப்படுவதானது, சமாதானத்திற்குப் பேராபத்தை உண்டாக்குகிறது; சர்வதேச கெடுபிடி நிலைமையைத் தணிமவைப்பதற்கும் சமாதானத்தைப் பலமடையச் செய்வதற்கும் தடங்கலான புதிய தடைகளை ஏற்

படுத்துகிறது. பல்வேறு தேசங்களுக்கும் மெய்யாகவே பந்தோபஸ்து ஏற்படவேண்டுமானால், சமாதானத்தை வலுவடையச் செய்யும் நோக்குடன் அரசுகள் சேர்ந்து நின்று கூட்டு முயற்சிகளை மேற்கொள்ளுவதின் மூலம் அது சாத்தியமே ஒழிய இராணுவக் கூட்டமைப்புகளைக் கட்டியமைப்பதால் சாத்தியமல்ல, என்று நாங்கள் கருதுகிறோம். இதைக் கருத்தில் கொண்டுதான் சோவியத் சர்க்கார்ஐரோப்பாவில் கூட்டு பந்தோபஸ்து அமைப்புபற்றி பிரபல பிரேரணையைக் கொண்டுவந்தது.

ஆயுத உற்பத்திப் போட்டியாலும், அணுசக்தி நீர்வாயு ஆயுதங்கள் தொடர்ச்சியாக உற்பத்தி செய்து குவிக்கப்படுவதாலும் சமாதானத்திற்கு ஆபத்து ஏற்பட்டுவருகிறது; இராணுவச் செலவுகளின் பிரதான பகுதியைத் தாங்கி நிற்கும் விரிவான மக்கள் பகுதியினர்மீது இவை பெருஞ் சுமையை சுமத்துகின்றன. போர் ஆயுதங்களைக் குறைப்பதும், அணுசக்தி,நீர்வாயு ஆயுதங்களுக்கு நிபந்தனையின்றிப் பூரண தடை விதிப்பதும் சகல அரசுகள் முன்பும், முக்கியமாக வல்லரசுகள் முன்பும் உள்ள அவசர அவசியமானதோர் பிரச்னையாகுமென நாங்கள் கருதுகிறோம். இது சம்பந்தமாய் உடன்பாடு ஏற்படும்வரை சோவியத் யூனியன் தனது பாதுகாப்பு சக்தியை வளர்த்துக்கொள்ளும்படியும் அணுசக்தி, நீர்வாயு ஆயுதங்களை உற்பத்தி செய்யும்படியும் நிர்ப்பந்தம் செய்யப்படுகிறதென்பதும், இனி வருங்காலத்திலும் அவ்வாறுதான் இருக்குமென்பதும் நன்கு விளங்குகிறது. தற்போதைய நிலைமைகளில் வேறு எதையும் செய்வதற்கில்லை.

விருந்தோம்பும் பண்பில் சிறந்து விளங்கும் இந்திய நாட்டினிடமிருந்து விடைபெற்றுக்கொள்ளும் நாங்கள், இந்திய மக்களுக்கும், இந்திய சர்க்காருக்கும் நாங்கள் விஜயம் செய்த ராஜ்ஜியங்களின் சர்க்கார்களுக்கும், எங்கும் எங்களுக்கு அளிக்கப்பட்ட ஆர்வமிகுந்த அமோக வரவேற்பிற்காக நன்றி தெரிவித்துக்கொள்கிறோம். சோவியத் நாட்டின் மக்களை இந்திய மக்கள் பெரிதும் நேசிக்கிறார்கள் என்பதையே இந்த அமோக வரவேற்பு எடுத்துக் காட்டுகிறது. சோவியத் மக்களும் இதே போல் இந்திய மக்களை உளமாற நேசிக்கிறார்கள் என்று நாங்கள் எங்கள் இந்திய நண்பர்களுக்கு உறுதிகூற விரும்புகிறோம்.

எங்களுக்குக் கிடைத்துள்ள இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு சோவியத் நாட்டின் மக்களுடைய இதயபூர்வமான சகோதர நல்வாழ்த்துக்களை இந்திய நாட்டின் மக்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறோம்.

நம்மிரு மக்களின் நல்வாழ்வை உயர்த்துவதற்கும் அகில உலகிலும் சமாதானம் நிலைபெறுவதற்கும் நமது இரு நாடுகளிடையிலும் நட்புறவும் ஒத்துழைப்பும் இடைவிடாது விரிவடைந்து பலம்பெறுமென நாங்கள் உறுதியாக நம்புகிறோம்.

எங்களுடைய விஜயத்தின் பலன்கள் குறித்தும் இங்கு நாங்கள் கண்ணுற்றது குறித்தும் தொகுத்துக்கூற முற்படும்போது இரண்டு பிரச்னைகள்பற்றி அவசியம் குறிப்பிட்டாக வேண்டும். இவ்விரு பிரச்னைகளும் இந்திய மக்களிடையே மிகுந்த பரபரப்பை ஏற்படுத்துகின்றன. இதற்கான காரணங்களை நாங்கள் நன்கு புரிந்துகொள்ள முடிகிறது. சட்டத்திற்கு விரோதமாக போர்த்துக்கீசிய ஆதிக்கத்தின்கீழ் வைத்துவரப்படும் இந்தியப் பிரதேசமான கோவாபற்றிய பிரச்னையையும், காஷ்மீர் பிரச்னையையும் மனதிற்கொண்டே இவ்வாறு நாங்கள் கூறுகிறோம்.

எங்கள் சுற்றுப் பிரயாணத்தின்போது நாங்கள் செய்த பிரசங்களில் இப்பிரச்னைகள் சம்பந்தமாய் சோவியத் யூனியனின் நிலைபற்றி விளக்கினோம். செல்லறித்துப்போன காலனி அடிமை அமைப்பின் மீதமிச்சங்கள் அறவே அழித்தொழிக்கப்பட வேண்டுமென்று சோவியத் யூனியன் உறுதிவாய்ந்த முறையில் பாடுபட்டு வருகிறது. காலனி ஆட்சியாளர்களால் அநியாயமாகக் கைப்பற்றப்பட்டு, நீண்ட பல ஆண்டுகளாக மிகக் கொடிய முறையில் சுரண்டப்பட்டுவரும் பிரதேசங்களில் வாழும் மக்கள் தமது எதிர்காலம்பற்றித் தாமே முடிவுசெய்ய வேண்டுமென்று கூறுகிறது சோவியத் யூனியன்.

கோவா இந்தியாவிற்குச் சொந்தமான பிரதேச மென்பதை உலகம் நன்கறியும். இப்பிரதேசத்தில் வாழும் மக்கள் இரத்த பந்தங்களால் தமது தாயகத்துடன் பிரிக்க முடியாத வகையில் இணைக்கப்பெற்றுள்ளனர். இந்த மக்கள் இந்தியாவுடன் சேராமல் தனித்து இருப்பார்களென்பது கற்பனைக்கும் மீறியது. இதை அறியாதவர் இருக்க முடியாது.

காலனி ஆட்சியாளர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இந்திய மக்களுடைய நலவுரிமைகளுக்கு ஏற்ப இப்பிரச்னை தீர்க்கப்பட்டுவிடுமென்பதில் எங்களுக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. அன்னியப் பிரதேசத்தைவிட்டு காலனி ஆட்சியாளர்கள் வெளியேறித்தான் ஆகவேண்டும்.

காஷ்மீரைப் பொறுத்தவரை, காஷ்மீர் மக்கள் தமது தேசம் விடுதலையடைந்துள்ளதுபற்றி எவ்வளவு குதூகலமடைகின்றனர் என்பதையும், தமது பிரதேசம் இந்தியக் குடியரசினிடமிருந்து பிரிக்கமுடியாத அதன் பகுதியாகுமென அவர்கள் கருதுகிறார்கள் என்பதையும் காஷ்மீரில் சுற்றுப் பிரயாணம் செய்தபோது நாங்கள் தெளிவாகக் காண முடிந்தது. வெளியார் தலையீடின்றி காஷ்மீர் மக்கள் தமது விவகாரங்களைத் தீர்த்துக்கொள்வார்கள் என்பதில் எங்களுக்கு எவ்வித ஐயமுமில்லை. காஷ்மீர் மக்களுடைய விருப்பத்திற்கேற்ப இந்தப் பிரச்னைக்குத் தீர்வு ஏற்பட்டே தீரும்.

நேற்றைய தினமும் இன்றைய தினமும் பத்திரிகை நிருபர்கள் எங்களுக்குக் கொடுத்தனுப்பிய பல கேள்விகளுக்கு மேலே நாம் கூறியுள்ளது பதிலளிக்கிறதென்று நாங்கள் எண்ணுகிறோம். மேலும் பல

கேள்விகள் எங்களுக்குக் கிடைத்துள்ளன. இக்கேள்விகள் யாவற்றையும் பல வகைகளாகத் தொகுத்துப் பாகுபாடு செய்ய முடியும்.

முதலாவதாக, இந்திய-சோவியத் பொருளாதார ஒத்துழைப்பின் ஸ்தூலமான அம்சங்கள் பலவற்றைப் பற்றி தெரிந்துகொள்ள வேண்டு மென்று உங்களில் பலர் கேட்டிருக்கிறீர்கள். இத்தகைய பொருளாதார ஒத்துழைப்பிற்கு என்னென்ன சாத்தியப்பாடுகள் உள்ளன; இந்த ஒத்துழைப்பு என்னென்ன துறைகளில் வியாபித்திருக்கும் என்றெல்லாம் கேட்கப்பட்டிருக்கிறது. இந்தக் கேள்வி சம்பந்தப்பட்டமட்டில், இந்திய சர்க்காருடன் முறையாக பேச்சுவார்த்தைகள் நடத்தப்பட்டு வருகின்றன என்று நாங்கள் கூறமுடியும். இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் கும் இடையிலுள்ள பொருளாதார உறவுகள்பற்றி நேற்றைய தினம் கையெழுத்தான இந்திய-சோவியத் கூட்டறிக்கையிலிருந்து மேற்கூறிய பேச்சுவார்த்தைகள் முதற்படியாக அளித்துள்ள பலன்கள் என்னென்ன என்பதை நீங்கள் அறிவீர்கள். மேலும், பரஸ்பர அனுகூலத்தின் அடிப்படையிலும், நம்மிரு நாடுகளும் பரஸ்பரம் ஒன்றை ஒன்று மதித்து நடக்கும் அடிப்படையிலும் நமது பொருளாதார உறவுகள் வளர்ந்து பெருகுவதற்கான உறுதியான அஸ்திவாரம் இருந்துவருகிறது என்று நாங்கள் திடமாகக் கூறமுடியும்.

இரண்டாவதாக, இந்தியாவுடன் தனது நேசவுறவுகளைப் பலப் படுத்தி வளர்த்துப் பெருக்குவதற்காக, அமெரிக்காவுடனும் இதர மேலைய நாடுகளுடனும், இந்தியா வர்த்தகத் துறையில் ஒத்துழைக்க மறுக்க வேண்டும் என்று சோவியத் யூனியன் நிபந்தனை விதிக்கப்போகிறதா என்று பெரும் கஷ்டப்பட்டு கவலையை வரவழைத்துக்கொண்டு இந்தியர் கள் அல்லாத பத்திரிகை நிருபர்கள் பலர் கேட்கிறார்கள்! இந்தியா விற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையே பிளவையும் பிணக்கையும் ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணமுடையவர்கள்தான் இத்தகைய கேள்விகளை கேட்கமுடியும். நாங்கள் ஏற்கனவே கூறினோம். இப் பொழுது மீண்டும் ஒருமுறை திரும்பக் கூறுகிறோம்; அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் உள்பட எல்லா நாடுகளுடனும் சமாதானபூர்வ மாக ஒத்துழைப்பதும், நட்புறவு கொண்டிருப்பதும்தான் எங்கள் கொள்கை. இந்திய-சோவியத் நட்புறவு, இந்தியாவும் சோவியத் யூனியனும் இதர நாடுகளுடன் கொண்டுள்ள உறவுகளுக்கு தீங் கிழைக்கக்கூடியது என்ற கூற்று அர்த்தமற்ற வீணான பீதியே என்பது வெளிப்படை. இதற்கு எவ்வித முகாந்திரமும் இல்லை.

மூன்றாவதாக, சர்வதேச உறவுகள் மேற்கொண்டு எவ்வாறு, எந்தத் திசைவழியில் வளர்ச்சியடையப் போகின்றன என்பது பற்றி பல நிருபர் கள் கேள்வி கேட்டுள்ளனர். சில வட்டாரங்கள் (எந்த வட்டாரங்கள் என்பது உங்களுக்கே தெரியும்) "ஜெனிவா மனப்பான்மை" மாண்

டொழிந்து விட்டதாகவும், "கெடுபிடி யுத்த"த்தை மீண்டும் முழு மூச்சுடன் துவக்க வேண்டியதற்கு தக்க சமயம் இதுவே என்றும் ஓயாமல் திரும்பத் திரும்பக் கொக்கரித்து வருகின்றன. இது சம்பந்தமாகவும் நிருபர்களில் சிலர் கவலை தெரிவித்துள்ளனர்.

நாங்கள் இந்தியாவிற்கும் பர்மாவிற்கும் விஜயம் செய்து சில நாட்கள் தங்கியிருந்தது சம்பந்தமாகவும், நாங்கள் ஆப்கானிஸ்தானத்திற்கு விஜயம் செய்யப்போவது சம்பந்தமாகவும் மீண்டும் "கெடுபிடி யுத்தத்"தை கட்டவிழ்த்து விடுவதற்கு சிலர் முயற்சித்து வருவதை நீங்களே பார்க்க முடியும். எங்களுடைய பிரசங்கங்கள் குறித்து, ஒழுக்கங்கெட்ட பத்திரிக்கையாளர்கள் எழுதிய வசைபுராணத்தை என்னென்று சொல்வது? அவர்கள் எழுதாத அவதூறு, கூருத பழி, வீசாத கண்டனக் கணைகள் ஒன்றுமேயில்லை! எங்கள் சொற்பொழிவுகளை அவர்கள் திரித்துப் புரட்டி, சிதைத்து உருமாற்றியதைப் பற்றி சொல்லவும் வேண்டுமா? ஆனல் சோவியத் மக்களாகிய நாங்கள், பொறுமையும் நிதானமும் உடையவர்களாவோம். "சூரியனைப் பார்த்து நாய் குறைக்கிறது" என்று நாங்கள் இந்த அவதூறுகளை ஒரு பொருட்டாகக் கருதுவதே இல்லை. சங்கு சுட்டாலும் வெண்மை தறுமேயன்றி கருத்துவிடாது என்று மக்கள் கூறுவது முற்றிலும் சரியே.

இந்தக் கேள்வியின் சாரத்தை மனதிற்கொண்டு பதில் அளிப்பதென்றல், கடந்த கோடையில் ஜெனிவாவில் நடந்த நான்கு வல்லரசு சர்க்கார் அதிபர்களின் மகாநாட்டின் நற்பயனாக உருவாகிய "ஜெனிவா மனப்பான்மை" ஒரு உன்னத பாத்திரத்தை வகித்துள்ளது என்றும் இந்த மனப்பான்மைக்குக் குழிபறிக்க எடுக்கப்படும் எந்த ஒரு முயற்சியும் தோல்வியடைந்தே தீரும் என்றும் நாங்கள் கருதுகிறோம் என்றுதான் கூறவேண்டும். சர்வதேச ஒத்துழைப்பை தொடர்ந்து ஆதரித்து மென்மேலும் பலப்படுத்த வேண்டும் என்பதும், சகல நாடுகளும் சமாதான பூர்வமாக ஒருங்கே ஒத்துவாழ வேண்டும் என்பதுமே எங்கள் விருப்பம். உலக மக்கள் எதிர்பார்த்த பலனை, ஜெனிவாவில் சமீபத்தில் கூடிய நான்கு வல்லரசு அயல்நாட்டு மந்திரிகள் மகாநாடு அளிக்கவில்லை என்றல், நாங்கள் முன்பே கூறியுள்ளதுபோல், நிலைமை போதிய அளவுக்கு பரிபக்குவம் அடையாததே அதற்குக் காரணமாகும். வெகு காலத்திற்கு முன்பே கண்டனம் செய்யப்பட்ட "ஆயுத பலத்தின் உச்சிமீது நிற்கும் கொள்கை"யை சில வல்லரசுகள் இன்னமும் கைவிடவில்லை என்பதற்கும் இது சான்ருகும். இந்த நிலை கைவிடப்பட்டாலொழிய பேச்சு வார்த்தைகளால் எவ்வித பலனும்க ஏற்படாது என்று அழுத்தம் திருத்தமாக வலியுறுத்திக்கூற விரும்புகிறோம்.

எது எப்படி இருந்தாலும், கூட்டு பந்தோபஸ்து, ஆயுதக் குறைப்பு, அணு ஆயுதங்களுக்குத் தடைவிதிப்பது, தேசங்களுக்கிடையில் தொடர்பு

களைப் பெருக்குவது முதலிய பிரச்சனைகள் குறித்து யதார்த்தபூர்வமான, காரிய சாத்தியமான பல யோசனைகளை சோவியத் தூதுகோஷ்டி ஜெனீவா மகாநாட்டில் சமர்பித்தது என்பதை நீங்கள் அறிவீர்கள். எனவே, உடன்பாடு எதுவும் ஏற்படாதது எங்கள் தவறல்ல. இந்த மிகவும் முக்கியமான பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதற்காக, வருங் காலத்திலும் அயராது தொடர்ந்து பாடுபடுவோம்.

இது சம்பந்தமாக மற்ருெரு கேள்வி கேட்கப்பட்டுள்ளது. தூர கிழக்குப் பிரதேசத்தின் மிகவும் முக்கியப் பிரச்னைகளை விவாதிக்கும் பொருட்டு, ஜெனீவா மகாநாட்டின் பாணியில், வல்லரசு அதிபர்களின் புதிய மகாநாடு ஒன்றைக் கூட்டுவதற்கு இது சரியான தருணம்தானு என்று பல நிபுணர்கள் கேட்டுள்ளார்கள். இந்த யோசனை வரவேற்கத் தக்கது என்று நாங்கள் கருதுகிருேம். "ஆயுத பலத்தின் உச்சிமீது நிற்கும்" அபகீர்த்திவாய்ந்த கொள்கையை, இம்மகாநாட்டில் பங்கெடுக் கும் சகல அரசுகளும் கைவிட்டுவிட்டு, பிரச்னைகளை ஆராய்ந்தால்தான் நற்பயன்கள் ஏற்படமுடியும் என்பதை யாரும் மறுக்கமுடியாது இத்தகைய மகாநாட்டில் சீன மக்கள் குடியரசும், இந்தியாவும் பங்கெடுப் பவர்களாக இருக்கத்தான் வேண்டும் என்பதை சொல்லத் தேவை யில்லை.

ஆயுதப் பரிஹரணம் சம்பந்தமான பிரச்னை குறித்து பல கேள்விகள் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. இப்பிரச்னையில் எங்கள் நிலையை மீண்டும் இங்கு விபரமாக விவரிக்கவேண்டியது அவசியமில்லை என்று நாங்கள் கருதுகிருேம். அது உங்களுக்கு நன்கு தெரிந்ததே. ஆயுதப் பரிஹா ணம் சம்பந்தமாக ஐ. நா. வில் இவ்வாண்டு சோவியத் யூனியன் பிரரே பித்த யோசனைகள் இப்பிரச்னையைத் துரிதமாகவும், பயன்தரத்தக்க முறையிலும் பைசல் செய்வதற்கு வழிவகுத்திருக்கின்றன. ஆனுல் இப்பிரச்னையில் அமெரிக்கா மேற்கொண்டிருந்த நிலை எதிர்பாராதவித மாக மாறிவிட்டதினுல், இதற்கு முன்பு அந்நாடு பிரரேபித்திருந்த தனது சொந்தப் பிரேரணைகளையே அது திடீரென்று நிராகரித்துவிட்ட தினுல் அனேகமாக முன்னமேயே தீர்க்கப்பட்டிருக்க வேண்டிய இப்பிரச்னை இன்னும் தீர்ந்தபாடில்லை.

மேலைய நாடுகளுக்கு ஒரு உதாரணமாகத் திகழும் வகையில் மற்ற அரசுகள் தமது ஆயுதபலத்தை, குறைக்காதுள்ள நிலையிலும்கூட, சோவியத் யூனியன், தனது ஆயுதபலத்தை மாத்திரம் தன்னந்தனியாகக் குறைத்துக்கொள்வதற்கு இசையுமா என்று சில பத்திரிகை நிருபர் கள் கேட்கிருர்கள். இவ்வாறு கேள்வி கேட்பது, நிலைமையையும் பொறுப்பையும் பூரணமாக உணர்ந்து கேட்கப்படும் கேள்வியாகாது என்பதை நீங்கள் ஏற்றுக்கொள்வீர்கள் என்றே நாங்கள் நினைக்கிருேம்.

இது விஷயத்தில் எங்களுடன் பேச்சுவார்த்தைகளில் ஈடுபட்டுள்ள எங்கள் கூட்டாளிகள், தமது இராணுவபலத்தைக் குறைத்துக்கொள்ள

வேண்டும் என்ற எண்ணம் அறவே இல்லாமல் இருப்பதுடன், தமது ஆயுத பலத்தை மேலும் அதிகரிக்க யத்தனித்திருப்பதாக உலகறிய டமாரமடித்து வரும்போது, சோவியத் யூனியன் மாத்திரம் தனியாக எவ்வாறு ஆயுதப் பரிஹரணம் செய்யமுடியும்? இத்தகைய நிலைமை களில் நாங்கள் மாத்திரம் தனியாக ஆயுதப் பரிஹரணத்தை மேற்கொள் வது மடமையாகும்; இவ்வாறு செய்வது சோவியத் யூனியனுக்கு மாத்திரமின்றி சாமாதானம் விரும்பும் சகல நாடுகளுக்கும் தீங்கிழைக்கக் கூடியதாகும்.

ஆயுதப் பரிஹரணத்தை நிறைவேற்றவேண்டும் என்பதுதான் எங்கள் கொள்கை. ஆனால் எங்கள் கூட்டாளிகளும் எங்களுடன் சேர்ந்து ஏககாலத்தில் ஆயுதப் பரிஹரணத்தை நிறைவேற்ற வேண்டும் என்ற தெட்டத்தெளிவான, அத்தியாவசியமான நிபந்தனையை நாங்கள் வலியுறுத்துகிறோம். இந்த ஆயுதப் பரிஹரணத்தை அமுலாக்கும் நட வடிக்கைகளின்மீது கராரான சர்வதேசக் கட்டுப்பாட்டை ஏற்படுத்த வேண்டும் என்பதும், இந்தப் பணியை நிறைவேற்றும் விஷயத்தில் யதார்த்தபூர்வமான போக்கை அனுசரிப்பது அவசியம் என்பதும் எங்கள் கொள்கை.

நான்காவதாக, சோவியத் யூனியனின் உள்நாட்டு விவகாரங்களைப் பற்றி கேள்விகள் கேட்கப்படுள்ளன. இந்தியப் பொதுஜன அபிப் பிராயம் எங்கள் நாட்டின் வாழ்விலே எப்பொழுதும் அக்கறை காட்டி வந்திருக்கிறது என்பது குறித்து நாங்கள் மகிழ்ச்சி அடைகிறோம். இது சம்பந்தமாக இந்தியப் பத்திரிகை நிருபர்கள் நிரந்தரமாக மாஸ்கோவில் வந்து தங்கியிருப்பதை நாங்கள் வரவேற்கிறோம். இந்தப் பத்திரிகை நிருபர்கள் விஷயமாகவும் உங்களில் சிலர் கேள்வி கேட்டிருக்கிறீர்கள். நிரந்தரமான இந்தியப் பத்திரிகை நிருபர்கள் சோவியத் யூனியனில் தங்கியிருப்பதற்கு இப்பொழுது தடையாக இருப்பதாகக் கூறப்படும் சில சம்பிரதாயங்களைப்பற்றி ஒரு தீர்வு காண்பது சிரமமல்ல என்றே நாங்கள் கருதுகிறோம். இந்த நாட்டிலிருந்தும், இதர அன்னிய நாடு களிலிருந்தும் எங்களுக்குக் கிடைக்கும் கேள்விகளைப் பார்க்கும்போது, எங்கள் வாழ்க்கையைப்பற்றியும், எங்களுடைய பொருளாதார, சமூக, அரசியல் அமைப்பின் பிரத்தியேக குணம்சங்களைப்பற்றியும் இன்னமும் உண்மையான தகவல்கள் சரிவரக் கிடைப்பதில்லை என்பது தெரிகிறது.

உதாரணமாக, உங்கள் நாட்டில் ஏன் ஒரேவொரு கட்சி மாத்திரம் இருக்கிறது என்று சிலர் கேட்கிறார்கள். எங்களுடைய சோஷலிஸ சமூகத்தின் அஸ்திவாரங்களைப்பற்றி சரிவரப் புரிந்துகொள்ளாததி லிருந்தே இந்தக் கேள்வி எழுவதாகத் தோன்றுகிறது.

முதலாளித்துவ வர்க்கத்தின் அரசுகளில் பல கட்சிகள் இருந்து வருகின்றன என்பதை அனைவரும் அறிவர். இந்தக் கட்சிகள்

ஒவ்வொன்றும் தத்தம் வர்க்கங்களின் நலன்களை வெளிப்படுத்து கின்றன; பாதுகாக்கின்றன. எனவே ஒவ்வொரு வர்க்கமும் தனக்குச் சொந்தமாக ஒரு கட்சியைப் பெற்றிருப்பது இயல்பே. சோஷலிஸம் வெற்றியடைந்ததின் பலனாக, சோவியத் யூனியனில் முற்றிலும் புதி தான ஒரு சோஷலிஸ சமூகம் நிறுவப்பட்டது. இந்தப் புதிய சமூக அமைப்பில் ஒன்றுக்கு ஒன்று முரணாக அமைந்துள்ள, எதிரும் புதிரு மான வர்க்கங்களும் கோஷ்டி நலன்களும் கிடையாது. இப்பொழுது நாங்கள் முரண்பாடுகள் இல்லாத ஒருமித்த சமூகமாக வாழ்கிறோம். இந்த சமூகத்தில் நிலவும் ஒற்றுமையும் சகோதர உணர்வும் அதை மிகவும் சக்தி வாய்ந்ததோர் சமூகமாகத் திகழச் செய்கின்றன.

புரட்சிக்கு முற்பட்ட ஜாரிஸ்ட் ரஷ்யாவில் பல கட்சிகள் இருந்தன. முதலாளிகளின் கட்சிகளும், நிலப்பிரபுக்களின் கட்சிகளும் இருந்தன. சோஷலிஸ்ட் புரட்சி வாதிகள் (இ. எஸ். இ. ஆர். எஸ்.) என்ற பிரமாத மான பெயரை வைத்துக்கொண்டிருந்த பணக்கார விவசாயிகளின் கட்சி யும் இருந்தது. மேதை லெனின் உருவாக்கிய தொழிலாளி வர்க்கத்தின் கட்சியாகிய போல்ஷ்விக் கட்சியும் இருந்தது. இந்தக் கட்சி முதலாளி களுக்கும், நிலப்பிரபுக்களுக்கும், ஜாரிஸ்ட் ஆட்சிக்கும் எதிராகதொழிலாளி வர்க்கத்தை ஆர்த்தெழச் செய்வதில் வெற்றி கண்டது. மேலும் இக்கட்சி தொழிலாளி வர்க்கமும் விவசாயிகளும் ஒன்றுபட்டிருப்பதற்கு வெற்றிகர மாக உத்திரவாதம் செய்தது. தவிரவும் படித்த அறிவாளி மக்களின் முற் போக்கான பகுதியினர்களை தொழிலாளி வர்க்கத்தின் பக்கம் நிற்கும்படிச் செய்வதிலும் இது வெற்றி கண்டது. இந்தக் கட்சியின் தலைமையில் தான், மகத்தான அக்டோபர் சோஷலிஸ்ட் புரட்சி வாகைமாலை சூடியது; சுரண்டும் வர்க்கங்கள் அழித்தொழிக்கப்பட்டன; புதிய சோஷலிஸ்ட் சமூகம் நிறுவப் பெற்றது. இப்பொழுது சோவியத் மக்கள் கம்யூனிஸ சமூகத்தை வெற்றிகரமாக நிர்மாணித்து வருகின்றனர்.

இன்று சோவியத் யூனியனிலே முதலாளிகள், நிலப்பிரபுக்களின் கட்சியிருந்தால் அது யாருக்கு பிரதிநிதித்துவம் வகிக்கமுடியும்? எங்கள் நாட்டில் முதலாளிகளும் நிலப்பிரபுக்களும் கிடையாது. எனவே அவர்க ளுக்குரிய கட்சி எங்கள் நாட்டில் இருப்பதற்கு இப்பொழுது அடிப் படையே இல்லை. இதேபோல் பணக்கார விவசாயிகளின் கட்சி எங்கள் நாட்டில் இப்பொழுது யாருக்குப் பிரதிநிதித்துவம் வகிக்க முடியும்? கூட் டுப்பண்ணை அமைப்பை நிறுவியதின்மூலம், நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமுமாக முதலாளித்துவத்தை சிருஷ்டித்துக்கொண்டிருந்த பழைய கிராமாந்திர பொருளாதார அமைப்பை என்றும் தலைதூக்க வொட்டாமல் தகர்ந்தெறிந்துவிட்டோம். பழைய தலைமுறையைச் சேர்ந்த முதியோர்களும், புத்தகங்களும் கூறும் கதைகளின்மூலம்தான், இன்று எங்கள் நாட்டின் வாலிபர்கள் பணக்கார விவசாயிகளைப்பற்றி தெரிந்து கொள்கிறார்கள்.

பாட்டாளி மக்களின்—தொழிலாளர்கள், விவசாயிகள், உழைத்திடும் அறிவாளிகள் ஆகியோரின்—சமூகம் சோவியத் சமூகம். சோவியத் யூனியனின் அரசியல் சட்டத்தில் கூறப்பட்டுள்ளதுபோல், கம்யூனிஸ சமூகத்தை நிறுவுவதற்கான போராட்டத்திலும், பாட்டாளி மக்களின் அரசாங்க ஸ்தாபனங்கள் யாவற்றிலும் கம்யூனிஸ்ட் கட்சி பாட்டாளி மக்களின் முன்னணிப் படையாகும், தலைவனுகும்.

இத்தகையது எங்கள் சமூகம். இத்தகையதுதான் எங்கள் அமைப்பு. இதை நாங்கள் யார்மீதும் திணிக்கவில்லை. ஆனுல் ஒளிவு மறைவின்றி சொல்வதென்ருல், இதையே மிகவும் சிறந்த அமைப்பாக நாங்கள் கருதுகிருேம். உலக முழுதும் கம்யூனிஸக் கருத்துக்கள் வளர்ந்து வருவது ஏதோ சோவியத் யூனியன் செய்துவரும் சதிகளின் விளைவாக ஏற்படும் நிகழ்ச்சியைப்போல் சிலர் சித்தரிக்க முயற்சிக் கின்றனர். ஆனுல் மகத்தான அக்டோபர் புரட்சிக்கு முன்பே, ஐரோப்பா வில் கம்யூனிஸக் கருத்துக்கள் இருந்து வந்துள்ளன என்பதும், மார்க்ஸும் ஏங்கல்ஸும் உருவாக்கிய கம்யூனிஸ்ட் தத்துவம் பாட்டாளி மக்களிடையில் வேரூன்றி இருந்தன என்பதும் எல்லோருக்கும் தெரிந்ததே.

இங்கு இது சம்பந்தமாக சில நிருபர்கள் எங்கள் முன் வைத்துள்ள மற்ருெரு கேள்விக்கும் நாங்கள் பதிலளிக்க விரும்புகிருேம். "கோமின் பாரம்" என்று சில சமயங்களில் அழைக்கப்படும் கம்யூனிஸ்ட் கட்சி களின் செய்தி ஸ்தாபனத்தைப்பற்றிய கேள்வி இது. மனிதனை மனிதன் சுரண்டும் உளுத்துப்போன பழைய அமைப்பை என்றென்றும் நிலை நிறுத்த விரும்புகிறவர்களுக்கு, தொழிலாளி வர்க்கம் தமது விமோசனத் திற்கான போராட்டத்தைப்பற்றிய தகவல்களையும் அனுபவங்களையும் பரிமாறிக்கொள்வதை நோக்கமாகக் கொண்டுள்ள இந்த ஸ்தாபனத்தின் வேலை—பல ஐரோப்பிய கம்யூனிஸ்ட் கட்சிகளை அங்கத்தினர்களாகக் கொண்ட இந்த ஸ்தாபனத்தின் வேலை—தொல்லை அளிப்பதாக இருக்கிறது.

கோமின்பாரத்தை எப்படியாவது கலைத்துவிட முடியாதா என்று சில சமயங்களில் அவர்கள் கேட்கிருர்கள். ஒளிவுமறைவின்றி பேசுவ தென்ருல், பொதுவாக அங்கீகரிக்கப்பட்டுள்ள சர்வதேசத் தொடர்பு முறையையும் ஒத்துழைப்பு முறையையும் எந்தக் காரணங்களுக்காக கம்யூனிஸ்ட் கட்சிகள் கைவிடவேண்டும் என்று நாங்கள் கேட்கிருேம். கோமின்பாரத்தைக் கலைக்க வேண்டும் என்ற பிரச்னையைக் கிளப்புகிற கள், உதாரணமாக சோஷல் டெமாக்ரடிக் கட்சிகளை ஒன்ருக இணைக்கிற ஒரு சோஷலிஸ்ட் அகிலம் இயங்கிவருவதற்கு ஆட்சேபிக்காததேன் என்று கேட்கிருேம். மேலும் முதலாளிகள் சர்வதேச ரீதியில் ஏகபோக யூனியன் களில் ஒன்று திரண்டு, அடிக்கடி சந்தித்து, தமது விவகாரங்களைக்

கூட்டாக நிர்வகித்து வருவது மாத்திரம் அவர்களுக்கு இயற்கையான தாகவும், நியாயமானதாகவும் தோன்றுவானேன் என்று கேட்கிறோம். அதேசமயத்தில் "உலகத் தொழிலாளர்களே, ஒன்றுபடுங்கள் !" என்று மார்க்ஸும் ஏங்கல்ஸும் அறைகூவிய அந்த மகத்தான கோஷத்தை, சகல பாட்டாளி மக்களின் ஜீவாதார நலன்களுக்கும் உகந்த சர்வதேச ஒருமைப்பாடு என்ற அந்த கோஷத்தை நிறைவேற்றுவதற்கு தொழிலாள வர்க்கத்திற்கு மட்டும் உரிமையில்லை என்று அவர்கள் மறுப்பானேன் ?

பாட்டாளி மக்களின் ஜீவாதார நலன்களைப் பாதுகாப்பதையும், சமாதான லட்சியத்திற்காகப் போராடுவதையும் நோக்கமாகக் கொண்டுள்ள பாட்டாளி மக்களின் சர்வதேச ஒத்துழைப்பை பலப்படுத்த வேண்டும், வளர்த்துப் பெருக்கவேண்டும் என்பதை நாங்கள் எப்பொழுதும் ஆதரித்து வந்துள்ளோம், இனியும் தொடர்ந்து ஆதரிப்போம்.

தொழிலாளி வர்க்கத்தின், சகல பாட்டாளி மக்களின் நலன்களைப் பேணிப் பாதுகாத்துவரும் கம்யூனிஸ்ட் கட்சிகள், மிகவும் முன்னேற்றகரமானதும் மனிதாபிமானத்தில் தலைசிறந்ததுமான மார்க்ஸிஸ லெனினிஸத்தின் போதனைகளைப் பின்பற்றி வருகின்றன. இந்தப் போதனைகள் சோவியத் யூனியனிலும், சீனமக்கள் குடியரசிலும், மக்கள் ஜனநாயக நாடுகளிலும் நடைமுறையில் அனுஷ்டிக்கப்பட்டு, முற்றிலும் பிழையற்றவை என்று பிரமாதமான முறையில் நிரூபிக்கப்பட்டுள்ளன. இந்தப் போதனைகள் உலகம் முழுதும் மென்மேலும் வளர்ந்து பரவிய வண்ணமிருக்கின்றன. லெனின் கூறியதுபோல், "ஏற்றுமதிச் சரக்காகப் புரட்சியைக் கருதுவதை நாங்கள் எதிர்க்கிறோம்". ஏனெனில் பிரச்னையை இவ்வாறு பார்ப்பதே விஞ்ஞான முறைக்குப் புறம்பானதாகும். முற்போக்குக் கருத்துக்கள் தவிர்க்க முடியாதபடி வளர்ந்தோங்கி, காலாவதியாகிவிட்ட பழைய கருத்துக்களைத் தகர்த்தே தீரும். மானிட சமுதாயத்தின் வளர்ச்சியைப் பொறுத்தமட்டில் இதுவே என்றும் இருந்துவந்துள்ள நிலை; இனியும் இது இவ்வாறே இருக் ,ம்!

உங்களுடைய கேள்விகள் சம்பந்தமாக நாங்கள் கூற விரும்பியது இவ்வளவே.

முடிவில், நாங்கள் கூறியதைக் கவனமாகக் கேட்டதற்காக உங்கள் அனைவருக்கும் எங்கள் நன்றி. வணக்கம் !

# 1955 டிசம்பர் 14-ம் தேதி டில்லியிலிருந்து புறப்படுவதற்கு முன் விமான நிலையத்தில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

பிரதம மந்திரி அவர்களே!

நண்பர்களே!

விருந்தோம்பும் பண்பில் சிறந்த உங்கள் நாட்டிலிருந்து நாங்கள் விடைபெற்றுக் கொள்ளும் நேரம் வந்துவிட்டது.

இந்தியாவில் எங்கள் சுற்றுப் பிரயாணத்தின்போது, பற்பல நல்ல விஷயங்களை, ஏராளமான நல்ல விஷயங்களைப் பார்த்தோம்; படித்தறிந்து கொண்டோம். எங்களுடைய சுற்றுப் பிரயாணத்தின்போது நிகழ்ந்த மறக்க முடியாத நிகழ்ச்சிகள் யாவற்றையும் விவரித்துக் கூறுவது எவ்வாறு சாத்தியம்? சோவியத் யூனியனிடத்தில் தமது நேச உணர்ச்சிகளை மிகவும் மனப்பூர்வமாக வெளிப்படுத்திய இந்திய மக்களை நாங்கள் சந்தித்து மகிழ்ந்ததை என்றுமே மறக்கமாட்டோம். இந்திய மக்கள் வெளிப்படுத்திய இந்த அன்புணர்ச்சிகளை நாங்கள் எங்கள் இதயத்தில் அழியாது பதித்துக்கொள்வோம்.

எங்கள் சுற்றுப் பிரயாணத்தின்போது உங்களுடைய தொன்மை வாய்ந்த கலாச்சாரத்தின் மறக்க முடியாத நினைவுச் சின்னங்களின் மூலம் இந்தியாவின் பண்டைய வரலாற்றை நாங்கள் காண முடிந்தது. திறமை மிகுந்த இந்தியக் கைத்தொழிலாளர்கள் கட்டியெழுப்பிய இந் நினைவுச் சின்னங்களிலே பண்டைய இந்தியாவின் சிறப்பை நாங்கள் கண்டு மகிழ்ந்தோம்.

உங்கள் நாட்டின் நிகழ்காலத்தையும் கூட நாங்கள் கண்டோம். அதாவது உங்களுடைய நகரங்களையும், கிராமங்களையும், அங்கு இந்திய மக்களும் சர்க்காரும் தமது நாட்டின் தொழிலையும், விவசாயத்தையும் தழைத்தோங்கி வளரச் செய்வதற்காக எடுத்துவரும் முயற்சிகளையும் நாங்கள் கண்டு மகிழ்ந்தோம்.

நீங்கள் வெற்றிக்கு மேல் வெற்றியடைந்து முன்னேற வேண்டும் என்று நாங்கள் மனப்பூர்வமாக வாழ்த்துகிறோம்.

நம்மிரு மக்களிடையில் உள்ள நட்புறவு மேலும் வலுப்பெற்று வளர்ந்து பெருகியுள்ளதானது, எங்களுடைய இந்திய விஜயத்தின் பயனாக ஏற்பட்டுள்ள மிகவும் முக்கியமான பலனாகும். இந்திய மக்களுக்கும் சோவியத் மக்களுக்கும் இடையில் இருந்துவரும் நட்புறவு மகத்தான சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த சாதனையைக் குறிக்கிறது.

பிரதமர் நேருவின் சோவியத் விஜயம் நம்மிரு சர்க்கார்களுக் கிடையில் நேரடித் தொடர்பை ஆரம்பித்துவைத்தது. எங்களுடைய இந்திய விஜயத்தின் பயனாக இந்த நேரடித்தொடர்பு மேலும் வலு வடைந்து உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

நேருவுடனும், இந்தியக் குடியரசு சர்க்காரின் இதர உறுப்பினர் களுடனும் நாங்கள் மிகவும் பயன்தரும் சம்பாஷணைகளை நடத்தினோம். நேசமும் நட்பும் நிறைந்த சூழ்நிலைமையில் இந்த சம்பாஷணைகள் நடந் தன.

நேற்றைய தினம் நாங்கள் ஒரு கூட்டறிக்கையில் கையெழுத்திட் டோம். இந்த அறிக்கை மகத்தான சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததா கும். சமாதானத்தை நிலைபெறச் செய்யும் இலட்சியத்திற்கு இது பெரிய தொரு சேவையாகும்.

பிரதம மந்திரி அவர்களே!

எங்களை அருமையுடனும் பெருமையுடனும் கவனித்து உபசரித்த உங்களுடைய விருந்தோம்பும் உயர் பண்பிற்காகவும், எங்களிடம் நீங்கள் காட்டிய அத்தியந்த அன்பிற்காகவும் உங்களுக்கும், உங்கள் சர்க்காருக்கும், இந்திய மக்கள் அனைவருக்கும் எங்களுடைய ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்திய சோவியத் நட்புறவு நீடூழி வாழ்க! வணக்கம்!

## 1955 டிசம்பர் 14-ம் தேதி டில்லியிலிருந்து புறப்படுவதற்குமுன் விமான நிலையத்தில் என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

அருமை நண்பர்களே!

மாண்புமிக்க இந்திய நாட்டின் தலைநகரை விட்டு இன்னும் சில நிமி டங்களிலே நாங்கள் புறப்படப் போகிறோம்.

இந்திய சர்க்காரும், மக்களும் எங்களுக்கு மகத்தான குதூகல வர வேற்பு அளித்தார்கள். இந்தியாவில் நாங்கள் தங்கியிருந்த நாட்களில் எங்களிடம் காட்டிய அன்பிற்கும், எங்களுக்காக நீங்கள் செய்த அரும் பெரும் உபசாரங்கள் யாவற்றிற்கும் உயர் சிறப்புடைய பிரதமர் நேரு அவர்களுக்கும், ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் அவர்களுக்கும், இந்திய சர்க்காருக்கும், மகத்தான இந்திய மக்கள் அனைவருக்கும் மீண்டும் ஒரு முறை நன்றிகூற விரும்புகிறேன்.

இந்தியாவின் பல ராஜ்யங்களுக்கும், நகர்களுக்கும் நாங்கள் விஜயம் செய்தபோது நம்மிரு மக்களின் நட்புறவைப் போற்றி வரவேற்கும் பல அன்பு மொழிகளையும், கோஷ ஆரவாரங்களையும் தொடர்ச்சியாக நாங்கள் எங்கும் கேட்க நேர்ந்தது. இந்த நட்புறவு மென்மேலும் பலப்படத் தான் போகிறது. இதனால் உலக முழுதும் சமாதான சக்திகள் மேலும் உறுதி பெறும் என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால் எங்களுடைய இந்திய நண்பர்கள் எங்களிடத்தில் போதிய நல்லுணர்வைக் காட்டாதிருந்தால், எங்கள் விஜயமும், இந்தியாவின் தலைவர்களுடன் நாங்கள் நடத்திய சம்பாஷணைகளும் இவ்வளவு நேரடியான முக்கியத்துவம் வாய்ந்த மதிப்பிடற்கரிய பலன்களை அளித்திருக்க முடியாது.

நம்மிரு நாடுகளுக்கிடையில் நட்புறவைப் பலப்படுத்த வேண்டும் என்பதிலும், சர்வதேச வாழ்வின் மிகவும் முக்கியப் பிரச்னைகளிலும், இந்தியாவும் சோவியத் யூனியனும் கொண்டுள்ள ஒருமித்த கருத்துக்களை, நேற்றையதினம் கையெழுத்தான இந்திய-சோவியத் கூட்டுப்பிரகடனம் பிரதிநிதித்துவப்படுத்துகிறது !

அருமை நண்பர்களே !

நேரு அவர்கள் சோவியத் யூனியனில் சுற்றுப் பிரயாணம் செய்து முடித்தவுடன் எங்கள் நாட்டிலிருந்தும், மக்களிடமிருந்தும் விடைபெற்றுச் செல்லுகையில் தமது இதயத்தின் ஒரு பகுதியை எங்கள் நாட்டில் விட்டுச் செல்வதாகக் கூறினார். இந்த எளிய வார்த்தைகள் எவ்வளவு ஆழ்ந்த உணர்ச்சிகளையும் கருத்தையும் வெளிப்படுத்துகின்றன என்பதை, இப்பொழுது உங்களிடமிருந்து—மாண்புமிக்க இந்திய மக்களிடமிருந்து—விடை பெற்றுக்கொண்டு செல்லும் நிலையில் என்னால் தெளிவாகப் பார்க்க முடிகிறது. நானும் என்னுடைய இதயத்தின் ஒரு பகுதியை இந்தியாவில் விட்டுச் செல்கிறேன். இந்தியாவிடத்தும், இந்திய மக்களிடத்தும் மிகவும் உண்மையான பேரன்பு எனது இதயத்தில் வளர்ந்தோங்கி உறுதியாக நிலைபெற்று விட்டது. இங்கே நாங்கள் பல அரிய பெரிய நண்பர்களை அடையும் பாக்கியம் பெற்றதற்காகவும், நமது நாடுகளின் நட்பு மேலும் பலப்படுத்தப்பட்டுள்ளதற்காகவும் நாங்கள் மனம் மகிழ்கிறோம்.

நமது இரு மக்களுக்கும், நாட்டிற்கும் இடையிலுள்ள நட்புறவு என்றுமே சச்சரவுகளினாலோ, பகைமையினாலோ களங்கமடைந்ததில்லை. இனி வருங்காலமும் இவ்வாறே இருக்கும்—என்றுமே சச்சரவுகளும் பகைமையும் நமக்குள் ஏற்படாது—என்று நாங்கள் திடமாக நம்புகிறோம். நமது இரு நாடுகளுக்கிடையிலுள்ள நட்புறவு வளர்ந்தோங்கி மென்மேலும் வன்மையும் திண்மையும் பெறுவதற்காக, நமது நட்பு என்றும் சாஸ்வதமாக அழிக்க முடியாது நிலைபெறுவதற்காக நாங்கள் முழுமூச்சுடன் பாடுபடுவோம் ! வணக்கம் !

நாம் மீண்டும் சந்திப்போம் அருமை நண்பர்களே ! நமஸ்தே !

# சோவியத் யூனியன் மந்திரிசபைத் தலைவர் என்.ஏ. புல்கானின் அவர்களும், சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத் தலைமைக் குழு உறுப்பினர் என். எஸ். குருஷேவ் அவர்களும், இந்தியப் பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு அவர்களும் வெளியிட்ட கூட்டுப் பிரகடனம்

சோவியத் யூனியன் சர்க்காரின் அழைப்பை ஏற்று 1955 ஜூனில் இந்தியாவின் பிரதம மந்திரி சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்தார். அங்கு அவருக்கு அமோக வரவேற்பு அளிக்கப்பட்டது. அவரது விஜயம் நம்மிரு தேசங்களின் மக்களிடையே நட்புறவையும் நல்லுணர்வையும் வலிமையடைந்து ஓங்கும்படிச் செய்தது. அந்த விஜயத்தின் இறுதியில் 1955 ஜூன் 22-ல் இந்தியப் பிரதம மந்திரியும், சோவியத் யூனியன் மந்திரி சபைத் தலைவரும் ஒரு கூட்டறிக்கை வெளியிட்டனர்,

இந்திய சர்க்கார் அனுப்பிய அழைப்பின் பேரில் 1955 நவம்பர்-டிசம்பரில் சோவியத் யூனியன் மந்திரிசபைத் தலைவர் என். ஏ. புல்கானின் அவர்களும் சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத்தின் தலைமைக் குழு உறுப்பினர் என். எஸ். குருஷேவ் அவர்களும் சோவியத் யூனியன் சர்க்காரைச் சேர்ந்த இதர பிரதிநிதிகளுடன் இந்தியாவிற்கு விஜயம் செய்தனர். இந்தியாவில் அவர்கள் சென்றவிடமெங்கும் இந்திய மக்கள் அவர்களை மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றார்கள். இவ்விரு நாடுகளையும், இவ்விரு மக்களையும் நெருங்கப்பிணைக்கும் நேசவுறவுப் பந்தங்களை அவர்களுடைய விஜயம் மேலும் உறுதிபெறச் செய்தன. புல்கானின் அவர்களும் குருஷேவ் அவர்களும் பல்வேறு விவசாய, இயந்திரத்தொழில் நிர்மாண வேலையிடங்களுக்கும், நதிப் பள்ளத்தாக்குத் திட்டங்களுக்கும், மற்றும் இந்தியாவிலுள்ள சமூக அபிவிருத்தித் திட்ட ஸ்தலங்களுக்கும், அரசாங்கப் பண்ணைகளுக்கும், அபிவிருத்தி வேலைக்களுக்கான இதர மூல ஸ்தலங்களுக்கும் விஜயம் செய்தனர்.

இந்தியப் பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு அவர்கள் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்ததின் பயனாகவும், சோவியத் யூனியன் மந்திரி சபைத் தலைவர் புல்கானின் அவர்களும், சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத்தின் தலைமைக்குழு உறுப்பினர் குருஷேவ் அவர்களும் இந்தியாவிற்கு விஜயம் செய்ததின் பயனாகவும் இவர்கள் இவ்விரு மக்கள்பற்றியும், அவர்களுடைய வாழ்க்கை நெறிபற்றியும், இந்த நாடுகளின் பிரச்னைகளையும் சாதனைகளையும் அபிலாஷைகளையும் பற்றியும் தாமே நேரடியாக ஓரளவு கண்டறிந்துகொள்ள முடிந்தது. இதனால் இவர்களிடையிலும் இவர்களுடைய மக்களிடையிலும் ஒருவரை ஒருவர் மதித்து நடப்பதென்ற அடிப்படையிலும், நல்லெண்ணத்தின் அடிப்

படையிலும் அனுசரித்துச் செல்வதென்ற அடிப்படையிலும், மன ஒற்றுமையும் சௌஜன்யமும் ஏற்பட்டுள்ளன.

பஞ்சசீலம் என்று அழைக்கப்படும் ஐந்து கோட்பாடுகளை உறுதியுடன் கடைப்பிடிக்க வேண்டுமென்று 1955 ஜூன் 22-ல் வெளியிடப்பட்ட அந்தக் கூட்டறிக்கையில் வலியுறுத்தப்பட்டது. அரசியல், பொருளாதார சமூக அமைப்புகளில் ஒன்றுக்கொன்று மாறுபட்டுள்ள நாடுகளாக இருப்பினும், அவை பரஸ்பரம் ஒன்றை ஒன்று மதித்து நடப்பதென்ற அடிப்படையிலும், உள்ள விவகாரங்களில் தலையிடாமலிருப்பதென்ற அடிப்படையிலும் ஒன்றோடொன்று ஒத்துழைக்க வேண்டுமென்றும், சமாதானத்தை நிலைநாட்டுவது மனிதனது வாழ்க்கை நிலைமைகளை மேன்மையுறச் செய்வதென்ற பொது இலட்சியங்களை முன்னிட்டு செயல் வன்மையுடன் சமாதானமாக ஒத்து வாழ்வதென்ற கொள்கையைப் பின்பற்ற வேண்டுமென்றும் இக்கோட்பாடுகள் கூறுகின்றன.

இந்த ஐம்பெருங் கோட்பாடுகள் பிரகடனம் செய்யப்பட்டது முதற் கொண்டே மென்மேலும் அதிகமான நாடுகள் அவற்றிற்கு ஆதரவு தெரிவித்தும், அங்கீகாரம் அளித்தும் வந்துள்ளன. பல்வேறு தேசங்களிடையிலும் ஒத்துழைப்பு வளர்வதற்கான நிலையான அஸ்திவாரமாக இன்று விரிவானரீதியில் ஏற்றுக்கொள்ளப்படும் இந்தக் கோட்பாடுகளை வலியுறுத்தி பாண்டுங் மகாநாட்டில் கலந்துகொண்ட நாடுகள் யாவும் ஒரு பிரகடனத்தை ஏகமனதாக ஆமோதித்து வெளியிட்டன.

புல்கானின் அவர்களும், குருஷேவ் அவர்களும் இந்தியாவிற்கு வந்தபோது சர்வதேச நிலைமைபற்றி அவர்களும், இந்தியப் பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு அவர்களும் மனம்விட்டு, ஒளிவு மறைவின்றி தம் கருத்துக்களைப் பரிமாறிக்கொண்டனர். சர்வதேச உறவுகள் ஐம்பெருங் கோட்பாடுகளின் அடிப்படையில் அமைந்திருக்க வேண்டுமென்றும், சர்வதேச நெருக்கடிகளைத் தணியச் செய்வதற்கும், சமாதான இலட்சியத்தையும் பல்வேறு தேசங்களிடையிலும் ஒத்துழைப்பையும் தழைக்கச் செய்வதற்கும் சகல வழிகளிலும் முயன்றாக வேண்டுமென்றும் இரு தரப்பினர்களும் உறுதிகொண்டுள்ளனர் என்பதை இந்த சம்பாஷணைகள் மீண்டும் ஊர்ஜிதம் செய்வதாயிருந்தன. அணுசக்தி, நீர்வாயு ஆயுதங்கள் தயாரிக்கப்படுவதால் இன்று யுத்தம் மனித குலத்திற்கு சர்வநாசத்தையே உண்டாக்குமென்பதையும், எந்தப் பிரச்னைக்கும் யுத்தத்தின் வாயிலாகத் தீர்வு கண்டுவிட இயலாதென்பதையும் 1955 ஜூலையில் ஜெனீவாவில் கூடிய சர்க்கார் அதிபர்களுடைய மகாநாட்டின் விளைவாக அந்த வல்லரசுகள் அங்கீகரிக்க வேண்டியதாயிற்று. சர்வதேசத் தகராறுகளைத் தீர்ப்பதற்கு யுத்தத்தை ஒரு மார்க்கமாகக் கொள்ளக்கூடாதென வலியுறுத்திய இந்த முக்கியப் பிரகடனம் உலக மக்கள் யாவராலும பெரிதும் பாராட்டப்பெற்றது. சர்வதேச நெருக்கடி

நிலைமை தணிவதற்கு இந்தப் பிரகடனம் உதவிபுரிந்தது. ஐரோப்பாவையும் ஆசியாவையும்பற்றிய பிரதான பிரச்னைகள் இன்னமும் தீர்க்கப்படவில்லை என்றாலுங்கூட, யுத்தம் பயனற்றதென்று ஒதுக்கப்பட்டதின் நேரடியான விளைவாக, பிரச்னைகளை அணுகும் விதத்தில் ஒரு மாறுதல் தோன்றத் தலைப்பட்டது. அதாவது பேச்சுவார்த்தைகள் மூலம் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்வதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படலாயின. சோவியத் யூனியனுக்கும் ஜெர்மன் சமஷ்டிக் குடியரசிற்குமிடையே ராஜீய உறவுகள் நிறுவப்பட்டன. அமெரிக்காவிற்கும் சீன மக்கள் குடியரசிற்குமிடையே ஸ்தானிகர்களின் மட்டத்தில் பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாகி தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. அணுசக்தியை சமாதானபூர்வமான ஆக்கல் வேலைகளுக்கு உபயோகிப்பதுபற்றிய மகாநாடு சென்ற ஆகஸ்டில் வெற்றிகரமாக நடைபெற்று முடிந்தது. தவிரவும் சர்வதேச அணுசக்தி ஏஜன்ஸியை நிறுவுவது குறித்து ஐ. நா. பொதுசபை ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறது.

சென்ற ஜுலையில் ஜெனீவாவில் கூடிய சர்க்கார் அதிபர்களுடைய மகாநாடு, பேச்சுவார்த்தைகள்மூலம் தகராறுகளுக்குத் தீர்வுகாணும் போக்கிற்கு ஆக்கமளிக்கும்பொருட்டுப் இந்நாடுகளின் அயல்நாட்டு மந்திரிகளின் மகாநாடு ஒன்று கூடவேண்டுமென்று தீர்மானித்தது. அயல்நாட்டு மந்திரிகளின் இம்மகாநாடு சமீபத்தில் ஜெனீவாவில் நடைபெற்றது. விவாதத்திற்கு வந்த பிரச்னைகள் குறித்து இம்மகாநாட்டில் உடன்பாடுகள் ஏற்படவில்லை. சர்க்கார் அதிபர்களது மகாநாட்டின் விளைவாகத் தோன்றிய உயர்ந்த நம்பிக்கைகள் இதுநாள்வரை பூர்த்திசெய்யப்படாமல் இருந்துவருகின்றன. எனினும் இம்மகாநாடு இன்று நமது உலகை எதிர்நோக்கும் பல பிரச்னைகள் பற்றியும் மேலும் தெளிவாகப் புரிந்து கொள்வதற்கு அனுசரணையாக இருந்தது. தவிரவும் இன்று யாவரும் ஏற்றுக்கொள்வதுபோல் யுத்தம் பயனற்றதென்று ஒதுக்கப்படவேண்டுமானல் சமாதானபூர்வமான முறைகளை மேற்கொள்வது ஒன்றுதான், சமாதானபூர்வமான பேச்சுவார்த்தைகளைக் கையாளுவது ஒன்றுதான், இப்பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான வழி என்பது தெட்டத் தெளிவாக விளங்குகிறது. எனவே ஜெனீவாவில் கூடிய அயல்நாட்டு மந்திரிகள் மகாநாட்டின் பலன் குறித்து ஏற்பட்டுள்ள ஏமாற்றம் தற்காலிகமானதுதான் என்பது புலனாகிறது. ஆதலால் சர்வதேச நெருக்கடி நிலைமையைத் தணியச் செய்வதற்கும், வேற்றுமைகளுக்குப் பைசல்காண்பதற்குப் பேச்சுவார்த்தைகளை மேற்கொள்வது ஒன்றேதான் வழி என்பதை வலியுறுத்துவதற்கும் தொடர்ந்து சகல வழிகளிலும் முயற்சி செய்தாகவேண்டும்.

அமெரிக்காவிற்கும் சீன மக்கள் குடியரசிற்குமிடையே ஸ்தானிகர்கள் மட்டத்தில் தொடர்ந்து நடைபெற்றுவரும் பேச்சுவார்த்தைகள்,

தற்போது விவாதிக்கப்படும் பிரச்னைகளுக்குத் தீர்வு ஏற்பட வகை செய்வதுடன், மேலும் உயர்ந்த மட்டத்தில் சந்திப்புகள் ஏற்பட்டு, விரிவான பல பிரச்னைகள் குறித்தும் உடன்பாடு உண்டாவதற்கும் வழி கோல வேண்டுமென்று இரு நாடுகளின் தலைவர்களும் நம்புகிறார்கள். ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தில் சீன மக்கள் குடியரசிற்கு உரித்தான நியாயமான ஸ்தானத்தை அதற்கு அளிக்காதவரை ஆசியாவில் நிலை யான சமாதானம் நிலவமுடியாது என்று இரு நாடுகளின் தலைவர்களும் கருதுகின்றனர். ஒளிவுமறைவின்றி தெட்டத் தெளிவாக விளங்கும் இவ்வுண்மையை ஏற்க மறுத்து காலதாமதம் செய்யப்படுவது குறித்து அவர்கள் வருத்தப்படுகின்றனர். தூர கிழக்காசியா சம்பந்தமான இதர பிரச்னைகள் குறித்தும் கூடிய சீக்கிரத்தில் உடன்பாடு ஏற்பட்டு அவை தீர்க்கப்பட வேண்டுமென அவர்கள் நம்புகிறார்கள். அதாவது சீனாவின் கரையோரத் தீவுகள் சம்பந்தமாகவும் தைவான் சம்பந்த மாகவும் சீன மக்கள் குடியரசிற்குள்ள நியாயமான உரிமைகள் ஏற்கப் பட வேண்டுமென்றும், கொரிய மக்களின் தேசிய உரிமைகளை அங்கீ கரிப்பதின் அடிப்படையிலும், தூர கிழக்கில் சமாதானம் நிலைபெறு வதற்கு உகந்த வகையிலும் கொரியப் பிரச்னை தீர்க்கப்படுமென்றும் அவர்கள் நம்புகிறார்கள்.

இந்தோ-சீனா சம்பந்தமாக சென்ற வருடம் ஜெனீவாவில் நடை பெற்ற மகாநாட்டை சோவியத் நாட்டின் தலைவர்களும் இந்தியாவின் பிரதம மந்திரியும் முழுமனதுடன் வரவேற்றனர். இந்தோ-சீனாவில் நடந்த நாசகார யுத்தத்திற்கு இம்மகாநாடு முற்றுப்புள்ளி வைத்தது. இந்தோ-சீனாவைச் சேர்ந்த அரசுகள் பற்றிய பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான வழிமுறையை அது நிர்ணயம் செய்தது. வியட்நாமில் ஜெனிவா ஒப்பந்தத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு இடைஞ்ச லாக முட்டுக்கட்டைகள் எழுப்பப்பட்டுள்ளது குறித்தும், லாவோஸில் ஜெனிவா ஒப்பந்தத்தை அமுல் நடத்துவதிலும் பல இடைஞ்சல்கள் ஏற் பட்டிருப்பது குறித்தும் அவர்கள் வருத்தம் தெரிவித்துக் கொள்கிறார்கள். ஜெனிவா ஒப்பந்தங்கள் முறிவுற்றுவிடுமேயானால் இந்தோ-சீனாவிற்கும் சரி, அகில உலகிற்குமே சரி அதனால் படுமோசமான விளைவுகளே ஏற் படும். ஆதலால் இன்று ஜெனிவா ஒப்பந்தங்களைத் தக்கபடி அமுல் நடத்துவதற்கு இடைஞ்சலாக இருந்துவரும் முட்டுக்கட்டைகளை அகற்று மாறும், இந்த ஒப்பந்தங்களின் ஷரத்துக்களைப் பூரணமாக நிறைவேற் றும் பொருட்டு முழு மனதுடன் ஒத்துழைக்குமாறும் சம்பந்தப்பட்ட எல் லாத் தரப்பினர்களையும் இரு நாடுகளின் தலைவர்களும் வேண்டிக்கொள் கிறார்கள்.

ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தில் உறுப்பினர்களாக ஆகும் உரிமை சகல நாடுகளுக்கும் இருக்க வேண்டுமென்று அவர்கள் அபிப்பிராயப்படு கிறார்கள். இல்லாவிடில் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் உலக சமுதாயத்

தைப் பூரணமாகப் பிரதிநிதித்துவப்படுத்தும் ஸ்தாபனமாக அமைய முடியாது. ஆதலால் ஏககாலத்தில் பதினெட்டு நாடுகளை ஐ.நா. வில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென ஐ. நா. பொதுச்சபை செய்துள்ள சிபார்சை அவர்கள் வரவேற்கின்றனர். இந்தச் சிபார்சை பந்தோபஸ்துக் கவுன்ஸில் ஏற்று அமுலுக்குக் கொண்டுவருமென்று மனப்பூர்வமாக அவர்கள் நம்புகின்றனர்.

உலக சமாதானத்தை நிலைநாட்டுவதற்கும், மற்றொரு உலக யுத்தம் மூளலாமென்ற கற்பனைக்கும் மீறிய பேரபாயத்தை உண்டாக்கக் கூடிய நிலைகளை அகற்றுவதற்கும் ஆயுதப் பரிஹரணத்தையன்றி வேறு வழியேயில்லை. ஆயுதங்கள் பெருக்கப்படுமேயானால்—ஏன், தற்போதுள்ள ஆயுத அளவு குறைக்கப்படாமல் அப்படியே வைத்திருக்கப்பட்டாலுங் கூட—அது யுத்தத்தைக் கிளப்பிவிடும் ஒரு தூண்டுகோலாக செயல்படுமென்பதிலும், அச்சத்தையும் வெகுஜன நாசத்தை விளைவிக்கும் மிகவும் நவீன ரகத்தைச் சேர்ந்த ஆயுதங்களை உற்பத்தி செய்யவேண்டுமென்ற போட்டா போட்டியையும் தான் உண்டாக்குமென்பதிலும் சந்தேகம் இருக்க முடியாது. மென்மேலும் கூடுதலான நாசகார சக்தியுடைய ஆயுதங்கள் எவ்வளவிற்கு எவ்வளவு அதிகமாகக் கண்டுபிடிக்கப்பட்டு உற்பத்தி செய்து குவிக்கப்படுகின்றனவோ, அவ்வளவிற்கு அவ்வளவு ஆயுதப் பரிஹரணத்தின் அவசியமும் அவசரமும் அதிகரித்து விடுகிறது. யுத்தமென்பதே அடியோடு அகற்றி ஒதுக்கப்படவேண்டுமென்ற ஆசை இவ்வளவு வியாபகமாகப் பரவிவரும் இந்நேரத்தில், ஆயுதப் பரிஹரணத்திற்கான பயன்தரும் சிறந்த நடவடிக்கைகள் உடனடியாகமேற்கொள்ளப் படுவது அவசியமாகும். இவ்விஷயம் சம்பந்தமாக இதற்குள்ளாகவே பெரும் அளவிற்கு உடன்பாடு ஏற்பட்டிருக்கிறது. சமாதானம் நீடித்து நிலவவேண்டுமென்பதே நோக்கமாக இருக்குமேயானால் எஞ்சி நிற்கும் தடைகளையும் அப்புறப்படுத்த முடியுமென்பதில் சந்தேகம் இருக்கமுடியாது. குறிப்பாக அணுசக்தி, நீர்வாயு ஆயுதங்களின் உற்பத்திக்கும், பிரயோகத்திற்கும், சோதனைக்கும் எவ்வித நிபந்தனையுமின்றி தடை விதிக்கப்பட வேண்டுமென்ற தமது திடமான அபிப்பிராயத்தை இரு நாடுகளின் தலைவர்களும் வற்புறுத்த விரும்புகின்றனர். இதனுடன்கூட, வழக்கமான போர் ஆயுதங்களை அவசியம் கணிசமான அளவு குறைத்துக் கொண்டாக வேண்டும். தவிரவும் இந்தத் தடையும் ஆயுதப் பரிஹரணமும் கறாராக அமுலில் இருந்துவரும்படி ஊர்ஜிதம் செய்வதற்குத் தக்கபடி அமைந்துள்ள பயன்தரத்தக்க சர்வதேசக் கட்டுப்பாடு அமைப்பிற்கான ஏற்பாடுகளையும் செய்தாகவேண்டும். இது செய்யப்படாத வரையில் யுத்த அபாயம் உலக மக்களை அச்சுறுத்திக் கொடுமை செய்து கொண்டுதான் இருக்கும்; உண்மையில் சமாதானம் பேணப்படுகிறதா என்று மக்கள் ஐயமுறவேண்டியே ஏற்படும்.

இராணுவக் கூட்டணிகளையோ அல்லது பிராந்திய இராணுவக் கூட்டமைப்புகளையோ அமைப்பதின்மூலம் சமாதானத்திற்கும், பந்தோ

பஸ்திற்கும் உத்திரவாதம் செய்வது சாத்தியமல்ல என்பதை சோவியத் நாட்டின் தலைவர்களும், இந்தியாவின் பிரதம மந்திரியும் ஒப்புக்கொண்டார்கள். இத்தகைய கூட்டணிகள் கெடுபிடி யுத்தம் நடைபெறும் பரப்பை விஸ்தரிக்கச் செய்து, அவற்றுடன் சம்பந்தப்பட்ட பிரதேசங்களில் ஸ்திரமற்ற நிலையை ஏற்படுத்துவதுடன் அச்சத்தையும் நெருக்கடியையும் அதிகரிக்கச் செய்கின்றன. தவிரவும் அவை அந்த இடங்களிலுள்ள நாடுகளின் சமாதானபூர்வமான வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்கும் தடைகளாகவும் ஆகிவிடுகின்றன. சமாதானத்திற்கும் உண்மையான பந்தோபஸ்திற்கும் உத்திரவாதம் செய்யவேண்டுமேயானல் பல்வேறு அரசுகளின் கூட்டு முயற்சிகள்தான் அதற்கான ஒரே ஒரு வழி.

பரஸ்பர ஒத்துழைப்பிற்கும் நல்லுணர்விற்கும் இடஞ்சலாகவுள்ள முட்டுக்கட்டைகளை அகற்றுவதானது, சர்வதேச பீதிகளையும் நெருக்கடி நிலைமையையும் குறைப்பதற்கான மிகச்சிறந்த வழிகளில் ஒன்ருகும். இதன்பொருட்டு பல்வேறு நாடுகளிடையிலும் கலாச்சார, பொருளாதாரத் தொடர்புகளை மேலோங்கச் செய்வது அவசியமாகும். விஞ்ஞானிகள், தொழில் நுட்ப நிபுணர்கள், பொருளாதார நிபுணர்கள், பார்லிமெண்ட் உறுப்பினர்கள், எழுத்தாளர்கள், கலாச்சாரத் துறைகளில் ஈடுபட்டுள்ள இதர ஊழியர்கள் முதலியோர்களது தூதுகோஷ்டிகள் தொடர்ச்சியாக பரிமாறிக்கொள்ளப்படுவதின் வாயிலாக இரு நாடுகளின் மக்களும் ஒருவரை ஒருவர் நன்கறிந்துகொள்வதற்கு மென்மேலும் கூடுதலான வாய்ப்புகள் ஏற்பட்டு வருவது குறித்து இரு நாடுகளின் தலைவர்களும் மகிழ்ச்சியடைகின்றனர். இருநாடுகளிடையிலும் நல்லுணர்வு வளர்வதற்கும், அவற்றின் மாறுபட்ட வாழ்க்கை நெறிகளை பரஸ்பரம் அவை மதித்து நடப்பதற்கும் உதவக்கூடிய வகையில் பரஸ்பரத் தொடர்புகள் ஏற்படுவதற்கான இத்தகைய வாய்ப்புகள் தொடர்ந்து விரிவடையுமென அவர்கள் நம்புகின்றனர்.

ஆகவே இந்தியாவில் பிலாய் உருக்குத் தொழிற்சாலை நிறுவுவதின் மூலமும், இதர பல திட்டங்கள் சம்பந்தமாக தற்போது நடைபெற்று வரும் சம்பாஷணைகள் மூலமும் இரு நாடுகளிடையிலும் ஒத்துழைப்பு வளர்ந்தோங்கி வருவதை சோவியத் யூனியன் மந்திரி சபைத் தலைவரும், சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத்தின் தலைமைக்குழு உறுப்பினரும், இந்தியப் பிரதம மந்திரியும் வரவேற்கின்றனர். இந்தியாவின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம், கன-இயந்திரத் தொழில் வளர்ச்சிக்கு முக்கியத்துவம் அளித்திருப்பதால், இத்தகைய ஒத்துழைப்பிற்கான மேலுங்கூடுதலான வாய்ப்புகள் உண்டாகக்கூடும். பொருளாதார, தொழில் நுட்ப ஒத்துழைப்புத் துறையில் இரு தரப்பினருக்கும் அனுகூலமான மேலும் பல நடவடிக்கைகள் குறித்து பரிசீலனை செய்வதற்காகவும் தேவையானதென்று கருதப்படும்போது குறிப்பிட்ட விவகாரங்கள் சம்பந்தமாக ஒப்பந்தங்கள் செய்து கொள்வதற்காகவும் இரு நாடுகளின்

தக்க பிரதிநிதிகளும், அவசியமான தயாரிப்பு வேலை செய்து முடிக்கப் பெற்றதும், கூடிப் பேசுவது உசிதமானதென அவர்கள் கருதுகின்றனர்.

புல்கானின் அவர்களும் குருஷேவ் அவர்களும் இந்தியாவிற்கு விஜயம் செய்தது இரு நாடுகளையும் மேலும் நெருங்கிய உறவு கொள்ளுமாறு செய்ததுடன், உலக சமாதான இலட்சியத்தை முன்னேறச் செய்வதற்கும் பணிபுரிந்துள்ள மகத்தான சம்பவமாகும்.

சோவியத் யூனியன் மந்திரி சபைத் தலைவர் என், ஏ. புல்கானின் அவர்களும், சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத்தின் தலைமைக் குழு உறுப்பினர் என். எஸ். குருஷேவ் அவர்களும் இந்தியாவின் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு அவர்களும் வருங்காலம் பற்றிய தமது நன்னம்பிக்கையையும், தமது இரு நாடுகளின் மக்களுடைய நலனுக்காக மட்டுமின்றி அகில உலகின் நலனுக்காகவும் சமாதானத்திற்கு ஆக்கம் தேடும் பணிக்குத் தம் சக்திகளை அர்ப்பணிப்பதென்ற தங்களுடைய திட சங்கற்பத்தையும் மீண்டுமோர் முறை தெரிவித்துக் கொள்கின்றனர்.

**என். ஏ. புல்கானின்,**
சோவியத் யூனியன் மந்திரி சபைத் தலைவர்

**ஜவஹர்லால் நேரு,**
இந்தியாவின் பிரதம மந்திரி

புதுடெல்லி, 1955 டிசம்பர் 13

## இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்குமிடையே பொருளாதார உறவுகள்பற்றிய இந்திய-சோவியத் கூட்டறிக்கை

சோவியத் யூனியன் மந்திரி சபைத் தலைவர் என். ஏ. புல்கானினும், சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத் சபையின் தலைமைக்குழு உறுப்பினர் என். எஸ். குருஷேவும், இந்தியாவின் பிரதம மந்திரி ஜவஹர்லால் நேருவும் வெளியிட்டுள்ள கூட்டுப் பிரகடனத்தில் இரு நாடுகளுக்கிடையிலும் பொருளாதார ஒத்துழைப்பை வளர்ந்தோங்கச் செய்யவேண்டும் என்றும் வர்த்த உறவுகளைப் பெருக்கவேண்டும் என்றும் இரு நாடுகளும் விருப்பம் தெரிவித்துள்ளன. இது சம்பந்தமாக இந்திய சர்க்காரின் பிரதிநிதிகளும், சோவியத் யூனியன் சர்க்காரின்

பிரதிநிதிகளும் பூர்வாங்க சம்பாஷணைகள் நடத்தினர். இரு நாடுகளுக்கிடையிலுள்ள வர்த்தகத்தின் பரிமாணத்தை எவ்வளவு மிகவும் அதிகப்படியாக உயர்த்த முடியுமோ அந்த அளவுக்கு உயர்த்துவது, இரு நாடுகளுக்கும் நன்மை பயப்பதாக இருக்கும் என்று அவர்கள் கருதுகிறார்கள். இத்திசையில் முதற்படியாக இருதரப்பினரிடையிலும் பின் வருமாறு உடன்பாடு ஏற்பட்டது.

(அ) 1956-லிருந்து ஆரம்பித்து அடுத்த மூன்று ஆண்டுகளுக்குள்ளாக, சோவியத் யூனியன் 10 லட்சம் டன் உருக்கை இந்தியாவிற்கு அளிக்கும்; இந்தியாவும் இதை விலைக்கு வாங்கிக்கொள்ளும். இதில் முதல் ஆண்டில் 3 லட்சம் டன்னும், அதற்கு அடுத்த இரண்டு ஆண்டுகளில் ஆண்டொன்றுக்கு $3\frac{1}{2}$ லட்சம் டன்னும் அனுப்பப்படும். இவ்விதம் உருக்கு இந்தியாவிற்கு அனுப்பப்படுவது சம்பந்தமான விதிகளும் நிபந்தனைகளும், இனிமேல் பேச்சுவார்த்தைகளின் மூலம் முடிவு செய்யப்பட வேண்டியவை.

(ஆ) இம்மூன்றாண்டு காலத்தில், எண்ணெய் உற்பத்திக்குத் தேவையான இயந்திர சாதனங்களையும், சுரங்கத் தொழில் இயந்திர சாதனங்களையும், இதர இயந்திர சாதனங்களையும் பொருள்களையும் இருதரப்பினருக்கிடையில் ஏற்படும் உடன்பாட்டிற்கேற்ப, சோவியத் யூனியன் இந்தியாவிற்கு விற்பனை செய்யும்; இந்தியா அவற்றை விலைக்கு வாங்கிக்கொள்ளும். இந்தப் பொருள்களையும் இயந்திர சாதனங்களையும் விற்பனை செய்வது, வாங்குவது சம்பந்தப்பட்ட விதிகளும் நிபந்தனைகளும் இனிமேல் பேச்சுவார்த்தைகளின் மூலம் முடிவு செய்யப்படும்.

(இ) இந்தியாவிலிருந்து வாங்கி வரும் கச்சாப் பொருள்கள், இயந்திர உற்பத்திப் பொருள்கள் இவ்விரண்டின் பரிமாணத்தையும் சோவியத் யூனியன் கணிசமான அளவுக்கு அதிகரிக்கும். வாங்குவோருக்கும் விற்பனையாளர்களுக்கும் இடையில் பேச்சுவார்த்தைகள் மூலம் அங்கீகரிக்கப்படும் விதிகள், நிபந்தனைகள் அடிப்படையில் இது அமுலாக்கப்படும். இவ்வாறு, இந்தியாவிலுள்ள அதிகாரபூர்வமான சோவியத் ஸ்தாபனங்களின் பாரமரிப்புக்குத் தேவையான தொகைகள் உள்பட, இந்தியாவிடமிருந்து சோவியத் யூனியன் விலைக்கு வாங்கும் பொருள்களின் மொத்த மதிப்பு, சோவியத் யூனியனிலிருந்து இந்தியா வாங்கும் பொருள்களின் மொத்த மதிப்பிற்கு சமமானதாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

(ஈ) இந்திய-சோவியத் வர்த்தக ஒப்பந்தத்தில் கூறப்பட்டுள்ளது போல், பொருள்களின் ஏற்றுமதிக்கும், இறக்குமதிக்கும் இரு சர்க்காருக்கும் தத்தம் நாட்டின் விதிகளும், சட்டதிட்டங்களும் அனுமதிக்கும்

அளவுக்கு எவ்வளவு அதிகபட்சமான வசதிகளை அளிக்கமுடியுமோ அவ்வளவு வசதிகளை அளிக்கும்; இது விஷயத்தில் இரு சர்க்கார்களும் சாத்தியமான சகல உதவியும் அளிக்கும்.

2. வர்த்தகத்தின் பரிமாணத்தை விரிவடையச் செய்வதென்று இப்பொழுது நாம் வந்துள்ள உடன்பாட்டின் காரணமாகவும், போதுமான கப்பல் போக்குவரத்து வசதிகளுக்கு வகை செய்யும் பொருட்டும் இந்தியத் துறைமுகங்களுக்கும் சோவியத் யூனியன் துறைமுகங்களுக்கும் இடையில் இந்திய, சோவியத் கப்பல்களின் நிரந்தரக் கப்பல் போக்குவரத்து ஏற்பாடுகளை அமைப்பது அவசியம் என்று இரு சர்க்கார்களும் கருதுகின்றன.

3. மேலே கண்டுள்ள உடன்பாட்டை அமுலுக்குக் கொண்டு வருவதற்குரிய விதிகளையும் நிபந்தனைகளையும் விவாதித்து, ஒப்பந்தஞ் செய்து கொள்வதற்காக, சோவியத் யூனியனிலிருந்து இந்தியாவுக்கோ, இந்தியாவிலிருந்து சோவியத் யூனியனுக்கோ எவ்வளவு சீக்கிரம் சாத்தியமோ அவ்வளவு சீக்கிரமாக தூதுகோஷ்டிகள் அனுப்பப்படும் என்றும் இரு சர்க்கார்களின் பிரதிநிதிகள் ஏற்றுக்கொண்டார்கள்.

—புதுடெல்லி 1955, டிசம்பர் 13

## இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்குமிடையே கலாச்சாரத் தொடர்புகளைப் பலப்படுத்துவது பற்றி

சோவியத் சர்க்காரின் கலாச்சார இலாகா அமைச்சர் என். ஏ. மிகைலாவ், தான் இந்தியாவில் தங்கியிருந்த காலத்தில், இந்திய சர்க்காரின் கல்வி அமைச்சர் மௌலானா ஆஸாத், சுகாதார அமைச்சர் ராஜ்குமாரி அமிரிதகௌர், ஒலிபரப்பு, செய்தி இலாகா அமைச்சர் பி. வி. கேஸ்கர் ஆகியவரையும், இதர அதிகாரிகளையும் சந்தித்தார். உஸ்பெக் குடியரசின் சுப்ரீம் சோவியத்தின் தலைமைக் குழுத் தலைவர் எஸ். ஆர். ரஷிதோவ், இந்த சந்திப்புக்கள் சிலவற்றில் பங்குகொண்டார். இந்தியாவிற்கும், சோவியத் யூனியனுக்குமிடையே உள்ள கலாச்சாரத் தொடர்புகளை மேலும் வளர்ப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் பற்றி இரு பக்கத்தினரும் விவாதித்தனர்.

இந்திய வரலாற்றைப் படிப்பதற்குப் பெரிதும் பயன்தரத்தக்க சரித்திர சம்பந்தமான தஸ்தாவேஜுக்களையும், ஆதாரங்களையும், நுண்ணிய சலனப் படங்களையும், டிசம்பர் 13ம் தேதி என். ஏ. மிகைலாவ் கல்வி

மந்திரி மௌலானு ஆஸாத்திடம் கொடுத்தார். "புத்த மதத்தின் வரலாறு" எனும் கையெழுத்துப்பிரதியைப் பெரிதுபடுத்தி எடுக்கப்பட்ட நுண்ணிய சலனப் படமும், மத்திய ஆசியாவிலும், இதர பகுதிகளிலும் கிடைக்கப்பட்ட சமஸ்கிருதக் கைப்பிரதிகளின் நுண்ணிய சலனப் படங்களும் அவர் கொடுத்தவற்றுள் அடங்கி இருந்தன.

பிரபல அரசியல் தலைவரான குன்ஸ்ருவைத் தலைவராகவும், பிரதமர் நேருவின் மகளான இந்திரா காந்தியை உபதலைவராகவும் கொண்டுள்ள, குழந்தைகளுக்கான சினிமாப் படங்களைப் பிரபலப்படுத்தும் சங்கத்திற்கு 16 மில்லி மீட்டர் படங்களை எடுக்கும் நகரும் சினிமாக் காமராக்கள் இரண்டும், குழந்தைகளுக்கான சினிமாப் படங்கள் இரண்டும் அளிக்கப்பட்டன.

இந்திய மக்களின் கலாச்சாரத்தையும், வாழ்வையும் சோவியத் மக்கள் மிக நன்ருகத் தெரிந்து கொள்வதற்காக, சோவியத் சினிமா நிபுணர்கள், இந்தியாவிலேயே ஒழு முழுநீளக் கதைப்படம் ஒன்றைத் தயாரிப்பதற்கான ஒப்பந்தம் ஒன்றும் செய்யப்பட்டுள்ளது.

சோவியத் யூனியனுக்கும், இந்தியாவிற்குமிடையே, கலாச்சாரப் பரிவர்த்தனையை விஸ்தரிக்கும் நோக்கத்தோடு எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள் பற்றியும் ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது.



என். ஏ. புல்கானினும், யூ நூவும் கூட்டறிக்கையில் கையொப்பமிடுகின்றனர்.

## 1955, டிசம்பர் 1-ம் தேதி
## பர்மாவை அடைந்தவுடன் ரங்கூன் விமான நிலையத்தில் புல்கானின் நிகழ்த்திய சொற்பொழிவு

திரு. பிரதம மந்திரி அவர்களே, அன்புள்ள நண்பர்களே, கனவான்களே, தாய்மார்களே !

இன்று பர்மா யூனியனின் தலைநகரமான ரங்கூனை வந்தடைந்தவுடன், உங்களுக்கும், பர்மாவின் அரசாங்கத்திற்கும், மகத்தான பர்மிய மக்களுக்கும், சோவியத் அரசாங்கத்தின் சார்பாகவும், சோவியத் மக்கள் சார்பாகவும் எங்கள் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சோவியத் யூனியனும், பர்மாவும் பல்லாயிரக் கணக்கான கிலோ மீட்டர்களால் பிரிக்கப்பட்டுள்ளது. ஆனால், இத்தகைய நீண்ட தூரம் போன்ற முட்டுக்கட்டைகளை உதறித்தள்ளும் சக்தி ஒன்றிருக்கிறது. சோவியத், பர்மிய மக்களுக்கிடையே பூரண இணக்கத்தை நிலை நாட்ட வேண்டும்; உலக சமாதானத்திற்கும், பாதுகாப்புக்கும் தேவையான நட்புறவையும், பரஸ்பர நலனை அடிப்படையாகக்கொண்ட ஒத்துழைப்பையும் பலப்படுத்த வேண்டும் என்பதற்காக இருநாட்டு மக்களும் செய்யும் முயற்சிதான் அந்த சக்தியாகும்.

சமீபத்தில், மதிப்பிற்குரிய பர்மியப் பிரதமர் யூநூ சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்தார். சோவியத் மக்களின் வாழ்க்கையையும், சோவியத் நாட்டின், தொழில், விவசாய, கலாச்சார சாதனைகளையும் நேரடியாக அவரால் காணமுடிந்தது. நம் இருநாடுகளுக்குமிடையே நட்புறவையும், ஒத்துழைப்பையும் பலப்படுத்துவதற்கு அவரது விஜயம் பெரிய முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

பர்மாவிற்கு விஜயம் செய்யவேண்டுமென்று பிரதமர் யூநூ விடுத்த அழைப்பை, பெரும் திருப்தியுடனும், நன்றியுடனும் நாங்கள் ஏற்றுக் கொண்டோம். ஆசியாவிலும், உலகிலும் சமாதானத்தைப் பாதுகாக்கவும், பலப்படுத்தவும் பர்மீய சர்க்கார் ஆற்றிய பணியும், தங்கள் தாய

கத்தை பொருளாதார ரீதியில் சுதந்திரமடைந்த ஓர் நாடக ஆக்கு வதற்கு பர்மீய மக்கள் செய்யும் முயற்சிகளும், சோவியத் மக்களின் கவனத்தையும், அனுதாபத்தையும் பெரிதும் கவர்ந்துள்ளன.

காலனி ஒடுக்குமுறைக்கெதிராக, தன்னலமற்ற போராட்டத்தை நடத்தி, சுதந்திரம் பெற்றுள்ள பர்மீய மக்களின் வாழ்க்கையையும், பணி யையும் இன்னும் அதிகமாகத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

பர்மாவுக்கு நாங்கள் விஜயம் செய்துள்ளதும், பர்மீய மக்களுடனும், அவர்களுடைய புராதனக் கலாச்சாரத்துடனும், அவர்கள் பொருளா தார வளர்ச்சியிலும், புணரமைப்பிலும் பெற்றுள்ள வெற்றிகளுடனும் பரிச்சயம் செய்துகொள்வதற்கும் நம் இருநாட்டு மக்களிடையேயும், அரசாங்கங்களிடையேயும், பரஸ்பரக் கருத்தொருமைப் பாட்டை வளர்க் கவும், அவர்களிடையே நேச உறவை மேலும் வளர்க்கவும் பெரிதும் உதவும் என நாங்கள் நம்புகிறோம்.

சோவியத் பர்மீய மக்களுடைய நட்புறவும், ஒத்துழைப்பும் நீடுழி வாழ்க! (பலத்த கரகோஷம்)

## 1955 டிசம்பர் 1-ம் தேதி ரங்கூனில் நடைபெற்ற நகர சபை வரவேற்பில் என். ஏ. புல்கானின் நிகழ்த்திய சொற்பொழிவு

மதிப்பிற்குரிய திரு. பிரதம மந்திரி அவர்களே !

மதிப்பிற்குரிய திரு. மேயர் அவர்களே !

கனவான்களே, தாய்மார்களே, நண்பர்களே !

உங்களின் மகிமை பொருந்திய, புராதன நாட்டிற்கு விஜயம் செய்யு மாறு, பர்மா யூனியன் சர்க்காரும், பிரதமர் யூ-நூ நேரடியாகவும், விடுத்த அழைப்பிற்கு எங்களின் அன்பார்ந்த நன்றியை முதலில் தெரிவித்துக் கொள்ள என்னை நீங்கள் அனுமதிக்க வேண்டும்.

பர்மிய மக்கள் அனைவருக்கும், பல்வேறு தேசிய இனங்களைக் கொண்ட சோவியத் மக்களின் நேச பூர்வமான அன்பு கனிந்த வாழ்த் துக்களையும் தெரிவிக்க என்னை நீங்கள் அனுமதிக்க வேண்டும். பர்மிய மக்களின் பால் உண்மையான மதிப்பும், நட்புணர்ச்சியும் கொண்டுள்ள னர் சோவியத் மக்கள்.

காலனி ஆதிக்கம், அன்னியத் தலையீடு, நாசகார யுத்தம் ஆகியவற்றின் இன்னல்களுக்கு உங்கள் மக்கள் ஆளாயினர். சமத்துவம், தேசங்களின் சுயநிர்ணய உரிமை என்கின்ற லெனினுடைய மகோன்னதக் கருத்துக்களினால் வளர்க்கப்பட்டுள்ள சோவியத் மக்கள், தேசிய விடுதலைக்காக பர்மிய மக்கள் நடத்தி வந்த வீரமிக்கப் போராட்டத்தை, அனுதாபத்துடன் கவனித்து வந்தனர். இந்தப் போராட்டம் வெற்றி மாலை சூடியபொழுது அவர்கள் மகிழ்ச்சியடைந்தனர்.

பிரதேச உரிமையையும், அரசுரிமையையும் பரஸ்பரம் கௌரவிப்பது; அனுக்கிரமிப்பு யாரும் மற்றொருவரின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாமலிருத்தல்; சமத்துவம், பரஸ்பர நலன்; சமாதான பூர்வமான சக வாழ்வும், பொருளாதார ஒத்துழைப்பும் என்கிற அசைக்கமுடியாத கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டுள்ளது சோவியத்-பர்மா உறவுகள் என்பது யாவருக்கும் தெரிந்ததே. விரிவான அளவிலே தெரிய வந்துள்ள இந்தக் கோட்பாடுகள் சமீபத்தில் வெளியிடப்பட்ட பர்மா-சோவியத் கூட்டறிக்கையில், மீண்டும் வலியுறுத்தப்பட்டுள்ளன.

சமீப காலத்தில் சோவியத்-பர்மிய மக்களுக்கிடையே நட்புறவும், வர்த்தக உறவுகளும் மேலும் பலப்படுத்தப்பட்டுள்ளன. சமத்துவம், பரஸ்பர அனுகூலம் என்கிற அடிப்படையில் செய்து கொள்ளப்பட்ட சோவியத்-பர்மா வர்த்தக ஒப்பந்தம், கலாச்சார தூதுகோஷ்டிகளின் பரிவர்த்தனை, தொழில் நுணுக்க ஒத்துழைப்பு ஆகியவை இந்த உறவுகளுக்கு சாட்சிகளாகத் திகழ்கின்றன.

பிரதமர் யூ-நூ சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்து சோவியத் மக்களின் வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களைப் பற்றி நேரடியாகத் தெரிந்து வந்தது, நம் இருநாடுகளுக்குமிடையேயுள்ள உறவுகளில் ஒத்துழைப்பு மனோபாவத்தையும், நம்பிக்கையையும் வளர்ப்பதில் மேலும் உதவிய ஒரு மிக முக்கியமான அம்சமாகும்.

உங்கள் நாட்டின் சுதந்திரத்தைப் பிரகடனப்படுத்தி, தேசிய சுதந்திரம், பொருளாதாரப் புனர் நிர்மாணம் என்கிற பாதையில் உங்கள் நாடு செல்லுகின்றது; சமீப காலத்தில் ஆசியாவில் ஏற்பட்டுள்ள பிரமிக்கத்தக்க மாறுதல்களின் அறிகுறிகளில் இதுவும் ஒன்றாகும்.

கீழ் நாட்டு மக்கள் ஒரு உற்சாகமான அரசியல் வாழ்விற்கான விழிப்பை அடைந்துள்ளனர். ஏகாதிபத்தியத்தையும், காலனி ஆதிக்கத்தையும் அவர்கள் எதிர்த்து நடத்தும் போராட்டம் இதுகாறும் கண்டிராத வீச்சைப் பெற்றுள்ளது. ஏகாதிபத்தியத்தின் காலனி அமைப்பு சிதைந்து கொண்டிருப்பதை நாம் காண்கிறோம். சரித்திர பூர்வமான இந்த மாற்றங்களை சிலர் நிராகரிக்க முயற்சிக்கின்றனர்; அவற்றைப் பார்க்காமலே இருக்க முயற்சிக்கின்றனர்; ஆனால் இந்த மாற்றங்கள் எல்லாம் உண்மையானவை; சர்வதேச விவகாரங்களில் பலமான செல்வாக்கை அவை பெற்றுள்ளன.

தங்களின் சுதந்திரத்தையும், அரசுரிமையையும் கெட்டிப்படுத்த உழைத்து, காலனி ஆதிபத்தியத்தின் சகல அம்சங்களையும் எதிர்த்துப் போராடும் ஆசிய நாடுகள் சர்வதேச விவகாரங்களில் ஒரு புதிய சக்தி வாய்ந்த அம்சமாக விளங்குகின்றன.

சர்வதேச விவகாரங்களில் கிழக்கு நாடுகளின் வளர்ந்து வரும் பங்கிற்கு சிறந்த சாட்சியாக பாண்டுங்கில் நடைபெற்ற ஆசிய-ஆப்ரிக்க நாடுகளின் மகாநாடு திகழ்ந்தது. மாறுபட்ட சமூக, அரசியல் அமைப்புகளையுடைய நாடுகளுக்கிடையே சமாதான பூர்வமான சகவாழ்வு வாழ்வது பற்றி இம்மகாநாட்டிலே நிறைவேற்றப் பெற்ற கோட்பாடுகள், சமாதானத்தையும், சர்வதேசக் கூட்டுறவையும் கெட்டிப்படுத்துவதில் உறுதியான பங்கை வகித்துள்ளது என சோவியத் யூனியன் கருதுகிறது.

நடைபெறவிருக்கின்ற இரண்டாவது ஆசிய, ஆப்ரிக்கா நாடுகளின் மகாநாடும், உலக சமாதானத்தைப் பலப்படுத்தும் காரியத்தில் முக்கியமானபணியை ஆற்றும் என நாங்கள் நம்புகிறோம். சர்வதேச நெருக்கடியை மேலும் தளர்த்தி, சகல நாடுகளிடையே ஒத்துழைப்பை வளர்க்க உதவுமென்றும் நம்புகிறோம்.

ஆசிய மக்களின் தேசிய விடுதலைக்கான நியாயமான போராட்டத்திற்கு, சோவியத் மக்கள் தங்களின் ஆழ்ந்த அனுதாபத்தையும், தார்மீக ஆதரவையும் தெரிவித்துக் கொள்ளுகிறார்கள். சோவியத் அரசாங்கம் ஏற்பட்ட ஆரம்ப நாட்களிலிருந்தே நாடு பிடிக்கும் ஏகாதிபத்யக் கொள்கையையும், காலனி ஒடுக்குமுறையையும் அது தீவிரமாகக் கண்டித்து வந்துள்ளது. கிழக்கு நாடுகளுடன் ஜார் அரசாங்கம் செய்திருந்த அசமத்துவ ஒப்பந்தங்களையெல்லாம் கிழித்தெறிந்தது. சிறிய, பெரிய மக்கள் அனைவரின் சமத்துவமே எங்களின் கொள்கை.

மாறுபட்ட சமூக அமைப்புகளையுடைய ராஜ்யங்களிடையே சமாதான பூர்வமான சகவாழ்வு நிலவவேண்டுமென்ற லெனினிஸக் கோட்பாட்டை சோவியத் அரசாங்கம் தனது அன்னிய நாட்டுக் கொள்கையில் பிறழாமல் பின்பற்றி வருகின்றது.

மக்களுக்கிடையே சமாதானத்தையும் நட்புறவையும் வளர்க்கும் கொள்கையை சோவியத் யூனியன் பின்பற்றுகிறது; சமாதானத்திற்காக தீவிரமான போராட்டத்தை நடத்தும் கொள்கையைக் கடைப்பிடிக்கிறது; யுத்தம், அந்நிய தலையீடு ஆகியவற்றிற்கு எதிரான கொள்கையைப் பின்பற்றுகிறது. எல்லா சர்வதேசப் பிரச்னைகளையும் பேசி முடிவு காண்பதன் மூலம் தீர்க்கவேண்டும் என்பதே எங்களது கொள்கை.

ஆசிய மக்களும் சமாதானத்தையே விரும்புகிறார்கள்; யுத்தத்திற்கு எதிரான ஒரு போராட்டத்தை நடத்திக்கொண்டிருககிறார்கள். இந்த

உன்னத லட்சியத்திலே, ஆசிய மக்களில் பலரும் சோவியத் மக்களும் ஒருமித்த கருத்துக்களைக் கொண்டிருப்பது கண்டு பெரிதும் சந்தோஷ மடைகிறோம். அவர்கள் நேச சக்திகளாகவும் ஆகியுள்ளனர்.

ஜினீவாவின் மேல்மட்ட மகாநாட்டை வெற்றியடையச் செய்வதற்கு சோவியத் யூனியன் பெரு முயற்சிகள் செய்தது. இந்த மகாநாடு சர்வ தேச நெருக்கடியைத் தளர்த்துவதிலும், ராஜ்யங்களுக்கிடையே உள்ள உறவுகளில் நம்பிக்கையை மீண்டும் ஏற்படுத்துவதிலும் ஒரு முக்கியமான பங்கை வகித்தது

சமாதானக் கொள்கையைப் பின்பற்றி, உலகின் மிக முக்கியமான பிரச்னைகளில் ஒன்றான ஆயுதப் பரிகாரணப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு முயற்சி செய்துகொண்டுள்ள சோவியத் சர்க்காரானது, தன்னுடைய ராணுவத்தில் 6,40,000 ஆட்களைக் குறைத்துக்கொள்ள முடிவு செய்தது. ஆஸ்திரியா தேசத்திலிருந்து சோவியத் துருப்புகள் வாபஸ் வாங்கப் பட்டுள்ளன. அந்நியப் பிரதேசங்களில் சோவியத் நாட்டிற்கு ராணுவ தளங்கள் இல்லாத விஷயமானது சமாதானத்தை விரும்பும் எல்லா மக்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது.

நம் காலத்திய மிக முக்கியமான பிரச்னைகளில் ஒன்றான ஆயுதப் பரிஹரணம் பற்றிய காரிய சாத்தியமான யோசனைகளை சோவியத் யூனியன் சமர்ப்பித்தது. "அணுகுண்டு, ஜலவாயு குண்டு முதலியவை தடைசெய்யப்பட வேண்டும்; சம்பிரதாய ராணுவத் தளவாடங்கள் கணிச மான அளவு குறைக்கப்பட வேண்டும் என்பது எங்களின் ஆழ்ந்த துணிபு. இந்நடவடிக்கைகள் அமுலாக்கப்படுவதை மேற்பார்வையிட ஒரு சக்திவாய்ந்த சர்வதேசக் கட்டுப்பாடு ஏற்படுத்தியாக வேண்டும். ஜெனீவா மகாநாட்டிலே பங்குகொண்ட தேசங்கள் ராணுவத்தையும், சம்பிரதாய ராணுவத் தளவாடங்களையும் குறைக்கும் அதே காலத்தி லேயே, அணு ஆயுதங்களை தாங்கள் முதலில் உபயோகிப்பதில்லை என்ற வாக்குறுதி அளிக்க வேண்டுமென நாங்கள் கருதுகிறோம்.

பர்மீய மக்களும் அவர்களின் அரசாங்கமும் கூட அணு ஆயுதங் களைத் தடை செய்யவும் ராணுவத் தளவாடங்களைக் குறைக்கவும் கோரு கிறார்கள். சமாதானத்திற்கும் தேசங்களிடையே நம்பிக்கையை ஏற் படுத்துவதற்கும் இது பெரிதும் உதவி செய்யக்கூடிய ஒரு விஷயமாகும்.

பர்மா யூனியனின் சமாதானத்தை நேசிக்கும் கொள்கையானது எங்கள் மக்களால் பெரிதும் போற்றப்படுகிறது. சமாதானத்திற்கான போராட்டத்தில் உங்கள் சர்க்கார் எடுக்கும் நடவடிக்கைகளை அவர்கள் பெரிதும் மதிக்கிறார்கள்.

சென்ற காலத்திய காலனி ஆதிக்கத்தின் பாரம்பரியமாகக் கிடைத்த இன்னல்களைத் தவிர்க்க இப்பொழுது உங்கள் மக்கள் பாடுபடுகிறார்கள். நாட்டின் பொருளாதாரத்தையும் தொழிலையும் பலப்படுத்த முயற்சி

செய்கிறார்கள். எங்கள் சர்க்காரின் சார்பிலும், மக்களின் சார்பிலும் உங்கள் நாடு வளர்ச்சியும் செழிப்பும் பெறச்செல்லும் பாதையிலே வெற்றிகள் பெறவேண்டுமென்று நான் வாழ்த்துகிறேன். நாம் இரு நாடுகளுக்கிடையேயும் நட்புறவையும் வர்த்தகத் தொடர்புகளையும் விரிவு படுத்திக் கொள்வது இரு பக்கங்களின் நலன்களுக்கும் உகந்ததே.

நண்பர்களே, நீங்கள் எங்களுக்கு அளித்த அன்புகனிந்த இதய பூர்வமான வரவேற்பிற்கு எங்களின் நன்றி. பர்மீய மண்ணிலே நாங்கள் செலவிடும் நாட்கள் ஆனந்தமான நினைவுகளை எங்கள் இதயத்திலே இடம் பெறச் செய்துவிடும்.

சோவியத்-பர்மீய மக்களின் நட்புறவும் ஒத்துழைப்பும் நீடூழி வாழ்க ! (கரகோஷம்)

சோவியத்-பர்மீய நட்புறவு வளர்ந்து பலமடைந்து இரு நாட்டு மக்களுக்கும், உலக சமாதானத்திற்கும் பயன்படட்டும்! (நீண்ட பலத்த கரகோஷம்).

## 1955 டிசம்பர் 2 ம் தேதி
## பர்மாவின் பிரதமர் அளித்த விருந்தின்போது
## என். ஏ. புல்கானின் நிகழ்த்திய சொற்பொழிவு

திரு. பிரதம மந்திரி அவர்களே எங்களின் பால் நீங்கள் தெரிவித்த அன்பு கனிந்த வார்த்தைகளுக்காக என் சார்பாகவும் தோழர் நிகிதா செர்ஜெவிச் குருஷேவின் சார்பாகவும் நான் நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சோவியத் யூனியனில் நீங்கள் தங்கியிருந்தது பற்றி மகிழ்ச்சியடைவதாகக் கூறியதை நாங்கள் பெரும் திருப்தியுடன் ஏற்றுக் கொள்கிறோம். எங்கள் நாட்டு மக்கள், நண்பர்களை அன்பாகவும், இதயபூர்வமாகவும் எப்பொழுதுமே வரவேற்பார்கள்.

சோவியத் யூனியனுக்கும் பர்மாவுக்குமிடையே நெருங்கிய உறவுகளை வளர்க்க சோவியத் மக்கள் விரும்புகிறார்கள் என்பதுபற்றியும், பர்மிய மக்கள் பால் அவர்கள் அனுதாபமும் மதிப்பும் வைத்துள்ளார்கள் என்பது பற்றியும் உங்களின் ஆழ்ந்த நம்பிக்கையானது, நீங்கள் சோவியத் யூனியனில் தங்கியிருந்த காலத்தில் பலமடைந்தது எனக் கூறினீர்கள். அதில் ஒன்றும் தவறில்லை.

நம் இரு நாடுகளும் மாறுபட்ட சமூக, அரசியல் அமைப்புகளைக் கொண்டது என்பது நமக்குத் தெரியும். எனினும், நாம் நட்புறவுடன் வாழ்ந்து சமாதானமான ஒத்துழைப்பை வளர்ப்பதை இது தடுக்கவில்லை. ஏனெனில் நம் மக்கள் சமாதானத்தைப் பாதுகாத்துக் கெட்டிப்படுத்த ஆர்வமுடன் முயற்சிக்கிருர்கள் ; எல்லா மக்களும் அமைதியுடனும், பயமின்றியும் மனித குலத்தின் நன்மைக்காக உழைப்பதற்கு இது மிகவும் அவசியமாகும்.

பிரதேச உரிமையையும், அரசுரிமையையும் கௌரவிப்பது ; மற்ற நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாமை ; வர்த்தக கலாச்சார உறவுகளில் சமத்துவத்தையும் பரஸ்பர நலனையும், அடிப்படையாகக் கொள்வது ஆகியவை இதர நாடுகளுடன் நாங்கள் கொள்ளும் உறவிற்கானக் கொள்கையாக என்றும் இருந்து வந்துள்ளது. பர்மா யூனியனுடன் எங்களுக்குள்ள உறவும் இந்த அடிப்படையிலேயே கட்டப்பட்டுள்ளது.

பல சர்வதேசப் பிரச்னைகள் பற்றியும், நம் இரு நாடுகளுக்கிடையே இருக்க வேண்டிய உறவுகள், ஒத்துழைப்பு ஆகியவை பற்றியும், நம் இரு மக்களுக்குமிடையே நட்புறவை வளர்ப்பது பற்றியும், ஆழ்ந்த பரஸ்பரக் கருத்தொற்றுமையை நிலைநாட்டுவதற்கு, மாஸ்கோவிலும், அதைத் தொடர்ந்து இங்கும் நாங்கள் உங்களுடன் ஏற்படுத்திக் கொண்ட நேரடித் தொடர்பு பெரிதும் உதவியுள்ளது கண்டு நாங்கள் திருப்திப்படுகிறோம்.

இரு தினங்கள் தான் உங்களுடன் நாங்கள் கழித்துள்ளோம் ; ஆனால் பர்மிய மக்கள் சமாதானத்தையும், சமாதான பூர்வமான பணியையுமே உண்மையில் முழுக்க முழுக்க விரும்புகிருர்கள் என்பதை நாங்கள் பார்த்து, நம்பிக் கொண்டோம்.

காலனி ஆட்சி, அந்நியத்தலையீடு, நாசகரமான யுத்தம் ஆகியவற்றல் ஏற்பட்ட பயங்கர விளைவுகளை அகற்றுவதில், பர்மீய மக்கள் சில வெற்றிகள் அடைந்துள்ளார்கள் என்பது கண்டு நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம். உங்கள் நாட்டின் செழிப்பிற்கும், நல்வாழ்விற்கும், நீங்கள் இன்னும் பல மிகப்பெரிய வெற்றிகள் பெறவேண்டுமென, எங்களின் இதய பூர்வமாக நாங்கள் விரும்புகிறோம்.

திரு. பிரதம மந்திரி அவர்களே, நம் இரு நாட்டிற்குமிடையே நேச உறவுகளை உண்டாக்குவதற்கான உறுதியுள்ள அஸ்திவாரத்தை ஏற்படுத்த விரும்புவதாக மாஸ்கோவில் நீங்கள் கூறியதை நாங்கள் அன்புடன் வரவேற்றோம். பர்மாவுக்கும், சோவியத் யூனியனுக்குமிடையே நேச உறவுகள் வளர்வது இன்று ஒரு உண்மையாகத் திகழ்கிறது. நம்

நாடுகளுக்கிடையேயுள்ள இந்த உறவை நாம் வளர்த்துக் கெட்டிப் படுத்துவோமாக.

பர்மிய—சோவியத் நட்புறவும், ஒத்துழைப்பும் நீடூழி வாழ்க ! உலக முழுவதிலும் சமாதானம் நீடூழி வாழ்க !

## 1955 டிசம்பர் 3-ம் தேதி ஷான் ராஜ்ய அரசாங்கத் தலைவர் அளித்த விருந்தில் என். எஸ். குருஷேவ் நிகழ்த்திய சொற்பொழிவு

எனது நண்பர் நிக்கோலாய் அலெக்ஸாண்ட்ரோவிச் புல்கானின் கூறிய அனைத்தையும் நான் ஏற்றுக்கொள்கிறேன். நீங்களும், உங்களுடைய மக்களும் அளித்த அன்பார்ந்த வரவேற்பு எங்களை இன்ப வெள்ளத்திலாழ்த்திக் கனிந்துருகச் செய்துவிட்டது. (கரகோஷம்)

சோவியத் மக்கள்பாலும், எங்கள் நாட்டின் பாலும், பர்மிய மக்கள் கொண்டுள்ள உண்மையான உணர்ச்சிகளையும், சகோதரபூர்மான அன்பையும் கண்டு நாங்கள் பெரிதும் மகிழ்ச்சியுற்றோம். (நீண்ட கரகோஷம்)

சோவியத் யூனியனிடத்தும், சோவியத் மக்களிடத்தும் அத்தகைய அன்பு கொள்ளக் காரணம் என்ன ? எங்கள் மக்கள், கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையின் கீழ், அதிகாரத்தைத் தங்கள் கையில் எடுத்துக் கொண்டபின்பு, ஒருபலம் பொருந்திய சோஷலிஸ்ட் ராஜ்யத்தை உருவாக்கியதுதான் காரணம் என நான் நினைக்கிறேன். தொழிலாளிகள், விவசாயிகள், படிப்பாளிகள் ஆகிய அனைவரும் எல்லாவிதமான ஒடுக்குமுறைக்காரர்களையும் எதிர்த்துத் தீவிரமான போராட்டத்தை நடத்தினர்; அவர்கள், கட்சியின் தலைமையின் கீழ் மாபெரும் பயன்களைப் பெற்றனர். தங்களின் ஜீவாதார நலன்களுக்காகவும், தங்கள் சுதந்திரத்திற்காகவும், தாயகத்திற்காகவும் போராடினால், உழைப்பாளி மக்கள் என்ன செய்ய முடியும் என்பதை சோவியத் மக்கள் உலகம் முழுவதற்கும் எடுத்துக் காட்டியுள்ளனர். (நீண்ட கரகோஷம்)

எங்கள் ராஜ்யம் ஏற்படுவதற்கு முன், கடவுள் கிருபையால் நியமிக்கப்பட்டதாகக் கூறப்பட்டவர்களே ஒரு ராஜ்யத்தை ஆளத்தகுதியுடையவர்கள் என்று உழைப்பாளி மக்கள் நம்புமாறு போதனை செய்யப்பட்டது. விவசாயிகளின் குடிசைகளிலும், தொழிலாளிவர்க்கப் பகுதிகளிலும் பிறந்தவர்கள் அக்கடமையை நிறைவேற்ற முடியாதவர்கள்

எனக் கூறப்பட்டது. ஆனால் பொதுஜனங்களுக்குக் கல்வி அளிக்கப் படுமானால், ராஜ்ய நிர்வாகத்தில் யாரும் தீவிரமான பங்கை எடுத்துக் கொள்ள இயலும் என எங்கள் ராஜ்யம் நிரூபித்துக் காட்டியுள்ளது.

இந்தியாவிலும், பர்மாவிலும் நான் பேசிய பேச்சுக்களுக்காக, சில முதலாளித்துவப் பத்திரிகைகள் என்மீது எரிந்து விழுகிறார்கள். ஆனால் நான் இங்கு அவர்களின் இன்பத்திற்காகப் பேசவில்லை. (உற்சாகமும் கரகோஷமும்)

அவர்கள் அதிருப்திப்படுவது ஏன்? காலனி வாதிகளை ஆமோதித்து என்னால் பேசமுடியாது. பல ஆண்டுகள் காலனி வாதிகள் உங்களை ஒடுக்கி, உங்கள் நாட்டைக் கொள்ளையடித்தனர். இதெல்லாம் பர்மீய மக்களை நாகரிகப்படுத்துவதற்காகத் தாங்கள் செய்ததாக அவர்கள் கூறுகிறார்கள். (உற்சாகம்)

நாங்கள் வேறுவிதமாகக் கூறுகிறோம்; உங்கள் மக்களைக் கொள்ளையடித்து, உங்களின் உணவில் கடைசித் துண்டுவரை உங்களுடமிருந்து அவர்கள் எடுத்துக்கொள்வதற்காக, காலனி வாதிகள் உங்கள் நாட்டில் தங்கினர். அதனால்தான் சில நாடுகளின் செய்தித்தாள்களுக்கு சில கூற்றுகள் பிடிக்கவில்லை. உண்மை உறுத்துகிறது.

ஆனால் நான் ஒரு பாசாங்குக்காரனாக இருக்கமுடியாது. உழைக்கும் வர்க்கத்தையும், கம்யூனிஸ்ட் கட்சியையும் நான் பிரதிநிதித்துவப்படுத்து கிறேன். எனவே காலனி வாதிகளுக்காதரவாக என்னால் ஒன்றும் சொல்லமுடியாது. (உற்சாகமும் நீண்ட கரகோஷமும்)

காலனி நுகத்தடியை நீங்கள் தூக்கியெறிந்துவிட்டு, உங்களின் சுதந்திர ராஜ்யத்தை இப்பொழுது கட்டுவதில் முனைந்துள்ளது கண்டு சோவியத் மக்கள் உண்மையான சந்தோஷமடைகின்றனர். உங்களின் வளர்ச்சிக்கு நாங்கள் உதவத் தயாராயிருக்கிறோம்; அதன் மூலம் உங்களை என்றுமே காலனி வாதிகள் ஒடுக்க இயலாதபடி செய்யமுடியும். உங்களுக்காகவும், உங்கள் குழந்தைகளுக்காகவும் நீங்கள் உழைக்க வேண்டுமென நாங்கள் விரும்புகிறோம்; உங்கள் கலாச்சார மட்டத்தை நீங்கள் உயர்த்த வேண்டுமென விரும்புகிறோம்; சுதந்திரமாகவும், பலம் பொருந்தியவர்களாகவும் நீங்கள் இருக்கவேண்டுமென்பதே எங்கள் அவா. (பலத்த கரகோஷம்)

நண்பர்களே இது எங்களின் இதயபூர்வமான ஆசை. இத்தகைய ஆசை, ஒரு காலத்தில் ஒடுக்கப்பட்டவர்களாக இருந்தவர்களுக்குத்தான் இருக்கமுடியும்.

நானே ஒரு தொழிலாளியின் குடும்பத்தில் பிறந்தவன். புரட்சிக்கு முந்திய ரஷ்யாவில், டானெட்ஸ் பகுதியில் சுரங்கங்களையும், தொழிற்சாலை

களையும் வைத்திருந்த, பிரிட்டிஷ், பிரெஞ்சு முதலாளிகளுக்காகவும், இதர முதலாளிகளுக்காகவும் நான் உழைத்தேன். அந்நிய நாட்டினர்க்கு உழைப்பதென்றால் என்ன என்பது எனக்குத் தெரியும். அதனால்தான், விடுதலையைப் பெற்றவுடனே நீங்கள் அடைந்த ஆனந்தத்தை என்னால் நன்கு புரிந்துகொள்ள முடிகிறது.

உங்களின் சாதனைகளைக் கண்டு இறும்பூதெய்துகின்றனர் சோவியத் மக்கள். உங்களுடன் சகோதரர்களாகவே நாங்கள் வாழ விரும்புகிறோம். இதற்குப் பிரதிப்பயனாக, உங்களின் நட்பைத்தவிர வேறெதையும் நாங்கள் கோரவில்லை. தங்களின் சொந்த உழைப்பாலும், சாதனங்களாலும், தங்களுக்குத் தேவையானவற்றை எங்கள் மக்களால் உற்பத்தி செய்து கொள்ளுவதற்கு வேண்டிய அத்தனையும் எங்களிடமிருக்கிறது. நாங்கள் எங்களுக்காக உழைக்கிறோம்; நீங்களும் உங்களுக்காக உழைக்கிறீர்கள். (நீண்ட கரகோஷம்)

ஆனால் நாம் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளமுடியும். நாங்கள் உங்களுக்கும், நீங்கள் எங்களுக்கும் உதவ முடியும்.

உங்கள் இராஜ்யம் மிக இளமையானது. உங்களின் சொந்தப் பொறியியல் நிபுணர்கள் (என்ஜினீயர்கள்) உங்களிடம் இன்னும் உண்டாகவில்லை; தேவையான அனுபவமும் இல்லை. உங்களுக்கு இதில் உதவி தேவையிருந்தால், எங்களிடம் கூறுங்கள்; நாங்கள் உதவுகிறோம். பொறியியல் நிபுணர்களை அளித்து உதவுகிறோம்; எங்களின் அனுபவத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்ளுகிறோம். (பலத்த கரகோஷம்)

உங்களின் சொந்த ஊழியர்களை, பொறியியல் நிபுணர்களை, விஞ்ஞானிகளை, பொருளாதாரத்தின் ஒவ்வொரு துறைக்கும் தேவையான நிபுணர்களைப் பயிற்றுவிப்பது தான், பெற்ற அதிகாரத்தைப் பேணிப் பாதுகாப்பதற்கு வேண்டிய பிரதான விஷயம். உங்கள் மக்களின் மத்தியிலிருந்தே, இந்த சக்திகளை நீங்கள் முன்கொண்டு வரவேண்டும். இக் கடமையில் நீங்கள் வெற்றி பெற நாங்கள் உங்களை வாழ்த்துகிறோம்.

காலனி நாட்டு மக்கள் தங்கள் நாட்டை ஆளும் திறமையற்றவர்கள் எனும் கருத்தை ஒடுக்கப்பட்ட மக்களிடத்திலே காலனி வாதிகள் பதியச் செய்தனர். மக்களை அடிமைத் தளையில் ஆழ்த்தி வைக்கும் நோக்குடன் தான் இத்தகைய பொய்யான கருத்தை மக்கள் மனத்தில் பதியச் செய்யத் தீவிரமாக முனைந்தனர். ஆனால் பர்மிய மக்கள், ரஷ்ய மக்களைப் போன்றோ, பிரிட்டிஷ் மக்களைப் போன்றோ, திறமை உடையவர்களில்லையா? தகுதியுடையவர்கள், தகுதியற்றவர்கள் என்று மக்கள் பிரிந்திருக்கவில்லை. சம சந்தர்ப்பங்கள் அளிக்கப்பட்டால், தங்கள் வளர்ச்சிக்கான வெற்றிகளை அவர்களும் பெறுவார்கள். (பலத்த கரகோஷம்)

இத்தகைய பேச்சுக்களினால் தான், சில முதலாளித்துவப் பத்திரிகைகள் என்னை விரும்பவில்லை. ஆனால் என் இதயத் துடிப்பு உள்ள வரை நான் உண்மையையே தான் பேசுவேன். (பலத்த கரகோஷம்) கொஞ்சமும் சளைக்காமல் உண்மையையே பேசுவேன்; பொய்மைக்கு எதிராக மக்களைத் தட்டி எழுப்புவேன். (நீண்ட கரகோஷம்)

இது ஒரு உன்னதப் பணியாகும்; இதற்கு ஒவ்வொருவரும் கை கொடுத்து உதவ வேண்டும்.

விடுதலை பெற்ற சுதந்திர பர்மாவுக்கும், நண்பர்களே, உங்களுக்கும், சோவியத் நாட்டின் தூதுவர்களான எங்களுக்கு அன்புகனிந்த வரவேற்பளித்த மகத்தான உங்கள் மக்களுக்கும் வாழ்த்துக் கூறி இக்கோப்பையைத் தூக்கிப் பிடித்து, பானத்தை அருந்துகிறேன் (நீண்ட பலமான கரகோஷம்)

## 1955 டிசம்பர் 4-ம் தேதி மாண்டலேயில் நடைபெற்ற நகரசபை வரவேற்பில் என். ஏ. புல்கானின் நிகழ்த்திய சொற்பொழிவு

மேன்மை தங்கிய திரு. மேயர் அவர்களே,

மதிப்பிற்குரிய நகரவாசிகளே,

பெருமைக்குரிய சரித்திரப் புகழ்பெற்ற, பர்மா ராஜ்யத்தின் புராதனத் தலைநகரான மாண்டலேக்கு வந்ததுபற்றி நாங்கள் புளகாங்கிதமடைகிறோம். நாட்டின் இதயம்போல், உங்கள் நாட்டின் ஜீவியமுள்ள நரம்பாகத் திகழும் மகத்தான ஐராவதி நதிக்கரையில் அமைந்துள்ள நகரம் மாண்டலே; புராதன கலாச்சாரப் பொக்கிஷத்தின் உறைவிடம் அது; அப்பொக்கிஷத்தைப் பாதுகாத்து வளர்ப்பதற்கு, இங்குள்ள கலாச்சார, கல்வி ஸ்தாபனங்கள் பெரிதும் முயற்சி செய்கின்றன.

"மாண்டலேயின் உணர்ச்சி" என்று வர்ணித்து, உங்கள் நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதில் உங்களுக்குள்ள திடமான உறுதி, வெற்றி பெற்று விட்டது என திரு மேயர் அவர்களாகிய நீங்கள் கூறியதை நாங்கள் வரவேற்கிறோம். புகழ்பெற்ற மாண்டலே நகரமானது, காலனி ஆதிக்கச் சங்கிலியை உடைந்தெறிந்த ஒரு சுதந்திர நாட்டிலுள்ள ஒரு சுதந்திர நகரமாக மீண்டும் ஆகியுள்ளது.

அதே சமயத்தில், இரண்டாவது உலக மகாயுத்த காலத்தில் உங்கள் நகரம் நாசத்திற்காளாகியதையும், விசேஷமாக, மாண்டலேயின் சரித்திரப் பிரசித்திபெற்ற, சிற்பக்கலையின் பெருமையாகத் திகழ்ந்த, ராஜாங்க அரண்மனையானது அழிக்கப்பட்டதையும் கேட்டு அனுதாபப்படாமலிருக்க முடியாது. எங்களின் நகரங்களில் பலவும் மிகவும் குரூரமாக நாசப்படுத்தப்பட்டு, தரைமட்டமாக்கப்பட்டதை நீங்கள் நன்கு அறிவீர்கள். தங்களின் சுயநலமற்ற முயற்சிகளின் மூலம் 'இந்த நகரங்களையும் கிராமங்களையும் கட்டிய சோவியத் மக்களுக்கு, யுத்தம் எவ்வளவு நாசகரமானது என்பது நன்கு தெரியும். அதேபோல் சமாதானத்தைப் பாதுகாத்துப் பலப்படுத்த வேண்டியது எவ்வளவு முக்கியமானது என்பதும் அவர்களுக்குத் தெரியும். பர்மீய மக்களும், எங்கள் நாட்டு மக்களுடன் தோளோடு தோள் கோர்த்து சமாதானத்திற்காகவும், மற்றொரு யுத்தப் பயமுறுத்தலுக்கெதிராகவும் போராட முன்வந்துள்ளதை நாங்கள் பெரிதும் மதிக்கிறோம்.

மாஸ்கோவில் நவம்பர் 3-ம் தேதி கையெழுத்திடப்பட்ட சோவியத்-பர்மீயக் கூட்டறிக்கையை பர்மா மக்கள் வரவேற்றது கண்டு களிப்படைந்தோம்; ராணுவக் கூட்டணிக் கொள்கையை அது கண்டித்தது; இத்தகைய அணிகளில் சேராமலிருக்கும் கொள்கையானது மக்களின் பாதுகாப்பை உறுதிப்படுத்துகிறது என அக்கொள்கையை அங்கீகரித்துள்ளது; எனவே அந்த அறிக்கையானது உலக முழுவதும் சமாதானத்தைப் பாதுகாப்பதற்குச் சாதகமான ஓர் அம்சமாக விளங்குகிறது.

நம் இரு மக்களுக்கிடையே உள்ள உறவுகள் என்றுமே உண்மையான நேசத்தோடு கூடியதாக இருந்து வந்துள்ளன; இன்று அவை சமாதான சகவாழ்வுக்கான ஐம்பெரும் கோட்பாடுகளை உறுதியான அடிப்படையாகக் கொண்டுள்ளன; சோவியத் யூனியனுக்கும் பர்மாவுக்குமிடையே, இருவரின் நலனுக்குகந்த, விரிவான பொருளாதார, கலாச்சார ஒத்துழைப்பை மேலும் வளர்ப்பதற்கு இது வழி திறந்து விட்டுள்ளது. பிரதமர் யூ-நூ வுடன் சேர்ந்து நாங்கள் விடுத்த கூட்டறிக்கையில் இந்தக் கோட்பாடுகள் மீண்டும் வலியுறுத்தப்பட்டன; இந்த அறிக்கையானது நம் இரு நாடுகளுக்கிடையேயுள்ள நட்புறவுக்கான சாஸனம் என வர்ணித்தார் யூ-நூ.

திரு. மேயர் அவர்களே, உங்களின் அழகிய நாட்டிற்கு நாங்கள் செய்துள்ள இந்த விஜயம், சோவியத் யூனியனுக்கும், பர்மாவுக்குமிடையே உள்ள உறவில் நிலவும் உண்மையான நட்புறவையும், நம்பிக்கையையும் மேலும் வளர்த்து, உலக சமாதானத்திற்குப் பயன்படும் என்ற நம்பிக்கையை நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இறுதியாக, உங்களின் பிரசித்தி பெற்ற புராதன நகரை நாங்கள் அடைந்தவுடன் எங்களுக்கு நீங்கள் அளித்த அன்பான வரவேற்பிற்கும்

எங்கள் நாட்டின்பாலும், எங்கள் மக்கள் பாலும் நீங்கள் வெளியிட்ட நேச உணர்ச்சிக்கும், நன்றிக்கும், என்னுடைய ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சோவியத் யூனியனுக்கும், பர்மாவுக்கும் உள்ள நட்புறவானது பலத்திலும், ஆழத்திலும் விரிவடைந்து, வளர்ந்து நம் நாட்டு மக்களின் நலன்களுக்காகவும், உலக சமாதானத்தைப் பலப்படுத்தும் உன்னத நோக்கத்திற்காகவும் பயன்படட்டும்! (நீண்ட பெருத்த கரகோஷம்)

* * *

டிசம்பர் 4-ம் தேதி மாண்டலே நகரில் சோவியத் விருந்தாளிகள் தங்கியிருந்த காலத்தில், ஐராவதி நதியில், எஸ். எஸ். மிண்டான் எனும் கப்பலில் கொஞ்ச தூரம் சுற்றிவிட்டு வந்தனர். அப்பொழுது, என். ஏ. புல்கானினுக்கும், என். எஸ். குருஷேவுக்கும் அந்நகர மக்கள் பல அன்பளிப்புகள் வழங்கினார்கள். அவற்றுள், ஒரு முழு பர்மீய வாத்தியக் கோஷ்டிக்குத் தேவையான பர்மீய தேசிய வாத்தியங்களும் அடங்கியிருந்தன.

இந்த அன்பளிப்புகளுக்கு மாண்டலே நகர மக்களின் பிரதிநிதிகளுக்கு என். ஏ. புல்கானின் ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்தார்.

"உங்களுடைய தாராளமான உபச்சாரத்திற்கு, என் சார்பாகவும் தோழர் குருஷேவ்'சார்பாகவும் மட்டுமல்லாமல், நாங்கள் பிரதிநிதித்துவப் படுத்தும் சோவியத் மக்கள் அனைவரின் சார்பாகவும் நன்றி செலுத்த என்னை அனுமதியுங்கள். எங்கள்பால் நீங்கள் வெளியிட்ட அன்பிற்கும், நம்பிக்கைக்கும் எங்களின் நன்றி; சமாதானத்தைப் பலப்படுத்த எங்களுடன் சேர்ந்து பணியாற்ற நீங்கள் எடுத்துள்ள முடிவுக்கு எங்களின் நன்றி" என அவர் கூறியவுடன், பெருத்த கரகோஷம் செய்யப்பட்டது.

## 1955, டிசம்பர் 4-ம் தேதி
## மாண்டலேயில்
## என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

நண்பர்களே, சகோதரர்களே,

ஏற்கனவே எனது நண்பர் என். ஏ. புல்கானின் கூறியவற்றை நான் ஆமோதிக்கிறேன். நீங்கள் அளித்துள்ள ஞாபகச் சின்னங்கட்கும், அன்புகலந்த நேசபூர்வமான வரவேற்பிற்கும் எனது நன்றி.

சோவியத் மக்களின் பிரதிநிதிகளான எங்கள்பால் நீங்கள் காட்டிய அன்பு நிறைந்த அந்த உணர்ச்சிகளையே, உங்கள் நாட்டிலிருந்து திரும்பிச் செல்லும்போது விலைமதிக்க முடியாத ஞாபகச் சின்னமாக நாங்கள் கொண்டு செல்வோம். (பலத்த கரகோஷம்) உங்கள் நாட்டைப் பலப்படுத்த வேண்டும்; கலையை வளர்க்கவேண்டும்; விரிந்த அளவில் மக்களிடையே அறிவுப் பிரச்சாரம் செய்யவேண்டும்; உங்களின் பொறியியல் நிபுணர்களை, மருத்துவர்களை, ஆசிரியர்களை நன்கு பயிற்றுவிக்க வேண்டும் என்பவைகளே எங்களின் விருப்பமாகும். (கரகோஷம்) மேலும் மேலும் உங்கள் நாடு முன்னேறுமென நிச்சயமாக நம்புகிறோம்; ஏனெனில் மக்கள் அதைத்தான் விரும்புகிறார்கள். (பலத்த கரகோஷம்)

இயற்கை வளங்கள் கொழிக்கும் நாடு உங்கள் நாடு. இந்த வளங்களைப் பயன்படுத்தி, தாயகத்தின் நலனுக்காக உங்களால் எந்த அளவு முடியுமோ அந்த அளவிற்கு உழைக்கும் விருப்பம் உங்களுக்கிருக்கிறது. மனித சக்தியும் உங்களுக்கிருக்கிறது. சரியான தலைமையிருந்தால், உங்கள் நாட்டின் வெற்றிகரமான முன்னேற்றத்தை உறுதிப்படுத்துவீர்கள். (கரகோஷம்)

உங்கள் நாட்டின் எஜமானர்களாகத் திகழ்ந்த காலனி வாதிகள், உங்களின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தி இருந்தனர். உங்களை ஒடுக்கிக், கொள்ளையடித்த அந்த ஐரோப்பியர்களின் செயல்களுக்காக, ஐரோப்பியர்களாகிய நாங்களும் வெட்கப்பட வேண்டியிருக்கிறது. (உற்சாகம், கரகோஷம்). எல்லா ஐரோப்பியர்களும், காலனி வாதிகள் போன்று எண்ணுவதுமில்லை; நடப்பதுமில்லை. கருப்புத்தோலுடையவர்கள்மீது ஆதிக்கம் செலுத்த வெள்ளைத்தோலுடையவர்கள் பிறந்தவர்கள் என்ற மனோபாவம் காலனி வாதிகளுக்குத்தான் உண்டு. (கரகோஷம்)

எங்கள் தேசம் ஐரோப்பாவையும் சேர்ந்தது, ஆசியாவையும் சேர்ந்தது எனக் கூற விரும்புகிறேன். (கரகோஷம்)

மேலும், எங்கள் நாட்டின் பெரும்பகுதிப் பிரதேசம் ஆசியாக் கண்டத்திலேயேயுள்ளது. ஐரோப்பியப் பகுதியிலும், ஆசியப் பகுதியிலும் வாழும் சோவியத் மக்கள் உங்களை வாழ்த்துகிறார்கள்; நீங்கள் செழிப்புடன் வாழ அவர்கள் விரும்புகிறார்கள். (பெருத்த கரகோஷம்)

அப்படியாயின், நாம் இனி மிக நெருங்கி ஒத்துழைப்போமாக. ஒருவருக்கொருவர் தேவையான காரியங்களில் உதவிக் கொள்வோமாக. அப்படிச் செய்யும் காலத்தில், ஒருவர் மற்றொருவரின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடக்கூடாது எனும் கோட்பாட்டை உறுதியாகக் கடைபிடிப்போமாக. (கரகோஷம்) தாங்கள் விரும்பும் வழியிலே வாழ்வதற்கு எல்லா மக்களுக்கும் உரிமையுண்டு.

மற்ருெரு யுத்தம் ஏற்பட வாய்ப்பைத் தவிர்ப்பதற்காக, சமாதானத்தைப் பலப்படுத்தும் பணியில் ஒன்ருக உழைப்போமாக.

உங்களின் முயற்சிகளிலும், இன்பம் பெறுவதிலும் வெற்றிகள் பெற என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன். (நீண்ட ஆரவாரத்துடன் கூடிய கரகோஷம்)

## 1955 டிசம்பர் 5-ம் தேதி மாய்மோவில் நடந்த ராணுவ அணிவகுப்பில் என். ஏ. புல்கானின் ஆற்றிய உரை

திரு. பாதுகாப்பு மந்திரி அவர்களே, தளபதிகளே, அதிகாரிகளே, ராணுவ வீரர்களே,

உங்களின் ராணுவத்தோடு பரிச்சயம் செய்து கொள்வதற்கும், இந்த அணிவகுப்பைப் பார்வையிடுவதற்கும் வாய்ப்பளித்ததற்காக எங்களின் நன்றி. உங்களின் பிரதமர் யூ-நூ அவர்களின் அன்பான அழைப்பிற்கிணங்க நாங்கள் இப்பொழுது இங்கு வந்துள்ளோம். உங்கள் நாட்டில் ஒரு சில தினங்களே செலவழித்துள்ளோம். இந்த ஒரு சில தினங்களில் பர்மிய மக்களோடு கிடைத்த சந்திப்புகளிலிருந்து, நம் இரு மக்களுக்குமிடையே உறுதியான, உடைக்க முடியாத நட்புறவு உள்ளது எனும் உண்மை புதிய சக்தியுடன் வெளிப்பட்டுள்ளது.

பர்மா யூனியனுக்கும், சோவியத் யூனியனுக்கும் பயனை அளிக்கக் கூடிய இந்த நட்புறவு மேலும் வளர்ந்து பலப்படுத்தப்பட வேண்டுமென்று சோவியத் மக்கள் விரும்புகிருர்கள். இதைப்பற்றி உறுதி கூறுவதற்கே, அவர்களின் பிரதிநிதிகளாக எங்களை இங்கு அனுப்பியுள்ளனர். நமது நட்புறவைத் தொடர்ந்து பலப்படுத்துவோமாக! உலக சமாதானத்தைப் பாதுகாக்க ஒன்ருகப் போராடுவோமாக!

உங்கள் நடவடிக்கைகளில் வெற்றி மேல் வெற்றி பெற வேண்டுமென்று, சோவியத் மக்கள் சார்பாகவும், எங்களுடன் வந்துள்ள எல்லா நண்பர்களின் சார்பாகவும், என் சார்பாகவும் அன்பு கனிந்த வாழ்த்துக்களையும், நல் விருப்புகளையும் தெரிவித்துக் கொள்கிறேன். உங்கள் நாட்டின் மண்ணிலிருந்து அன்னியப் படையெடுப்பாளர்களை விரட்டுவதில் பெரும் பணியாற்றிய உங்கள் ராணுவத்திற்கு நாங்கள் வணக்கம் செலுத்துகிறேம். இப்போராட்டத்திலே, உங்கள் ராணுவம் பல இன்

னல்களுக்காளாகியது; இருப்பினும் தன் கடமையை வெற்றிகரமாக நிறைவேற்றியுள்ளது.

பர்மா சோவியத் யூனியன் மக்களின் நட்புறவு நீடூழி வாழ்க! உலக சமாதானம் வாழ்க!

## 1955 டிசம்பர் 5-ம் தேதி மாய்மோவில் நடந்த ராணுவ அணிவகுப்பில் என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

தோழர்களே, நண்பர்களே !

பர்மா யூனியன் ராணுவத்தினது பிரதிநிதிகளான உங்களைச் சந்திக்கும் வாய்ப்பை எங்களுக்களித்ததற்காக, பாதுகாப்பு அமைச்சரான தோழர் பா ஸ்வேக்கு என் இதயபூர்வமான நன்றியை நவில என்னை நீங்கள் அனுமதிக்க வேண்டுகிறேன்.

உங்கள் நாட்டில் நாங்கள் தங்கியிருந்த ஒருசில நாட்களில் பர்மிய மக்களையும், அரசாங்கத் தலைவர்களையும் பலமுறை சந்தித்தோம். இன்பகரமான சந்திப்புகள் இவை. பல முக்கியப் பிரச்னைகளிலே கருத்தொற்றுமை நமக்குள்ளே இருப்பதை இச்சந்திப்புகளிலே நாங்கள் காண முடிந்தது கண்டு மகிழ்கிறோம்.

பொருளாதார, கலாச்சார முன்னேற்றத்திற்கும், மக்களின் வாழ்வை உயர்த்துவதற்குமான சமாதானபூர்வமான நிர்மாண வேலைகளில் சோவியத் யூனியன் ஆழ்ந்துள்ளது. பர்மிய மக்களும், இக்கடமைகளை நிறைவேற்றும் பணியில் இன்று இறங்கியுள்ளனர்.

சகல மக்களின் நண்பர்களாக இருக்கவே நாங்கள் விரும்புகிறோம்; பர்மிய மக்களுடைய நண்பர்களாகவும் இருக்க விரும்புகிறோம். எங்களின் இந்த ஆசையை நீங்கள் புரிந்து கொண்டுள்ளது கண்டு மகிழ்கிறோம்.

பர்மா யூனியனின் தளபதிகள், அதிகாரிகள், ராணுவ வீரர்கள் ஆகிய நீங்கள் உங்கள் தொழிலின் நுணுக்கத்தைத் தொடர்ந்து அபிவிருத்தி செய்து கொண்டிருக்க வேண்டும் என்பதே எனது நேசபூர்வமான விருப்பம். உங்களைப் போன்று நாங்களும் ராணுவத்தை வைத்து வைத்திருக்கிறோம். தங்கள் சொந்த நாட்டை நேசிப்பது, அன்னிய ஆக்கிரமிப்பாளர்களின் படையெடுப்பு நேருமாயின் நாட்டைப் பாதுகாக்

கும் பணியில் சர்வபரித்தியாகத்திற்குத் தயாராயிருப்பது என்ற உணர்விலேயே நாங்கள் அவர்களுக்குப் பயிற்சி அளிக்கிறோம்.

உங்கள் ராணுவமும் இவ்விதமே இருக்கவேண்டுமென நான் விரும்புகிறேன். அப்பொழுதுதான் குருதி சிந்திப் பெற்ற சுதந்திரத்தைக் கண்ணியத்துடன் காப்பாற்ற அவர்கள் தயாராயிருக்க முடியும். இதற்கு நீங்கள் இராணுவக் கலையை நன்கறிந்து கொள்ள வேண்டும்; உங்களின் சொந்த இராணுவத் தளபதிகளைத் தயாரிக்க வேண்டும்; மக்களுக்கும் ராணுவத்திற்குமிடையேயுள்ள உறவுகளைப் பலப்படுத்தி, இதன்மூலம் மக்களின் ராணுவம் மக்களுக்கு விசுவாசமுடன் பணியாற்றச் செய்ய வேண்டும்.

ராணுவத்தை வைத்திருப்பது எந்த நாட்டிற்கும் செலவையே அதிகப்படுத்தும். இந்தச் செலவை நாம் ஏற்றுத்தாகை வேண்டும்; ஏனெனில் ஆயுதபரிகரணம் பற்றி இதர நாடுகளின் சம்மதத்தை இதுகாறும் பெறமுடியவில்லை. எனினும் நாங்கள் நம்பிக்கையை இழக்கவில்லை. இப்பிரச்னையைத் தவிர்க்க முடியும் என்றே நம்புகிறோம். சகல தேசங்களின் பரஸ்பரக் கருத்தொற்றுமையை பெறுவதற்கு சகல முயற்சிகளையும் நாங்கள் செய்வோம்; கெடுபிடி யுத்தத்திற்கு முடிவு கட்டுவதன் மூலம், ராணுவத் தளவாடங்களைக் குறைத்துக்கொள்வதோ, அல்லது ஆயுதபரிகரணத்தையே கொண்டுவருவதோ முடியும்; இம்முறையிலேயே அணுகுண்டுகளையும், ஜலவாயு குண்டுகளையும் தடைசெய்து, சக்திவாய்ந்த சர்வதேசக் கட்டுப்பாட்டையும் ஏற்படுத்த முடியும்.

பர்மீய-சோவியத் மக்களின் நேசவுறவு நீடூழி வாழ்க!

உலக சமாதானம் நீடூழி வாழ்க!

## 1955 டிசம்பர் 6-ம் தேதி ரங்கூனில் நடைபெற்ற கூட்டத்தில் என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

அன்புள்ள நண்பர்களே, மதிப்பிற்குரிய ரங்கூன் நகர வாசிகளே,

உங்களையும் உங்கள் மூலமாக பர்மிய மக்களையும் வாழ்த்துவதில் மகிழ்ச்சியடைகிறோம்; அவர்களுக்கு, சோவியத் மக்களின் நேசபூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்வதில் சந்தோஷமடைகிறோம்; அவர்களின் தேச சுதந்திரத்தையும், அரசுரிமையையும் பலப்படுத்துவதில் மேலும் அவர்கள் வெற்றியடைய வாழ்த்துகிறோம். (பலத்த கரகோஷம்)

உங்கள் நாட்டில் தங்கியிருந்த காலத்தில், பல நகரங்களுக்கும், சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்களுக்கும் நாங்கள் விஜயம் செய்தோம். எல்லா இடங்களிலும் எங்களுக்கு அன்பும் ஆசையும் நிறைந்த, வரவேற்பு அளிக்கப்பட்டது. சோவியத் மக்களிடத்து, பர்மிய மக்கள் வெளிப்படுத்திய இந்த நட்பிற்கு நாங்கள் நன்றி செலுத்துகிறோம். (பலத்த கரகோஷம்)

பர்மாவின் பிரதம மந்திரி தோழர் நூ, சோவியத் யூனியனுக்கு சமீபத்தில் ஒரு நல்லெண்ண விஜயம் செய்தார். அவருக்கு சோவியத் மக்கள் அன்பு கலந்த ஒரு வரவேற்பை அளித்தார்கள்; சோவியத் மக்களைப் பொறுத்த வரை, பர்மிய மக்களிடத்து ஆழ்ந்த நட்பும், அனுதாபமும் கொண்டுள்ளதை, தோழர் நூவும், அவரது தூதுகோஷ்டியும் நேரடியாகக் காண முடிந்தது. (கரகோஷம்)

தேசிய விடுதலைக்கும், சுதந்திரத்திற்கும் பர்மிய மக்கள் நடத்திய போராட்டத்திற்கு, காலனி ஒடுக்குமுறையை எதிர்த்து அவர்கள் நடத்திய போராட்டத்திற்கு, சோவியத் மக்கள் எப்பொழுதும் தங்களின் தார்மீக ஆதரவை அளித்துள்ளனர். இரண்டாவது உலக யுத்த காலத்தில், ஜப்பானிய ஏகாதிபத்தியவாதிகளை எதிர்த்து பர்மிய மக்கள் கடுமையான ஒரு போராட்டத்தை நடத்த வேண்டியிருந்தது ; இறுதியில் அந்த அந்நியத் தலையீட்டுக்காரர்கள் துரத்தியடிக்கப்பட்டார்கள். யுத்தம் முடிந்த பின்பு, உங்கள் நாட்டில் அன்னிய ஆதிக்கத்தை மீண்டும் நிலைநாட்ட காலனி வாதிகள் செய்த முயற்சிகளை பர்மிய மக்கள் உறுதியுடன் முறியடித்தார்கள். தங்கள் தாயகத்தின் தேச சுதந்திரத்திற்கான போராட்டத்தில் அவர்கள் வெற்றி பெற்றார்கள். (கரகோஷம்)

பர்மிய மக்கள் காலனி ஆட்சியைத் தூக்கி எறிந்தவுடனே, பர்மா யூனியனின் ராஜ்ய சுதந்திரத்தை அங்கீகரித்து, உங்கள் நாட்டுடன் நேச பூர்வமான உறவை முதன் முதலில் ஏற்படுத்திய நாடுகளில் ஒன்று சோவியத் யூனியன். (கரகோஷம்)

தோழர் நூ மாஸ்கோவிலிருந்த காலத்தில், நம்மிரு நாடுகளின் பரஸ்பர நலனுக்குகந்த விஷயங்கள் பற்றியும், சில சர்வதேசப் பிரச்னைகள் பற்றியும், அவரும், எங்கள் ராஜ்யத் தலைவர்களும் ஒரு விரிவான அளவில் அபிப்பிராயங்களைப் பரிமாறிக்கொண்டனர். இந்த அபிப்ராயப் பரிவர்த்தனையானது, நாங்கள் பர்மாவில் தங்கியிருந்த காலத்தில் மேலும் தொடர்ந்து நடத்தப்பட்டது. உலக சமாதானத்தைப் பாதுகாத்துக் கெட்டிப்படுத்துவது பற்றிய பிரச்னைகள் உட்பட, இன்றைய சர்வதேச உறவுகளில் மிக முக்கியமானவைகளாக உள்ள பல பிரச்னைகளில், இப்பேச்சு வார்த்தைகள் நடந்தகாலத்தில், ஒரு கருத்தொற்றுமை ஏற்பட்டுள்ளது. (கரகோஷம்)

சமாதானத்தை விரும்பும் தேசங்கள் தேர்ந்தெடுத்துள்ள, பேச்சு வார்த்தை நடத்தி முடிவு காணுவது என்னும் வழிதான், மக்களின் உண்மையான பாதுகாப்பை உறுதிப்படுத்துவதற்குள்ள சரியான வழி என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது.

சமீப ஆண்டுகளில் உலகத்தில் பல மகத்தான மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. சுதந்திரம், விடுதலைக்காக, ஒடுக்கப்பட்ட மக்கள் கொண்டுள்ள அடக்க முடியாத ஆசையானது, நம் காலத்தின் அறிகுறியாக ஆகியுள்ளது. தாங்கள் ஒடுக்கி வரும் நாடுகளில் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டிப் பாதுகாப்பதற்கு காலனி வாதிகள் பகீரதப் பிரயத்தனம் செய்தபோதிலும் கூட, காலனி அமைப்பானது நொறுங்கி வருகிறது. தென்கிழக்காசியாவிலும், பசிபிக் பிராந்தியத்திலும், தங்களுக்கிருந்த இடங்களை தாங்கள் இழந்ததை, காலனி வாதிகளால் ஏற்றுக்கொள்ளவே முடியவில்லை. ஒரு காலத்தில் காலனி சார்பு நாடுகளாக இருந்து, இன்று சுதந்திர வளர்ச்சிப் பாதையில் செல்லுகின்ற மக்களின் வாழ்வில் ஏற்பட்டுள்ள மாறுதல்களை அவர்கள் அங்கீகரிக்க விரும்பவில்லை. கொரியா, இந்தோ-சீனு நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் அவர்கள் தலையிட்டதைத் தொடர்ந்து, அங்கு கோர யுத்தங்கள் நடைபெற்றன; இவை உலகின் இப்பகுதியில், புதியதோர் உலக யுத்தம் ஏற்படுவதற்கான சூழ்நிலையை ஏற்படுத்தின.

சமாதானத்தை விரும்பும் நாடுகளின் கூட்டு முயற்சியாலும், அவற்றிற்காதரவாகத் திரண்டெழுந்த உலக மக்களின் அபிப்ராயத்தினுலும், கொரியாவிலும், இந்தோ-சீனுவிலும் யுத்தங்களை நிறுத்துவது சாத்தியமாயிற்று. (கரகோஷம்)

இந்த நாடுகளில் நடந்த யுத்தத்தை நிறுத்துவதற்கும், தகராறுக்கிடமாயுள்ள பிரச்னையைப் பேசித் தீர்த்துக்கொள்வதற்கும், பர்மா தளராது உழைத்தது கண்டு நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம். காலனி நாடுகளின் ஆக்கிரமிப்புக் கூட்டணியான சீயாட்டோவை (தென்கிழக்காசியப் பாதுகாப்பு ஸ்தாபனம்—மொ-ர்) இதர சமாதானத்தை விரும்பும் நாடுகளுடன் சேர்ந்து பர்மாவும் எதிர்த்தது; இப்பொழுதும் அதில் அங்கம் வகிப்பதை எதிர்க்கிறது (கரகோஷம்). பர்மாவின் சமாதான பூர்வமான அந்நிய நாட்டுக் கொள்கைக்கு, உலக முற்போக்கு சக்திகளின் ஆதரவுண்டு. (கரகோஷம்)

பசிபிக் பிராந்தியத்திலே சண்டைகளை நிறுத்தியது சமாதான சக்திகள்பெற்ற மிகப்பெரிய வெற்றியாகும். (கரகோஷம்) ஆனுல் இந்தப் பிரதேசத்தில், தீர்க்கப்படாத பிரச்னைகள் பல இருக்கின்றன. அவற்றுள் அவசரமானவைகளில் ஒன்று ஜப்பானியப் பிரச்னை. இன்று ஜப்பானிய மக்கள் படும் கஷ்டங்களைப் புரிந்துகொண்டு, சோவியத் யூனியன், ஜப்பானியப்

பிரச்னையைத் தீர்க்க முயற்சிக்கிறது. அதே சமயத்தில், இரண்டாவது உலக மகாயுத்த காலத்தில், ஜப்பானிய ராணுவ வெறிக்குப் பலியான, ஜப்பானின் அண்டைய நாடுகளின் பயத்தை சோவியத் யூனியனும் பகிர்ந்து கொள்கிறது. அதனுல்தான், ஜப்பானிய ராணுவ ஆக்கிரமிப்பு வெறி மீண்டும் தலையெடுக்க முடியாதபடி செய்யக்கூடிய, மற்றொரு உலக யுத்தத்தின் ஒரு தளமாக ஜப்பான் மாற்றப்படாமலிருக்கத் தகுந்த ஒரு தீர்வை, ஜப்பானிய பிரச்னைக்குக் காணவேண்டுமென்று, சமாதானத்தை விரும்பும் இதர நாடுகளுடன் சேர்ந்து சோவியத் யூனியனும் கருது கிறது.

ஐரோப்பாவிலும், உலகின் இதர பகுதிகளிலும் தீர்க்கப்படாத பிரச்னைகள் பல இன்றும் இருக்கின்றன. இப்பிரச்னைகள் சர்வதேச உறவுகளில் நெருக்கடியை உண்டாக்குகின்றன. சர்வதேச நெருக்கடி யைத் தளர்த்தும் நோக்கத்தோடு அந்நிய நாட்டுக் கொள்கையில், பல உலகறிந்த நடவடிக்கைகளை சோவியத் யூனியன் சமீப காலத்தில் எடுத்தது. (கரகோஷம்)

இவையெல்லாம சேர்ந்து, நான்கு வல்லரசுகளின் அரசாங்கத் தலைவர்கள் ஜெனீவா மகாநாட்டில் சந்திப்பதற்கு வேண்டிய ஒரு சூழ் நிலையை உருவாக்கியது; சர்வதேச நெருக்கடியைக் குறைக்க அம் மகாநாடு உதவியது.

அரசாங்கத் தலைவர்களின் ஜெனீவா மகாநாட்டிற்குப் பின்பும்கூட, இத்துறையில் எங்கள் முயற்சிகளை நாங்கள் கைவிட்டு விடவில்லை. இந்த ஆண்டு மே மாதத்திலேயே, ராணுவங்களையும், ராணுவ தள வாடங்களையும் குறைப்பதற்கான ஒரு திட்டத்தை சோவியத் யூனியன் ஐக்கிய நாடுகளுக்குச் சமர்ப்பித்தது. ஐரோப்பாவின் கூட்டுப் பாது காப்புக்கான ஒரு திட்டத்தை அது சமர்ப்பித்தது. ஜெனீவா மனோ பாவத்துக்கொப்ப, தனது ராணுவத்தில் 6,40,000 பேர்களை சோவியத் யூனியன் குறைத்தது; அன்னியப் பிரதேசத்தில் அதற்கிருந்த ஒரே ஒரு கடற்படைத் தளத்தையும் கலைத்தது; பின்லந்திலிருந்து போர்க்கலா உத் தளத்தில் தனக்கிருந்த உரிமையைக் கைவிட்டது. (கரகோஷம்)

உறுதியான, முரணற்ற, ஒரு சமாதானக் கொள்கையையே சோவியத் யூனியன் பின்பற்றி வருகிறது. ராணுவங்களைக் குறைக்க வேண்டும்; அணுகுண்டு, ஜலவாயுக் குண்டுகளைத் தடை செய்ய வேண்டும் என்பது தான் என்றும் எங்கள் கொள்கை. ஆனுல் மேற்கு நாடுகள் ராணுவங் களை அதிகரித்துக் கொண்டு போகும் காலத்தில், நாங்கள் மட்டும் தனி யாக ஆயுதபரிஹரணம் செய்து கொள்ள விரும்பவில்லை. ஆக்கிரமிப்பு சக்திகளுக்கெதிரே பலவீனமாகக் காட்சியளிப்பது முட்டாள்தனமாகும்; ஒரு புதிய யுத்தத்தைத் துவக்க ஏகாதிபத்திய வாதிகள் செய்யும் பயித்திக்

கார முயற்சிகளை கட்டுப்படுத்தத் தவறுவதும் முட்டாள்தனமாகும். அதனால் எங்கள் பாதுகாப்பு சக்தியின் அளவு பற்றிய பிரச்னைகளில் எங்களுக்குள்ள கவனத்தைத் தளர்த்த முடியாத நிலையிலிருக்கிறோம். (கரகோஷம்)

அணுகுண்டு, ஜலவாயுக் குண்டு சம்பந்தமான ஆயுதங்களைத் தடை செய்ய சோவியத் யூனியன் ஒரு திட்டத்தைச் சமர்ப்பித்துள்ளது. ஆனால் மேல்நாட்டு அரசுகளின் அரசாங்கங்கள் இந்த யோசனையை நிராகரித்துள்ளது; அணு ஆயுதங்களைத் தொடர்ந்து சேகரித்து வைத்துக் கொண்டுதானிருப்போம் என அவர்கள் கூறுகிறார்கள். தங்களின் விஞ்ஞான ஆராய்ச்சியைப் பின்பற்றி, எங்கள் விஞ்ஞானிகளும், பொறியியல் நிபுணர்களும் சமீபத்தில் ஒரு ஜலவாயுக் குண்டை வெடிக்கச் செய்தார்கள்; அதற்கு இதுகாறும் காணாத, பிரம்மாண்ட சக்தி இருப்பதைக் கண்டார்கள். மக்களுக்கு ஆபத்து ஏற்படாமலிருப்பதற்காக, அந்தக் குண்டானது மிக உயர்ந்த ஓர் மட்டத்திலிருந்தே வெடிக்கப்பட்டது என்பது குறிப்பிட வேண்டிய விஷயம். ஆனால் இப்பொழுது மீண்டும் அணு சக்தி ஆயுதங்கள் மீது கடுமையான தடை விதிக்க வேண்டுமென்று கூறுகிறோம்.

யாரையும் தாக்கும் நோக்கம் எங்களுக்கில்லை. யாரையும் பயமுறுத்தும் நோக்கமும் எங்களுக்குக் கிடையாது. ஆனால் யுத்தம் என்றால் என்ன என்பதை உணர்ந்து, யுத்தத்தைத் தடுப்பதற்காக, பரிபூரண ராணுவக் குறைப்பிற்காக, அணுசக்தி, ஜலவாயு சக்தி ஆயுதங்களுக்குக் கடுமையான தடைவிதிப்பதற்காக ஒவ்வொருவரும் தீவிரமாகப் போராட வேண்டுமென நாங்கள் விரும்புகிறோம். (நீண்ட கரகோஷம்)

சகல தேசங்களோடும் ஒத்துழைக்கும் கொள்கையையே, சமாதானக் கொள்கையையே சோவியத் யூனியன் உறுதியாகவும், முரணில்லாமலும் கடைப்பிடித்து வந்துள்ளது; இனிமேலும் தொடர்ந்து கடைப்பிடிக்கும். 1917, அக்டோபரில் சோவியத் ஆட்சி வெளியிட்ட முதல் சட்டத்தில் பிரகடனப்படுத்தப்பட்ட இந்தக் கொள்கையானது, சமாதான பூர்வமான சிருஷ்டித் தொழிலில் ஈடுபட்டுள்ள, பல்வேறு தேசிய இனங்களையுடைய எங்கள் நாட்டு மக்களின் ஜீவாதார நலன்களுக்கு உகந்ததாகும். சோவியத் மக்களின் பொருளாதார, கலாச்சாரத் தேவைகளை அதிகப்பட்சமாகப் பூர்த்தி செய்வதற்காகவே எங்கள் நாட்டில் எதுவும் செய்யப்படுகிறது. இந்நோக்கத்துடன் தான் எங்களின் ஐந்தாண்டு திட்டங்கள் தீட்டப்படுகின்றன; தொழிற்சாலைகளும், உருக்காலைகளும், பெரிய மின்சார நிலையங்களும், புகை வண்டித் தொடர்களும் கட்டப்படுகின்றன. மக்களின் நலன்களுக்காக, பண்படுத்தாமலிருந்த நிலங்களெல்லாம் பண்படுத்தப்படுகின்றன; கோதுமை, சோளம், காய்கறிகள். இயந்திரங்களுக்குத் தேவையான மூலப் பொருட்கள் ஆகியவை பயிரிடப்படும் பூமியின் விஸ்

தீரணம் அதிகரிக்கப்பட்டுள்ளது. எங்களின் விவசாயப் பண்ணைகள், மிருக வளர்ப்புப் பண்ணைகள் ஆகியவற்றின் பலன்களை உயர்த்துவதற்கு மிகப் பெரிய முயற்சி செய்யப்படுகின்றன. (கரகோஷம்)

தன்னுடைய முப்பத்துஎட்டு ஆண்டுகால வாழ்விலேயே, சோவியத் யூனியன் மிகப்பெரிய முன்னேற்றம் அடைந்துள்ளது. சோவியத் மக்களின் உழைப்பின் காரணமாக, முன்னுளில் மிகப் பின்தங்கிய விவசாய நாடாக இருந்த எங்கள் தேசம், இன்று மிகவும் நவீனமான தொழில்களையும், இயந்திர மயமாக்கப்பட்ட விவசாயத்தையும் உடைய மிகப்பலம் பொருந்திய சோஷலிஸ்ட் ஆட்சியாக மாறியுள்ளது.

சோவியத் யூனியனில் தேசிய ஒடுக்குமுறை நிரந்தரமாக ஒழிக்கப் பட்டுள்ளது. (பலத்த கரகோஷம்) எங்கள் நாட்டிலேயே முன்னுளில் பின்தங்கிய நிலையிலிருந்த ஒடுக்கப்பட்ட மக்கள், சோவியத் ஆட்சி காலத்தில், தங்களுடைய பொருளாதார, கலாச்சார வளர்ச்சியில் மிகப்பெரிய முன்னேற்றமடைந்துள்ளனர்; இன்று அவர்கள், எங்கள் நாட்டு மக்களின் குடும்பத்தில் சம உரிமை உள்ளவர்களாக விளங்கு கின்றனர். (பலத்த கரகோஷம்) எங்கள் பெண்கள் உண்மையிலேயே விடுதலை பெற்றுள்ளனர்; புதிய வாழ்வில் ஒரு சமமான, தீவிரப் பங்கை அவர்கள் வகிக்கிறார்கள். (பலத்த கரகோஷம்)

சோவியத் ஆட்சி காலத்தில், சோவியத் யூனியனில் ஒரு கலாச் சாரப் புரட்சி ஏற்பட்டுள்ளது. நூற்றுக்கு நூறு எழுதப்படிக்கத் தெரிந்த வர்களைக்கொண்ட நாடாக அது ஆகியுள்ளது. பள்ளிகள், இதர நிலை யங்கள், பொழுதுபோக்கு இடங்கள், நூலகங்கள் ஆகியவை சோவியத் நாடு முழுவதும் பரந்து காணக்கிடக்கின்றன. விஞ்ஞான சாதனைகள், கலாச்சாரப் பொக்கிஷங்கள் அனைத்தையும், நகர, கிராமப்புறங்களிலுள்ள லட்சக்கணக்கான உழைப்பாளி மக்கள் பெறுவது சாத்தியமாகியுள்ளது. வேலையில்லாத் திண்டாட்டம் சோவியத் யூனியனில் நீண்ட நாளைக்கு முன்பே ஒழிக்கப்பட்டு விட்டது. (பலத்த கரகோஷம்)

இரண்டாவது உலகயுத்த காலத்தில், நாஜி ஆக்கிரமிப்பாளர்களால் எங்கள் நாட்டின் பெரும்பகுதிப் பிரதேசம் நாசமாக்கப்பட்டது எல் லோருக்கும் தெரியும். நாசமாக்கப்பட்ட நகரங்களையும், கிராமங்களையும், தொழிற்சாலைகளையும், உருக்காலைகளையும், புகைவண்டித் தொடர்களையும் பெரும் ரஸ்தாக்களையும் செப்பனிட்டுச் சீர்படுத்த எங்கள் நாட்டு மக்கள் கடுமையாக உழைக்க வேண்டியிருந்தது.

நிவர்த்திக்கப்பட வேண்டிய இன்னல்கள் பல இருந்த போதிலும் கூட, தங்கள் தாயகத்தின் செழிப்பிற்காகவும், முன்னேற்றத்திற்காகவும் நடத்திய போராட்டத்தில் சோவியத் மக்கள் வெற்றி பெற்றார்கள். (கரகோஷம்)

பொருளாதாரத்தின் சகல துறைகளையும் கட்டுவதில் அதிகப் படியான அனுபவத்தை எங்கள் நாடு இப்பொழுது பெற்றுள்ளதாலும், இந்த அனுபவத்தையும், தொழில் நுணுக்க அறிவையும் இதர சமாதானத்தை விரும்பும் மக்களுடன் பகிர்ந்து கொள்ள முடியுமாதலா லும், ஐக்கிய நாடுகளின் அமைப்பிற்கு உட்பட்டு இதர நாடுகளுடன் சோவியத் யூனியன் ஒத்துழைக்கத் தயாராயிருக்கிறது. காலனி ஆட்சி யால் பொருளாதார வளர்ச்சி தடுக்கப்பட்டுள்ள, வளர்ச்சி குன்றிய தேசங்களின் மக்களுக்கு பொருளாதார, தொழில் நுணுக்க உதவியைச் செய்ய முன் வருகிறது. (கரகோஷம்)

காலனி ஒடுக்கு முறையிலிருந்து தங்களை விடுவித்துக் கொண்ட மக்கள் அனைவரும், பர்மிய மக்கள் உள்பட தங்கள் தேசத்தின் பொரு ளாதார, கலாச்சார வளர்ச்சிக்கு முயற்சி செய்யவேண்டுமென்பதை நாங் கள் அறிவோம்; மக்களின் வாழ்க்கைத் தரத்தை அபிவிருத்தி செய் வதற்கு உதவக் கூடிய சமூக, பொருளாதார நடவடிக்கைகளையும் அவர் கள் எடுக்க வேண்டுமென்பதையும் நாங்கள் அறிவோம். எனவே தான் நம் மக்களுக்கிடையே பொருளாதார, கலாச்சார உறவுகள் விஸ்தரிக்கப் படுவதை நாங்கள் வரவேற்கிறோம்.

சமாதானத்திற்காக ஆழ்ந்த உண்மையான முயற்சிகளை, பர்மிய மக்கள் செய்வதையும் நாங்கள் புரிந்து கொள்ள முடியும்; ஏனெனில், நிலையான நிரந்தர சமாதானம் இல்லாமல் பொருளாதார, கலாச்சார முன்னேற்றத்தை ஏற்படுத்துவது சாத்தியமல்ல. (கரகோஷம்)

பசிபிக் பிராந்தியத்திலும், தென்கிழக்கு ஆசியாவிலும் இப்பொழுது ஏற்பட்டிருக்கக் கூடிய நிலைமையானது—அதாவது சோவியத் யூனியன், சீன மக்கள் குடியரசு போன்ற நேச பூர்வமான பசிபிக் அரசாங்கங்கள் இருப்பதும், வியத்நாம் ஜன நாயகக் குடியரசு உருவாகியுள்ளதும், சமா தான இந்தியா அண்மையிலிருப்பதும்—பர்மிய மக்கள் தங்கள் நாட்டின் அரசியல் சுதந்திரத்தைப் பலப்படுத்துவதற்கு வேண்டிய சாதகமான நிலைமைகளை உருவாக்கியுள்ளது. (கரகோஷம்)

சியாங்கை ஷேக்கைச் சேர்ந்த ஒரு குண்டர் கூட்டம் உங்கள் பிர தேசத்திலிருந்துகொண்டு சகல விதமான கோரச் செயல்களில் ஈடுபட்டு வருகின்றது. பர்மாவின் சில எதிரிகளுடைய உதவி இல்லாமல் அவர் களால் இவ்வளவு நாட்கள் தாக்குப்பிடித்திருக்க முடியாது என்றே நான் நினைக்கிறேன். காலனி வாதிகள் என்ன செய்தாலும் பரவாயில்லை. எந்த நாட்டிலிருந்து மக்கள் அவர்களை விரட்டி அடித்து, தேசிய சுதந் திரப் பதாகையின் கீழ் தங்கள் நாட்டைக் கொண்டு வந்துள்ளார்களோ, அங்கு காலனி வாதிகளுக்கு இடமிருக்க முடியாது. (கரகோஷம்)

பர்மா ஒரு விவசாய நாடு என்பதை நாங்கள் அறிவோம். இன் றுள்ள நிலைமையில் இதர தேசங்களுடன் பர்மாவின் வர்த்தக உறவு

களானது, பிரதானமாக விவசாய உற்பத்திப் பொருட்களை விற்கும் அடிப்படையிலேயே வளர முடியும். இந்தப் பண்டங்கள் சில நாடு களிலே அதிகப்படியாக குவிந்து கிடக்கின்ற காரணத்தால், அதைப் பயன்படுத்திக் கொண்டு பர்மாவின் மீது தங்களின் நிபந்தனைகளை விதிக்க முயலுகிறார்கள்.

அத்தகைய ஒரு கொள்கையை சோவியத் யூனியன் என்றுமே கண் டித்து வந்துள்ளது. பரஸ்பர அனுகூலமான ஒரு வர்த்தகத்தையே பர்மாவுடன் நாங்கள் வளர்க்க விரும்புகிறோம். நாங்கள் பெரும் அள விற்கு அரிசியை இறக்குமதி செய்யாத ஒரு நாடாக இருந்த போதிலும் கூட, உங்களிடமிருந்து அதிகப்படியான அரிசியையும், பர்மா யூனியன் ஏற்றுமதி செய்யும் இதர பண்டங்களையும் வாங்குவதற்கு எங்களால் இயன்ற அத்தனையும் செய்வோம். நாங்கள் வாங்கிய பர்மியப் பண்டங் களுக்கு ஆகும் தொகைக்கு சமமாக எங்கள் பொருட்களை நீங்கள் வாங்க முடியும். (கரகோஷம்)

இது இரு நாடுகளுக்கும் பரஸ்பரம் அனுகூலமான ஒரு வர்த்தக மாகும். எந்தவித அரசியல் கட்டுப்பாடுகளில்லாத வர்த்தகமாகும். நம் உறவுகளை வளர்த்து நமது நாடுகளைப் பலப்படுத்துவதற்கு அது உதவி செய்யும். (கரகோஷம்)

பர்மீய மக்கள் தங்களின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடு வதற்கு யாரையும் அனுமதிக்கமாட்டார்கள் என நாங்கள் உறுதியாக நம்புகிறோம்; தங்கள் நாட்டின் சுதந்திர வளர்ச்சியை அதிகப்படுத்து வதற்கு அவர்களால் இயன்ற அத்தனையும் செய்வார்களென நம்பு கிறோம.

அருமை நண்பர்களே,

விருந்தோம்பலில் சிறந்த உங்கள் நாட்டை விட்டு நாளை புறப்படு கிறோம். உங்களின் அண்டைய நாடான மாபெரும் இந்தியக் குடியர சிற்குப் போய்ச் சேருவோம்.

இந்தியாவிலும், பர்மாவிலும் நாங்கள் தங்கியிருந்த குறுகிய காலத் தில் உங்கள் நாடுகளின் ஜீவாதார நலன்களைத் தெளிவாகப் புரிந்து கொள்ள முடிந்தது. எனினும், எங்களது 'இந்திய, பர்மா விஜயம் சில கனவான்களுக்குப் பெரிதும் பிடிக்கவில்லை; எங்களது பேச்சுக் களும், பட்டவர்த்தனமான அறிக்கைகளும் கூட அவர்களுக்கு பிடிக்க வில்லை. ஆனல், இப்பொழுது நாங்கள் செய்வதும்போல, எப் பொழுதுமே நாங்கள் உண்மையைத்தான் பேசிவருகிறோம்; உண்மை எல்லோருக்கும் எப்பொழுதும் பிடிப்பதில்லை; சாதாரண பழமொழி கூறியது போன்று உண்மை உறுத்துகிறது. (கரகோஷம்)

அதனுல்தான், இந்தியாவில் நான் கூறியவைகளும், தோழர் புல்கானின் சொன்னவைகளும் சில பிரிட்டிஷ் பத்திரிகைகளுக்கு எரிச்சலே உண்டாக்குகின்றன. குறிப்பாக என்னுடைய சொற்பொழிவு ஒன்றில், சில பகுதிகள், சோவியத் யூனியனுக்கு எதிரான யுத்தத்திற்கு ஹிட்லரின் கைகளே அவிழ்த்துவிட்டன என்று நான் கூறியதை அவர்கள் விரும்பவில்லே.

ஆனல் இது ஒரு சரித்திரப்பூர்வமான உண்மையாகும்.

பிரிட்டன், பிரான்சு, சோவியத் யூனியன் உள்ளிட்ட பல நாடுகளின் ஒன்றுபட்ட சக்திகள், ஹிட்லரை எதிர்த்திருந்தால், ஹிட்லர் உண்மையிலேயே ஒரு யுத்தத்தைத் தொடுத்திருக்க முடியுமா? பிரிட்டன், பிரான்சு ஆகிய நாடுகளின் அன்றைய ஆளும் வட்டாரங்கள் ஹிட்லரைக் கட்டுப்படுத்தி ஒரு யுத்தம் ஏற்படுவதைத் தடுக்க விரும்பியிருந்தால், ஆஸ்திரியாவை ஹிட்லர் கைப்பற்றியதை எதிர்த்திருப்பார்கள். வெட்கங்கெட்ட மியூனிச் ஒப்பந்தங்களே நிறைவேற்றுவதற்கு ஒப்புக்கொண்டிருக்க மாட்டார்கள்.

செக்கோஸ்லோவேகியாவுடன் பிரான்ஸ் பரஸ்பர உதவி ஒப்பந்தம் ஒன்றைச் செய்திருந்தது எல்லோருக்கும் தெரியும். எனினும், ஹிட்லர் செக்கோஸ்லோவேகியாவை ஆக்கிரமிக்க முனைந்த காலத்தில், ஹிட்லரின் ஆக்கிரமிப்பைத் தடுத்துநிறுத்துவதற்கு உடனடியாக உதவி செய்ய சோவியத் யூனியன் தயராயிருந்ததை நன்கு அறிந்திருந்த போதிலும்கூட, செக்கோஸ்லோவேகியாவின் உதவிக்கு வர பிரெஞ்சு அரசாங்கம் மறுத்தது. செக்கோஸ்லோவேகியாவை ஹிட்லர் ஆக்கிரமிப்பதை பிரெஞ்சுத் துருப்புகளுடன் சேர்ந்து சோவியத் துருப்புகள் முறியடிக்க வேண்டுமென்பதற்காக, செயலுக்குத் தயாராக சோவியத் துருப்புகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது இரகசியமான விஷயமில்லே. எனினும் இதைச் செய்ய பிரெஞ்சு அரசாங்கம் மறுத்தது.

ஹிட்லருக்கு சலுகைக்குமேல் சலுகை அளித்து, கிழக்கு நோக்கி, எங்கள் தேசத்தை நோக்கிச் செல்லுமாறு, மேற்கு வல்லரசுகள் ஹிட்லரைத் தூண்டியதை, யுத்த முற்கால ஆண்டுகளின் வரலாறு தெளிவாகக் காண்பிக்கிறது. ஆனல், சோவியத் யூனியனுக்கெதிராகத் திருப்பிவிடுவதற்காக பிரிட்டன், பிரான்சு, அமெரிக்கா போன்ற நாடுகளால் காவல் நாய்போல் வளர்க்கப்பட்ட அந்த நாயானது கட்டவிழ்த்துக்கொண்டு தன்னேப் போஷித்தவர்களேயே தாக்கும் நிலேமை ஏற்பட்டது.

இச்சந்தர்ப்பத்தில், ஒரு கேள்வி எழுகிறது. இன்றைய மேற்கு ஜெர்மனியின்பால் எடுக்கப்பட்டிருக்கக்கூடிய நடவடிக்கைகளேப் பரிசீலனே செய்யும்பொழுது யுத்தத்திற்கு முந்திய காலத்தோடு அவை ஏறத்தாழ ஒத்திருக்கவில்லேயா? மேற்கு ஜெர்மனியை ஆக்கிரமிப்புப்

பாதையிலே புதிய திருவிளையாடல்களைச்செய்வதற்குத் திருப்பிவிட அதே தேசங்களால் இப்பொழுது, அதே முறைகள் கையாளப்படவில்லையா ?

மேற்கு ஜெர்மனியை நேட்டோவிற்குள் (வட அட்லாண்டிக் கூட்டணிக்குள்—மொ-ர்.) சேர்த்துக்கொண்டுள்ளனர். மேற்கு ஜெர்மனியை ஆயுதமயமாக்குவதற்கு, தேவையான தொகையை அவர்கள் ஒதுக்குகிறார்கள். மேற்கு ஜெர்மனிக்கு ராணுவத் தளவாடங்களை அளிக்கின்றனர். சோவியத் யூனினுக்கு எதிராக, மேற்கு ஜெர்மன் ராணுவத்தை அவர்கள் தயாரிக்கிறார்கள் என்பதை மறைக்கவேண்டுவது அவசியம் என்று சில மேல்நாட்டு ராஜதந்திரிகள் கருதுகிறார்கள்.

மதிப்பிற்குரிய பிரிட்டிஷ் பத்திரிகை ஆசிரியர்களே, சென்ற காலத்தில் நடந்தவற்றுள் ஒன்று இரண்டை ஞாபகப்படுத்தினால் நீங்கள் ஏன் கோபம் கொள்ளவேண்டும்? (ஹாலில் நகைப்பு).

நான் கீழ்க்கண்டவற்றையும் கூற ஆசைப்படுகிறேன்: பிரிட்டனுக்கு எதிராக ரஷ்யா எப்பொழுதுமே யுத்தம் தொடுத்ததில்லை; ஆனால், பிரிட்டனது சென்ற காலத்திலும், சோவியத் ஆட்சி ஏற்பட்ட எங்கள் காலத்திலும் எங்கள் நாட்டைத் தாக்கியிருக்கிறது. ஸெவஸ்டபோல் யுத்தம் போன்ற ஒரு உதாரணத்தைக் குறிப்பிட்டுக் காட்டுவது நல்லது. அன்று, கிரிமியாவிற்குப் பிரிட்டிஷார் வரவேண்டுமென ரஷ்யர்கள் அழைத்து, அதன் மூலமாக ரஷ்ய மண்ணிலேயே ரஷ்ய மக்களைக் கொன்று குவிக்குமாறு கூறவில்லை. உள்நாட்டு யுத்த காலத்தில் எங்கள் நாட்டிற்கெதிராக பிரிட்டன் தலையிட்டதையும் நாம் ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். சோவியத் குடியரசு தன்னை உறுதியாக நிலைநாட்டிக்கொள்ளாத ஒரு காலத்தில், ஆர்க்கேஞ்சல்ஸை பிரிட்டிஷ் துருப்புகள் ஆக்கிரமித்தன. எங்களிடம் அவர்கள் நண்பர்களாக வரவில்லை; ஆனால் நாங்கள் அவர்களைத் துரத்தியடிக்கும்வரை சோவியத் மண்ணிலேயே, எங்கள் சோவியத் மக்களின் இரத்தத்தைச் சிந்துவதற்கு எதிரிகளாக வந்தார்கள். (பலத்த கரகோஷம்).

இவைகளெல்லாம்கூட தவிர்க்கமுடியாத சரித்திரபூர்வமான உண்மைகளாகும்.

இறுதியாக, இரண்டாவது உலக யுத்தம் முடிந்த சந்தர்ப்பத்தில் ஐரோப்பாவிலிருந்த தனது பிரதம தளபதிக்கு திரு. சர்ச்சில் கொடுத்த கேவலமான கட்டளையை நாம் ஞாபகப்படுத்திக்கொள்ளலாம். சரணடைந்துகொண்டிருந்த ஹிட்லரின் துருப்புகள் விட்டெறிந்த சகல ஆயுதங்களையும் ஒன்றுதிரட்டி வைத்து, அத்துருப்புகளையும் தயாராக வைத்திருக்குமாறு சர்ச்சில் உத்திரவு இட்டார்; ஏனெனில், ஒருவேளை சோவியனியனுக்கு எதிரான நடவடிக்கைகளில் அவை பயன்படலாம்; அச்சந்தர்ப்பத்தில் சோவியத் யூனியன், பிரிட்டனின் நேச சக்தியென்பதையும் ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும்.

நாங்கள் எப்பொழுதும் உண்மையையே பேசும் பழக்கமுள்ளவர்கள்; அது சற்றுக் கசப்பானதாக இருந்தபோதிலும் உண்மையை நேர்மையாக எதிர்நோக்கும் தன்மையுடையவர்கள். (கரகோஷம்)

மேற்கு அரசுகளுடன் எந்தவிதமான தகராறுகளையும் நாங்கள் விரும்பவில்லை என்பதை எங்களின் நடவடிக்கைகள் எடுத்துக்காட்டுகின்றன. பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா போன்ற எல்லா நாடுகளுடனும் உண்மையான நட்புறவையே நாங்கள் விரும்புகின்றோம். உலகிலுள்ள எல்லா மக்களுடனும் நண்பர்களாக இருக்க விரும்புகின்றோம். நாங்கள் இதை விரும்புவது மாத்திரமல்லாமல், உலக முழுவதும் சமாதானத்திற்காகவும், எல்லா தேசங்களுக்கிடையே சரியான ஒத்துழைப்பிற்காகவும் தீவிரமாகப் போராடியும் வருகிறோம். (பலத்த கரகோஷம்)

ஆனால் எங்களுக்கும், இந்தியா, பர்மா போன்ற நாடுகளின் மக்களுக்கும் இடையே மிகுந்த நேசபூர்வமான உறவுகள் வளரும்பொழுது, சிலருக்கு அது எரிச்சலை உண்டாக்குகிறது என்பது வெளிப்படை; மிகவும் உறுதியான, அன்பு நிறைந்த, சுயநலமற்ற சகோதரத் தன்மையுள்ள நேசஉறவுச் சங்கிலிகளால் நாங்கள் இப்பொழுது பிணைக்கப்பட்டிருக்கின்ற எங்களின் மகத்தான நண்பனும் சகோதரனுமாக விளங்குகின்ற சீன மக்கள், குடியரசிற்கும் எங்களுக்கும் உள்ள உறவுபற்றி சொல்ல வேண்டியதேயில்லை.

ஆம், காலனி ஆதிக்கத்தைத் தூக்கி எறிந்து தாங்கள் விரும்பும் பாதையிலே முன்னேறிச் செல்லுகின்ற நாடுகளை நாங்கள் ஆதரிப்பது சிலருக்குப் பிடிக்கவில்லை. தேசீய விடுதலைக்காக இந்நாடுகளின் மக்கள் செய்துவந்த முயற்சியை நாங்கள் எப்பொழுதுமே ஆதரித்து வந்துள்ளோம். தேசீய சுதந்திரம் பெற்றுள்ளது மட்டுமல்லாமல் பிரிட்டன், பிரான்சு, அமெரிக்கா போன்ற நாடுகளில் உள்ள சில கனவான்களுக்கு அது பிடிக்காமல் இருந்தபோதிலும்கூட, ஒரு புதிய பாதையிலே அம் மக்கள் முன்னேறிச் செல்வது கண்டு நாங்கள் உண்மையான மகிழ்ச்சியடைகிறோம்.

சில பத்திரிகைகள் சென்ற காலம் பற்றிய உண்மைகளை விரும்பவில்லை; ஆனால் இன்றைய உண்மைகளையும்கூட அவர்கள் விரும்பவில்லையென்பதை நான் உறுதியாகக் கூறுவேன். எனினும் உண்மை உண்மையாகவே இருக்கிறது; அதைப்பற்றி நான் பேசியாக வேண்டும். உதாரணமாகக் கீழ்க்கண்ட கேள்வி எழுகிறது. மக்கள் சீனக் குடியரசினது சட்டபூர்வமான பிரதேசத்தின் ஒரு பகுதியான தைவானையும், அதற்கு அருகில் இருக்கக்கூடிய தீவுகளையும் அமெரிக்கத் துருப்புகள் ஆக்கிரமித்துக் கொண்டிருப்பதற்குக் காரணம் என்ன? சீன மக்கள் தங்கள் நாட்டின் விடுதலையைப் பூரணமாக்குவதினின்றும் ஏன் தடுக்கப்படவேண்டும்? எந்த ஒரு முதலாளித்துவப் பத்திரிகை எழுத்தாளனும் இத்தகைய

நடவடிக்கைகளுக்கு எதிராகத் தன் குரலை எழுப்பத் துணிவதில்லை. இந்தியாவின் பிரிக்க முடியாத பகுதியாக விளங்கிவரும் கோவாவை சட்ட விரோதமாக வைத்துக்கொண்டிருக்கக்கூடிய போர்த்துக்கீசிய காலனி வாதிகளின் அக்கிரமங்களுக்கு எதிராக எந்தப் பிரிட்டிஷ் பத்திரிகையும் கடுமையான கண்டனக் குரலை எழுப்பவில்லை.

தங்கள் ஆதிக்க சகாப்தம் முடிந்தபோதிலும்கூட, காலனிவாதிகள் தங்கள் திட்டங்களையும், செயல்களையும் கைவிட்டு விடவில்லையென்பது தெளிவு அதைப்பற்றி நாங்கள் பட்டவர்த்தனமாகவும், பகிரங்கமாக வும் பேசுகிறோம்.

மற்றும் ஒரு உண்மையை எடுத்துக்கொள்ளலாம். ஆறு ஆண்டு களுக்கு மேலாக மாபெரும் மக்கள் சீனக் குடியரசானது செழித்து வளர்ந்து வருகிறது. எனினும் பகுத்தறிவுக்கு விரோதமான முறையிலே ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தில் அதற்கு உரிய சட்டபூர்வமான உரிமை களை அளிப்பதை சில ராஜ்யங்கள் எதிர்த்து வருகின்றன. இந்த ஸ்தா பனத்தில் சீன மக்களை ஒரு சியாங் கை ஷேக்கின் ஆள் பிரதிநிதித்து வப்படுத்த முயற்சிக்கிறார். இது ஒரு மாபெரும் அநீதியாகும். எனி னும், பிரிட்டிஷ் பத்திரிகைகள் இந்த அசட்டுத்தனத்திற்கெதிராக வீரா வேசத்துடன் போராடவில்லை; மாறாக, இப்பிரச்னைபற்றிய விவாதத் தோடு நிறுத்திக்கொள்ளுகின்றனர்.

யாருக்கோ பிரசங்கம் செய்ய நான் முனைந்துள்ளேன் என்று யாரும் நினைக்க வேண்டாம். இல்லை, நான் உண்மைகளையே எடுத்துக் கூறுகிறேன். உண்மைகள் கடினமான விஷயங்களாகும்.

இரண்டாவது உலக யுத்தம் பற்றிய விஷயங்களுக்கு மீண்டும் செல்ல விரும்புகிறேன். நாஜி ஜெர்மனியானது துராசையுடன் சோவி யத் யூனியன்மீது தாக்குதல் தொடுத்தவுடனே, ஜெர்மனிக்கு எதிரான போராட்டத்தில், பிரான்சு, பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகளின் நேச சக்தியாக ஆனது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஒரு நேச சக்தியென்ற முறையிலே, தான் ஏற்றுக்கொண்ட பொறுப்புக்களை நேர் மையாகவும், முறை தவறாமலும் எங்கள் நாடு நிறைவேற்றி வந்தது.

எங்களின் நண்பர்கள் எல்லோரையும்விட சோவியத் மக்கள் அதிகப் படியான ரத்தத்தைச் சிந்தினர்; ஆனால் ஹிட்லரின் ஜெர்மனியையும் அவன் கைப்பாவைகளையும் எதிர்த்துப் போராடிய பிரிட்டிஷ், பிரெஞ்சு, அமெரிக்கத் துருப்புகளை நாங்கள் கௌரவித்து, தகுந்த முறையிலே புகழ் கின்றோம். மிகக் கொடூரமான போராட்டம் அது. மனித சமுதாயத்தின் பிரகாசம் பொருந்திய எதிர் காலத்திற்காகவும், சுதந்திரத்திற்காகவும், விடுதலைக்காகவும், ரத்த வெறிபிடித்த ஹிட்லரிசத்தை எதிர்த்தும் போரா டிய எங்கள் நேச ராணுவமானது மகத்தான வெற்றியை பெற்றது.

ஒரு பொதுவான நோக்கத்திற்காக நடைபெற்ற கூட்டுப் போராட்டத்தில் இந்த அனுபவமானது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது. நல்ல நாட்களில் மட்டுமின்றி, மிகுந்த பரிசோதனைக்குரிய, கடுமையான காலத்திலும்கூட, பிரிட்டிஷ், பிரெஞ்சு, அமெரிக்க, சோவியத் மக்கள் மிகச் சிறந்த நண்பர்களாக வாழமுடியும் என்பதை இரண்டாவது உலக யுத்தம் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளது. யுத்த காலத்தில் நாங்கள் நேச நாட்டினர்களாக இருக்க முடியுமானால், சமாதானத்தைப் பாதுகாத்துப் பலப்படுத்துவதற்கான போராட்டத்தில் நல்ல நண்பர்களாகத் திகழ்வதை எதுதான் தடுக்கமுடியும்?

நிலையான சமாதானத்திற்கும், மக்களிடையே நட்புறவுக்கும் தான் சோவியத் மக்கள் நிற்கிறார்கள் என்பதை மீண்டும் மீண்டும் எடுத்துக் கூறுகிறோம். இதைப்பற்றி வாயளவிலே பேசிக்கொண்டுமட்டும் இருக்கவில்லை; அத்தகைய நட்புறவை வளர்த்துக் கெட்டிப்படுத்த சகல முயற்சிகளும் நாங்கள் செய்கிறோம்.

என் கூற்றுக்கள்பற்றியும், நிக்கோலாய் அலெக்ஸாண்ட்ரோவிச் புல்கானினுடைய கூற்றுக்கள்பற்றியும், பிரிட்டிஷ் பத்திரிக்கைகள் செய்துள்ள விமர்சனம்பற்றி நான் கூற விரும்பியது இவ்வளவுதான்.

என் பேச்சை முடிக்குமுன், என் சொந்த சார்பிலும், என் நண்பர் புல்கானின் சார்பிலும், எங்களுடைய பர்மீய சுற்றுப்பிரயாண காலத்தில் எங்களுடன் வந்துள்ள எல்லா நண்பர்கள் சார்பிலும், எங்களுக்கு மிகுந்த அன்புநிறைந்த வரவேற்பை அளித்த பர்மாவின் மக்களுக்கும் அரசாங்கத்திற்கும், எங்களின் இதயபூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்ள நான் விரும்புகிறேன். (பலத்த கரகோஷம்).

எங்களிடத்தும், எங்கள் தேசத்தினிடத்தும் அன்புகொண்டுள்ளதற்காக, தோழர் நூவிற்கு எங்களின் விசேஷ நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம். (பலத்த கரகோஷம்). பர்மீய மக்களிடத்து எங்கள் நாட்டு மக்கள் கொண்டுள்ள நேச உணர்ச்சிகளைச் சரிவரப் புரிந்து, கணித்து, சோவியத் யூனியனுக்கும், பர்மா யூனியனுக்குமிடையே மிக நெருங்கிய உறவுகளை ஏற்படுத்தி, நம் இரு நாடுகளுக்குமிடையே நட்புறவை வளர்த்துப் பலப்படுத்த அவர் தைரியமாக முன்வந்தார். (பலத்த, நீண்ட கரகோஷம்). தன் நாட்டின் நன்மைக்காகவே அவர் இதைச் செய்கிறார்; அதன்மூலம் எதிர்காலம்பற்றிய அவருடைய கண்ணோட்டத்தைக் காட்டியுள்ளார். (கரகோஷம்).

என்னையும், தோழர் நிக்கோலாய் அலெக்ஸாண்ட்ரோவிச் புல்கானினையும், பர்மாவின் பிரதமர், தோழர்களே என அழைத்தார். ஆம், சமாதானத்திற்கும், நட்புறவிற்குமான பொதுவான போராட்டத்தின் தோழர்கள்தான் நாம். (கரகோஷம்).

நமது தோழமையுள்ள உறவுகள், மிகுந்த அன்புகலந்த நேச அடிப்படையிலே பெருகி வளரும். நம் மக்களின் நலன்களுக்காக, நம் இரு இராஜ்யங்களுக்கிடையேயும், இரு நாட்டின் அரசியல் தலைவர்களுக்கிடையேயும் அவை வளரும்.

அன்புள்ள ஜனாதிபதி டாக்டர் பாவூ அவர்களே, தோழர் நூ அவர்களே, இக்கூட்டத்தில் கலந்துகொண்டுள்ள நண்பர்களே, பர்மீய மக்களே, உங்கள் நாட்டின் சுதந்திரத்தைக் கெட்டிப்படுத்துவதில் நீங்கள் வெற்றியடைய வேண்டுமென மீண்டும் ஒருமுறை வாழ்த்துவதற்கு என்னை அனுமதியுங்கள்! (நீண்ட, பலத்த கரகோஷம்).

சோவியத், பர்மீய மக்களுக்கிடையே நட்புறவு பெருகி, வளர்ந்தோங்கட்டும்! (எல்லோரும் எழுந்திருந்து, காது செவிடுபடும்படியான மாபெரும் கரகோஷம் செய்தனர்.)

# 1955 டிசம்பர் 6-ம் தேதி ரங்கூன் பல்கலைக் கழகத்தில் என். எஸ். குருஷேவ் ஆற்றிய உரை

எங்கள் அன்பிற்குரிய இளம் நண்பர்களே, பர்மீய மாணவர்களே, பேராசிரியர்களே, ஆசிரியர்களே,

எனது நண்பர் நிக்கோலாய் அலெக்ஸாண்ட்ரோவிச் புல்கானின் சார்பிலும், என் சொந்த சார்பிலும் சோவியத் மக்கள் அனைவரின் சார்பிலும் உங்களை வாழ்த்தி எங்களின் நல்லாசைகளைத் தெரிவிக்க என்னை அனுமதியுங்கள்.

உங்களைச் சந்தித்ததற்காக நாங்கள் பெரிதும் மகிழ்ச்சியடைகிறோம். உங்களின் பல்கலைக் கழகத்திற்கு விஜயம் செய்த உடனே, புதிதாக சுதந்திரம் அடைந்த பர்மீய மக்களின் குறிப்பிடத்தக்க பலன்களில் ஒன்று இங்கு உள்ளது என நாங்கள் கருதினோம். உயர்நிலைக்கல்வி நிலையங்களின் கதவுகள் அகலத் திறந்துவைக்கப்பட்டுள்ளன; புதியதோர் வாழ்வைக் கட்டுவதற்குத் தேவையான அறிவைப் பெறுவதற்கு ஆசியாவின் இளைஞர்கள் இக்கல்வி நிலையங்களுக்குச் செல்கின்றனர். (கரகோஷம்).

ஆசிய நாடுகளில் காலனிவாதிகள் புகுந்துகொண்டதற்காக, அடிமைப்படுத்தப்பட்ட மக்கள் நன்றியறிதலுள்ளவர்களாக இருக்கவேண்டு

மென பல ஆண்டுகள் காலனிவாதிகள் கூறிவந்தார்கள். அடிமைப் படுத்தப்பட்ட நாடுகளுக்குக் கலாச்சாரத்தைக் கொண்டுவருவதாக அவர் கள் கூறிக்கொண்டனர். மக்கள் எப்படி வாழ்வது என்பதைப் போதிப்ப தற்காக வந்ததாகத் தம்பட்டம் அடித்தனர்.

ஆனுல், எல்லா இடங்களிலிருந்தும் காலனி ஆட்சியாளர்கள் இன் னும் பூரணமாக மறையாமல் இருந்தபோதிலும்கூட அவர்களின் காலம் அஸ்தமித்துவிட்டது. ஆசியமக்கள் தாங்கள் விரும்பும் வழியிலேயே தங்க ளின் வாழ்க்கையைத் திருத்தி அமைப்பதற்கு தீவிரமாக முனைந்து விட்டனர்.

உங்கள் நாட்டின் அரசியல் சுதந்திரத்தைப் பெற்றுள்ள நீங்கள் உங்களின் பலன்களை மேலும் உறுதிப்படுத்த உங்களால் இயன்ற அத்த னையையும் நீங்கள் செய்யவேண்டும். உங்கள் நாட்டை உண்மையான சுதந்திர நாடாக ஆக்குவதற்கு விடுதலையடைந்த உங்களுடைய நாட் டில், அந்நிய நாடுகளைச் சார்ந்திராத ஒரு பொருளாதாரத்தை நீங்கள் கட்டவேண்டும்.

கிளர்ந்தெழுந்த மக்களுக்குச் சலுகைகள் அளிக்கவேண்டிய நிலைமை வரும்பொழுது அதற்கு உகந்தாற்போன்ற தந்திரங்களைக் கையாள்வ தில் ஏகாதிபத்ய நாடுகள் மிகத் திறமையானவை. தங்களின் துருப்புக் களை வாபஸ் வாங்கிக்கொண்டார்கள்; ஆனுல் எந்த நாடுகளிலிருந்து தங்களின் ராணுவத்தை வாபஸ்வாங்கிக்கொண்டார்களோ அந்த நாடு களை இன்னும் கீழ்ப்படியச்செய்ய, பொருளாதார ரீதியிலே ஏகபோக முத லாளிகளின் விருப்புகளைச் சார்ந்திருக்கச்செய்ய அவர்கள் முயலுகிருர் கள். ஆனுல், தங்கள் நாட்டை சுதந்திர நாடாகப் பார்க்க விரும்பும் யாரும் இதை அனுமதிக்கமுடியாது. (பலத்த கரகோஷம்).

இந்தியா, பர்மா மக்களை நாங்கள் சந்தித்த கூட்டங்களில் எல்லாம் இதை நாங்கள் ஒரு தடவைக்குமேல் சொல்லி இருக்கிறோம். எங்களின் இந்த வார்த்தைகள் சில ஐரோப்பியர்களுக்கு பிடிக்கவில்லை. (ஹாலில் நகைப்பு, கரகோஷம்). ஆனுல் எல்லா ஐரோப்பியர்களும் காலனி ஆதிக்கத்தை விரும்பவில்லை. சோவியத் பிரதேசத்தின் ஒரு பகுதி ஐரோப்பாவிலும், மற்ருெரு பகுதி ஆசியாவிலும் இருப்பதனுல் எங்கள் நாடு ஒரு ஐரோப்பிய நாடாகவும் அதேசமயத்தில் ஒரு ஆசிய நாடாக வும் விளங்குகிறது. காலனி ஆதிக்கத்தை சோவியத் யூனியன் ஆத ரிக்கவில்லை. அதைத் தீவிரமாக எதிர்க்கிறது. (நீண்ட கரகோஷம்).

ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் உள்ள அடிமைப்படுத்தப்பட்ட மக்க ளின் இரத்தத்தை உறிஞ்சி வாழ்ந்து பழகிப்போன ஐரோப்பாவிலே யுள்ள சில குழுக்கள் இன்று நடுநடுங்குகின்றன; ஏனெனில் தங்களின் சுதந்திரத்திற்காகப் போராட எழுந்துள்ள ஆசிய ஆப்பிரிக்க மக்களின்

சக்தியும், பலமும் அவர்களுக்கு நன்கு தெரியும். (நீண்ட, பலத்த கரகோஷம்). ஆனல் சோவியத் மக்களாகிய நாங்களோ காலனி ஆட்சிகளைத் தூக்கி எறிந்துவிட்டு சுதந்திர வளர்ச்சிப் பாதையிலே அடியெடுத்துவைக்கும் மக்களைக்கண்டு மகிழ்ச்சி அடைகிறோம். (நீண்ட கரகோஷம்).

அந்நிய நாட்டுக்காரர்களுடன் பேசும் சந்தர்ப்பங்கள் பல எனக்குக் கிடைத்தன. சமீபத்திலே, ஒரு முதலாளித்துவத் தலைவரோடு பேசும் சந்தர்ப்பம் கிடைத்தது; அவர் எனக்கு சில "நல்ல" புத்திமதிகளைச் சொல்ல முன்வந்தார்.

அவர் என்னிடம் சொன்னதாவது: சீனவிற்கு விரிந்த அளவிலே சோவியத் யூனியன் உதவி செய்கிறது. இவ்விதம் நீங்கள் செய்வது புத்திசாலித்தனமாகுமா? உங்கள் நாட்டில் இருபது கோடி மக்கள் இருக்கிறார்கள். சீனவிலோ அறுபது கோடி மக்கள் இருக்கிறார்கள். உங்கள் நாட்டிற்கு இது ஆபத்தில்லையா? சீன தொழில் வளர்ச்சி பெற்றுத் தன் சுதந்திரத்தைப் பலப்படுத்திக் கொண்டவுடனே சோவியத் யூனியனுக்கு எதிரான அபாய சக்தியாக மாறிவிடும். இவ்விதம் செய்வது சரிதானு என்பதை நீங்கள் யோசிக்கவேண்டும் என்று கூறினர் என் "நலனை விரும்புகின்ற அவர்". ஒரு பலம் வாய்ந்த சீன சோவியத் யூனியனையும் மற்ற ஐரோப்பிய நாடுகளையும் பயமுறுத்தும்; அது அவர்கள்மீது ஆதிக்கம் செலுத்தும்.

இத்தகைய புத்திமதி ஏன் எங்களுக்கு கொடுக்கப்படுகிறது என்பதைப்பற்றி சோவியத் மக்களாகிய நாங்கள் அறிவோம். நல்லெண்ணத்தினல் தூண்டப்பட்டதல்ல அது. முதலாளித்வ கண்ணோட்டத்திலிருந்து "ஒரு மனிதன் மற்றொரு மனிதனுக்கு ஓநாய்" என்கின்ற கோட்பாட்டிலிருந்து இத்தகைய புத்திமதி கூறுவது ஏற்படுகின்றது. முதலாளித்து உலகமானது, நீ மற்றொருவனை நசுக்காவிட்டால் வேறொருவன் உன்னை ஒடுக்கிவிடுவான் என்ற சட்ட நீதிக்கு உட்பட்டு இயங்குகின்றது. ஒரு நாடு பலவீனமானதாக யிருந்தால் அது பிறநாடுகளைச் சார்ந்திருக்குமாறு செய்யப்படும். இத்தகைய கோட்பாடுகளை நாங்கள் கடுமையாக எதிர்க்கிறோம். (நீண்ட கரகோஷம்)

எங்களின் போதனை வேறு மாதிரியாகக் கூறுகிறது. மனிதன் மற்றொரு மனிதனுக்கு நண்பன், சகோதரன் என நாங்கள் கூறுகிறோம். மனிதன் ஒரு திறமையுள்ள ஜந்து என நாங்கள் கூறுகிறோம். ஒரு மனிதன் மற்றொரு மனிதனல் நசுக்கப்படக்கூடாது; ஒரு ராஜ்யம் மற்றொரு ராஜ்யத்தை அடிமைப்படுத்தக்கூடாது என நாங்கள் கூறுகிறோம். பொருளாதார அடிமைத் தனத்திலிருந்து விடுபட்டு விஞ்ஞானத்தை நன்கு பயின்ற மனிதன் இயற்கையின் சக்திகளை வயப்படுத்துகிறன்; இந்த சக்திகள் மனித சமுதாயத்திற்கு உழைக்கின்றன. (நீண்ட கரகோஷம்)

மனிதனுல் சிருஷ்டிக்கப்பட்ட செல்வமானது சரியான முறையிலே விநியோகிக்கப்படுமானுல், மனிதனை மனிதன் சுரண்டுவது இல்லாமல் இருக்குமானுல், மனிதனின் உழைப்பால் சிருஷ்டிக்கப்படும் பொருளாதார செல்வமானது உலகில் இருக்கக்கூடிய மக்கள் அனைவருக்கும் போதுமானதாக இருக்கும். (பலத்த கரகோஷம்)

இந்தப் பூமியிலேயே, தாரதம்யமற்ற ஓர் சமுதாயம் அப்பொழுது அமைக்கப்பட்டுவிடும். எல்லா மக்களும், அவர்களின் தோலின் நிறம் எதுவாக இருந்த போதிலும்கூட சகோதரர்கள் ஆகிவிடுவார்கள். (கரகோஷம்) தேசங்களுக் கிடையேயுள்ள பகைமை மறைந்துவிடும். யுத்தங்களே இருக்காது. (நீண்ட கரகோஷம்) சகல பொருளாதார சாதனங்களும் மக்களின் நல்வாழ்வுக்கும் செழிப்பிற்கும் பயன்படுத்தப்படும். (கரகோஷம்)

அன்புள்ள நண்பர்களே, விஞ்ஞானம் ஏற்படுத்தும் முன்னேற்றத்தை நீங்கள் கற்பனை பண்ணிப் பார்க்கலாம்!

உங்களின் பல்கலைக் கழகத்தை நாங்கள் பார்த்தோம். உங்களிடத்திலும், உங்கள் பல்கலைக் கழகத்தினிடத்திலும், காலனி சார்புத்தனத்திலிருந்து விடுதலையான ஓர் மண்ணில் ஆரம்ப வேர்கள் வெடிப்பதை நாங்கள் காண்கின்ருேம். (பலத்த கரகோஷம்)

ரங்கூன் நகரில் ஒன்பதாயிரம் மாணவர்கள் இருப்பதாக எங்களிடம் கூறினுர்கள். ஒரு வகையில் இது அதிகமே. அதே சமயத்தில் அது குறைவும்கூட. அதிகம் என்று கூறுவதற்கு காரணம் என்னவெனில் சென்ற காலத்தில் உங்களுக்குப் போதிய உயர்நிலைப்பள்ளிகள் இருந்தது கிடையாது. இன்னும்கூட மிகப்பெரிய எண்ணிக்கையுள்ள மாணவர்களுக்குத் தேவையான இட வசதியும், ரசாயனப் பரிசோதனைக் கூடங்களும் போதிய அளவு இல்லை. தேவையான அளவு ஆசிரியர்களும் பேராசிரியர்களும் உங்களுக்கு இல்லை. இவற்றையெல்லாம் கணக்கிலெடுத்துப் பார்க்கும்பொழுது உங்களுக்கு ஏராளமான மாணவர்கள் இருக்கிருர்கள்.

ஆனுல், உங்கள் நாட்டின் தேவைகளையும் மக்களின் அறிவுப் பசியையும் நாங்கள் கணக்கிலெடுத்துக்கொண்டு பார்த்தோமேயானுல் மிகக் குறைந்த மாணவர்களே உங்களுக்கு இருக்கிருர்கள். ஆனுல் நல்ல விஷயங்களுக்கெல்லாம் அடக்கமான ஒரு ஆரம்பம் இருப்பதுதான் வழக்கம். பிறகு, அவை பெருகி வளர்கின்றன.

எங்கள் நாட்டு மக்கள் சுதந்திரம் அடைந்து புதிய வாழ்வைக்கட்ட ஆரம்பித்த காலத்தில் எங்களிடத்தும் மிகக் குறைந்த மாணவர்களே இருந்தார்கள். சோவியத் ஆட்சியானது தொழிலாளி விவசாயி வர்க்

கத்தின் குழந்தைகளுக்கு உயர்நிலைக் கல்வி நிலையங்களின் கதவுகளை அகலத் திறந்து வைத்தது. அக்காலத்தில் தொழிலாளர்களுக்கான விசேஷப் பள்ளிகளை ஏற்படுத்தி ஒரு உயர்தரப்பள்ளிப் படிப்பின் அளவிற்கு தொழிலாளிகள் போதனை பெறுவதற்கு எங்கள் சர்க்கார் உதவி செய்தது. பின்பு உயர்தரக் கல்வி அளிக்கப்பட்டு எங்கள் நாட்டின் படிப்பாளிகளின் பயிற்சியும் அதிகப்படுத்தப்பட்டது.

உதாரணமாக என்னை எடுத்துக்கொள்ளுங்கள்.

யுத்தம் முடிந்த உடனே எங்கள் நாட்டிலிருந்து எதிரிகளையெல்லாம் விரட்டி அடித்த பின்பு, முன்னாள் சுரங்கத் தொழிலாளியான நான் தொழிலாளர்களின் விசேஷப் பள்ளிக்கு சென்றேன். இன்று எனக்கு முன்னே உட்கார்ந்திருக்கக் கூடியவர்களைப் போல, அன்று நான் ஒரு இளைஞனாக இருக்கவில்லை. ஏற்கனவே எனக்கு 27 வயது முடிந்திருந்தது. நாங்கள் கடுமையாக உழைத்து விஞ்ஞானத்தை நன்கு பயில பெருமுயற்சி செய்தோம். இதைச் செய்யுமாறுதான் மேதை லெனின் கூறினார். நாங்கள் நன்றாகப் படிப்பதற்கு வேண்டிய எல்லாவற்றையும் அரசாங்கம் செய்தது. எந்தவிதக் கட்டணமும் இல்லாமல் இலவசமாக நாங்கள் படித்தோம். எல்லாவற்றிற்கும் மேலாக, இன்று எங்கள் நாட்டில் மாணவர்கள் உபகாரச் சம்பளம் பெறுவதுபோல அன்று நாங்கள் உபகாரச் சம்பளம் பெற்றோம்.

இவ்விதமே, எங்களின் படிப்பாளிகளுக்கு நாங்கள் பயிற்சியளித்தோம்; இந்த படிப்பாளிகளெல்லாம் மக்கள் மத்தியிலிருந்தே வந்தவர்கள்; விசுவாசத்துடனும், பக்தி சிரத்தையுடனும் மக்களுக்கு சேவை செய்பவர்கள்.

இன்று சோவியத் யூனியனில், லட்சக்கணக்கான மக்கள் கல்வி பெறுவதற்குகந்த மாதிரி வெகுஜனக் கல்வி உருவாக்கப்பட்டிருப்பதால், உண்மையிலேயே கோடிக்கணக்கில் சோவியத் மக்கள் கல்வி பெறுகின்றனர். மிக உயர்ந்த கல்வி நிலையங்களில் மட்டுமிருக்கும் மாணவர்களின் எண்ணிக்கை பத்துலட்சத்துக்கு மேற்பட்டது.

எங்கள் நாட்டிலுள்ள கிராம, நகர இளைஞர்கள் அனைவருக்கும், இறுதிப் பள்ளி வகுப்புவரை கல்வி அளிப்பதற்கு எல்லா முயற்சிகளும் செய்யப்பட்டு வருகின்றன; இதன்மூலம்தான் இன்னும் அதிகப்படியான இளைஞர்கள் உயர்ந்த கல்வி பெறுவது சாத்தியமாகும்.

மிகக் குறைந்த காலத்தில், சோவியத் ஆட்சி ஏற்பட்ட 38 ஆண்டுகளுக்குள், பின்தங்கிக் கிடந்த ரஷ்யாவில், எழுத்தறிவின்மை பூரணமாக ஒழிக்கப்பட்டுள்ளது. சோவியத் நாட்டிலுள்ள உயர்தரக் கல்வி நிலையங்களிலிருந்து பொறியியல் நிபுணர்கள், விவசாய நிபுணர்கள், ஆகிய பல்வேறு வகை நிபுணர்களெல்லாம், அமெரிக்காவைவிட மிக அதிகமான

அளவிலே, ஒவ்வொரு ஆண்டும் பட்டம்பெற்று வெளியேறுகிறார்கள். (கரகோஷம்).

தொழிலாளி, விவசாயி ஆட்சி என்பதற்கு இதுதான் அர்த்தம். (நீண்ட கரகோஷம்). மக்களின் நல்வாழ்வையும், இன்பத்தையுமே சோவியத் சர்க்கார் மிக அதிகமாகக் கவனிக்கிறது. (பலத்த கரகோஷம்).

என்னை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டுமென நான் விரும்புகிறேன். பிரச்சாரத்திற்காக நான் இவற்றை இங்கு கூறவில்லை; ஒரு சில உண்மைகளை எடுத்துக் காட்டினேன்.

அதிகாரத்தைத் தங்கள் கையில் எடுத்துக் கொண்ட உடனே, மேதை லெனினின் தலைமையின்கீழ், அவர் ஏற்படுத்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையின் கீழ், சோவியத் நாட்டின் தொழிலாளர்களும், விவசாயிகளும் ஒரு சோஷலிஸ்ட் ஆட்சியை உருவாக்கினார்கள்; அத்தகைய ஆட்சி இருப்பதே முதலாளித்துவ உலகிற்கு ஒரு சவாலாகும். (பலத்த கர கோஷம்). எங்கள் அமைப்புதான் மிக முற்போக்கான ஓர் அமைப்பு என அவர்கள் நிரூபித்துவிட்டார்கள். சோவியத் யூனியனில் நிர்மாணிக் கப்பட்ட சோஷலிஸம்தான், மிகச் சிறந்த அமைப்பாக, மனித குலத்தின் மகத்தான சாதனையாக விளங்குகிறது. (பலத்த கரகோஷம்).

சோஷலிஸம்தான் வெற்றியடையும்; முதலாளித்துவத்தைவிட மேம் பாடுடையதாக இருக்கும் என்பதை நான் அதிகமாக வற்புறுத்துகிறேன் என்று என்னிடம் சில சமயங்களில் கூறப்படுகிறது.

ஆம், இதைப்பற்றி முழுக்க முழுக்க நம்பிக்கையுடனிருக்கிறேன். இரு அமைப்புகளுக்கிடையே நடைபெறும் சமாதானமான போட்டியில், சோஷலிஸ்ட் அமைப்புதான் வெற்றியடையும் என சோவியத் மக்களா கிய நாங்கள் அனைவரும் உறுதியாக நம்புகிறோம். எங்களின் இதய நாடி துடிக்கும்வரை, எங்கள் போதனையை நாங்கள் கைவிடமாட்டோம்; ஏனெ னில் அதுதான் ஒரு சரியான, முற்போக்கான போதனையாகும்.

முதலாளித்துவத்தின் நாட்கள் எண்ணப்படும் நிலை வந்துள்ளது. (நீண்ட கரகோஷம்). உயிருள்ள உடலமைப்பில், ஜீவ அணுக்கள் தொடர்ந்து புதுப்பிக்கப்படுவதே போன்று, பழையவை இறந்து, புதியன தோன்றுவதுபோல, மனித சமுதாய அமைப்பிலும், பழைய அமைப்புகள் மறைந்து, புதிய முற்போக்கான, முன்னேற்றமான அமைப்புகள் இடம் பெறுகின்றன. (நீண்ட கரகோஷம்). சோஷலிஸ அமைப்பும், எங்கள் நாட்டு மக்கள் ஒரு சமுதாயத்தை நோக்கி வெற்றிகரமாக முன்னேறிச் சென்று கொண்டிருக்கக்கூடிய கம்யூனிஸ்ட் சமுதாயமும் இத்தகைய ஒரு புதிய அமைப்பாகும். (கரகோஷம்) யுத்தமில்லாமலே கம்யூனிஸத்தை நோக்கி நாங்கள் முன்னேறிக் கொண்டிருக்கிறோம். எந்த யுத்தமும் எங்

களுக்குத் தேவையில்லை; அது எங்கள் நோக்கத்திற்கே ஹானி விளை விக்கும். (நீண்ட கரகோஷம்). கருத்துக்களின் வளர்ச்சியை பலாத் காரத்தின்மூலம் தடுத்து நிறுத்தமுடியாது; அதேபோன்று பலாத்காரத் தின்மூலம் கருத்துக்களைப் பரப்பவும் முடியாது.

மக்களே, தங்களுக்குகந்த மாதிரியான அரசியலமைப்பை உருவாக் கிக்கொள்ள வேண்டும் என்பதுதான் எங்கள் கருத்து.

சோஷலிஸ்ட் சமுதாயத்தைக் கட்டியுள்ள சோவியத் மக்கள், அழு கிப் போயுள்ள முதலாளித்துவத்தின் மீது சோஷலிஸ்ட் அமைப்பு வெற் றிக் கொடியை நாட்டும் என்பதை உறுதியாக நம்புகிறார்கள். இந்த நோக்கத்திற்காக, மகிழ்ச்சியுடன் சோவியத் மக்களாகிய நாங்கள் உழைக் கிறோம்; ஏனெனில் இது ஒரு மகோன்னதக் கடமையாகும்.

எங்கள் இளம் நண்பர்களே! பேராசிரியர்களே! ஆசிரியர்களே! விஞ்ஞானத்தை வளர்த்து அதில் முழுத்தேர்ச்சி அடைவதில் நீங்கள் வெற்றி பெற எங்களின் வாழ்த்துக்கள். விஞ்ஞானமானது மக்களுக்கும் நாட்டிற்கும் சேவை செய்யக்கூடியதாக இருக்கும்பொழுது, அரசாங்கத் திற்கும் மக்களுக்கும் பயனுள்ளதாகிறது. அதனால்தான் அறிவாளிகளுக் கும் மக்களுக்கும் இடையே பிரிக்கமுடியாத ஒரு தொடர்பு இருக்க வேண்டும். மக்கள் உங்களைப் பெரிதும் கௌரவிப்பார்கள்; அவர்களின் ஆதரவுடன் உங்களின் விஞ்ஞானம் பெருகி வளரும்.

ஒருவேளை நீங்கள் கேட்க விரும்பாத எதையாவது நான் கூறியிருந் தால் என்னை மன்னிக்குமாறு நான் உங்களை வேண்டிக்கொள்கிறேன். நானும், எனது நண்பர் நிக்கோலாய் அலெக்ஸாண்ட்ராவிச் புல்கானினும் உங்களிடத்து உண்மையான பற்றுக்கொண்டுள்ளோம். எல்லாவற் றிலும் மிகச் சிறந்தது உங்களுக்கு ஏற்படவேண்டுமென நாங்கள் விரும் புகிறோம். இது எங்களின் விருப்பம் மட்டுமல்ல. சோவியத் மக்கள் தங் கள் அறிவையும் அநுபவத்தையும் உங்களுடன் பகிர்ந்துகொள்ளத் தயா ராக இருக்கிறார்கள். (நீண்ட கரகோஷம்) விஞ்ஞான அறிவு எந்த அள விற்கு விரிவாக பகிர்ந்துகொள்ளப் படுகிறதோ, எந்த அளவிற்கு கலாச் சார உறவுகள் விஸ்தரிக்கப் படுகின்றனவோ அந்த அளவிற்கு தொழில் நுணுக்க அனுபவம் பகிர்ந்துகொள்ளப்படும்; அந்த அளவிற்கு நம் மக்களிடையேயுள்ள உறவுகள் அதிகமான மேம்பாடு உடையதாகவும், நேசத்தன்மையுடையதாகவும் இருக்கும். உங்களின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவி செய்ய நாங்கள் உண்மையிலேயே விரும்புகிறோம். திரண்டுள்ள எங்களின் அனுபவத்தையும் அறிவையும் உங்களுடன் பகிர்ந்துகொள்ள விரும்புகிறோம்.

உங்களின் பேராசிரியர்களும், பொறியியல் நிபுணர்களும், மாணவர் களும் அடிக்கடி சோவியத் யூனியனுக்கு வருவது மிகவும் நல்லது.

(நீண்ட கரகோஷம்). அவர்களை நண்பர்களாக நாங்கள் வரவேற்போம். எங்கள் மக்கள் என்ன சாதித்திருக்கிறார்கள் என்பதையும், எங்களின் அறிவாளிகள் எப்படி வாழ்ந்து உழைக்கிறார்கள் என்பதையும், எங்களின் மாணவர்கள் எப்படி வாழ்கிறார்கள், படிக்கிறார்கள் என்பதையும் நீங்களே நேரடியாகப் பார்க்கவேண்டுமென நாங்கள் விரும்புகிறோம். மக்கள் வெறுமனே கேட்பதை மட்டும் விரும்பவில்லை; தாங்கள் கேட்ட விஷயங்களை நேரடியாகப் பார்க்கவும் விரும்புகிறார்கள். அவர்கள் கேட்ட விஷயங்கள் எதால் செய்யப்பட்டது என்பதை உணர்ந்து பார்க்க விரும்புகிறார்கள். (ஹாலில் உற்சாகம்).

எங்கள் நாட்டிற்கு வாருங்கள்; எங்கள் மக்களைப் பாருங்கள்; நாங்கள் என்ன செய்திருக்கிறோம் என்பதை நீங்கள் நேரடியாகக் காணுங்கள்; நீங்கள் விரும்புவதை எடுத்துக்கொள்ளுங்கள்; நீங்கள் விரும்பாததை விட்டுவிடுங்கள்; நாங்கள் எதையும் யார் மேலும் திணிப்பதில்லை. இதுதான் சமாதான பூர்வமான சகவாழ்வு என்பதற்கு அர்த்தம். தான் விரும்பும் வழியிலே ஒவ்வொருவரும் வாழவேண்டும். எதையும் யார் மேலும் பலாத்காரமாகத் திணிக்கக் கூடாது.

சமாதானத்திற்கான போராட்டத்தில் உங்கள் சர்க்காருடனும் உங்கள் நாட்டுடனும் நாங்கள் மிக நெருங்கிய ஒத்துழைப்பை ஏற்படுத்தியுள்ளோம். இந்த நன்னோக்கத்திற்கான இந்த உறவுகளை நாம் பலப்படுத்துவோமாக; உலக சமாதானத்திற்காக இன்னும் தீவிரமாகப் போராடுவோமாக.

பர்மாவின் மாணவ இளைஞர்கள் நீடூழி வாழ்க! தங்கள் நாட்டின் வளர்ச்சிக்காக, தங்கள் மக்களின் நன்மைக்காக அறிவையும் அனுபவத்தையும் திரட்டுகின்ற பர்மாவின் இளம் அறிஞர்கள் நீடூழி வாழ்க! இப்பொழுது மிகக் குறைவாக இருக்கின்ற, ஆனால் படிப்படியாக எண்ணிக்கையில் உயரும் என்று நாங்கள் நம்புகின்ற மாணவிகள் நீடூழி வாழ்க! சமுதாயத்தில் மிக முக்கியமானதோர் இடத்தைப் பெண்கள் பெற்றிருக்கிறார்கள். சமுதாயத்தின் வாழ்வில் மிகத் தீவிரமான பாத்திரத்தை அவர்கள் வகிக்கிறார்கள். எதிர்கால சந்ததியின் கல்விக்கு கணிசமான அளவு உதவி செய்கிறார்கள். (கரகோஷம்) இன்று அவர்களின் படிப்பில் அதிகப்படியான உதவியை அவர்கள் பெறுவார்களேயானால் நாளை அவர்களின் குழந்தைகளுக்கு, எதிர்கால சந்ததியினருக்கு, இந்த அறிவை விரிந்த அளவிலே அவர்கள் போதிப்பார்கள். (நீண்ட கரகோஷம்)

ரங்கூன் பல்கலைக் கழகத்தின் ஆசிரியர்களும், பேராசிரியர்களும் நீடூழி வாழ்க! இவர்கள் எவ்விதக் கஷ்டங்களையும் பாராமல் மாணவர்களாகிய உங்களுக்கும் உங்கள் மூலமாக உங்கள் நாட்டு மக்களுக்கும் அறிவைப் போதிக்கிறார்கள். (நீண்ட கரகோஷம்).

சோவியத் - பர்மீய மக்களின் நட்புறவு நீடூழி வாழ்க! (நீண்ட கர கோஷம்) உலக சமாதானம் நீடூழி வாழ்க! (எல்லோரும் எழுந்து நிற்கிருர்கள். நீண்ட பலத்த கரகோஷமானது என். எஸ். குருஷேவ், என். ஏ. புல்கானின் ஆகிய இருவருக்கும் அளிக்கும் கௌரமாக பெருத்த ஆரவாரமாக மாறியது).

## 1955 டிசம்பர் 6ம் தேதி ரங்கூன் நகரில் அளிக்கப்பட்ட வரவேற்பில் என். ஏ. புல்கானின் நிகழ்த்திய சொற்பொழிவு

திரு. ஜனுதிபதி அவர்களே,
திரு. பிரதம மந்திரி அவர்களே,
மதிப்பிற்குரிய விருந்தாளிகளே,
நண்பர்களே,

உபச்சாரம் நிறைந்த பர்மீய மண்ணில் நாங்கள் தங்கியிருந்த நாட்களுக்கு, துரதிருஷ்டவசமாக முடிவு ஏற்படவிருக்கிறது. உங்கள் நாட்டுடன் நாங்கள் பரிச்சயம் செய்துகொண்ட ஆறு நாட்கள் மிகப் பெரிய காலமல்ல. ஆனுல் இந்தக் காலத்திற்குள்ளேயே நாங்கள் எதைப் பார்த்தோமோ, அவை எங்கள் நினைவுகளில் என்றுமே நிலைத்து நிற்கும்.

பல நகரங்களுக்கும், சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்களுக்கும் நாங்கள் சென்றிருந்தோம்; உங்கள் நாட்டிலுள்ள பல ஜில்லாக்களைச் சேர்ந்த மக்களை நாங்கள் சந்தித்தோம்; சோவியத் மக்களின் பால் பர்மீய மக்கள் கொண்டுள்ள, நேச மனப்பான்மையையும், சகோதர உணர்ச்சிகளின் உண்மைத் தன்மையையும் நாங்களே காண முடிந்தது. உங்களின் புகழ்பெற்ற தலைநகரான ரங்கூனில் நடைபெற்ற கூட்டங்களிலும், நாங்கள் விஜயம் செய்த மேல் பர்மாவின் ஜில்லாக்களிலும், அதிகாரிகளின் பிரதிநிதிகளும், மக்களும் அன்பு நிறைந்த வரவேற்பை எங்களுக்கு அளித்தார்கள். உங்களின் இந்த உபச்சாரத்திற்கு, சகோதர உணர்ச்சிகளுக்கு, உங்களின் கவனத்திற்கு, எங்கள் சார்பாகவும், நாங்கள் பிரதிநிதித்துவப் படுத்தும் சோவியத் மக்கள் அனைவரின் சார்பாகவும், எங்கள் இதயபூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிருேம்.

இந்த அன்பு கனிந்த, பற்றுள்ள வரவேற்பும், வெளியிடப்பட்ட உணர்ச்சிகளின் உண்மைத் தன்மையும், பலமும், ஏதோ தற்செயலாக

ஏற்பட்டதல்ல என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். அதே போன்று, எங்களின் மதிப்பிற்குரிய நண்பர் பிரதம மந்திரி யூநூவுக்கு சோவியத் யூனியனில், எங்கள் மக்கள் அளித்த உபசாரமும், வாழ்த்துக்களும் தற்செயலாக ஏற்பட்டதல்ல. நட்புறவு எப்பொழுதுமே பரஸ்பரமானது. உங்களின் அற்புதமான நாட்டிலிருக்கும்பொழுது, உண்மையில் சகோதரர்களிடையே இருப்பதாகத்தான் நாங்கள் கருதினேம்.

பர்மாவும், சோவியத் யூனியனும் பல வழிகளில் மாறுபட்டவை. அவற்றின் தன்மையிலும், சீதோஷ்ண நிலைமையிலும், சரித்திரபூர்வமான அன்றாடப் பழக்க வழக்கங்களிலும், பாரம்பர்யத்திலும், அவை மாறுபட்டுள்ளன. நம் மக்களின் கலையிலும், கலாச்சாரத்திலும் அவரவர்களுக்கே உரித்தான பல விசேஷ அம்சங்கள் உள்ளன. பொருளாதார அமைப்பும், சமூக, அரசியல் முறைகளும்கூட நம் இருநாடுகளுக்குமிடையே மாறுபட்டு இருக்கின்றன. எனினும், இவையெல்லாம் நாம் நல்ல, விசுவாசமான நண்பர்களாக இருப்பதை, ஒத்துழைப்பை வளர்த்துப் பல்வேறு விதத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்வதைத் தடுக்கவில்லை என்பதை யதார்த்த நிலை எடுத்துக்காட்டுகின்றது.

இன்று நாங்கள் பர்மாவில் தங்கியிருந்த காலம் பற்றிய ஓர் கூட்டறிக்கை கையெழுத்திடப்பட்டது. இங்கு நடைபெற்ற பேச்சுவார்த்தைகளின் விளைவாக, நம் இரு நாடுகளின் பரஸ்பர நலனுக்குகந்த, பயன்தரத்தக்க விஷயங்கள் பற்றியும், பல அவசரமான சர்வதேச முக்கியத்துமுள்ள பிரச்னைகள் பற்றியும், அபிப்ராயங்களை நாங்கள் பரிமாறிக்கொண்டோம்.

ராஜ்யங்களின் தலைவர்களோடு நேரடியான தொடர்புகொண்டு, பேச்சுவார்த்தைகள் நடத்துவது, பரஸ்பரம் புரிந்துகொள்வதற்கும், நம்பிக்கையை ஏற்படுத்துவதற்கும், சக்திவாய்ந்த ஓர் சாதனமாக இருக்கிறது என்ற ஆழ்ந்த நம்பிக்கை எங்களுக்கு ஏற்பட்டுள்ளது. தேசங்களுக்கிடையே நேசபூர்வமான உறவை வளர்ப்பதற்கு இத்தகைய தொடர்புகள் பெரிதும் உதவுகின்றன.

பர்மா யூனியனின் மக்களுக்கும் சோவியத் மக்களுக்குமிடையே ஏற்பட்டுள்ள நேசபூர்வமான உறவுகளும், ஒத்துழைப்பும், மேலும் வளர்ந்து பலமடைந்து, நம் மக்களின் நன்மைக்கும், உலகமுழுவதும் சமாதானத்தைக் கெட்டிப்படுத்துவதற்கும் பெரிதும் உதவும் என்ற உறுதியைத் தெரிவிக்க என்னை நீங்கள் அனுமதிக்க வேண்டுகிறேன்.

பர்மாவிற்கும் சோவியத் யூனியனுக்குமிடையேயுள்ள நட்புறவுக்கும், ஒத்துழைப்பிற்கும் வாழ்த்துக்களைத் தெரிவித்து, கோப்பையைத் தூக்கி, பானத்தை அருந்துகிறேன்!

பர்மா யூனியனின் மக்களின் வெற்றிகளுக்கும், வாழ்வு செழிக்கவும் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன் !

பர்மா யூனியனின் தலைவர்களுக்கு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன் !

பர்மா யூனியனின் ஜனதிபதி, டாக்டர் பாஊவுக்கு வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன் !

பர்மா பிரதம மந்திரி தோழர் நூவுக்கு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

## 1955, டிசம்பர் 7-ம் தேதி பர்மாவை விட்டுப் புறப்படும்பொழுது, ரங்கூன் விமான நிலையத்தில் புல்கானின் ஆற்றிய உரை

திரு. பிரதம மந்திரி அவர்களே,

நண்பர்களே, கனவான்களே,

உங்களின் அழகிய நாட்டைப்பற்றியும், அற்புதமான மக்களைப் பற்றியும் அழிக்கமுடியாத நினைவுகளுடன், உங்கள் நேசபூர்வமான, விருந்தோம்பலில் சிறந்த நாட்டை விட்டு நாங்கள் புறப்படுகிறோம். காலனி அடிமைத்தனத்தைத் தூக்கி யெறிந்துவிட்டு, சுதந்திரமான வளர்ச்சிப் பாதையில் செல்லும் பர்மாவின் அரசியல், பொருளாதார வாழ்வினது நாடியை நாங்களே உணர்ந்து பார்க்கும் வாய்ப்பு எங்களுக்குக் கிடைத்தது. மேன்மைமிக்க பர்மீய மக்கள், சோவியத் மக்களிடத்துக் கொண்டுள்ள, உண்மையுள்ள, இதய பூர்வமான நட்புணர்ச்சிகளையும், அனுதாபத்தை யும்நாங்கள் என்றும், எங்கள் இதயங்களிலே வைத்துப் பாதுகாப்போம்.

தங்களின் தேச சுதந்திரத்தையும், பொருளாதாரத்தையும் பலப்படுத்துவதே தங்கள் குறிக்கோளாகக் கொண்டிருப்பதுதான் பர்மீய மக்களின் அபிலாஷைகள் என்பதை பர்மாவின் கிராமங்களுக்கும், நகரங்களுக்கும் விஜயம்செய்த நாங்கள் காணமுடிந்தது. சமாதானபூர்வமான நிர்மாண உழைப்பிற்கு எதிராக நிற்கும் முட்டுக்கட்டைகள் அனைத்தையும், சுறுசுறுப்பான பர்மீய மக்கள் தகர்த்தெறிவார்கள் என்பதில் எங்களுக்கு ஐயம் கிடையாது.

நம் இரு அரசாங்கங்களுக்குமிடையே ஏற்பட்ட நேரடித் தொடர்பு பயனுள்ளதாகவும், நம் மக்கள் ஒருவரையொருவர் மேலும் புரிந்து கொள்ள உதவுவதாகவும் இருக்கிறது என்பதை, உங்கள் நாட்டைவிட்டுப் புறப்படும் சந்தர்ப்பத்தில் திருப்தியுடன் குறிப்பிடுகிறோம். பிரதமர் யூ நா சோவியத் யூனியனுக்குச் செய்த விஜயம் இத்தகைய தொடர்பிற்கு கான ஆரம்பத்தை உண்டாக்கியது; நாங்கள் இங்கு வந்து தங்கியிருந்தது அதை மேலும் பலப்படுத்தியுள்ளது.

ரங்கூனில் தங்கியிருந்தகாலத்தில், ஜனாதிபதி டாக்டர் பாஊவையும், திரு. யூநூவையும், பர்மா யூனியனின் இதரத் தலைவர்களையும் சந்தித்து, ஆனந்தமான பேச்சுவார்த்தைகள் நடத்தினோம். இந்தப் பேச்சுவார்த்தைகள் பெரிதும் பயனுள்ளவை. நேச உணர்ச்சியோடு, ஒருவரையொருவர் பரஸ்பரம் புரிந்துகொண்ட சூழ்நிலையில் அப்பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. பர்மாவுக்கும், சோவியத் யூனியனுக்குமுள்ள பரஸ்பர நலன்களுக்கான விஷயங்கள்பற்றிய கருத்துக்களையும், சில அவசரமான சர்வதேசப் பிரச்னைகள்பற்றிய பொதுவான கருத்துக்களையும் எடுத்துக்கூறும் ஒரு கூட்டறிக்கையில் நேற்று நாங்கள் கையெழுத்திட்டோம். இந்த கூட்டறிக்கை, நம் நாடுகளுக்கிடையே உள்ள உறவுகளின் புதிய கட்டத்தைக் குறிக்கும் ஒரு முக்கியமான தஸ்தாவேஜாகும். ஆசியாவிலும், உலக முழுவதிலும் சமாதானத்தைப் பலப்படுத்துவதற்கு, இத்தஸ்தாவேஜு சந்தேகமின்றி உதவிசெய்யும்

திரு. பிரதமமந்திரி அவர்களே, எங்கள்பால் நீங்கள் செலுத்திய கவனத்திற்கும், சகோதரபூர்மான வரவேற்பிக்கும், உங்களுக்கு நாங்கள் நன்றி செலுத்துகிறோம். எங்களின் அன்புள்ள நண்பரே, உங்கள் நாட்டில் எங்களுக்கு அளித்த உபச்சாரத்திற்கும் அன்பார்ந்த வரவேற்பிற்கும் எங்களின் இதயபூர்வமான நன்றியை, பர்மிய மக்களுக்கும், பர்மா யூனியனின் ஜனாதிபதிக்கும், உங்கள் சர்க்காருக்கும் தெரிவிக்குமாறு வேண்டிக்கொள்ளுகிறேன். சோவியத் யூனியனுக்கும் பர்மாவுக்குமிடையேயுள்ள நட்புறவும், ஒத்துழைப்பும் நீடூழி வாழ்க! மேன்மை மிக்க, சுறுசுறுப்புள்ள பர்மிய மக்கள் நீடூழி வாழ்க! வணக்கம்! டுவா டோம்! (பர்மிய மொழியில் வணக்கம்—மொ-ர்).

# என். ஏ. புல்கானின், என். எஸ். குருஷேவ், யூநூ ஆகியோர் விடுத்த கூட்டறிக்கை

சோவியத் யூனியனின் மந்திரிசபைத் தலைவர் என்.ஏ. புல்கானினும், சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத்தினது தலைமைக் குழுவின் உறுப்பினர் என். எஸ். குருஷேவும் பர்மா யூனியன் சர்க்காரின் அழைப்பிற்கிணங்க 1955 டிசம்பர் 1 முதல் 7-ம் தேதிவரை பர்மா யூனியனுக்கு ஒரு நல்லெண்ண விஜயம் செய்தார்கள். பர்மாவில் அவர்கள் தங்கியிருந்த காலத்தில் பர்மா யூனியன் பிரதம மந்திரி யூநூவுடன் பல பேச்சுவார்த்தைகள் நடத்தினர். இந்தப் பேச்சுவார்த்தைகள் எல்லாம் மிகவும் ரம்மியமான பரஸ்பரம் முழுமையாகப் புரிந்துகொள்ளக்கூடிய உணர்வோடு நடத்தப்பட்டன; இரு பகுதிகளுக்கும் அனுகூலமான பரஸ்பர நலன்கள்பற்றிய பிரச்னைகளையும் சர்வதேச முக்யத்வம் வாய்ந்த பல அவசரப் பிரச்னைகளையும்பற்றி ஒரு விரிந்த அளவிலே கருத்துக்களைப் பரிமாறிக்கொள்வதற்கு இந்த பேச்சுவார்த்தைகள் வாய்ப்புகளை அளித்தன.

இந்த பேச்சுவார்த்தைகளின்போது சோவியத் யூனியனுக்கும் பர்மா யூனியனுக்கும் உள்ள உறவுகள் எப்பொழுதுமே உண்மையான நேசபூர்வமுள்ளதாக இருந்துவந்துள்ளது என்பது மீண்டும் ஒருமுறை வலியுறுத்தப்பட்டது. பிரதேச உரிமையையும் அரசுரிமையையும் பரஸ்பரம் கௌரவிப்பது; அனாக்கிரமிப்பு; ஒருவர் மற்றொருவருடைய உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாமை; சமத்துவமும் பரஸ்பர அனுகூலமும்; சமாதான சகவாழ்வு; பொருளாதார ஒத்துழைப்பு என்கின்ற நிலையான கோட்பாடுகளின் அடிப்படையில் நிறுவப்பட்டுள்ள, தொடர்ந்து நிறுவப்பட விருக்கின்ற உறவுகளாகும் இவை. பெரியதும் சிறியதுமான நாடுகளுக்கிடையே உள்ள உறவுகளுக்கும் சமாதான சகவாழ்வுக்கான இந்தக் கோட்பாடுகளை விரிந்த முறையில் அனுஷ்டிப்பதானது சமாதானத்தைப் பலப்படுத்துவதற்கும் தேசங்களுக்கிடையே அனுகூலமான ஒத்துழைப்பை வளர்ப்பதற்கும் உதவி செய்யும் என இரு தேச ராஜதந்திரிகளும் நம்புகிறார்கள். மேலும் மேலும் சமாதானத்தை விரும்பும் நாடுகளும் மக்களும் சமாதானத்தின் நலன்களையும் மக்களின் நல்வாழ்வையும் மேலும் பலப்படுத்துவதற்கான கோட்பாடுகளென இவற்றை அங்கீகரித்து ஏற்றுக்கொண்டுள்ளது கண்டு அவர்கள் திருப்தி தெரிவிக்கிறார்கள்.

சமாதான சகவாழ்விற்கான கோட்பாடுகள் சோவியத் யூனியனுக்கும், பர்மா யூனியனுக்குமிடையே பொருளாதார, கலாச்சார, விஞ்ஞான, தொழில் நுணுக்கத் துறைகளில் ஒத்துழைப்பை ஏற்படுத்துவதற்கான மாபெரும் வாய்ப்புகளுக்கு வழி வகுத்துள்ளது பற்றி நம்பிக்கைத் தெரி

விக்கப்பட்டது. இரு நாடுகளுக்குமிடையே இத்துறைகளில் மேலும் நெருங்கிய தொடர்பை, வளர்த்துக் கெட்டிப்படுத்துவதற்கு சகல முயற்சிகளும் செய்வதெனத் தீர்மானிக்கப்பட்டது; ஏனெனில் அவை பர்மிய மக்களின் நலன்களுக்கும், சோவியத் மக்களின் நலன்களுக்கும் உகந்ததாகும்; சமாதானத்தையும், சர்வதேச ஸ்திரத்தன்மையையும் பலப்படுத்த அது உதவும். குறிப்பிட்ட ஒப்பந்தங்களை நிறைவேற்றும் நோக்கத்தோடு, இரு நாடுகளின் பிரதிநிதிகளிடையே, பல்வேறு பிரச்னைகள் பற்றிய பேச்சுவார்த்தைகள் தொடர்ந்து நடைபெறவேண்டுமென்றும் இச்சந்தர்ப்பத்தில், இரு நரட்டு இராஜதந்திரிகளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

சமாதானத்தையும், நேசபூர்வமான ஒத்துழைப்பையும் ஏற்படுத்த உலக மக்கள் செய்யும் பெருமுயற்சிகளும், குறிப்பாக, மாறுபட்ட அரசியல் சமூக அமைப்புகளைக்கொண்ட நாடுகள், பொருளாதார, கலாச்சார அரசியல் ஒத்துழைப்பை வளர்க்கவேண்டும் என்ற ஒரு பொதுவான குறிக்கோளினுல் ஒன்றுபடுத்தப்பட்ட நாடுகள் பங்குகொண்டு, சென்ற ஏப்ரலில் நடத்திய பாண்டுங் மகாநாடும், தேசங்களுக்கிடையே கருத்தொருமைப்பாடும், ஒத்துழைப்பும் சாத்தியம் என்பதை எடுத்துக்காட்டின. அத்துடன் சர்வதேச நெருக்கடியைக் குறிப்பிடத்தக்க அளவு தளர்த்துவதற்குக் காரணமாயிருந்த, வல்லரசுத் தலைவர்களின் ஜெனிவா மகாநாட்டின் வெற்றிக்கு வேண்டிய சூழ்நிலையையும் அவை ஏற்படுத்தின. ஏற்கனவே பெறுவதற்குச் சாத்தியமாகியுள்ள நெருக்கடியைத் தளர்த்துவதைக் கெட்டிப்படுத்த வேண்டுமென்பதுபற்றி, சர்வதேச நெருக்கடியை மேலும் தளர்த்துவதற்கான நடவடிக்கைகளை எடுக்கவேண்டுமென்பது பற்றி பூரண கருத்தொற்றுமை ஏற்பட்டுள்ளது. நான்கு வல்லரசுகளின் அரசாங்கத் தலைவர்களின் முடிவுகளிலே வெளியிட்ட பிரச்னைகளுக்கு, நான்கு வல்லரசு அந்நிய நாட்டு மந்திரிகளின் ஜெனிவா மகாநாடு ஏற்றுக்கொள்ளத்தக்க முடிவுகளுக்கு வர இயலாமற் போயினும்கூட, சமாதானத்தின் நலன்களுக்காக, இப்பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான வழியைக் கண்டுபிடிப்பதற்கு சகல முயற்சிகளும் செய்யப்படும் என்ற நம்பிக்கையை, இரு நாட்டிற்கு இராஜதந்திரிகளும் தெரிவித்தனர்.

இராணுவப் பெருக்கப் போட்டிபற்றி, சோவியத் யூனியன், பர்மா யூனியன் இராஜ தந்திரிகள் தங்களின் ஆழ்ந்த கவலையைத் தெரிவித்துள்ளனர்; குறிப்பாக, வெகுஜன நாசம் செய்யும் ஆயுதங்களான, அணுகுண்டு, ஜலவாயுக் குண்டுகளைப் பெருக்கிவைப்பது, ஒவ்வொரு ஆண்டும் விரிந்த அளவிலே அதிகரித்துக்கொண்டு போகின்றது. பயத்தைப் போக்கவும், மதிப்புள்ள பொருள்களுக்கும், மனித உயிர்களுக்கும் ஏற்படும் நாசத்தை தவிர்க்கவும், அணுகுண்டுகளையும், ஜலவாயுக் குண்டுகளையும், உற்பத்தி செய்வதும், பரிசோதிப்பதும், உபயோகிப்பதும், நிபந்தனையின்றித் தடை செய்யப்பப்படவேண்டும்; சம்பிரதாய ராணுவத்

தளவாடங்கள் பெருமளவுக்குக் குறைக்கப்படவேண்டும்; இத்திட்டங்கள் அமுலாக்கப்படுவதைக் கண்காணிக்க ஒரு சக்திவாய்ந்த சர்வதேசக் கட்டுப்பாடு ஏற்படுத்தப்படவேண்டும் என்று அவர்கள் கருதுகிறார்கள். இக்குறிக்கோள்களை அடைவதற்கு தீர்மானமான முயற்சிகள் எடுக்கப்பட வேண்டியது அவசர அவசியமென அவர்கள் கருதுகிறார்கள். மக்களுக்கிடையே பயத்தையும், நம்பிக்கையின்மையையும் உண்டாக்கும் இராணுவ அணிகளை ஏற்படுத்தும் கொள்கை கண்டிக்கப்படவேண்டியது எனும் ஏகோபித்த கருத்தை அவர்கள் மீண்டும் வற்புறுத்தினார்கள்; இத்தகைய அணிகளில் பங்குகொள்ளாமலிருக்கும் கொள்கைதான், தேசங்களுக்கிடையே நம்பிக்கையையும், நல்லெண்ணத்தையும் ஏற்படுத்துவதற்கு உதவும் கொள்கையாகும்; இதன்மூலம் சமாதானத்தையும், பாதுகாப்பையும் உறுதிப்படுத்துவதற்கு உதவ முடியும். சர்வதேச சமாதானத்தைப் பலப்படுத்துவதற்கும், தங்களின் எதிர்காலம் பற்றி மக்களிடையே நம்பிக்பிக்கையை உறுதிப்படுத்துவதற்கும், இராணுவ அணிகளை ஏற்படுத்துவது உதவி செய்யாது; எல்லா மக்களின் ஒன்றுபட்ட, கூட்டு முயற்சிகள்தான் அதைக்கொண்டு வரமுடியும் என அவர்கள் நம்புகிறார்கள்.

ஜினீவா மகாநாட்டின் முடிவுகளுக்கிணங்க இந்தோ-சீன அரசியல் நிலைமையைப்பற்றிய பிரச்னை எவ்வித காலதாமதமும் இன்றி தீர்க்கப்படவேண்டும். கொரியாவை மீண்டும் ஐக்கியப்படுத்தும் பிரச்னையும், சீனப் பிரதேசத்தின் பிரிக்க முடியாத பகுதியாக விளங்கும் தைவான் முதலிய தீவுகளை சீன மக்கள் குடியரசுக்குத் திருப்பிக்கொடுக்கும் பிரச்சினையும் உடனடியாகத் தீர்க்கப்படவேண்டும். தென்கிழக்கு ஆசியாவிலுள்ள நெருக்கடியைத் தளர்த்துவதற்கும், சமாதானத்தைக் கெட்டிப்படுத்துவதற்கும் இது மிகவும் அவசியம். இப்பிரச்சினைகளைத் தீர்ப்பது சர்வதேச சமாதானத்தையும் பாதுகாப்பையும் கெட்டிப்படுத்துவதற்கு உதவி செய்யும்.

ஐக்கிய நாடுகளின் கௌரவத்தையும், முக்கியத்துவத்தையும் உயர்த்துவதற்கு சீன மக்கள் குடியரசு இந்த ஸ்தாபனத்தில் அதற்கு உரித்தான இடத்தைப் பெற்றாகவேண்டும். சமாதானத்திற்கும் முன்னேற்றத்திற்கும் தேவையான சக்திவாய்ந்த சர்வதேச ஒத்துழைப்பை ஏற்படுத்துவதற்கு அனைவரையும் அணைத்துச் செல்லும் முறையில் ஐக்கிய நாடுகளின் அங்கத்தினர் பதவி இருக்கவேண்டும்; ஐக்கிய நாடுகளின் சாசஸனத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் எல்லா நாடுகளும் அதில் அனுமதிக்கப்படவேண்டும். இந்த அடிப்படையிலிருந்து சோவியத் அரசாங்கமும், பர்மா அரசாங்கமும் பதினெட்டு நாடுகளை அனுமதிப்பது பற்றி ஐக்கிய நாடுகள்முன் கனடா சமர்ப்பித்துள்ள யோசனையை ஆதரிக்கின்றன. மக்களுக்கிடையே கருத்தொருமைப்பாட்டையும் நம்பிக்கையையும் பலப்படுத்துவதற்கு தலைவர்கள் நேரடித் தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு பேச்சு வார்த்தைகளை நடத்துவதுதான் பயன் அளிக்கத்

தகுந்த ஒரு வழி; இது மக்களுக்கிடையே நேச உறவும், ஒப்பந்தமும் ஏற்படுவதில் கொண்டுவிடும் என சோவியத் யூனியனின் மந்திரி சபைத் தலைவரும், சோவியத் யூனியனின் சுப்ரீம் சோவியத்தினது தலைமைக் குழுவின் உறுப்பினர் ஒருவரும், பர்மா யூனியனின் பிரதம மந்திரியும் கருதுகிறார்கள்.

**என். ஏ. புல்கானின்**

சோவியத் யூனியன் மந்திரி சபைத்தலைவர்.

**யூநு**

பர்மா யூனியனின் பிரதம மந்திரி.

டிசம்பர் 6, 1955

# சோவியத் - பர்மா பொருளாதார உறவுகள்பற்றி

சோவியத் யூனியனின் மந்திரிசபைத் தலைவர், என். ஏ. புல்கானினும், சோவியத் யூனியனின் சுப்ரீம் சோவியத்தின் தலைமைக் குழுவின் உறுபபினரான என். எஸ். குருஷேவும், பர்மா யூனியனின் பிரதம மந்திரியான யூநூவும் வெளியிட்ட கூட்டறிக்கையில் கண்டுள்ள சோவியத் யூனியனினுக்கும் பர்மாவுக்குமிடையில் பொருளாதார, கலாச்சார, விஞ்ஞான, தொழில் நுணுக்கத் துறைகளில் ஒத்துழைப்பதற்கான கோட்பாடுகளின்படி, இரு அரசாங்கங்களின் பிரதிநிதிகளும் பர்மாவின் விவசாய வளர்ச்சிக்கான திட்டம் பற்றிய பிரச்னைகளையும், பர்மாவில் சில தொழில் நிலையங்கள் கட்டுவதுபற்றியும் விவாதித்தனர்.

விவசாய வளர்ச்சிக்கான திட்டங்களைத் தயாரிப்பதற்கும், அடிப்படையான நீர்ப்பாசன வசதிகளை ஏற்படுத்துவதற்கும், பல தொழில் நிலையங்களைக் கட்டுவதற்கும் பர்மாவின் சர்க்காருக்கு உதவியும், ஒத்துழைப்பும் அளிக்க சோவியத் சர்க்கார் சம்மதித்துள்ளது.

ஏற்றுக்கொள்ளப்பட்ட திட்டங்களை நிறைவேற்றுவதற்குத் தேவையான பொருட்களுக்கும், உழைப்பிற்கும், போதிய அளவுள்ள அரிசியைப் பெற்றுக்கொள்ள சோவியத் சர்க்கார் இசைந்துள்ளது. அப்படி கொடுக்கப்படும் அரிசி போதுமானதாக இல்லாவிடில், பல வருடங்களுக்கு நீடிக்கும் தவணைகளில், பொருள் ரூபத்தில் அளிப்பதற்கு அனுமதிக்கவும் ஒப்புக்கொண்டுள்ளது.

சோவியத் யூனியனின் சர்க்கார் வெளியிடும் இந்த நல்லெண்ணத்தைப் பர்மா யூனியனின் சர்க்கார் பெரிதும் மதிக்கிறது.

பர்மாவின் மக்களின்பால் கொண்டுள்ள மதிப்பையும், நல்லெண்ணத்தையும் வெளியிடும் வகையில், சோவியத் சாதனங்களையும், பொருட்களையும் கொண்டு ரங்கூன் நகரில் ஒரு தொழில் நுணுக்கப் போதனை நிலையத்தை, பர்மீய மக்களுக்கு அன்பளிப்பாகக் கட்டி கொடுக்கிறோம் என்ற யோசனையை, சோவியத் சார்பாக, சோவியத் யூனியனின் மந்திரி சபைத் தலைவர் என். ஏ. புல்கானினும், சோவியத் யூனியனின் சுப்ரீம் சோவியத்தின் தலைமைக் குழுவின் உறுப்பினர் என். எஸ். குருஷேவும் கூறினர். இந்த ஒரு அன்பளிப்பை சோவியத் சர்க்கார் கொடுக்க முன் வந்ததற்கான நோக்கத்தை பர்மா யூனியனின் அரசாங்கம் பெரிதும் மதிக்கிறது. ஆழ்ந்த நன்றியுணர்ச்சியுடன் இதை அன்பளிப்பாக அவர்கள் ஏற்றுக்கொள்ளுகிறார்கள்.

இதற்குப் பதிலாக, பர்மா யூனியனின் மக்களின் சார்பாக பிரதம மந்திரி யூநூ, அதற்குத் தகுந்த அளவு அரிசியையும், பர்மாவில் உற்பத்தியாகும் இதர பொருட்களையும் சோவியத் மக்களுக்கு அளிப்பதற்கு முன்வந்துள்ளார்.

என். ஏ. புல்கானினும், என். எஸ். குருஷேவும், சோவியத் மக்களின் சார்பாக இந்த அன்பளிப்பை, நன்றியறிதலுடன் ஏற்றுக் கொண்டார்கள்.

ரங்கூன், டிசம்பர் 7—1955.

# ஆப்கானிஸ்தானத்தில் சுற்றுப்பிரயாணம்

1955-ம் ஆண்டு டிசம்பர் 15 முதல் 19-ம் தேதி வரை



காபூல்: என். ஏ. புல்கானினும், என். எஸ். குருஷேவும், ஆப்கானிய மன்னர் மகம்மது ஜாஹிர் ஷாவுடன் சம்பாஷிக்கின்றனர்.

# 1955, டிசம்பர் 15-ம் தேதி ஆப்கானிஸ்தானத்தில் காபூல் விமான நிலையத்தில் வந்திறங்கியபோது என். ஏ. புல்கானின் செய்த பிரசங்கம்

திரு. பிரதம மந்திரி அவர்களே !

தாய்மார்களே ! நண்பர்களே !

நட்புறவு மிக்க ஆப்கானிஸ்தானத்து மண்ணில் காலடி எடுத்து வைப்பதில் என் நண்பர் நிகிதா செர்ஜியேவிச் குருஷேவும் நானும் மிகுந்த மகிழ்ச்சியடைகிறோம். நீண்ட நாட்களுக்கு முன்பாகவே சோவியத் மக்கள் நல்லுறவை உறுதியாக ஏற்படுத்திக்கொண்டுவிட்ட ஆப்கன் மக்களுக்கு நாங்கள் வாழ்த்துக்களையும் நல்லாசிகளையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

ஆப்கன் மன்னர் சர்க்காரின் கனிவு மிகுந்த அழைப்பை நாங்கள் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டோம். இதனால் இந்த நாட்டைப் பற்றி இன்னும் அதிகமாகத் தெரிந்து கொள்ளவும் அதனுடைய அரசியல் தலைவர்களுடன் நேரடித் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளவும் சந்தர்ப்பம் கிடைத்துள்ளது. நம் நாடுகளுக்கிடையே உள்ள நட்புறவு மிக்க சம்பந்தங்கள்,—சோவியத் அரசாங்கம் ஸ்தாபிதமாகும்போதே இதற்கு உறுதியான அஸ்திவாரமிடப்பட்டது—எப்பொழுதும் பூரண சமத்துவத்தின் அடிப்படையில் இருநாடுகளின் நன்மைக்காகவே வளர்க்கப்பட்டு வந்துள்ளன.

வீரம் செறிந்த, சலியாதுழைக்கும் ஆப்கானிய மக்களின்பால் சோவியத் யூனியனின் மக்கள் ஆழ்ந்த மதிப்பும், அனுதாபமும் கொண்டுள்ளனர் ; சமாதானத்திற்காகவும், தேச சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கும் ஆப்கானிஸ்தானம் கொஞ்சமும் வழுவாமல் செய்து வரும் முயற்சியை மிகவும் பாராட்டுகிறார்கள்.

சமத்துவத்தின் அடிப்படையிலும், இருநாடுகளின் நலவுரிமைகளுக்கும் பரஸ்பரம் மதிப்புக் கொடுப்பதின் அடிப்படையிலும் நட்புறவு மேலும் வளர்வதற்கு சோவியத் யூனியனுக்கும், ஆப்கானிஸ்தானத்திற்கும் சகல நிலைமைகளும் இருக்கின்றன.

இருநாடுகளின் மக்களின் நன்மைக்காகவும், நாடுகளிடையே சமாதானமும், ஒத்துழைப்பும் பெருகுவதற்காகவும் சோவியத்-ஆப்கன் நட்புறவு வளர்ந்து அபிவிருத்தியடையட்டும்!

## 1955, டிசம்பர் 16-ம் தேதி காபூலில் நடைபெற்ற ஒரு விருந்தின்போது சோவியத் யூனியன் மந்திரி சபையின் தலைவர் என். ஏ. புல்கானின் ஆற்றிய உரை

மேன்மை தங்கிய மன்னர் அவர்களே!

பிரதம மந்திரி அவர்களே!

தாய்மார்களே, நண்பர்களே!

சோவியத் யூனியனுடன் நட்புறவு கொண்டுள்ள உங்கள் நாட்டுக்கு விஜயம் செய்யும்படி அழைப்பு அனுப்பியதற்காகவும், எங்களுக்கு இங்கு உளமார்ந்த வரவேற்பும் உபசாரமும் அளித்ததற்காகவும் ஆப்கானிஸ்தான் மன்னர் சர்க்காருக்கு நாங்கள் வந்தனமளிக்கிறோம.

சோவியத் யூனியனுக்கும் ஆப்கானிஸ்தானத்துக்குமிடையே பல்லாண்டுகளாக இருந்துவரும் நட்புறவு, சோவியத் அரசாங்கமும், சுதந்திர ஆப்கானிஸ்தானமும் தோன்றிய நாள்முதற்கொண்டே, நெடுகிலும் சோதனைகளை சமாளித்து வந்துள்ளது. அதனுடைய வளர்ச்சியின் எல்லாக் கட்டங்களிலும், இந்த நட்புறவு, ஆப்கானிஸ்தானம், சோவியத் யூனியன் ஆகிய இருநாடுகளின் நன்மைக்காகவும் தொடர்ந்து வளர்ந்து வலிமை பெற்றுள்ளது. நம்முடைய நாடுகளிடையே நட்புறவுமிக்க, நல்லுறவு இருந்து வருகிறது என்பதை இப்பொழுது நாம் மிகுந்த திருப்தியுடன் குறித்துக்கொள்ளலாம்.

நம் நாடுகளிடையே சிநேகபூர்வமான உறவுகள் உறுதிப்படுவதில், 1921-ம் ஆண்டு பிப்ரவரி 2-ந் தேதிய சோவியத்–ஆப்கன் ஒப்பந்தமும், 1931-ம் ஆண்டு ஜூன் 24-ந்தேதிய நடுநிலைமை, அனுக்கிரமிப்பு ஒப்பந்தமும் மிக முக்கியத்துவம்வாய்ந்தவை

நம்முடைய உறவுகள் பரஸ்பரம் இருவருக்கும் நன்மைதரும் பொரு ளாதார ஒத்துழைப்பையும் அடிப்படையாகக் கொண்டுள்ளன. சோவியத் யூனியனுக்கும் ஆப்கானிஸ்தானத்துக்குமிடையே வர்த்தகம் வளர்ச்சி யடைவதில் இது பிரதிபலிக்கிறது. 1950-ல் கையெழுத்தான சோவியத்-ஆப்கன் வர்த்தகமானது, பணம் செலுத்துவது சம்பந்தமான ஒப்பந்தத் தினுல் மேலும் வளர்க்கப்பட்டுள்ளது.

இவ்வருஷம் ஒரு சோவியத் - ஆப்கன் இடைவழிப் போக்குவரத்து ஒப்பந்தம் கையெழுத்தாகியுள்ளது. ஆப்கானிஸ்தானத்தின் வெளி நாட்டு வர்த்தகத்தின் வளர்ச்சிக்கும், அதனுடைய பொருளாதார சுதந்தி ரம் உறுதிப்படுவதற்கும் இந்த ஒப்பந்தம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த தாகும். வெளிநாட்டு மார்க்கெட்டுகளுக்குச் செல்வதற்கு ஆப்கன் வியா பாரிகளுக்கு இது பரந்த சந்தர்ப்பங்களைக் கொடுக்கிறது.

பிரதேச எல்லைகளுக்கும் அரசுரிமைக்கும் மதிப்புக்கொடுப்பது, ஆக்ர மிப்பு செய்யாமை, உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாமை, சமத்துவ மும் பரஸ்பர நன்மையும், சமாதானபூர்வமான சகவாழ்வு, பொருளாதார ஒத்துழைப்பு என்ற கோட்பாடுகளையே ஆப்கானிஸ்தானத்துடன் தன் னுடைய உறவுகளில் சோவியத் யூனியன் என்றுமே கடைப்பிடித்து வரும்.

எங்களுக்கும் ஆப்கன் தலைவர்களுக்குமிடையே ஏற்படுத்திக்கொள் ளப்பட்டுள்ள நேரடித் தொடர்பு சோவியத் - ஆப்கன் உறவுகள் மேலும் வளர்வதற்கும், பலப்படுவதற்கும் துணை செய்யும் என்று நாங்கள் நம்பு கிறோம். பரஸ்பரம் அக்கறையுள்ள பிரச்னைகளின்மீது நாம் கருத்துக் களைப் பரிமாறிக்கொண்டதானது, நம் நாடுகளுக்கிடையே உள்ள பலதரப்பட்ட பிணைப்புகளை இன்னும் விரிந்த அளவில் வளர்ப்பதற்கு இரு தரப்பாரும் தயாராயிருப்பதையே எடுத்துக்காட்டியுள்ளது.

ஆசிய, ஆப்ரிக்க நாடுகளின் மக்கள் காலனி ஆட்சி முறைகளை எதிர்த்துக் கிளர்ச்சியில் இறங்கியபின், தங்களுடைய தேச சுதந்திரத்தை வெல்வதிலும், உறுதிப்படுத்திக் கொள்வதிலும சமீப வருடங்களில் பெரிய அளவுக்கு முன்னேறியுள்ளனர். ஆயினும், காலனியாளர்கள், இந்தப் புதிய நிலமைகளிலும், புதிதாக விடுதலைபெற்ற நாடுகளின்மீது, தங்களுடைய நலவுரிமைகளுக்குத் தகுந்ததான ஆட்சிகளைச் சுமத்துவ தற்கு கஜகர்ணம் போட்டு வருகின்றனர்.

தற்பொழுது, அவர்கள் தங்கள் காலனிக் கொள்கையை பலமுறை களிலும் திரையிட்டு மறைத்து வருகின்றனர். சில ஆசிய ஆப்ரிக்க நாடு களை பல ஒப்பந்தங்கள், உடன்படிக்கைகள் என்ற வலைக்குள் சிக்க வைகக முயற்சித்து வருகின்றனர். சமாதானத்திற்கும், நாடுகளின் பாதுகாப் புக்கும் விரோதமான பலவித ஆக்கிரமிப்பு அணிகளில்' இழுத்துச்சேர்த்து வருகின்றனர்.

சோவியத் யூனியன் எப்பொழுதும் காலனியாதிக்கத்தை—அதன் உருவம் எப்படி யிருந்தபோதிலும்—எதிர்த்து வந்துள்ளது. தேச சுதந்திரத்திற்காக ஆசிய,ஆப்பிரிக்க நாடுகளின் மக்கள் நடத்திவரும் போராட்டத்திற்கு நாங்கள் அனுதாபம் செலுத்துகிறோம். நாங்கள் இதை எப்பொழுதும் மறைத்தது கிடையாது. இப்பொழுதும் மறைப்பது கிடையாது.

ஆப்கானிஸ்தானத்தின் சுதந்திரமான, சமாதான பூர்வமான வெளிநாட்டு கொள்கையானது, கூட்டு அணிகள் சேர்ப்பதற்கு எதிர்ப்பு தெரிவித்தது. தன்னுடைய அண்டை நாடுகளுடனும், இதர எல்லா நாடுகளுடனும் சிநேகபூர்வமான உறவுகள் வைத்துக் கொள்வதற்கு அது முயன்று வருகிறது. இந்த கொள்கைக்கு சோவியத் யூனியன் மிகுந்த மதிப்புக் கொடுக்கிறது.

புஷ்டூனிஸ்தான் பிரச்னை சம்பந்தமாக ஆப்கானிஸ்தான் பின்பற்றி வரும் கொள்கையின்பால் எங்களுக்கு அனுதாபமுண்டு. இந்தப் பிரச்னையை நியாயமாகப் பைசல் செய்வதற்கு சோவியத் யூனியன் நிற்கிறது. புஷ்டூனிஸ்தானில் வாழும் மக்களின் ஜீவாதாரமான உரிமைகளைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் இப்பிரச்னையை சரியாகப் பைசல் செய்ய முடியாது.

சகல மக்களும் சமாதானத்தைப் பாதுகாக்க விரும்புகின்றனர். நடுநிலைமையாக இருப்பது, கூட்டணிகளில் சேராமல் இருப்பது, என்ற கொள்கை, நாடுகளின் பாதுகாப்பை உறுதிப்படுத்துவதற்கும், அவைகளின் தேச சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கும் ஏற்ற நலன்களை மேலும் முன்னுக்கு எடுத்துச் செல்வதற்கு மிகவும் தகுதியானதாக இருக்கிறது என்றும், அக் கொள்கை சமாதானத்தைப் பாதுகாப்பதற்குத் துணை செய்கிறது என்றும் நாங்கள் கருதுகிறோம்.

சமாதானத்தைப் பாதுகாப்பதற்கும், அதை உறுதிப்படுத்துவதற்கும் ஆப்கானிஸ்தான் சர்க்கார் தன் முயற்சிகளைத் தொடர்ந்து செய்யும் என்று நாங்கள் நம்புகிறோம்.

மேன்மை தங்கிய ஆப்கானிஸ்தான் மன்னர் சிறந்த தேகாரோக்கியத்துடன் வாழ நாங்கள் ஆசி கூறுகிறோம்.

சோவியத் யூனியனுக்கும் ஆப்கானிஸ்தானத்துக்கு மிடையில் நட்புறவு வளர்ந்து பலமடையட்டும்.

உலகெங்கும் சமாதானமும், நாடுகளின் பாதுகாப்பும் நீடூழி வாழ்க.

# 1955, டிசம்பர் 17-ல், காபூல் இராணுவப்பள்ளியில் என். ஏ. புல்கானின், ஆற்றிய சொற்பொழிவு

மேன்மை தங்கிய ஜெனரல் அவர்களே,

இந்தப் பள்ளிக்கூடத்திற்கு இங்கு வந்துள்ள தோழர் நிகிதா செர்ஜியேவிச் குருஷேவும், நானும், இதர தோழர்களும் உள்ளன்புமிக்க உங்கள் வரவேற்புரைக்காக எங்களுடைய மிகவும் இருதய பூர்வமான வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்,

உங்களுடைய சொற்பொழிவில் தாங்கள் விவரித்தபடி உங்கள் பள்ளிக்கூடத்தின் சரித்திரம், தேச சுதந்திரத்திற்கான போராட்டத்தில் ஆப்கன் மக்களுடையவும், ஆப்கன் ராணுவத்துடையவும் வீரத்திற்கும், விடாமுயற்சிக்கும் அத்தாட்சியாக விளங்குகிறது. இன்றைய நிலைமையில் உங்களுடைய முயற்சிகளையும், ராணுவத் தலைவர்களுக்குப் பயிற்சி கொடுப்பதற்கு உங்கள் சர்க்கார் காட்டும் அக்கறையையும் நாங்கள் புரிந்துகொள்ளுகிறோம்.

சோவியத் மக்களின் சார்பிலும், சோவியத் யூனியனின் ராணுவப் படைகளின் சார்பிலும், எங்களுடைய சொந்த சார்பிலும் நாங்கள் உங்களுக்கு வாழ்த்துக் கூறுவதில் மகிழ்ச்சியடைகிறோம்.

உங்களுடைய முயற்சிகளில் உங்களுக்குப் பூரண வெற்றி கிடைக்க நாங்கள் ஆசி கூறுகிறோம்.

பிறகு, டிசம்பர் 17ந் தேதியன்று மாலையில், காபூல் நகரக் கவுன்சில் தலைவரால் ஆபீஸர்களின் கிளப்பில், சோவியத் விருந்தாளிகளுக்கு ஒரு வரவேற்பு, விருந்துபசாரம் நடத்தப்பட்டது.

காபூல் நகரக் கவுன்சிலின் தலைவர் நடத்திய இந்த வரவேற்பில், பிரதமமந்திரி முகம்மது தாவுத்தும் இதர மந்திரிகள் அனைவரும், வெளிநாட்டு ராஜதந்திரிகளும், காபூல் பொதுஜனப் பிரதிநிதிகளும் கலந்து கொண்டனர்.

# டிசம்பர் 17-ந் தேதியன்று காபூல் நகர மேயர் அளித்த வரவேற்பில் என். ஏ. புல்கானின் செய்த பிரசங்கம்

மேன்மைதங்கிய திரு. பிரதம மந்திரி அவர்களே,

மேன்மைதங்கிய, காபூல் நகர மேயர் அவர்களே,

பிரமுகர்களே,

உங்களுடைய உள்ளன்புமிக்க, வரவேற்புக்கும் உபசாரத்திற்கும் நாங்கள் மிகவும் வந்தனம் செலுத்துகிறோம்.

நீண்டகாலமாக சோவியத் யூனியனுக்கும், ஆப்கானிஸ்தானுக்கு மிடையில் உறுதியான நட்புறவுப் பிணைப்புகள் இருந்துவந்துள்ளன. எங்களுடைய நாடு அதனுடைய உள்நாட்டு, விரோதிகளையும், வெளியி லிருந்துவந்த விரோதிகளையும் எதிர்த்து நடத்திய மூர்க்கமான போராட் டத்தில் இந்த நட்புறவுக்கு அஸ்திவாரமிடப்பட்டது. அந்த சமயத்தில் ஆப்கானிஸ்தானம், காலனியாட்சியாளர்களை எதிர்த்து நடத்திய வீரம் செறிந்த போராட்டத்தில் தன்னுடைய சுதந்திரத்தை வென்று, அர சுரிமை படைத்த நாடாயிற்று.

அதைத் தொடர்ந்த வருடங்களிளெல்லாம் நம்முடைய நாடுகளுக் கிடையே, சினேகபூர்வமான உறவுகள், எம்முடைய மகத்தான போதகா சிரியரும், கீழ்த்திசை நாடுகளின் மக்களின் மாண்புமிக்க நண்பருமாகிய விளாடிமீர் லெனின் பிரகடனப்படுத்திய கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டிருந்தன. ஒருவர் மற்றொருவருடைய பிரதேச எல்லைகளை மதித்து நடப்பது, ஒருவர் மற்றொருவருடைய உள்நாட்டு விவகாரங் களில் தலையிடாமை என்ற கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டிருந் தன. வேறுபட்ட அரசியலமைப்புகளைக் கொண்டுள்ள நாடுகள் அண்டைய அயலாராக சகவாழ்வு நடத்தும் இந்த உன்னதமான கோட்பாடுகள், ஆப்கானிஸ்தானத்துடன் நம்முடைய உறவுகளுக்கு அடித்தளமாக இருந்துவந்துள்ளன. இப்பொழுதும் இருந்துவருகின்றன.

எங்களுடைய விஜயம், நம்மிருநாடுகளின் மக்களிடையே நட்புற வைப் பலப்படுத்தி, விரிவுபடுத்தி, பொருளாதார, கலாச்சார துறைகளி லும் இதர துறைகளிலும் நம்முடைய பிணைப்புகளை வளர்ப்பதற்கு உதவும் என்று நாங்கள் நம்புகிறோம்.

ஆப்கன் மக்களுக்கு, காலனியாளர்கள் பெரிய அளவுக்கு தீம்புகள் செய்துள்ளனரென்றும், உங்கள் நாட்டில் அவர்களின் ஆட்சியால் பொருளாதார வளர்ச்சி பாதிக்கப்பட்டுள்ளதென்பதையும் சோவியத் மக்கள் நன்றாக உணருகிறார்கள். தங்களுடைய நாட்டின் தேசீய சுதந்தி

ரத்தைப் பலப்படுத்துவதற்காக ஆப்கன் மக்கள் எடுத்துக்கொள்ளும் முயற்சிகளின்பால் சோவியத் மக்களுக்கு மிகுந்த அனுதாபம் உண்டு.

சோவியத் யூனியன் மக்களுக்கும் ஆப்கானிஸ்தான் மக்களுக்கும் இடையே வளர்ந்துவரும் நட்புக்கு அடையாளமாக, நாங்கள் சோவியத் யூனியன் சர்க்கார் சார்பிலும், சோவியத் மக்கள் சார்பிலும் காபூல் நகரத்திற்காக ஆப்கானிஸ்தான் சர்க்காருக்கு 15 மோட்டார் பஸ்களையும், 109 நோயாளிகள் தங்கும் வசதியுள்ள ஒரு ஆஸ்பத்திரிக்குவேண்டிய வைத்திய சாதனங்களையும் நாங்கள் அன்பளிப்பாகக் கொடுக்கிறோம். இந்த அன்பளிப்புகளை ஏற்றுக்கொள்ளும்படி ஆப்கானிஸ்தான் சர்க்காரையும், காபூல் நகர அதிகாரிகளையும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

இந்த தலைநகரின் எல்லாப் பிரஜைகளுக்கும், ஆப்கானிஸ்தான் மக்களுக்கும், உங்களுக்கும் வெற்றியும் நல்வாழ்வும் பெருகட்டுமென்று நாங்கள் மனமார வாழ்த்துகின்றோம்.

உங்களுடைய உள்ளன்புமிக்க, வரவேற்புக்கும் உபசாரத்திற்கும் மீண்டுமொருமுறை உங்களுக்கு நாங்கள் வந்தனமளிக்கிறோம். நம் நாடுகளுக்கிடையே நட்புறவும் ஒத்துழைப்பும் வளர்ந்து மலரட்டும்! (பலத்த கரகோஷம்).

## 1955 டிசம்பர் 13-ந் தேதி காபூல் ஸ்டேடியத்தில் என். எஸ். குருஷேவின் பிரசங்கம்

அன்புமிக்க நண்பர்களே,

நட்புரிமைமிக்க ஆப்கானிஸ்தானின் தலைநகரமாகிய காபூல் நகரத்தில் உங்களுடைய விருந்தினர்களாக நாங்கள் சில நாட்களாக இருந்து வருகிறோம்.

ஆப்கானிஸ்தானின் பிரதம மந்திரியாகிய மேன்மைதங்கிய முகம்மது தாவூத்தின் அழைப்பிற்கிணங்க நாங்கள் இங்கு வந்தோம். இங்கு ஆப்கானிஸ்தான் மக்களும், சர்க்கார் தலைவர்களும் எங்களுக்கு உள்ளன்புமிக்க வரவேற்பை அளித்துள்ளனர்.

சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுகளின்பாலும், எங்கள் நாட்டின் மக்களின்பாலும் ஆப்கானிய மக்களுக்கு உள்ள மதிப்பின் காரணமாக

வும் அன்பின் காரணமாகவும்தான் உங்கள் நாட்டில் எங்கும் எங்களுக்கு இவ்வாறு திறந்த மனதுடன் உபச்சாரம் நடைபெறுகிறது என்று நாங்கள் கருதுகிறோம்.

நம் நாடுகளிடையே நட்புறவுக்கு ஆழமான வேர்கள் இருக்கின்றன.

இந்த நட்புக்கு மூலகாரணம் மாண்புமிக்க லெனினே யாவார். அவர், முதல் ஆப்கன் தூதரை நேரில் சந்தித்து அவருடன் பேசியுள்ளார்.

அன்றிலிருந்து சோவியத் யூனியனுக்கும் ஆப்கானிஸ்தானத்துக்கும் இடையே நட்புறவு தொடர்ந்து வளர்ந்து அபிவிருத்தி அடைந்துள்ளது. நம் நாடுகளின் சர்க்கார்களுக்கும், அரசியல் அமைப்புகளுக்குமிடையே வேறுபாடுகள் இருந்தபோதிலும், இந்த இரண்டு நாடுகளுக்குமிடையே அண்டை அயல் நாடுகளின் நல்லவிதமான ஒத்துழைப்புக்கு உதாரணமாக இந்த நட்புறவு வளர்ந்துவந்துள்ளது. (கரகோஷம்) தகராறுகளினுலேயோ, அல்லது சச்சரவுகளினுலேயோ இந்த நட்புறவு என்றும் பாதகமடைந்ததில்லை. இது என்றும் ஏற்படாது என்றும் எங்களுக்கு ஆழ்ந்த நம்பிக்கை உண்டு.

நட்புறவுமிக்க ஆப்கானிஸ்தானத்திற்கு எங்களின் வருகை, பரஸ்பர நல்லெண்ணம் மிகுந்த சூழ்நிலையில் நடைபெற்றுவரும் பேச்சுவார்த்தைகள் நம்முடைய அண்டை அயலார் நல்லுறவை மேலும் பலப்படுத்தும்.

ஆப்கானிஸ்தான் ஒரு சுயேச்சையான கொள்கையைக் கடைப்பிடிப்பதைக்கண்டு நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம் என்பதை மிகவும் மனப்பூர்வமாக உங்களுக்குக் கூறுகிறோம். (கரகோஷம்) தன் நாட்டின் நலவுரிமைகளைத் காத்துவரும் ஆப்கானிய சர்க்கார் பல்வேறு ஆக்கிரமிப்பு ராணுவக் கூட்டணிகள் ஏற்படுத்தப்படுவதை விரும்பவில்லை. அது கண்டிப்பான நடுநிலைமைக் கொள்கையைக் கடைப்பிடித்து வருகிறது. அத்தகைய கொள்கை ஆப்கானிஸ்தானின் பாதுகாப்பையும், சுதந்திரத்தையும் உத்திரவாதம் செய்கிறது. (கரகோஷம்)

சோவியத் யூனியனுக்கும், ஆப்கானிஸ்தானத்துக்குமிடையே நட்புறவும், கறாரான ஒத்துழைப்பும் வளர்ந்து அபிவிருத்தியடையட்டும்! (பலத்த கரகோஷம்) சமாதானமும் நாடுகளின் மக்களின் பாதுகாப்பும் நீடூழி வாழட்டும்! (பலத்த கரகோஷம்)

# 1955, டிசம்பர் 18-ம் தேதி என். ஏ. புல்கானினும், என். எஸ். குருஷேவும் காபூலில் நடத்திய வரவேற்பு வைபவத்தில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

உயர் சிறப்புடைய பிரதம மந்திரி அவர்களே !

மேன்மைதங்கிய கனவான்களே !

விருந்தோம்பலில் சிறந்த உங்கள் தலைநகரில் நாங்கள் தங்கியிருந்த காலம் முடிவுறும் தருணம் நெருங்கிவிட்டது. நாங்கள் காபூலில் செலவழித்த சில நாட்களில், எங்களுக்கு அளிக்கப்பட்ட வாய்ப்பின் காரணமாக, உங்கள் தலைநகரின் வாழ்வின் சில அம்சங்களோடு பரிச்சயம் செய்து கொள்ள முடிந்தது. மேன்மைதங்கிய மன்னர் முகம்மது ஜாஹிர் ஷா வைப் பேட்டி காணும் வாய்ப்பளிக்கப்பட்டது. உயர்சிறப்புடைய பிரதம மந்திரி முகம்மது தாவூதுடனும், அவர் சகாக்களுடனும் நாங்கள் பேச்சு வார்த்தைகள் நடத்தினோம்.

உங்களுடன் சேர்ந்து, நாங்கள், மகத்தான, பயனளிக்கக் கூடியதோர் கடமையை நிறைவேற்றியுள்ளோம். அன்பும், நட்புணர்வும் நிறைந்த சூழ்நிலையில், நம்மிரு நாடுகளுக்கிடையே ஒத்துழைப்பையும், தொடர்புகளையும் மேலும் ஏற்படுத்துவதற்கான வழிவகைகள் பற்றி நாங்கள் விவாதித்தோம்; சர்வதேச வாழ்வின் பிரதான அம்சங்கள் பற்றி அபிப்ராயங்களைப் பரிமாறிக்கொண்டோம்.

இவ்விதம் நேசபூர்வமான முறையிலே அபிப்ராயங்களைப் பரிமாறிக் கொண்டதின் விளைவாக, இன்று நாங்கள் கையொப்பமிட்ட சோவியத்-ஆப்கன் கூட்டறிக்கை தயாராகியது.

ஆப்கனிஸ்தான மன்னரின் சர்க்காரும், சோவியத் சர்க்காரும், சர்வதேச நிலைமையைப் பற்றிய கணிப்பிலும், தீர்க்கப்படாத சர்வதேசப் பிரச்னைகளைத் தீர்க்கவேண்டிய வழிவகைகள் பற்றியும் பல ஒருமித்த கருத்துக்களைக் கொண்டுள்ளது பற்றி திருப்தியுடன் நாங்கள் குறிப்பிட முடியும். (நீண்ட கரகோஷம்).

சமாதான சகவாழ்வுக்கான ஐம்பெரும் கோட்பாடுகளைக் கடைப்பிடிப்பதென நாங்கள் அறிவித்துள்ளோம்; நம்மிரு நாடுகளுக்கிடையே உள்ள உறவுகளுக்கு வேண்டிய அழிக்கமுடியாத அஸ்திவாரமாக அவை விளங்கவேண்டும். ஐம்பெரும் கோட்பாடுகளுக்குத் தங்கள் ஆதரவை மேலும் மேலும் பல நாடுகள் தெரிவித்து வருகின்றன; சமாதானத்தைப் பாதுகாக்கவும், மக்களுக்கிடையே பரஸ்பரக் கருத்தொற்றுமையை ஏற்படுத்தவும் தேவையான உறுதியுள்ள அஸ்திவாரமாக இது, அந்நாடுகளால் கருதப்படுகிறது.

சமாதான உணர்வால் உந்தப்பட்டு, நம்மிரு நாடுகளுக்கிடையே நல்லதோர் அண்டை நாட்டுறவைப் பலப்படுத்தி, வளர்ப்பது எனும் நோக்குடன், சோவியத்-ஆப்கன் நாடுகளுக்கிடையே அனுக்கிரமிப்பு, நடுநிலைமைக் கொள்கையைப் பின்பற்றுவதற்காகச் செய்யப்பட்டிருந்த ஒப்பந்தத்தை மேலும் நீடிப்பதற்கான இராஜீயப் பத்திரத்தில் நாங்கள் கையொப்பமிட்டோம்.

சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாக நம்மிரு நாடுகளுக்கிடையே நிலவிவந்த அண்டைநாட்டுறவில் பின்பற்றப்பட்டு வந்த அடிப்படைக் கோட்பாடுகளைக் கொண்டுள்ள நல்லதோர் தஸ்தாவேஜாகும் அது.

சமத்துவம், பரஸ்பர அனுகூலம் என்ற கோட்பாடுகளினடிப் படையில்தான் சோவியத் யூனியன் இதர நாடுகளுடன் தனக்குள்ள பொருளாதாரத் தொடர்புகளை எப்பொழுதுமே கொண்டிருந்து வருகிறது. பொருளாதார ஒத்துழைப்பைப் பொறுத்தவரை, அது சுயநலமற்றதாகவும், எவ்வித அரசியல் தளைகளும் இல்லாததாகவும் இருக்கவேண்டுமென்பதே எங்களின் கண்ணோட்டமாக இருந்தது; இப்பொழுதும் இருக்கிறது.

சோவியத் யூனியனுக்கும், ஆப்கனிஸ்தானத்திற்குமிடையே இருக்க வேண்டிய பொருளாதாரத் தொடர்புகள் பற்றி, இன்று நாங்கள் கையொப்ப மிட்டு, வெளியிட்ட சோவியத்-ஆப்கன் கூட்டறிக்கையானது, இச் சந்தர்ப்பத்தில் விசேஷமாகக் குறிப்பிடப்பட வேண்டியதாகும். நம்முடைய பரஸ்பரப் பொருளாதார உறவுகளை வளர்ப்பதற்கு இந்த அறிக்கை விசேஷ முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இந்த உறவுகளின் சர்வாம்சங்களையும் வளர்ப்பதற்குத் தேவையான அனைத்தையும் சோவியத் சர்க்கார் தொடர்ந்து நிறைவேற்றும்.

எங்களது ஆப்கனிஸ்தான் விஜயத்தின் பிரதான விளைவுகள் இவை. இவை எல்லாவற்றிலும் மிக முக்கியமானது, நாமிருவரும் ஒருவரையொருவர் மேலும் நன்றாக அறிந்துகொண்டதேயாகும்; நாங்கள் பேச்சு வார்த்தைகள் நடத்திய காலத்தில், கருத்தொற்றுமையையும், முழுமையான தெளிவையும் ஏற்படுத்த முடிந்துள்ளது; அத்துடன், பல விஷயங்களில் ஒத்துழைப்பிற்கான மிகத் தெளிவுடைய ஒரு திட்டத்தையும்கூட தயாரிக்க முடிந்துள்ளது. இவை எல்லாம் சோவியத், ஆப்கானிய மக்களுக்கிடையே நல்லதோர் அண்டை நாட்டுறவையும், நேசத்தையும் ஏற்படுத்துவதற்கு புதியதோர் உந்தும் சக்தியாக விளங்கும்.

சோவியத்-ஆப்கன் உறவுகளில் ஏற்பட்டுள்ள வெற்றிகரமான வளர்ச்சியானது, மக்களுக்கிடையே சமாதான சகவாழ்வு, நட்புறவு, ஒத்துழைப்பு என்பவை நிலவவேண்டு மென்பதை எதிர்ப்பவர்களின் கொள்கையின் திராணியற்ற தன்மையைத் தெளிவாக்குகிறது.

மாறுபட்ட அரசியல் அமைப்புகளை உடைய இராஜ்யங்களுக்கிடையே நட்புறவும் ஒத்துழைப்பும் சாத்தியம் மட்டுமல்ல, அவசியமும்கூட; அதை

மேலும் வெற்றிகரமாக வளர்க்கவும் முடியும் என்பதற்கு தக்க சான்ருக விளங்குகிறது இன்று காபூலில் கையொப்பமிடப்பட்ட தஸ்தாவேஜுகள். (கரகோஷம்).

அரசாங்கத் தலைவர்கள் ஏற்படுத்திக் கொண்ட நேரடித் தொடர்பானது, பொதுவாக இராஜ்யங்களுக்கிடையே நேச உறவை ஏற்படுத்துவதற்கும், குறிப்பாக நம்மிரு நாடுகளிடையே அதை வளர்ப்பதற்கும் கணிசமான அளவு உதவி செய்கிறது. சோவியத் யூனியனுக்கும், ஆப்கனிஸ்தானத்திற்குமிடையே நட்புறவையும், ஒத்துழைப்பையும் வளர்ப்பதற்கு வேண்டிய பாதையில் குறிப்பிடத்தக்க அளவு அடி எடுத்து வைப்பதற்கு எங்களின் ஆப்கனிஸ்தான விஜயம் உதவியுள்ளது.

மேன்மை தங்கிய பிரதம மந்திரி முகம்மது தாவூத் அவர்களை, அவருக்கு வசதி ஏற்படும்பொழுது, சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்யுமாறு, சோவியத் சர்க்காரின் சார்பாக நாங்கள் அழைத்தோம். பிரதம மந்திரி இவ்வழைப்பை ஏற்றுக்கொண்டார்; 1956-ல் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்ய சம்மதித்துள்ளார்.

இந்த விஜயமும், நாம் மேலும் ஏற்படுத்திக்கொள்ளும் தொடர்புகளும், நம்மிரு நாடுகளுக்குமிடையே நட்புறவையும், ஒத்துழைப்பையும் பலப்படுத்தி, வளர்ப்பதற்குத் துணை புரியும். (பலத்த கரகோஷம்)

விருந்தோம்பல் நிறைந்த உங்கள் நாட்டை விட்டு நாளை புறப்படுகிருேம். சோவியத் மக்களையும், அரசாங்கத்தையும் போலவே, ஆப்கனிஸ்தானின் மக்களும், சர்க்காரும், நம்மிரு நாடுகளுக்குமிடையே நல்லதோர் அண்டை நாட்டு உறவையும், நமது நட்பையும், ஒத்துழைப்பையும் சகல வழிகளிலும் பலப்படுத்தி, வளர்ப்பார்கள் என்ற ஆழ்ந்த நம்பிக்கையுடன் நாங்கள் செல்லுவோம். (கரகோஷம்)

சோவியத் - ஆப்கன் நட்புறவும், ஒத்துழைப்பும் நீடூழி வாழ்க!

மக்களிடையே சமாதானமும், ஒத்துழைப்பும் நீடூழி வாழ்க! (நீண்ட பலத்த கரகோஷம்)

# 1955 டிசம்பர் 19-ந்தேதி ஆப்கானிஸ்தானத்திலிருந்து புறப்படுமுன் காபூல் விமான நிலையத்தில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

மேன்மைதங்கிய திரு பிரதம மந்திரி அவர்களே,
கனவான்களே,

நேசபூர்வமான உபசாரம் நிறைந்த உங்கள் நாட்டைவிட்டுப் புறப்படுமுன், எங்களுக்களித்த இதயபூர்வமான, அன்பு கனிந்த வரவேற்பிற்காக, ஆப்கனிஸ்தான மன்னரின் சர்க்காருக்கும், மேன்மைதங்கிய பிரதம மந்திரி அவர்களே உங்களுக்கு நேரடியாகவும், உங்கள் மக்களுக்கும் எங்களின் உளமார்ந்த நன்றியை நாங்கள் தெரிவித்துக்கொள்கிறோம்.

பரஸ்பரக் கருத்தொற்றுமையும், அன்பும் நிறைந்ததோர் சூழ்நிலையில், நாம் ஏற்படுத்திக்கொண்ட நேரடித் தொடர்பும், சந்திப்புகளும், நல்ல பலன்களை அளித்துள்ளன.

நேற்று நாம் கையொப்பமிட்ட முக்கியமான தஸ்தாவேஜுகள், சோவியத் - ஆப்கன் உறவுகளின் வளர்ச்சியிலே புதியதோர் கட்டத்தைக் குறிக்கின்றன. நம்மிரு நாடுகளுக்கிடையே வளர்ந்துவரும் நேச உறவுகளுக்கு அவை எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றன; நம் மக்களின் நன்மைக்காகவும், நம் நாடுகளின் செழிப்பிற்கும், நலனுக்காகவும், சர்வாம்ச ஒத்துழைப்பை ஏற்படுத்துவதற்கு நாம் செய்யும் பரஸ்பர முயற்சிக்குச் சான்றாக அவை விளங்குகின்றன.

இங்கு ஏற்படுத்திக்கொண்ட நேரடித் தொடர்பானது, மேன்மைதங்கிய பிரதம மந்திரி அவர்கள் மாஸ்கோவிற்கு விஜயம் செய்யும் பொழுது, பயன்தரத்தக்க வகையிலே மேலும் தொடரப்படும் என்பது எங்களின் ஆழ்ந்த துணிபு.

நம்முடைய நட்புறவும், ஒத்துழைப்பும் தொடர்ந்து வளர்ந்து, பெரிதும் பலமடையும் என்ற ஆழ்ந்த நம்பிக்கையை எங்கள் உள்ளங்களிலே சுமந்து செல்கிறோம்.

சோவியத் யூனியனுக்கும், ஆப்கனிஸ்தானத்திற்குமிடையே உள்ள நட்புறவும், ஒத்துழைப்பும் நீடூழி வாழ்க!

வணக்கம்!

# 1955 டிசம்பர் 19-ந்தேதி ஆப்கானிஸ்தானத்திலிருந்து புறப்படு முன் காபூல் விமான நிலையத்தில் என். எஸ். குருஷேவ் நிகழ்த்திய சொற்பொழிவு

அன்புள்ள நண்பர்களே,

உங்கள் நாட்டில் நாங்கள் தங்கியிருந்த, மிகச்சுருக்கமான, ஆனால் பெரிதும் பயன்தரத்தக்க நாட்கள் முடிவுக்கு வந்துவிட்டன. நம்மிரு நாடுகளுக்கிடையே நட்புறவும், பயன்தரத்தக்க ஒத்துழைப்பும் மேலும் வளர்ந்துள்ளது என்ற நம்பிக்கையுடன், நேச நாடான ஆப்கனிஸ்தானத்தின் தலைநகராம் காபூலை விட்டுப் புறப்படுகிறோம். நேற்றுக் கையொப்பமிடப்பட்ட சோவியத் – ஆப்கன் கூட்டறிக்கையிலும், நடுநிலைமை, அனுக்கிரமிப்பு ஒப்பந்தத்தை நீடிப்பதற்காக அங்கீகரிக்கப்பட்ட இராஜீயப் பத்திரத்திலும், சோவியத் யூனியனுக்கும் ஆப்கனிஸ்தானத்திற்குமிடையே பொருளாதார உறவுகள் ஏற்படுத்துவது பற்றிய சோவியத்-ஆப்கன் கூட்டறிக்கையிலும் இது வெளிப்படுத்தப்பட்டது. ஆப்கானிஸ்தான் தலைவர்களுடனும், மக்களுடனும் நாங்கள் நடத்திய நேசமிகுந்த பேச்சுவார்த்தைகளிலும், சந்திப்புகளிலும்கூட இது வெளிப்படுத்தப்பட்டது.

நம்மிரு நாடுகளுக்குமிடையே நேசஉறவுகள் வளர்ந்து, மேலும் பலம்பெறும் என்ற உறுதியான நம்பிக்கையுடன் நாங்கள் ஆப்கானிஸ்தானத்தை விட்டுப் புறப்படுகிறோம். முப்பத்தாறு ஆண்டுகளுக்கு மேலாக சோவியத் யூனியனுக்கும், ஆப்கானிஸ்தானத்திற்குமிடையே நிலவிவரும் நல்லதோர் அண்டைநாட்டு உறவுகள் நம்மிரு நாட்டு மக்களுக்கும் அனுகூலமானதாகவே இருந்துவந்துள்ளன என்ற உண்மையை அடிப்படையாகக் கொண்டது எங்களுடைய இந்தத் துணிபு. நம்மிரு நாடுகளுக்கிடையே உள்ள நட்புறவானது, மிகமிகச் சிக்கலான சர்வதேச நிலைமைகளில் புடம்போட்டெடுக்கப்பட்டது; எத்தகைய ஊசலாட்டங்களினாலோ, சந்தேகங்களினாலோ பாதிக்கப்படாதது.

இதயபூர்வமான, அன்புகனிந்த வரவேற்பை எங்களுக்கு அளித்ததற்கும், எங்களிடமும் எங்கள் நாட்டிடமும், சோவியத் மக்களிடமும் நீங்கள் கொண்டுள்ள கருணை நிறைந்த போக்கிற்கும், மேன்மைதங்கிய திரு. பிரதம மந்திரி முகம்மது தாவூத் அவர்களே, உங்களுக்கும், ஆப்கானிஸ்தானத்தின் தலைவர்கள் யாவருக்கும், விருந்தோம்பல்நிறைந்த உங்கள் நாட்டு மக்கள் அனைவருக்கும் மீண்டுமொருமுறை நன்றி தெரிவிக்க என்னை அனுமதியுங்கள்.

வணக்கம், அருமை நண்பர்களே.

# சோவியத் யூனியன் மந்திரி சபைத் தலைவர் என். ஏ. புல்கானினும், சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத் தலைமைக் குழுவின் உறுப்பினர் என். எஸ். குருஷேவும், ஆப்கானிஸ்தான் பிரதம மந்திரி முகமது தாவூதும் விடுத்த கூட்டறிக்கை

ஆப்கானிஸ்தானின் பிரதம மந்திரியின் அழைப்பிற்கிணங்க, சோவியத் யூனியன் மந்திரிசபைத் தலைவர் என். ஏ. புல்கானினும், சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத் தலைமைக்குழு உறுப்பினர் என். எஸ். குருஷேவும், அவர்களுடன் வந்துள்ள இதரர்களும் 1955, டிசம்பர், 15ல், ஆப்கானிஸ்தானத்தின் தலைநகரான காபூலுக்கு வந்துசேர்ந்தனர். பிரதம மந்திரி மேன்மைதங்கிய முகம்மது தாவூதையும், ஆப்கன் சர்க்காரின் இதர உறுப்பினர்களையும் அவர்கள் சந்தித்தனர். டிசம்பர் 16, 17, 18 தேதிகளில், இரு பக்கங்களின் நலனுக்கான பிரச்னைகள்பற்றி அவர்கள் பேச்சுவார்த்தைகள் நடத்தினர்.

சோவியத் அரசாங்கத் தலைவர்கள், நேசம் நிறைந்த அண்டை நாடான ஆப்கனிஸ்தானத்திற்குச் செய்த இந்த விஜயமானது, உண்மையும், பரஸ்பர நம்பிக்கையும் நிறைந்த ஓர் சூழ்நிலையில், அவர்களின் சமாதானப் பற்றுள்ள, நல்லதோர் அண்டைநாட்டு உறவுக்கொள்கையை வகுப்பதற்கு வாய்ப்பளித்தது; ஆப்கனிஸ்தானம் பின்பற்றி வந்த நடுநிலைமைக் கொள்கையைக் கௌரவிப்பது என்ற அடிப்படையில், இரு நாடுகளுக்கு மிடையிலுள்ள அரசியல், பொருளாதார, கலாச்சார உறவுகளை மேலும் வளர்ப்பதற்கான வாய்ப்புகள்பற்றியும் பரிசீலனை செய்ய முடிந்தது.

இத்தகைய அபிப்ராயப் பரிவர்த்தனையானது கீழ்க்கண்ட பிரச்னைகளில் ஒரு ஒப்பந்தம் ஏற்படுவதில் முடிந்தது:

சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுகளின் யூனியனது சர்க்காரும், ஆப்கானிய மன்னரின் அரசாங்கமும், இரு நாடுகளுக்குமிடையே யுள்ள நேசபூர்வமான அரசியல், பொருளாதார, கலாச்சார உறவுகளை விஸ்தரிப்பதென முடிவு செய்துள்ளன; இது இரு நாடுகளின் நலன்களுக்கும் உகந்ததாகும்.

இதுகாறும், தங்களின் தேசிய அரசுரிமையையும், சுதந்திரத்தையும் இழந்துள்ள மக்களும், நாடுகளும், ஐக்கிய நாடுகள் சாஸனத்தில் வரையறுக்கப்பட்டுள்ளபடி, வெளியாரின் கட்டாயமோ, பலவந்தமோ இல்லாத முறையில், தங்கள் எதிர்காலத்தைப் பற்றி முடிவு செய்வதற்கு அவர்

களுக்கு உரிமையுண்டு என சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுகளின் யூனியனது சர்க்காரும், ஆப்கானிய மன்னரின் அரசாங்கமும் உறுதியாக நம்புகின்றன.

பிரதேச உரிமையையும், அரசுரிமையையும் பரஸ்பரம் கௌரவிப்பது ; அனுக்கிரமிப்பு ; பொருளாதார, அரசியல், தத்துவார்த்தக் காரணங்களைக் கொண்டு ஒருவர் மற்றொருவருடைய உள் நாட்டு விவகாரங்களில் தலையிடக் கூடாது ; சமத்துவமும், பரஸ்பர அனுகூலமும் ; சமாதான சக வாழ்வு என்கின்ற ஐம்பெரும் கோட்பாடுகளைக் கடைப் பிடிப்பதென, சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுகளின் யூனியனது சர்க்காரும், ஆப்கானிய மன்னரின் அரசாங்கமும் அறிவிக்கின்றன. பாண்டுங்கில் நடைபெற்ற ஆசிய-ஆப்ரிக்க நாடுகளின் மகாநாட்டில் பங்குகொண்டோரால் ஏகமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்ட இந்தக் கோட்பாடுகள், சமாதானத்தைப் பாதுகாக்கவும், உலக மக்கள் பரஸ்பரம் புரிந்துகொள்வதற்கும் உறுதியானதோர் அஸ்திவாரமாகத் திகழ்கின்றன ; ஐக்கிய நாடுகள் சாஸனத்தின் கோட்பாடுகளுக்கும், குறிக்கோள்களுக்கும் உகந்ததாகவும் இருக்கின்றன.

நிலையான உலக சமாதானத்தையும், நாடுகளிடையே கருத்தொருமைப்பாட்டையும் நிலைநாட்டுவது, பொதுவான ஆயுத பரிஹரணத்தையும், அணுசக்தி ஆயுதங்களுக்கு நிபந்தனையின்றித் தடைவிதிப்பதையும் பொறுத்திருக்கிறது என சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுகளின் யூனியனது சர்க்காரும், ஆப்கானிய மன்னரின் அரசாங்கமும் கருதுகின்றன ; அணு சக்தியானது, விஞ்ஞானத்தை முன்னேறச் செய்து, மனித வர்க்கத்தின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தக்கூடிய சமாதான நோக்கங்களுக்கு மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டுமென அவர்கள் கருதுகிறார்கள்.

சர்வதேச உறவுகளில் உள்ள நெருக்கடியைப் போக்கி, சமாதானத்தைப் பாதுகாக்க வேண்டும் என்ற உலக மக்களின் கோரிக்கைக்கிணங்க நடத்தப்பட்ட ஜெனிவா அரசாங்கத் தலைவர்களின் மகாநாடும், அதைத் தொடர்ந்து நடைபெற்ற வெளிநாட்டு அமைச்சர்களின் மகாநாடும் திட்டவட்டமான பயன்களை அளித்துள்ளன என்று சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுகளின் யூனியனது சர்க்காரும், ஆப்கானிய மன்னரின் அரசாங்கமும் கருதுகின்றன. இந்த மகாநாடுகள் அடித்தளத்தை நிறுவியுள்ளன ; சம்பந்தப்பட்ட நாடுகள் பரஸ்பரம் புரிந்துகொள்வதற்கு அவை உதவியுள்ளன என்பதை இருநாடுகளும் அங்கீகரிக்கின்றன. மேலே கூறப்பட்ட இராஜ்யங்கள் செய்யும் முயற்சிகளின் விளைவாக, இதுபோன்ற மகாநாடுகள் எதிர்காலத்திலும் கூட்டப்பட்டு, அதில் கலந்துகொள்ளும் நாடுகளுக்கிடையே உள்ள வித்தியாசங்கள் தீர்த்துக் கொள்ளப்படும் என்ற நம்பிக்கையை அவை தெரிவித்துக்கொள்ளுகின்றன. இத்தகைய மகாநாடுகள் எதிர்காலத்திலும் நாடுகள் பரஸ்பரம் புரிந்து கொள்வதற்குச் சாதகமான செல்வாக்கைப் பிரயோகிக்கும்

என்ற நம்பிக்கையையும் தெரிவித்துக் கொள்ளுகின்றன. உலக சமாதானத்தைப் பாதுகாக்க இது மிக முக்கியத் தேவையாகும்.

கிழக்குப் பிராந்தியத்திலே இப்பொழுது நிலவிவரும் நிலைமையும், நெருக்கடியும், உலக சமாதானத்திற்கு ஒரு பயமுறுத்தலாகும் என சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுகளின் யூனியனது சர்க்காரும், ஆப்கானிய மன்னரின் அரசாங்கமும் கருதுகின்றன. தூரகிழக்கில் தீர்க்கப்படாமலிருக்கும் பிரச்னைகள் யாவும், சமாதானத்தின் நலன்களுக்கொப்ப தீர்க்கப்படவேண்டுமென அவை அறிவுறுத்துகின்றன. சீனுபற்றிய பிரச்னைகள், சீனமக்களின் தேசிய உரிமைகளைச் சரியாகக் கணக்கிலெடுத்துக் கொண்டுதான் தீர்க்கப்படவேண்டும்; குறிப்பாக, சீன மக்கள் குடியரசானது, ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தில், தனக்குள்ள சட்டபூர்வமான இடத்தைப் பெறவேண்டும்.

சமாதானத்தைக் கெட்டிப்படுத்தும் நோக்கத்துடன், அரசாங்கங்கள் செய்யும், ஏற்றுக் கொள்ளக்கூடிய, கூட்டுமுயற்சிகள்தான், மக்களின் சந்தோஷத்தைப் பாதுகாக்க முடியும் என இரு நாடுகளின் சர்க்கார்களும் கருதுகின்றன.

இறுதியாக, சோவியத் யூனியன், ஆப்கனிஸ்தானம் ஆகிய இரு நாடுகளின் அரசாங்கத் தலைவர்களும் ஏற்படுத்திக் கொண்ட நேரடித் தொடர்பானது இரு நாடுகளுக்கிடையேயுள்ள உறவுகளை மேலும் பலப்படுத்துவதற்கும், உலக சமாதானத்தைக் கெட்டிப்படுத்துவதற்கும் பயன்படும் என்ற நம்பிக்கையை இரு தரப்பினரும் தெரிவித்துக்கொள்கின்றன.

**என். ஏ. புல்கானின்,**
சோவியத் யூனியன் மந்திரிசபைத் தலைவர்.

**முகம்மது தாவூத்,**
ஆப்கனிஸ்தான் பிரதம மந்திரி.

காபூல், டிசம்பர், 18, 1955.

# சோவியத் யூனியனுக்கும், ஆப்கனிஸ்தானத்திற்குமிடையேயுள்ள பொருளாதார உறவுகள் பற்றிய சோவியத் - ஆப்கன் கூட்டறிக்கை

சோவியத் யூனியனுக்கும், ஆப்கனிஸ்தானுக்குமிடையேயுள்ள வர்த்தக, பொருளாதார உறவுகள் பற்றிய பிரச்னைகள், சோவியத் யூனியன் மந்திரி சபைத் தலைவர் என். ஏ. புல்கானினும், சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத் தலைமைக் குழுவின் உறுப்பினர் என். எஸ். குருஷேவும் காபூலில் தங்கியிருந்த காலத்தில் பரிசீலிக்கப்பட்டன.

சோவியத் யூனியனுக்கும், ஆப்கனிஸ்தானத்திற்குமிடையேயுள்ள வர்த்தக, பொருளாதார உறவுகள் பரஸ்பரம் அனுகூலமான அடிப்படையிலே விரிவடைந்து கொண்டிருப்பது கண்டு இரு அரசாங்கங்களும் திருப்தியடைகின்றன.

அதேசமயத்தில் இந்த உறவுகளைத் தொடர்ந்து வளர்த்து, விரிவடையச் செய்யவேண்டியது இரு நாடுகளின் நலனுக்கும் தேவையானது என்ற ஏகமனதான அபிப்பிராயத்திற்கு அவர்கள் வந்துள்ளார்கள்.

இத்தகைய குறிக்கோளை நோக்கமாகக்கொண்டு, இரு சர்க்கார்களின் தகுதியுள்ள பிரதிநிதிகள் சந்தித்து, தேவையான ஆரம்ப வேலைகளைப் பூர்த்தி செய்தவுடனே, பரஸ்பரம் அனுகூலமான பொருளாதார, தொழில் நுணுக்க ஒத்துழைப்பிற்கான முறைகளை மேலும் பரிசீலனை செய்து, அதற்குகந்தாற் போன்ற ஒப்பந்தங்களை நிறைவேற்ற வேண்டியது அவசியம் என சோவியத் யூனியன் சர்க்காரும், ஆப்கனிஸ்தான சர்க்காரும் கருதுகின்றனர்.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள பிரதிநிதிகள், குறிப்பாக ஆப்கனிஸ்தானத்தில் விவசாய வளர்ச்சி, நீர் - மின்சார நிலையங்கள், நீர்ப்பாசன அமைப்புகள், தானுகவே பழுதுபார்க்கும் தொழிற்சாலைகள் ஆகியவற்றை நிர்மாணிப்பது, காபூல் விமான நிலையத்தைப் புனர் நிர்மாணம் செய்வது போன்ற விஷயங்களில் ஒத்துழைப்பது பற்றிய பிரச்னைகளைப் பரிசீலனை செய்யவேண்டும் என்றும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

மேற்குறிப்பிட்டுள்ள துறைகளில் ஆப்கனிஸ்தானப் பொருளாதார வளர்ச்சிக்கான திட்டத்தை அமுலாக்குவதற்குத் தேவையான தொழில் நுணுக்க உதவியையும், கடன் ரூபத்திலே நிதி உதவியையும், ஏற்படவிருக்கும் ஒப்பந்தத்திற்கு உட்பட்டு அளிப்பதற்குக் கோட்பாட்டின் அடிப்படையில் ஏற்றுக்கொள்வதாக சோவியத் அரசாங்கம் அறிவித்தது.

இந்தவகையில் சோவியத் யூனியன் நீண்டகாலத் தவணைக்கு கடனாகக் கொடுக்கவிருக்கும் தொகையானது பத்துக்கோடி அமெரிக்க டாலர்கள் என நிர்ணயிக்கப்பட்டது.

கடன்பற்றிய நிபந்தனைகள், பின்தொடரவிருக்கின்ற பேச்சு வார்த்தைகளிலே இரு தரப்பினராலும் ஏற்றுக்கொள்ளப்படும்.

ஆப்கனிஸ்தானத்திற்கு உதவி அளிக்க ஒப்புக்கொண்டுள்ளதற்காக சோவியத் அரசாங்கத்திற்கு, ஆப்கனிஸ்தான் அரசாங்கம் ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொண்டது.

—காபூல், 1955, டிசம்பர் 18.

## சோவியத் யூனியனுக்கும் ஆப்கானிஸ்தானுக்குமிடையே 1931, ஜூன் 24-ம் தேதிய நடுநிலைமை, பரஸ்பர அனுக்கிரமிப்பு ஒப்பந்தத்தின் நீடிப்பு பற்றி ராஜீய பத்திரம்.

ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசின் சுப்ரீம் சோவியத்தினுடைய தலைமைக் குழுவும், மாட்சிமை தங்கிய ஆப்கானிஸ்தான் மன்னரும் :

சோவியத் யூனியன் ஆப்கானிஸ்தானம் மக்கள்களுக்கிடையே இன்று நிலவி வரும் நேசபாவமான, நல்ல அண்டை நாட்டு உறவுகளை மேலும் அபிவிருத்தி செய்து பலப்படுத்துவதை வளர்க்கும் விருப்பமுடன்,

ஐக்கிய நாடுகள் சாசனத்தின் லட்சியத்திற்கும், கோட்பாடுகளுக்கும் ஒத்தவகையில், தேசங்களுக்கிடையே கூட்டுறவிற்காகவும், சமாதானத்தைப் பலப்படுத்துவதற்காகவும், நம்பிக்கையை உண்டாக்குவதற்காகவும் பாடுபட,

ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுக்கும், ஆப்கானிஸ்தானுக்குமிடையே 1931, ஜூன் 24-ம் தேதியன்று காபூலில் கையெழுத்திடப்பட்ட நடுநிலைமை, அனுக்கிரமிப்பு ஒப்பந்தமானது இரண்டு தேசங்களின் ஜீவாதாரமான நலன்களுக்கும் ஒத்திருக்கிறதென்றும், மேலே கூறப்பட்டிருக்கும் கடமைகளை வெற்றிகரமாகத் தீர்ப்பதற்கு உதவி செய்கிறது என்றும் உணர்ந்து,

1931, ஜூன் 24-ம் தேதிய நடுநிலைமை, அனுக்கிரமிப்பு ஒப்பந்தத்தின் நீடிப்புபற்றி இந்த ராஜீய பத்திரத்தில் கையெழுத்திட முடிவு செய்

துள்ளார்கள் ; இந்த லட்சியத்தைக் கருத்திற் கொண்டு தங்களுடைய ஸ்தானீகர்களை நியமித்திருக்கிறார்கள் :

ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசின் சுப்ரீம் சோவியத்தினுடைய தலைமைக் குழு—எ. எ. குரோம்யகோவ், சோவியத் யூனியனின் முதலாவது உதவி அயல்நாட்டு மந்திரி,

மாட்சிமை தங்கிய ஆப்கானிஸ்தான மன்னர்—மேன்மை தங்கிய மகம்மது நயிம், ஆப்கானிஸ்தானத்தின் அயல்நாட்டு மந்திரி,

தங்களுக்கு அதிகாரம் அளிக்கும் பத்திரங்கள் சரியாகவும், ஒழுங்காகவும் இருப்பதாக அங்கீகரித்துப் பின்வருமாறு ஒப்புக் கொள்கின்றனர் :

விதி 1.

1931, ஜூன் 24ல் காபூலில் ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுக்கும், ஆப்கானிஸ்தான் ராஜ்யத்திற்குமிடையே செய்து கொள்ளப்பட்ட நடுநிலைமை, அனுக்கிரமிப்பு ஒப்பந்தத்தின் 8-வது விதியையும், 1931ம் வருட ஒப்பந்தத்தை முடித்துக்கொள்ளுகிறதவணையையும், கிரமத்தையும் சம்பந்தித்த 1936, மார்ச் 29ம் தேதிய சோவியத்-ஆப்கன் ராஜீய பத்திரத்தின் முதலாவது விதியையும் திருத்தியமைத்து, இந்த ராஜீய பத்திரம் அமுலுக்கு வரும் நாளிலிருந்து அடுத்த பத்து வருட காலத்திற்கு இந்த ஒப்பந்தம் அமுலில் இருக்குமென்று ஒப்பந்தம் செய்துகொள்ளும் உயர் தரப்பினர் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த தவணை முடிவடைந்த பின்னர், மேலே கூறப்பட்ட ஒப்பந்தம் வருடத்திற்கு வருடம் தானாகவே அமுலில் இருந்துவரும் ; ஒப்பந்தம் செய்து கொள்ளும் உயர்தரப்பினரில் யாராவது ஒருவர் ஒப்பந்தத்தை முடித்துக் கொள்ள விரும்பினால் மறு தரப்பாருக்கு ஆறுமாத நோட்டீஸ் கொடுப்பதன் மூலம் ஒப்பந்தத்தை முடித்துக் கொள்ளும் உரிமை உண்டு.

விதி 2.

இந்த ராஜீய பத்திரமானது அங்கீகாரத்திற்கு உட்பட்டது ; அங்கீகாரப் பத்திரங்கள் கைமாற்றிக் கொள்ளப்பட்ட உடனேயே இது அமுலுக்கு வரும் ; எவ்வளவு துரிதமாக முடியுமோ அவ்வளவு துரிதமாக இது மாஸ்கோவில் அங்கீகாரம் செய்யப்படும்.

இதற்கு சாட்சியாக மேலே கூறப்பட்ட ஸ்தானீகர்கள் இந்த ராஜீய பத்திரத்தில் கையெழுத்திட்டுள்ளார்கள் ; அதில் தங்களுடைய அதிகார முத்திரைகளைப் பதித்துள்ளார்கள்.

1955 டிசம்பர் 18ம் தேதியன்று காபூலில் ரஷ்ய மொழியிலும், பெர்சிய மொழியிலும் தயாரிக்கப்பட்டது ; இரண்டு வாசகங்களும் சமமான அளவு நம்பத் தகுந்தவை.

ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசின் சுப்ரீம் சோவியத்தினுடைய தலைமைக் குழுவின் அதிகாரத்தின்மீது—எ. எ. குரோம்யகோவ்.

மாட்சிமை தங்கிய ஆப்கானிஸ்தானம் மன்னரின் அதிகாரத்தின் மீது—மகம்மது நயிம்.

*

மேற்கூறிய ராஜீய பத்திரத்தின் மூலம் நீடிக்கப்பட்ட ஒப்பந்தத்தின வாசகம் கீழ் வருமாறு :

# ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுக்கும் ஆப்கானிஸ்தானிற்குமிடையே நடுநிலைமை, பரஸ்பர அனுக்கிரமிப்பு ஒப்பந்தம்

ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசின் மத்திய நிர்வாகக கமிட்டியும், மாட்சிமைதங்கிய ஆப்கானிஸ்தான் மன்னரும் :

1921, பிப்ரவரி 28ல் மாஸ்கோவில் கையெழுத்திடப்பட்ட ஒப்பந்தத்தின் அடிப்படையில் இரண்டு தேசங்களுக்குமிடையே சந்தோஷமாக நிலவிவரும் நேசபாவ, நல்ல அண்டைநாட்டு உறவுகளை பலப்படுத்தும் நோக்கமுடன்,

உலக சமாதானத்தின் உன்னதமான நோக்கங்களுக்கு சேவை செய்வதை இந்த உறவுகள் ஸ்திரமாகத் தொடர்ந்து அபிவிருத்திசெய்யும் என்ற நம்பிக்கையுடன்,

1926, ஆகஸ்ட் 21ல் பக்மானில் செய்துகொள்ளப்பட்ட ஒப்பந்தத்திலிருந்த அதே கோட்பாடுகளின் சாயலில் இன்றைய ஒப்பந்தத்தைச் செய்துகொள்ள தீர்மானித்திருக்கிறார்கள்.

**விதி 1.**

ஒப்பந்தம் செய்துகொண்ட தரப்பாரில் ஏதாவது ஒருதரப்பாருக்கும், மூன்றும் தரப்பு ஒரு தேசத்திற்கும் அல்லது பல தேசங்களுக்கும் இடையில் யுத்தமோ அல்லது ராணுவ நடவடிக்கைகளோ ஏற்படும் சமயத்தில் ஒப்பந்தம் செய்துகொண்ட மற்றொரு தரப்பு, முதல் தரப்பு சம்பந்தப்பட்டவரையில் நடுநிலைமையை அனுஷ்டிக்க வாக்களிக்கிறது.

விதி 2.

ஒப்பந்தம் செய்துகொள்ளும் ஒவ்வொரு தரப்பும் மற்ருெரு தரப்பின் மீதோ அல்லது அதன் வசமிருக்கும் பிரதேசங்கள்மீதோ தாக்குதல் தொடுப்பதில்லையென்றும், ஒப்பந்தம் செய்துகொள்ளும் ஒரு தரப்புக்கு அரசியல் அல்லது ராணுவ நஷ்டமேற்படுத்தக்கூடிய எந்த நடவடிக்கைகளையோ, செயல்களையோ மற்ற தரப்பு எடுப்பதில்லையென்றும் ஒப்பந்தம் செய்துகொள்ளும் ஒவ்வொரு தரப்பும் உறுதிசெய்துகொள்கிறது அதே போல, ஒப்பந்தம் செய்துகொள்ளும் மற்ருெரு தரப்புக்கு எதிராகத் திருப்பிவிடப்பட்டிருக்கும் ராணுவ அல்லது அரசியல் கூட்டுறவுகளிலோ அல்லது உடன்படிக்கைகளிலோ அல்லது ஒப்பந்தம் செய்து கொள்ளும் மற்ருெரு தரப்புக்கு எதிராகவுள்ள நிதிவிவகார அல்லது பொருளாதார பகிஷ்காரத்திலோ அல்லது முற்றுகையிலோ பங்கெடுப்பதில்லையென்று ஒப்பந்தம் செய்துகொள்ளும் ஒவ்வொரு தரப்பும் உறுதிசெய்துகொள்கிறது. மேலும், மூன்ருவது ஒரு அரசினுடைய அல்லது அரசுகளுடைய நடத்தையின் போக்கு ஒப்பந்தம் செய்துகொள்ளும் ஒரு தரப்புக்கு எதிரான தன்மையைப் பெற்றிருந்தால், ஒப்பந்தம் செய்துகொள்ளும் மற்ருெரு தரப்பு இத்தகைய நடத்தைப் போக்கை ஆரிப்பதில்லையென்று உறுதிசெய்வதுமட்டுமல்ல; தன்னுடைய பிரதேசத்தில் அதற்கு எதிராகவும், அதிலிருந்து எழும் விரோத நடவடிக்கைகளுக்கும், முயற்சிகளுக்கும் எதிராகவும் நடவடிக்கை எடுக்கவும்வேண்டியுள்ளது.

விதி 3

நாட்டின் அரசுரிமையை பரஸ்பரம் அங்கீகரிப்பதென்ற அடிப்படையில், ஒப்பந்தம் செய்துகொள்ளும் தரப்புகள் ஒன்று மற்ருென்றின் உள்நாட்டு விவகாரங்களில் ஆயுதபாணியாகவோ அல்லது ஆயுதபாணியில்லாமலோ தலையிடுவதில்லை யென்று ஒப்புக்கொள்கிறது; ஒன்று அல்லது பல மூன்ரும் தரப்பு நாடுகள் ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கும் ஒரு தரப்பிற்கு எதிராகத் தலையிட்டு எடுத்துக்கொள்ளும் எந்த நடவடிக்கைகளிலும் திட்டவட்டமாக உதவி செய்யாது, பங்கெடுத்துக் கொள்ளாது என்றும் ஒப்புக்கொள்கிறது. ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கக் கூடிய ஒரு தரப்புக்கு தீங்கிழைக்கவல்ல, அல்லது ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கும் ஒரு தரப்பினுடைய அரசாங்க அமைப்பைத் தூக்கி யெறிவதற்குத் தயாரிப்புகள் செய்யக்கூடிய அல்லது அதனுடைய பிரதேசத்தின் ஒருமைப்பாட்டுக்கு ஊறு விளைவிக்க முயற்சிக்கக்கூடிய, அல்லது ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கும் ஒரு தரப்புக்கு எதிராக ஆயுதப் படைகளை திரட்டக்கூடிய, அல்லது சேர்க்கக்கூடிய கோஷ்டிகளின் ஸ்தாபனத்தையும், நடவடிக்கைகளையும் தம்முடைய பிரதேசத்தில் ஒப்பந்தம் செய்துகொள்ளும் இருதரப்புகளும் அனுமதிக்காது, அவைகளைத் தடுக்கும்; அதே போல தனி நபர்களின் நடவடிக்கைகளையும்கூட தடுக்கும். இதே முறையில், ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கும் ஒரு தரப்பிற்கெதிராகத் திருப்பப்

பட்ட ஆயுதப் படைகளையும், ஆயுதங்கள், வெடிமருந்துகள், ராணுவ தள வாடங்கள், அல்லது வேறு எந்தவிதமான ராணுவ சாமான்களையும் தன்னுடைய பிரதேசத்தின் வழியாகக் கொண்டு செல்வதற்கு இரு தரப்புகளும் சம்மதிக்காது, அனுமதி யளிக்காது.

விதி 4.

இன்றைய ஒப்பந்தத்திற்கு முரணான வகையில் ஒன்று அல்லது பல தேசங்களுடன் தமக்கு எத்தகைய ரகசிய அல்லது பகிரங்கமான ஒப்படைப்புகளும் இல்லையென்று மேலே கூறப்பட்டவைகளுக்கு ஒத்தபடி நடப்பு ஒப்பந்தத்தில் ஒப்பந்தம் செய்துகொள்ளும் இரு தரப்பினரும் பிரகடனம் செய்கின்றனர்; இந்த ஒப்பந்தம் அமுலில் இருக்கும் காலம் பூராவிலும், நடப்பு ஒப்பந்தத்திற்கு முரணான வகையில் இருக்கும் ஒப்பந்தங்களிலோ அல்லது உடன்படிக்கைகளிலோதான் சேராது என்று ஒப்பந்தம் செய்துகொள்ளும் ஒவ்வொரு தரப்பும் பிரகடனம் செய்கிறது.

விதி 5.

ஏற்கனவே பகிரங்கம் செய்யப்பட்ட செயல்களைத் தவிர, தனக்கும், நிலம் அல்லது கடல்மூலம் தனக்கு நேரடியாக அடுத்திருக்கும் ராஜ்யங்களுக்குமிடையே எத்தகைய ஒப்படைப்புகளும் இல்லையென்று ஒப்பந்தம் செய்துகொள்ளும் ஒவ்வொரு தரப்பும் இதே ரீதியில் பிரகடனம் செய்கிறது.

விதி 6.

நடப்பு ஒப்பந்தத்தில் வரையறுக்கப்பட்டிருக்கும் நிபந்தனைகளின் ஒப்படைப்புகளுக்கு வெளியே, மூன்றும் தரப்பு ராஜ்யங்களுடன் எல்லாவிதமான சம்பந்தங்களும், கூட்டுறவுகளும் ஏற்படுத்திக் கொள்ள நடவடிக்கை எடுப்பதற்கு ஒப்பந்தம் செய்து கொள்ளும் ஒவ்வொரு தரப்புக்கும் பரிபூர்ண சுதந்திரம் உண்டு.

விதி 7.

தங்களுக்கிடையே எழக்கூடிய சகல தகராறுகளையும், மோதல்களையும்—அவைகளின் சுபாவமும், ஆரம்பமும் எப்படியிருந்த போதிலும்—எப்பொழுதுமே சமாதானமான முறைகளின் மூலம் மட்டுமே தீர்க்க முயற்சிக்க வேண்டுமென்று ஒப்பந்தம் செய்துகொள்ளும் இரு தரப்புகளும் அங்கீகரிக்கின்றன. இந்த விதியை அபிவிருத்தி செய்வதற்காக, ஒப்பந்தம் செய்து கொள்ளும் தரப்புகளுக்கிடையே இதற்கேற்ற உடன்படிக்கைகளைச் செய்து கொள்ளலாம்.

விதி 8.

நடப்பு ஒப்பந்தம் ஐந்து வருட காலத்திற்கு செய்து கொள்ளப்படுகிறது; இது அங்கீகாரம் செய்யப்பட்ட வினாடியிலிருந்தே அமுலுக்கு

வருகிறது; கையெழுத்திடப்பட்ட இரண்டு மாத காலத்திற்குள் இது அங்கீகரிக்கப்படவேண்டும். ஒப்பந்தம் அங்கீகரிக்கப்பட்டதற்கு ஒரு மாதத்திற்குப் பின்னால், காபூலில் அங்கீகாரப் பத்திரங்கள் கை மாற்றிக் கொள்ளப்படும்.

ஐந்துவருட தவணை முடிவடைந்தபின்னர், நடப்பு ஒப்பந்தம் வருடா வருடம் தானாகவே அமுலில் இருந்துவரும்; ஆறுமாதகால நோட்டீஸ் கொடுப்பதன்மூலம், அமுலில் இருக்கும் ஒப்பந்தத்தை முடித்துக்கொள்ளும் உரிமை ஒப்பந்தம் செய்துகொள்ளும் ஒவ்வொரு தரப்புக்கும் உண்டு. இந்த விதியில் குறிப்பிட்டுள்ளபடி, ஒப்பந்தத்தை ரத்துசெய்துவிட நோட்டீஸ் கொடுக்கும் சமயத்தில், நடப்பு ஒப்பந்தத்தை மீண்டும் தொடங்குவதற்கான ரூபத்தைப்பற்றி ஒப்பந்தம் செய்துகொள்ளும் இரு தரப்புகளும் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கவேண்டும்.

விதி 9.

1931, ஜூன் 24ல் ரஷ்ய மொழியிலும், பெர்சிய மொழியிலும் காபூலில் தயாரிக்கப்பட்டது; இரண்டு வாசகங்களும் சமமான அளவு நம்பத் தகுந்தவை.

# மாஸ்கோ வந்து சேர்ந்ததும் நிகழ்த்திய சொற்பொழிவுகள்

# 1955, டிசம்பர் 21-ல்
# மாஸ்கோ நகர மக்களின் பொதுக் கூட்டத்தில்
# என். எஸ். குருஷேவ் ஆற்றிய சொற்பொழிவு

தோழர்களே, அருமை நண்பர்களே, உங்களுடைய குதூகலமான உள்ளமுருக்கும் அற்புத வரவேற்புக்கு என்னுடைய மனங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ள முதலில் என்னை அனுமதியுங்கள்.

இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானம் முதலிய மூன்று நேசபாவமான தேசங்களில் ஒரு மாத காலம் சுற்றுப்பிரயாணம் செய்துவிட்டு நாங்கள் தாயகம் திரும்பியுள்ளோம். ஜீவனுள்ள ஞாபகங்கள் எங்கள் உள்ளங்களிலே நிரம்பியுள்ளன. நம்முடைய தேசத்தின் பாலும், சோவியத் யூனியனின் மக்கள் பாலும் இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானம் மக்கள் ஒப்பற்ற பேரன்பும், மனப் பூர்வமான நன்மதிப்பும் கொண்டுள்ளார்கள் என்ற உணர்வு எங்கள் உள்ளங்களிலே மிகவும் ஆழமாகப் பதிந்துள்ளது.

தங்களுடைய தேசங்களுக்கு விஜயம் செய்யும்படி இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானம் முதலிய தேசங்களின் சர்க்கார்கள் விடுத்த அழைப்பை நாங்கள் ஏற்றுக்கொண்டோம் ஏனென்றால், சோவியத் யூனியனுக்கும் இந்த தேசங்களுக்குமிடையே நிலவிவரும் நட்புறவையும், ஒத்துழைப்பையும் மேலும் பலப்படுத்த வேண்டும் என்ற சிக்கலற்ற, தெக்கத் தெளிவான லட்சியம் எங்கள் முன்னே இருந்தது.

நம்முடைய தேசங்களின் மக்களுக்கிடையே உள்ள உறுதியான நட்புறவானது மக்களுக்கு அனுகூலமாகயிருக்குமென்றும், உலக சமாதானத்தைப் பலப்படுத்துமென்றும் ஆழ்ந்த திடநம்பிக்கை கொண்டிருக்கும் நாங்கள், இந்தக் கடமையை சிறப்புடன் நிறைவேற்ற முயற்சித்திருக்கிறோம். நாங்கள் மேற்கொண்டது பிரயோஜனகரமான சுற்றுப் பிரயாணம் என்றே நான் நினைக்கிறேன்; நல்ல பலன்களைத் தரும் என்று எண்ணுகிறேன்.

ஒப்பற்ற இந்திய மக்கள் எங்களுக்களித்த வரவேற்பு உபச்சாரத்தையும், எங்கள் பால் காட்டிய உணர்ச்சி உற்சாகங்களையும் வர்ணிக்க என்னிடம் வார்த்தைகளில்லை. இந்திய மக்கள் தங்களுடைய இச் செய்கைகள் மூலம் சோவியத் யூனியன் மக்களுக்குத் தங்களுடைய சகோதர உணர்ச்சிகளை, மிகவும் மனப்பூர்வமான பேரன்பை வெளிப்படுத்தினார்கள்.

பிரதம மந்திரி நேருவாலும், அவருடைய சகபாடிகளாலும் நாங்கள் மிகுந்த அன்புடன் வரவேற்கப்பட்டோம்.

இந்தியாவின் சிறிய, பெரிய நகரங்கள் அனைத்திலும் எங்களை சந்திப்பதற்காக மக்கள் நூறாயிரக் கணக்கில், பத்து லட்சக் கணக்கில் திரண்டு வந்தார்கள். இந்திய மக்களின் இதயத்திலிருந்து எழும் இந்த எளிமையான வார்த்தைகளையே நாங்கள் சென்ற விடங்களிலெல்லாம் கேட்டோம்; படித்தோம்.

"நட்புறவு என்றென்றும் நீடித்து வாழ்க!"

"இந்திய சோவியத் மக்களிடையே நட்புறவு நீடூழி வாழ்க!"

"ரஷ்யர்களும், இந்தியர்களும் சகோதரர்கள்!"

மகத்தான இந்திய மக்களின் இதய ஒலி இது.

இந்திய மக்களிடம் நாங்கள் இவ்வாறு கூறினோம்: ஆம்; நாங்கள் சகோதரர்கள்; அமைதியாக வாழ்க்கை நடத்தும் நாட்களில் மட்டுமின்றி, கடும் கஷ்டங்கள் ஏற்படும் காலங்களிலும்கூட நாங்கள் சகோதரர்களே; மனித குலத்தின் சுபீட்ச எதிர் காலத்திற்காக நடைபெறும் போராட்டத்தில் நாம் சகோதரர்கள்; உலக சமாதானத்திற்கான போராட்டத்தில் நாம் சகோதரர்கள்!

பர்மாவிலும், ஆப்கானிஸ்தானிலும்கூட, இந்த தேசங்களின் மக்களும், தலைவர்களும் இதேபோன்ற அன்பான வரவேற்பு உபச்சாரத்தை எங்களுக்களித்தார்கள். இந்தியாவில் இருந்ததைப்போன்ற பிரம்மாண்டமான ஆர்ப்பாட்டங்களும், பொதுக்கூட்டங்களும் இந்த தேசங்களில் இல்லை என்பது உண்மையே; ஆனால், சோவியத் யூனியன்பாலும், மகத்தான சோவியத் மக்கள்பாலும் அதேபோன்ற மனப்பூர்வமான அன்பு இருந்தது.

நம்முடைய தேசத்தின்பால் ஆசிய மக்கள் காட்டிய இந்த சகோதரப் பான்மையான அன்பை நாங்கள் கண்டபொழுது, எங்களுடைய சிந்தனைகளெல்லாம் இங்கே திரும்பிவந்தன. சோவியத் மக்களின், வீரர்களும், நிர்மாண கர்த்தாக்களுமான சோவியத் மக்களின், பிரம்மாண்டமான உருவம் எங்கள் மனக்கண் முன்னே எழுந்தது. சோவியத் நாட்டின் மேன்மைச் சிறப்புக்குக் காரணம் அவர்கள்தான்—சோவியத் மக்கள்தான். கம்யூனிஸ்ட் கட்சியின் வழிகாட்டுதலின் கீழ் நம்முடைய தேசத்தை மிகவும் உயர்த்தி, பின்தங்கிக் கிடந்த ரஷ்யாவை ஒரு சக்திமிக்க வல்லரசாகவும், உலகிலேயே மிகவும் முன்னேற்ற மடைந்ததாகவும் உரு மாற்றியது அவர்கள்தான்—சோவியத் மக்கள்தான். சோஷலிஸத்தைக் கட்டியிருப்பதும், அதனால் நம்நாட்டின் யதார்த்த நடைமுறைகளிலே, மனித குலம் கண்டு வந்த கனவுகளுக்கு சத்தும் சாரமும் அளித்திருப்பதும் சோவியத் மக்கள்.

மகத்தான சோவியத் மக்களின் புதல்வர்கள் நாங்கள், அவர்களின் தூதுவர்கள், ஊழியர்கள் என்று எண்ணியபோது எங்கள் இதயங்கள் பெருமையால் பூரிப்படைந்தன.

இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானம் முதலிய தேசங்களில் நாங்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தியபோது, காலனி ஆட்சியாளர்களின் நிந்திக்கத்தக்க கொள்கையை நாங்கள் அம்பலப்படுத்தினோம். இந்த தேசங்களின்மீது பல்லாண்டுகள் ஆட்சி செலுத்தியதின் மூலம், சொல்லற்கரிய தீங்குகளை இந்த மக்களுக்கு காலனியாட்சியாளர்கள் இழைத்தார்கள்; அவர்களின் பொருளாதார அபிவிருத்தியை மிகப்பெரிய அளவுக்குக் குந்தகப்படுத்தினார்கள்.

இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தான் முதலிய தேச மக்கள் எங்களுடைய வார்த்தைகளை ஆமோதித்தார்கள். ஏனென்றால் அவை உண்மையான வார்த்தைகளாக இருந்தன.

ஆனால், பூர்ஷ்வா தேசங்களின் சில தலைவர்களும், குறிப்பாக பிற்போக்குப் பத்திரிகைகளும் இந்த வார்த்தைகளைக் கண்டு எவ்வளவு வெறித் துவேஷம் கொண்டார்கள்!

இந்த துவேஷத்தை நன்கு புரிந்து கொள்ள முடிகிறது. காலனி அமைப்பு முறை தகர்ந்து நொறுங்கிக் கொண்டிருக்கிறது. ஆசியாவில் ஏற்கனவே அது திவாலாகி விட்டது. கொரியா மக்கள் ஜனநாயகக் குடியரசு, வியட்னும் ஜனநாயகக் குடியரசு, இந்தியக் குடியரசு, பர்மிய யூனியன் முதலிய பல தேசங்களைச் சேர்ந்த மக்கள் தங்களைக் காலனி அடிமைத்தனத்திலிருந்து விடுவித்துக் கொண்டார்கள்; தங்களுடைய தேசிய சுதந்திரத்தை உறுதிப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

நம்முடைய ஒப்பற்ற நண்பரும், சகோதரருமான சீன மக்களைப் பற்றியோ சொல்லவே வேண்டியதில்லை—தங்களுடைய கம்யூனிஸ்ட் கட்சியின் வழிகாட்டுதலின் கீழ் சீன மக்கள், தங்களைத் துன்புறுத்தி வந்த காலனியாட்சியாளரைத் தங்கள் நாட்டிலிருந்து ஒரேயடியாக விரட்டியடித்து விட்டார்கள்; உள்நாட்டு விரோதிகளைத் தகர்த்து நொறுக்கி விட்டார்கள்; சோஷலிஸ நிர்மாணப் பாதையை உறுதியாகக் கடைப்பிடித்துவருகிறார்கள்.

உலகக் காலனி அமைப்புமுறைக்கு இது ஒரு பெருத்த அடி; இந்த அடியிலிருந்து அது என்றுமே குணமடையாது.

காலனி ஆட்சிகள் நாகரீக மனிதகுலத்திற்கு அவக்கேடுகளாகும். நாங்கள் இதைக் கூறியிருக்கிறோம்; காலனி ஆட்சியாளர்கள் நீடித்திருக்கும் வரையிலும் இதை மீண்டும் மீண்டும் திருப்பிச் சொல்லுவதில் நாங்கள் களைப்படையமாட்டோம்.

தோழர்களே, அருமை நண்பர்களே,

எங்களுடைய விரிவான, மிகவும் சுறுசுறுப்பான சுற்றுப்பிரயாணத்தைப்பற்றி உங்களுக்கு நான் சொல்ல விரும்பக்கூடிய விஷயங்கள் பல இருக்கின்றன.

ஒரு சொற்பொழிவிலேயே, அதுவும் குறிப்பாக, மாஸ்கோவிற்கு நாங்கள் இப்பொழுதுதான் வந்துள்ள நிலையில், இதைச் செய்ய முடியாது.

மிகவும் பல்வேறு வர்க்கங்களின் பிரதிநிதிகளை, வாழ்க்கையின் பல தரப்பட்ட மக்களை நாங்கள் சந்தித்தோம்.

தொழிலாளர்கள், விவசாயிகள், அறிவாளிகள் முதலியோர் நம் நாட்டின் சாதனைகளைப் போற்றுகிறார்கள் ; மனப்பூர்வமாக வரவேற்கிறார்கள்.

நம்முடைய தேசத்தின் வெற்றிகளைக் கண்டு, சகல ஆண்களும், பெண்களும் அவைகளை மெச்சிப் புகழ்கிறார்கள். நம்முடைய தேசத்தின் சமாதானபூர்வமான அயல்நாட்டுக் கொள்கையையும், உலக சமாதானத்தை நிலைநிறுத்தவும், பலப்படுத்தவும் சோவியத் சர்க்கார் செய்து வரும் முயற்சிகளையும் அங்கீகரிக்கும் ரீதியில் அவர்கள் பேசினார்கள்.

37 கோடி இந்திய மக்களிலும், அதேபோல பர்மா, ஆப்கானிஸ்தானம் மக்களிலும், உலக சமாதானத்திற்கான போராட்டத்தில் நாம் நேசர்களைப் பெற்றிருக்கிறோம்.

நம்முடைய தேசத்தின் ஒப்பற்ற, நல்ல நண்பனாக இந்தியா விளங்குகிறது. சோவியத் யூனியனையும், சீன மக்கள் குடியரசையும் போல சமாதானத்திற்காக உறுதியாகப் போராடி வருவது இந்தியா.

லெனின் நமக்கு போதித் திருப்பதைப் போல, இந்தியா, சீனா, சோவியத் யூனியன் மூன்றும் வெல்ல முடியாத ஒரு சக்தியாக அமைந்துள்ளது.

தோழர்களே,

சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் இருபதாவது காங்கிரசைத் தகுதியான முறையில் வரவேற்பதற்காக சோவியத் நாடு பூராவும் தயாராகிக் கொண்டிருக்கும் பொழுது, இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானம் முதலிய தேசங்களுக்கு நாங்கள் விஜயம் செய்தோம்.

சோவியத் சோஷலிஸ்ட் அரசை மேலும் பலப்படுத்தும் விஷயத்திலும், நம்முடைய தேசத்தின் சர்வதேச நிலைமையை மேலும் உறுதிப்படுத்தும் விஷயத்திலும் மிகப் பெரிய சாதனைகளுடன் நாம் இருபதாவது கட்சிக் காங்கிரசை அணுகிக் கொண்டிருக்கிறோம். ஆனால், வெற்றி மிதப்புடன் ஓய்வு கொள்ளும் உரிமையை இது நமக்கு அளிக்க வில்லை.

விவசாயத்தின் சகல பகுதிகளும் மேலும் அபிவிருத்தியடைவதற்கு உத்திரவாத மளிக்கவும், நம் தேசத்தின் மக்களுடைய நட்புறவையும், நம்முடைய சோஷலிஸ சமூகத்தின் சகல உழைப்பாளி மக்களின் தார்மிக, அரசியல் ஒற்றுமையையும் பலப்படுத்தவும் நம்முடைய பொருளாதாரத்தை, குறிப்பாக அதனுடைய அச்சாணியாக விளங்கும் கனயந்திரத் தொழிலை மிக உயர்ந்த மட்டத்திற்கு அபிவிருத்தி செய்வது நம்முடைய கடமையாகும்.

நம்முடைய மகத்தான லட்சியத்தை நோக்கி, நம்முடைய தேசத்தில் கம்யூனிஸத்தை நிர்மாணிக்கும் லட்சியத்தை நோக்கி நிச்சயமான பாதையை நாம் கடைப்பிடித்துச் சென்று கொண்டிருக்கிறோம்.

நாம் சகல வெற்றிகளையும் பெறுவதற்கு உற்சாக உணர்ச்சியூட்டும், வழிகாட்டி நடத்தும் நம்முடைய மகத்தான கம்யூனிஸ்ட் கட்சி நீடூழி வாழ்க!

சமாதானம், சகல மக்களின் பந்தோபஸ்து இவற்றின் கோட்டையாக விளங்கும் நம்முடைய சோவியத் தாயகம் நீடூழி வாழ்க! (இடிமுழக்கம் போன்ற கரகோஷம்)

## 1955, டிசம்பர் 21ல் மாஸ்கோ நகர மக்களின் பொதுக் கூட்டத்தில் என். ஏ. புல்கானின் ஆற்றிய சொற்பொழிவு

அருமைத் தோழர்களே, நமதருமை மாஸ்கோவைக் கண்டவுடன், எங்களுடைய பிரிய நண்பர்களான உங்களை சந்தித்தவுடன், நாங்கள் அடைந்திருக்கும் பேருவகையை வர்ணிக்க வார்த்தைகளில்லை!

இந்தக் குதூகல, மனப்பூர்வமான வரவேற்பிற்காக உங்களுக்கு மிக மிக நன்றி.

ஒவ்வொரு அம்சத்திலும் சீரும் சிறப்பும் பெற்றிருந்த எங்களுடைய சுற்றுப் பிரயாணம் ஒரு மாதத்திற்கு மேலாக நீடித்தது. இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானம் முதலிய தேசங்களைப்பற்றி அந்நாடுகளின் வாழ்க்கையின் சகல அம்சங்களைப் பற்றி, குறிப்பாக இந்தியாவைப் போன்ற மிகப்பெரிய தேசத்தைப்பற்றி நன்கு அறிந்து தெளிவதற்கு ஒரு மாதகாலம் போதாது என்பது இயற்கையே.

இந்த தேசங்களின் தலைநகர்களான டில்லி, ரங்கூன், காபூலுக்கும், மேலும் இத் தேசங்களிலுள்ள பிரதானமான நகரங்களுக்கும், தொழில்

கேந்திரங்களுக்கும், நிர்மாணப் பிராஜெக்டுகளுக்கும், விவசாய ஸ்தாபனங்களுக்கும், கல்வி, வைத்திய, விஞ்ஞான ஆராய்ச்சிக் கழகங்களுக்கும் நாங்கள் விஜயம் செய்திருந்தோம் என்பதை நீங்கள் அறிவீர்கள். ராஜதந்திரிகளையும், சமூகத்தின் பல்வேறு விதமான வர்க்கங்களையும், வாழ்க்கையையும் சேர்ந்த நானாவிதமான மக்களையும் நாங்கள் சந்தித்துப் பேசினோம். லட்சக்கணக்கான சாதாரண மக்களை, அறிவாளிகளை, தொழிலாளர்களை, விவசாயிகளை நாங்கள் சந்தித்தோம். எங்கள்பால் மிகவும் மனப்பூர்வமான நேச உணர்ச்சிகளை அவர்கள் அனைவரும் காட்டினார்கள். தங்களின் மிகமிக அருமையான விருந்தாளிகளாக, தங்களுடைய பந்துக்களைப்போல, தங்களின் சகோதரர்களைப்போல அவர்கள் எங்களை வரவேற்றார்கள். சோவியத் மக்களின் பிரதிநிதிகளாகிய நாங்கள் நகரங்களிலும், கிராமங்களிலும் முன்பின் என்றுமே கண்டிராத உற்சாகக் குதூகலத்துடன் வரவேற்கப்பட்டதைக் கண்டபோது, நம்முடைய தாயகத்தைப்பற்றிய எங்களுடைய ஒப்பற்ற பெருமை உணர்ச்சி எங்கள் இதயங்களிலே பொங்கி வழிந்தது.

சோவியத் யூனியனுடைய சமாதானபூர்வமான அயல்நாட்டுக் கொள்கைக்காக, மக்களிடையே நட்புறவும் ஒத்துழைப்பும் வேண்டுமென்ற அதனுடைய கொள்கைக்காக சோவியத் யூனியன்பால் மிகமிக நேசபாவமான நன்றிதெரிவிக்கப்பட்டதை நாங்கள் சென்றவிடமெல்லாம் உணர்ந்தோம்.

இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானம் முதலிய தேச மக்கள் எல்லா இடங்களிலும் ஆனந்த உற்சாகமுடன் எங்களை வரவேற்றதானது, சோவியத் யூனியன்பாலும் சோவியத் மக்கள்பாலும்—தங்களுடைய கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையின்கீழ் தங்கள் நாட்டை இவ்வளவு மகோன்னத தசைக்கு உயர்த்தியிருக்கும் சோவியத் மக்கள்பாலும்—காட்டப்பட்ட நட்புறவு, நேசத்தின் பிரதிபலிப்புகள் என்று நாங்கள் திடமாக நம்புகிறோம்.

நாங்கள் விஜயம்செய்த தேசங்கள் சமாதானம் விரும்பும் தேசங்கள் என்பதையும், இந்த தேசங்களின் மக்கள்களும், சர்க்கார்களும் சகல நாடுகளுடனும் சமாதானபூர்வமான கூட்டுறவை நாடுகின்றன என்பதையும் நாங்கள் பார்த்திருக்கிறோம் அவர்களும் நாமும் கூட்டாக வரும்படி ஆகர்ஷிக்கக்கூடிய பிரதான விஷயம் இதுதான்; நட்புறவு-கூட்டுறவுக்கு அத்தியாவசியமான நிலைமைகளை சிருஷ்டிப்பது இதுதான்.

சமாதானம் என்பது மக்களுக்கு மகத்தான திருவருட்பேறாகும். சோவியத் யூனியன் மக்களும், இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தான் முதலிய தேசங்களின் மக்களும் நேசமும், கூட்டுறவும் கொண்டிருப்பதானது மக்களிடையே சமாதானம் உண்டாக்குவதற்கு பிரதான அம்சமாக அமைந்திருக்கிறது.

சோவியத் யூனியன், இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானம் முதலிய தேசங்களுக்கிடையே நேசமும், கூட்டுறவும் இருப்பதானது சமாதானத் திற்கான அம்சமாகும். மக்களிடையே சமாதானமும், கூட்டுறவும் இருப் பதை எதிர்க்கக் கூடியவர்கள் இதைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் இருக்க முடியாது.

சமாதான சக வாழ்வு, கூட்டுறவுக்கான ஐந்து மாபெரும் கோட்பாடு கள் உள்ளன ; வித்தியாசமான சமூக, அரசியல் அமைப்பு முறைகளைக் கொண்டிருக்கும் தேசங்களுடன் நம்முடைய உறவுகளை இந்தக் கோட் பாடுகளின் அடிப்படையின் மீதுதான் நாம் கட்டுகிறோம். மேன் மேலும் அதிக தேசங்கள் இந்தக் கோட்பாடுகளைக் கடைப்பிடிப்பதை நாம் பார்க்கிறோம்.

மகத்தான இந்தியாவுடனும், பர்மா, ஆப்கானிஸ்தானுடனும் நாம் கொண்டிருக்கும் நட்புறவானது, சோவியத் அரசாங்கத்தின் அயல்நாட் டுக் கொள்கையினுடைய லெனினிஸக் கோட்பாடுகளின் மாபெரும் வெற்றியின் கீர்த்திமிக்க உதாரணமாக விளங்குகிறது. இது ஒரு மாபெரும், சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த சாதனையாகும்.

பரஸ்பரம் ஒருவரை மற்றவர் புரிந்து கொள்வதற்கும், நேச உறவு களை ஏற்படுத்திக் கொள்வதற்கும், தேசங்களுக்கிடையில் சகல துறை களிலும் ஒத்துழைப்பதற்கும், பிணைப்புகள் கொள்வதற்கும் ராஜதந்திரி கள் தனியாக சொந்த ஹோதாவில் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள் வது எவ்வளவு முக்கியமானது என்பதை எங்கள் விஜயத்தின்போது நாங்கள் கண்டோம். இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானம் முதலிய தேசங்களின் பிரதானமான ராஜதந்திரிகளுடன் நாங்கள் தொடர்புகள் கொண்டதானது, ஒருவர் மற்றவரை நன்கு அறிந்து கொள்வதற்கும், சர்வதேச வாழ்க்கையின் மிகவும் முக்கியமான பிரச்னைகளைப் பற்றி நம்மி டையேயுள்ள பொதுவான கருத்தோட்டங்களை நிச்சயப்படுத்துவதற்கும், கூட்டுறவு-தொடர்புப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்குத் தகுதியான வழி துறைகளைக் கண்டு பிடிக்கவும் எங்களை சாத்தியமாக்கியுள்ளது.

இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானம் முதலிய தேசங்களுக்கு நாங் கள் விஜயம் செய்ததின் விளைவாக கூட்டறிக்கைகள் வெளியிடப்பட்டன என்பதைப் பத்திரிகை வாயிலாக நீங்கள் நன்கு அறிந்திருப்பீர்கள். இந்த மூன்று தேசங்களில் ஒவ்வொன்றுடனும் சோவியத் யூனியனுடைய உறவுகளின் அபிவிருத்தியில் இந்த முக்கியமான, சரித்திரபூர்வமான தஸ்தாவேஜுகள் ஒரு புதிய கட்டத்தைக் குறிக்கின்றன. நட்புறவுக் கும், கூட்டுறவுக்கும் நாம் அனைவரும் பொதுவில் பாடுபடுவதானது, வர்த்தகம், பொருளாதாரம், கலாச்சாரம் இன்னுமிதர உறவுகளை விஸ் தரிப்பது பற்றிய நம்முடைய பேச்சுவார்த்தைகளில் நல்ல பலன்களை அடைவதை நமக்கு சாத்தியமாக்கியுள்ளது. சமத்துவம், பரஸ்பர அனு கூலமென்னும் நம்முடைய மாற்ற வொண்ணாத கோட்பாடானது இந்த

உறவுகளின் அடிப்படையாக இருக்கிறது. பொருளாதாரக் கூட்டுறவிற்காகவும், எத்தகைய அரசியல் நிபந்தனைகளோ அல்லது ஒப்பந்தங்களோ இல்லாத பந்தங்களுக்காகவும் நாம் இருக்கிறோம்.

மதிப்பிற்குரிய இந்தியப் பிரதம மந்திரி ஸ்ரீ ஜவஹர்லால் நேருவும், மதிப்பிற்குரிய பர்மியப் பிரதம மந்திரி ஸ்ரீ நூவும், மதிப்பிற்குரிய ஆப்கானிஸ்தானப் பிரதம மந்திரி ஸ்ரீ மகம்மது தாவூதும் அசாதாரணமான அன்பு உபச்சாரங்களைக் காட்டியதால்தான் எங்களுடைய சுற்றுப் பிரயாணத்தின் விளைவுகள் இவ்வளவு செழுமையானதாயும், அனுகூலமானதாயும் உள்ளன. அவர்களுக்கு என் மனப்பூர்வமான வந்தனங்களை மீண்டும் ஒருமுறை இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இவ்வாறாக, மகத்தான இந்தியாவுக்கும், பர்மாவுக்கும், ஆப்கானிஸ்தானுக்கும் நாங்கள் விஜயம் செய்ததினால் மிகவும் முக்கியமான விளைவு ஏற்பட்டிருக்கிறது—அந்த தேசங்களுடன் சோவியத் யூனியனுடைய நேசஉறவு மேலும் நெருக்கமாகியுள்ளது; நம் மக்களுக்கிடையே நட்பும், கூட்டுறவும் மேலும் அபிவிருத்தியடைந்துள்ளன.

எனினும், ஒவ்வொருவரும் இதை விரும்பவில்லை. எங்களுடைய சுற்றுப்பிரயாணமும், எங்கள் சொற்பொழிகளும், குறிப்பாக நிகிதா செர்ஜியேவிச் குருஷ்சேவுடைய சொற்பொழிவுகள், நம்முடைய நண்பர்களால் உற்சாகமாகப் போற்றி வரவேற்கப்பட்டன என்பதுமட்டுமல்ல; ஆனால், பிற்போக்குப் பத்திரிகைகளின் கோபாவேசத்திற்கும், மேற்கத்திய நாடுகளில், குறிப்பாக பிரிட்டனில், உள்ள மிகவும் முக்கியமான சில பொதுஜன, சர்க்கார் பிரமுகர்களின் கோபாவேசத்திற்கும்கூட இரையாக நேர்ந்தது. அவர்களின் காலனிக் கொள்கையைப்பற்றி எங்களுடைய ஒளிவுமறைவற்ற பிரகடனங்களையோ அல்லது இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானுடன் நாம் கொண்டுள்ள நேசத்தையோ அவர்கள் விரும்பவில்லை என்று மாத்திரமே நாங்கள் இதைப்பற்றிக் கூறமுடியும்; ஆனால் நாம் இந்த நட்புறவைப் பெரிதும் விரும்புகிறோம்; நமக்கு பரிபூர்ணமாக இது ஒத்திருக்கிறது. மக்களின் இந்த நேச உறவானது சமாதானம் விரும்பும் தேசங்களின் அணியை பலப்படுத்தியிருக்கிறது; இன்னும் நெருக்கமாக அதைப் பிணைத்துள்ளது. சமாதானம் விரும்பும் தேசங்களின் அணி மேலும் பலமடைந்துள்ளது; அது இன்னும் அதிகமாக பலமடையும், அது வெற்றியுறுமென நாங்கள் நிச்சயமாக நம்புகிறோம்! (கரகோஷம்).

உலக சமாதானத்தை உருவாக்குவதில் அதிசிரேஷ்ட அம்சமாக விளங்கக்கூடிய, மக்களிடையே நட்பும், கூட்டுறவும் நீடூழி வாழ்க! (கரகோஷம், சந்தோஷ ஆரவாரம்).